# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினைந்தாம் நூற்றாண்டு

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினைந்தாம் நூற்றாண்டு

மு. அருணாசலம்



*முதற் பதிப்பு : மார்ச் 1969.*

*திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.*

*பக்கம் : xxiv + 360 = 384.*

*பதிப்பு :*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*

*இராயப்பேட்டை, சென்னை - 600 014.*

**விலை : 284. 00**

*வடிவமைப்பு :*

வே. கருணாநிதி

*அச்சிட்டோர்:*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.*

# முகவுரை

*திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.*

*'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.*

*திருச்சிற்றம்பலம்.* **அ. சிதம்பரநாதன்**
*15. 11. 2004.*

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

*தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இந்நூல் 15ஆம் நூற்றாண்டு வரலாறு.*

*1940ஆம் ஆண்டில் ஆசிரியர் சிந்தனையில் கருக்கொண்ட இவ்வரலாற்றுத் தொகுப்பு நூல் உருவாக்கச் சிந்தனை, 1969ஆம் ஆண்டில் 14ஆம் நூற்றாண்டு வரலாற்றையும் தொடர்ந்து அதே ஆண்டில் இந்த 15ஆம் நூற்றாண்டு வரலாற்றையும் எமக் களித்தது. 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டின் முதல் பாகம் வெளியிட்டதோடு அவரது தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களின் வெளியீடு நின்றுபோனது. அதுவரை பதினொரு தொகுதிகள் வெளியிடப்பட்டன.*

*மேற்படி தொகுதிகளில் 1969ஆம் ஆண்டில் 14ஆம் நூற்றாண்டு, 15ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதிகளும், 1970ஆம் ஆண்டில் 13ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1971ஆம் ஆண்டில் 11ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1972ஆம் ஆண்டில் 10ஆம் நூற்றாண்டு வரலாற்றுத் தொகுதியும், 1973ஆம் ஆண்டில் 12ஆம் நூற்றாண்டு பாகம்-1, பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1975ஆம் ஆண்டில் 9ஆம் நூற்றாண்டு பாகம்-1, 16ஆம் நூற்றாண்டு பாகம்-2 ஆகிய வரலாற்றுத் தொகுதிகளும், 1976ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-3 வரலாற்றுத் தொகுதியும், 1977ஆம் ஆண்டில் 16ஆம் நூற்றாண்டு பாகம்-1 வரலாற்றுத் தொகுதியும் காந்தி வித்தியாலயம் பதிப்பாக வெளி வந்தன.*

*1990ஆம் ஆண்டில் 'நம்மாழ்வார்' என்ற பெயரில் ஒரு நூலும் 'ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்' என்ற பெயரில் ஒரு நூலும் ஆசிரியரால் வெளியிடப்பட்டன. இவை இரண்டின் முன்னுரையிலும் இவை முறையே 9ஆம் நூற்றாண்டு வரலாற்றின் இரண்டாம் பாகத்தின் ஒரு பகுதி என்றும் 17ஆம் நூற்றாண்டு வரலாற்றின் முதல் பாகத்தின் ஒரு பகுதி என்றும் ஆசிரியர் குறித்துள்ளார். இதன் அடிப்படையில் இவற்றை இத்திருத்தப்பட்ட வெளி*

யீட்டுத் தொகுப்பில் 'நம்மாழ்வார்' 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகமாகவும் 'ஸ்ரீ குமர குருபரர்' 17ஆம் நூற்றாண்டின் முதல் பாகமாகவும் சேர்க்கப்பட்டுள்ளது.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. ஆசிரியர் வெளியிட்டவை 11. நாம் புதிதாகச் சேர்த்தவை 3. இவற்றுள் 14வது தொகுதியானது மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

ஆசிரியர் இந்நூலின் முதல் பதிப்பில் விடுபட்ட சில செய்திகளைப் பிற்சேர்க்கையாக அச்சிட்டுள்ளார். இத்திருத்தப்பட்ட பதிப்பில் நாம் அவற்றை உரிய இடங்களில் சேர்த்து முறைப் படுத்தியுள்ளோம்.

அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத் தாள் இடையிட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்பு அவரது நூலகத்தில் காணப்பட்டது. இத்தொகுதிகளில் பல புதிய செய்திகளும் ஆங்காங்கே திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொரு தொகுதியிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம்.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்தியவர் அவர் மகனார்; உணவளித்து எம்மை உபசரித்தவர் அவர் மருமகளார்; இவர்கள் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செலவிட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக்குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படையில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25.12.2005.

**வே. கருணாநிதி**

# முதல் பதிப்பின் முகவுரை

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேனது உள்ளப் பிழை பொறுக்கும் பெருமையனைச்
சீயேதும் இல்லாது என் செய்பணிகள் கொண்டருளும்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

தமிழ் இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு முறையில் ஆராய்ந்து கூறும் எமது முயற்சியில் இது இரண்டாவது புத்தக மாகும். பதினான்காம் நூற்றாண்டின் இலக்கிய வரலாறு தனிப் புத்தகமாக உடன் வெளியாகியிருக்கிறது. அதைத் தொடர்ந்து பதினைந்தாம் நூற்றாண்டின் வரலாறு இப்போது வெளியா கிறது.

இவ்வெளியீடுகள் பற்றிய எல்லாக் கருத்துக்களும் முதல் புத்தகத்தின் முகவுரையில் தெளிவாக உரைத்திருக்கிறோம். அங்கு இந்நூல்களுக்குத் தோற்றுவாய் யாது, முன் எழுந்த நூல்கள் யாவை, வரலாறு விளங்காமைக்குக் காரணம் யாது, இன்றைய இலக்கிய வரலாற்று நூல்களின் போக்கு யாது, பிழைகள் எவ் வாறு உண்டாகின்றன, இந்நூல்களில் காலக் குறிப்பு எவ்வாறு உறுதி செய்யப் பெறுகிறது. இவ் ஆராய்ச்சிக்கு ஆதார நூல்கள் யாவை, இங்கு நன்கு ஆராய்ந்து முடிவு செய்யப்பெற்ற காலங் கள் யாவை என்ற பொருள்கள் விளக்கிச் சொல்லப்பட்டன. அதேமுறையில் இந்தப் புத்தகமானது அதன் தொடர்ச்சியாகவே அமைகிறது. இதைப் படிப்பவர் பதினான்காம் நூற்றாண்டு இலக் கிய வரலாற்றின் முகவுரையையும், முன்னுரையையும் நன்கு கற்றறிந்தால் மிக்க தெளிவு உண்டாகும்.

இந்த நூலும் முன்சென்ற நூலை ஒட்டி, ஆசிரியர் பற்றிய வழக்காறுகள், அவர் வாழ்க்கைச் சரித்திரம், நூலாராய்ச்சி, கால நிர்ணயம் என்ற பொருள்களைக் கூறும் முறையில் அமைந் திருக்கும்.

இந்நூற்றாண்டில் வரலாறு ஆராயப் பெறுகின்ற ஆசிரியர்களின் தொகை ஐம்பதுக்கு மேல் ஆகும். இவர்களுள் அருணகிரி நாதரும், காளமேகப் புலவருமே இலக்கிய ஆராய்ச்சியாளரால் பலமுறை சொல்லப்பெறும் ஆசிரியர்கள். ஏனையோரைப் பற்றி இலக்கிய வரலாறுகளுள் குறிப்புக் காண்பது அரிது. இவர்களுள்ளும், காளமேகப் புலவர் வரலாற்றில் தொடர்பின்றிக் கிடந்த சில செய்திகளை இங்கு ஒருமுகப்படுத்த முயன்றிருக்கிறோம்.

சென்ற நூற்றாண்டில் சிறப்பான புராணம் செய்தவர் கச்சியப்பர். அவர் செய்த கந்தபுராணம், அவருடைய இலக்கியப் புலமை காரணமாகவும், சைவ மக்களுக்கு அதனிடத்துள்ள ஈடுபாடு காரணமாகவும், புராணம் என்ற நிலையைக் கடந்து, பேரிலக்கியமாக இன்றும் விளங்கி வருகிறது. ஆனால் பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய மூன்று புராணங்களுள், திருவாதவூரடிகள் புராணமானது சமய தத்துவங்களை நன்கு கூறிய போதிலும், புராணம் என்ற அளவில் நின்று விடுகிறது. நல்ல இலக்கியம் என்று மட்டுமே இதைச் சொல்லலாம். ஆனால் மற்ற இரு புராணங்களாகிய இரு உபதேச காண்டங்களும், சிவ புண்ணியங்களை மட்டும் கூறுவனவாய் வெறும் புராணங்களாக மட்டுமே நிற்கின்றன. மாணிக்கவாசகர் காலத்தை யாரும் இதுவரை திட்டமாகக் கூறவில்லை. அவர் சரித்திரத்தைப் பாடிய கடவுள் மாமுனிவருடைய காலமும் இதுவரை வரையறை செய்யப் பெறவில்லை; இவர் காலத்தை இங்கு வரையறை செய்து கூறுகிறோம்.

சைவ இலக்கிய ஆசிரியர் பலர், வள்ளல் பரம்பரையினர் ஆகியோர் வரலாறுகள் இங்கு புதிதாக விளக்கமுறுகின்றன. இவற்றை இங்கு புதிதாக தொடர்புபடுத்திக் கூறியிருக்கிறோம். வேதாந்த நெறியில் மிகச் சிறந்த பிரசாரகராயிருந்த தத்துவராய சுவாமிகளுடைய காலத்தை நிர்ணயம் செய்திருப்பதோடு நூல்களையும் சிறிதளவு ஆராய்ந்திருக்கிறோம். இக்காலத்துச் சைன சமய இலக்கியங்களையும் ஒரு தொகுப்பாகக் கூறியிருக்கிறோம். வைணவ மரபில் மணவாள மாமுனிகள் ஒருவரே சிறந்த ஆசிரியராக விளங்குகிறார். உரையாசிரியர்கள் மிகப்பலர். இன்னும் பலர் இக்காலத்திற்குரியவர்களாக இருந்திருத்தலும் கூடும்; எதிர்காலத்தில் விளக்கம் ஏற்படலாம்.

இப்புத்தகத்தால் சிறப்பாக விளக்கம் பெறுகின்ற ஆசிரியர் கள் ஆதிவராககவி, கடவுள் மாமுனிவர், வள்ளல் பரம்பரை யினர், தத்துவராய சுவாமிகள் ஆகியோர். இங்கும் இலக்கண இலக்கியங்கள் மட்டுமின்றிப் பிற துறைகளில் தெரிந்த நூல்களை யும் சேர்த்திருக்கிறோம். கணக்கதிகாரம் செய்த காரியார் பற்றி யும், வைத்திய நூல்கள் பல செய்த தேரையர் பற்றியும் சில ஆராய்ச்சிக் குறிப்புகளை இங்கு தருகிறோம். கணக்கதிகாரத் திலிருந்து, தமிழ்நாட்டில் முற்காலத்திலிருந்த கணிதவளமும், கணிதநூல் வளமும் எவ்வளவு விரிவானவை என்று அறிய முடி கிறது; ஆனால் அவையாவும் இன்று விளக்கமின்றி மங்கி அழிந்து விட்டன. தேரையர் வைத்திய நூல்கள் பல சென்ற நூற்றாண் டில் அச்சாகியிருந்தன; அவற்றுள் ஒன்றும் இன்று அச்சில் கிடைப்பதில்லை. தேரையர் வைத்தியம் என்ற பெயரால் இன்று வழக்கிலுள்ள நூல்கள், அவர் செய்தனவல்ல. திருமூலர் பெய ராலும், திருவள்ளுவர் பெயராலும் போலி 'ஞான' நூல்கள் மலிந்திருப்பன போல, போலித் தேரையர் வைத்திய நூல்களும் பல்கியுள்ளன. தேரையரும் காரியாரும் பதினைந்தாம் நூற்றாண் டில் வாழ்ந்தனர் என்பது அறிஞர் கருத்து.

பல புலவர்கள் பெயர் தெரிந்தும் நூல்கள் எவையும் தெரிய வில்லை. தென்காசியில் ஆண்ட பராக்கிரம பாண்டியனைச் சூழ்ந்து புலவர் பலர் வாழ்ந்தனர். ஆனால் அவர்கள் நூல்கள் விளக்கம் பெறவில்லை. அதேபோல சாசன வாயிலாக அறிய வருகின்ற புலவர்களும் சிலர் இருந்திருக்கிறார்கள். மெய்க்கீர்த்தி பாடிய புலவர் பலர் இருந்திருப்பர். அவர்களது வரலாறுகள் விளங்கவில்லை.

சித்தர்களைப் பற்றிய ஆராய்ச்சி இரண்டு வரலாறுகளிலும் விரிவாகவே மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இப்பகுதியில் உள்ள வரலாற்றைப் படிக்குமுன் முந்திய நூற்றாண்டு வரலாற்றிலுள்ள இதே பகுதியைப் படிப்பது பயனுடையதாயிருக்கும். அங்கு சிவ வாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார், பெண்பாற் சித்தரா கிய அவ்வையார் ஆகியோர் வரலாறுகளை மட்டும் ஆராய்ந் தோம். இந்தப் புத்தகத்தில் சித்தர் என்ற பெயரால் மட்டும் தெரிய வந்திருக்கின்ற சில சித்தர் பாடல்களை ஆராய்கிறோம். சித்தர் நூல்களுக்கு ஆராய்ச்சிப் பதிப்பு இன்னும் வெளிவராதது ஒரு

குறை. அவற்றுள் யோகம் கூறப்படுவது ஒருபுறம் இருந்தாலும், இலக்கியத்துறையில் அந்நூல்களைத் தமிழ் வல்லார் புறக் கணித்திருப்பது வருந்தத்தக்க நிலை. சமயத் துறையிலும், இலக் கியத் துறையிலும் அவை இன்னும் சிறப்பான இடம் பெறுதற்கு உரியன.

சித்தர் நூல்களில் மிகச் சிறந்த பாடல்களும் போலிகளும் ஒன்றாய்க் கலந்துள்ளன. அன்றியும், ஏடுகள் தேடிப் பரிசோதித் தால் அச்சில் வராத பாடல்களும், நூல்களும் பல கிடைத்தல் கூடும். இவற்றில் தனியே ஆராய்ச்சி செய்வதற்கு நிரம்பப் பொருள் இருக்கிறது. இவ்வாறு பாடல்களைத் திரட்டி, போலிகளை விலக்கி, செம்மையான ஒரு சித்தர் நூல் அமைக்கப் பெறுகிற வரையில், இங்கு 14 - 15 ஆகிய இரு நூற்றாண்டுகளின் வரலாற்றி லும், சித்தர் பாடல்களை நன்கு ஆராய்ந்த போதிலும், இவை முடிவான கருத்துக்கள் என்று கருதுவதற்கில்லை.

மேலும் சித்தர் அனைவரும் சைவராகவே இருத்தலும் குறிப் பிடத்தக்கது. வரலாறு வழியாக நாம் அறிந்தாலும், பாடல்கள் வழியாக நாம் அறிந்தாலும் அறிகிற சித்தர்கள் எல்லோரும் சைவராகவே இருக்கிறார்கள். நாமரூபங் கடந்த பொருளை அகக் காட்சியால் மட்டும் கண்டு, அகத்திலேயே வழிபடுதல் சைவத் துக்கே பொருந்துவதென்றும், வைணவத்துக்குப் பொருந்தாது என்றும் கருத வேண்டியிருக்கிறது.

வைணவத்தில் இவ்வாறு ஒரு மார்க்கம் ஏற்படவில்லை. சித்த மார்க்கம் என்றால் பொதுவாக யோகம் என்றே நினைக் கிறோம். நாதமுனிகள், யோக ரகசியத்தைத் திருக்குருகைக் காவ லப்பனுக்கு உபதேசித்தார். பின்னும் உய்யக் கொண்டாருக்கு உபதேசிக்க எண்ணியபோது, அவர் தமக்குப் பக்தி மார்க்க மொன்றே அமையும், யோக மார்க்கம் வேண்டாமென்று மறுத்து விட்டார். வைணவத்தில் சித்த மார்க்கத் தொடர்பு இவ்வளவே.

எவ்வித ஆதரவுங் காட்டாது, ஆராய்ச்சியும் செய்யாது ‘இந் நூலின் காலம் இது’ என்று மட்டும் சொல்லிப் போகின்றோர் கூற்றை நாம் இங்கு எடுத்து ஆராய முற்படவில்லை. ஆனால் ஆராய்ந்து சொல்லுவோர் சிலரது கூற்றையேனும் இங்கு குறிப்

பிட்டுச் செல்வது அவசியமாகும். வையாபுரிப் பிள்ளையவர்கள், 'காவிய காலம்' என்ற தமது நூலில் 14, 15 ஆகிய இருநூற்றாண்டு களுக்கும் உரியனவாக பின்வரும் நூல்களைக் குறிப்பிட்டிருக் கிறார்: கி.பி. 1300க்கு மேல் - மேரு மந்தரபுராணம் 1380; கி.பி. 1400க்கு மேல் அரிச்சந்திர வெண்பா, நளவெண்பா, வில்லி பாரதம், யசோதர காவியம். அன்றியும், கச்சியப்பர் செய்த கந்த புராணம் 700+825=1525 கி.பி. எனவும், ஞானவரோதயர் செய்த உபதேச காண்டம் 16ஆம் நூற்றாண்டு எனவும் குறிப்பிட்டிருக் கிறார். நளவெண்பாவின் காலம் 13ஆம் நூற்றாண்டு. யசோதர காவியம் இன்னும் சற்று முன்னதாகவே இருக்கும். ஆகவே இவை இந்நூல்களில் ஆராயப் பெறா. அடுத்து கச்சியப்பரைக் குறித்து ஆராயும்பொழுது, பிள்ளையவர்கள் 'வேதமொடு வேதாங்கம்' என்ற பாடலில் 'சகாத்தம் எழுநூற்றின் மேலாய்' என்று குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டைக் கொல்லமாண்டு என்று கொண்டார். இப்பாடல் கொள்ளத்தக்கதன்று என்பதை முந் திய நூலில் 'கந்த புராணத்தின் காலம்' என்ற தலைப்பில் விளக்கி யிருக்கிறோம். அன்றியும், காஞ்சிபுரத்தில் பாடிய நூலுக்குக் கொல்லம் ஆண்டைக் குறிப்பிடுவதற்கு வழியே இல்லை. அப் பாடல் 'மேலாய்' என்று கூறுவது, திட்டமில்லாத கூற்றை உணர்த் தும். மேலும் கந்தபுராண அரங்கேற்ற சமயத்தில் நிகழ்ந்த சம் பவத்தை அருணகிரிநாதர் திருப்புகழில் குறிப்பிடுவதால் (14 ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு பார்க்க) கந்த புராணமானது அருணகிரிநாதர் காலமாகிய 1400-1450க்கு முற்பட்டது என்பது தெளிவு. அவர் மாணாக்கரான ஞானவரோத யரும், கச்சியப்பரின் உடன் காலத்தவராதலாலும், காளமேகம் குரு என அவரைக் குறிப்பிடுவதாலும், அவர் காலம் 1450 ஆகும் எனக் கருதலாம். இவ்விதமாக, இங்கு சொல்லிய நூல்களுக்குக் 'காவியகாலம்' குறிப்பிடுகின்ற கால எல்லை பொருந்தாமை நன்கு விளங்கும்.

இந்நூலுக்கு ஆதாரமான நூல்களின் பட்டியல் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. இந்த நூற்றாண்டுக்குரிய சமய நூலா சிரியர்களின் பரம்பரை அட்டவணைகள் பல முந்திய நூலில் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளன. இந்நூற்றாண்டின் சைவ ஆசிரிய பரம்பரைகளையும், தொடர்பு கருதி, ஒரு தொகுப் பாக அங்கேயே சேர்த்துத் தந்திருக்கிறோம். அவை தமிழ் நூல்

வரலாற்றிற்கே ஒரு புதிய விளக்கம் தருவனவாகும். வழக்கம் போல் இக்காலத்துக்குரிய ஆசிரியர்களின் கால அட்டவணையும், கால ஒப்புமை அட்டவணையும் பிற குறிப்புக்களும் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன.

முந்திய பதிப்பாசிரியர்களுக்கும் ஆராய்ச்சியாளருக்கும் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். ஆராய்ச்சிக்கு முடிவில்லை; வளர்ந்து கொண்டே தான் போகும்.

அச்சுத் திருத்துவதில் உதவி செய்த காந்தி வித்தியாலயத் தமிழாசிரியர் திரு.கு. கலியாணசுந்தரம் அவர்களுக்கு எமது நன்றி உரியது. மிகச் சுருங்கிய காலத்தில் விரைந்து நன்முறையில் இந் நூலை அச்சிட்டுதவிய மாணிக்கம் அச்சகத்தாருக்கு எமது நன்றியும் பாராட்டுதலும் உரியன.*

இந்நூல் வெளியிடப் பொருளுதவி செய்த இந்திய அரசின் கல்வியமைச்சகத்துக்கு எம் நன்றி உரியது. 11, 12, 13ம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறுகள் வெளிவரச் சித்தமாயுள்ளன.*

எம்மை இத்துறையில் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற இறைவன் திருவடியை எந்த நேரமும் சிந்திக்கின்றோம்.

பார்பாடும் பாதாளர் பாடும் விண்ணோர் தம்பாடும்
ஆர்பாடும் சாரா வகை அருளி ஆண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ. – திருவாசகம்

திருச்சிற்றம்பலம் — மு. அருணாசலம்
13. 04. 1969.

* முதல் பதிப்பிற்கு மட்டும் பொருந்தும் செய்திகள்,

# பொருள் அடக்கம்

## அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



ooo

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்

○○○

# முன்னுரை

இந்த நூற்றாண்டின் பல்வகை நிலைமைகளை 14ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றின் முன்னுரையில் ஒருங்கு தொகுத்து ஆராய்ந்தோம். அரசியல் நிலைமை, சமுதாய நிலைமை, சமய நிலை, வடமொழித் தொடர்பு, இந்தியா எங்கும் உள்ள சமய நிலை, இலக்கிய நிலை ஆகிய கருத்துக்களை விரிவாக அங்கு பேசினோம். அவற்றை இங்கு மீண்டும் நினைவுகூர வேண்டும். இப்போது தனியாக இந்த நூற்றாண்டுக்கு மட்டும் பொருந்து கின்ற சில குறிப்புக்களை இங்கு கூறுவோம்.

இந்த நூற்றாண்டில் பேரரசுகள் யாவும், தென்னிந்தியாவைப் பொறுத்தவரை, வீழ்ச்சி அடைந்து, அரசு என்று பெயர் சொல் லுவதற்குத் தகுதியில்லாத சிற்சில குறுநாட்டுத் தலைவர்கள் தோன்றி வாழ இடம் கொடுத்திருந்தது. விசயநகர ஆட்சி இந்த நூற்றாண்டில் ஓங்கி இருப்பினும், அடுத்த நூற்றாண்டில் வீழ்ச்சி யுற்றது. முகம்மதியருடைய தாக்குதலால் சீர்குலைந்து வந்த இந்து சமூகத்தையும் பண்பாட்டையும் விசயநகர மன்னரது ஆதரவு, ஒருவகையில் தாங்கி நிமிர்த்து நிறுத்தியது உண்மை; விசயநகர மன்னர் காலத்தில் தமிழ்நாடெங்கும் கோயில்களும், சிற்பமும், இலக்கியமும் பிற கலைகளும் செழித்தோங்கி வளர்ந்தன. எனி னும் இவையும், மக்களது விழிப்புக் குறைவும் ஒற்றுமையின்மை யும் காரணமாக, நெடுநாள் நிலைத்து நிற்காமல் வீழ்ச்சி அடைந் தன. புதிதாக வந்து மோதிய மேலைநாட்டு நாகரிகத்தின் மோத லுக்கு ஆற்றாமல் உடைந்து அடுத்த இரு நூற்றாண்டுகளில் வெள்ளையர் ஆதிக்கத்தின் வித்தாகக் கிறித்துவ மதம் பரவவும் அதன் வழியே மேலைநாட்டு நாகரிகமும் ஆதிக்கமும் நிலைத்த இடம்பெறவும் இடம் கொடுத்துவிட்டன. இந்த நிலையில் 15ஆம் நூற்றாண்டில், 12ஆம் நூற்றாண்டு வரை உள்ளது போன்ற பெருஞ் சிறப்புக்கள் இலக்கியத்துறையில் தோன்றவில்லை என்பது உண்மை.

ஆயினும், ஓரளவு சிறப்பான புலவர்களும் இருக்கவே செய்தார்கள். இது ஒரு வகையில் அழியப்போகும் தருணத்தில் விளக்கானது அதிகம் கொழுந்துவிட்டு எரியும் நிலைதான் என்று சொல்லத் தோன்றுகிறது. அருணகிரிநாதரை அறியாத தமிழ் மகன் இருக்க மாட்டான். தமிழ்த் தெய்வமாகிய முருகன் மீது எண்ணிலடங்காத பக்திப் பாசுரங்களும் சந்தப் பாசுரங்களும் பாடித் தமிழகமெங்கும் இளம்பிள்ளைகளும், பெண்களும், பெரியவர்களும், தனியாகவும் கூட்டமாகவும் கும்மாளமாகத் தட்டமிட்டுக் கூத்தாடிப் பாடச்செய்த பெருமை இவர் ஒரு வருக்கே உள்ளது. இவருடைய பாடல்களில் சிறப்பானவை திருப் புகழ்ப் பாடல்கள். "திருப்புகழ் படிக்கும் அவர் சிந்தை வலு வாலே - ஒருத்தரை மதிப்பதில்லை உன்றன் அருளாலே" என்பது பாட்டல்லவா?

தனிப் பாடல்களாலும், ஆசுகவியாலும், சிலேடையாலும், கல்லாத மாந்தர்களுடைய உள்ளத்தையும் கொள்ளை கொண் டவரான காளமேகப் புலவர் இக்காலத்தில் வாழ்ந்தவர். காதம் பரி என்ற ஒரு விரிவான காவிய இலக்கியமும் இக்காலத்தில் தோன்றியது போலும். வெண்பா இலக்கியங்கள், இராமாயண வெண்பா அரிச்சந்திர வெண்பா போன்றவை, இக்காலத்தில் தோன்றியிருப்பினும், ஆட்சி பெறவில்லை.

இலக்கணத்துறையில் கயாதர நிகண்டு என்ற ஒரு நிகண்டு நூல் மட்டும் தனி முயற்சி என்று அறிகிறோம்.

பண்டைய இலக்கியங்களிலிருந்து நீதி பற்றியும் அகம், புறம் முதலிய பொருட் பகுதி பற்றியும் கவிதைச் சிறப்புடைய பாடல்களைத் தொகுத்த புறத்திரட்டு என்ற ஒரு தனிப்பெரும் தொகை நூல் இக்காலத்தே எழுந்தது. சங்க இலக்கியங்களுள் எட்டுத் தொகையானது அக்காலத்துக் கிடைத்த இலக்கியப் பாடல்கள் அனைத்தையும் தொகுத்த ஒரு தொகுப்பாகும். அதே வழியில் சென்று, பெரும்பான்மையும் சங்க இலக்கியங்களிலும் பதினெண்கீழ்க்கணக்கிலும், இன்று இறந்துபோன வேறு சில நூல்களிலும் இருந்து எடுத்த நல்ல பாடல்களின் தொகுப்பே புறத்திரட்டு. இதையும் இலக்கிய ஆசிரியர் என்ற தலைப்புடைய அத்தியாயத்தில் சிறிது ஆராய்வோம்.

இக்காலம் உரைகள் மிகுதியாகத் தோன்றிய காலம். தொல் காப்பிய உரைகள் சில, திருக்குறள் உரை, நேமிநாதம் புறப் பொருள் வெண்பாமாலை போன்ற இலக்கண உரைகள், திருக் குறள், தக்கயாகப் பரணி முதலான இலக்கிய உரைகள், சிவப் பிரகாசம் போன்ற சைவ சாத்திர உரைகள் இக்காலத்தில் பல்கின. புதுநூல் முயற்சி குறைந்து பண்டை நூல்களுக்கு விளக்கம் விரி வாக ஏற்பட்டதற்கு ஒரு காரணம் அரசியல் சூழ்நிலையே ஆகும்.

பல துறைகளிலும் இக்காலப் பகுதியில் சமய நூல்கள் பெருகின. சைவத்தில் மெய்கண்ட பரம்பரையில் பல ஞானிகள் தோன்றிச் சிறு சாத்திர நூல் செய்தார்கள். பெரும் புராணங் களும் தோன்றின. முதன்முதலாக வேதாந்தத் துறையில் தத்து வராய சுவாமிகள் தமக்கென ஒரு புதுவழி வகுத்துக் கொண்டு எண்ணற்ற தோத்திர நூல்களும், சாத்திர நூல்களும் செய்தார். வைணவத்தில் சென்ற நூற்றாண்டில் புதிதாக வளர்ந்தோங்கிய வடகலை வளர்ச்சிக்கு ஒத்து அதே நூற்றாண்டில் தோன்றிய மணவாள மாமுனிகள் மூலம் தென்கலை மிகப்பெரிய செல் வாக்குடைய சிறந்த சமயப் பிரிவாக விளங்கிற்று. சைன சமயத் திலும் கூட இலக்கியத் துறையில் கடைசி ஒளி இக்காலத்தில் தான் வீசிற்று என்று சொன்னால் குற்றமாகாது. ஸ்ரீ புராணம் என்ற மணிப்பிரவாள நடை நூல் நாமறிந்த வரையில் முதன் முதலாக எழுந்த உரைநடை நூலாகும். இதற்கு முன் தனித்த உரை நடை நூல் இல்லை. ஆனால், இதன்பின் சிறப்பான சைன சமய நூல் எதுவும் எழவில்லை.

இக்காலத்தில் சற்று முன் பின்னாக, சித்தர்கள் பலரும் தோன்றினார்கள் என்று நாம் கருதவேண்டி இருக்கிறது. அகப் பைச் சித்தர், குதம்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர் போன்ற நன்கு தெரிந்த உண்மையான சித்தர்கள் முதல், பெயர் அதிகம் தெரியாத சித்தர்கள் இறுதியாக, ஞானிகள் பலர் வாழ்ந்தார்கள். இவர்கள் வாழ்ந்ததும் பல சித்துக்கள் செய்துகாட்டியதும் உண்மையாயிருக்கலாம். இவர்களில் பலர் சிறப்புடைய இலக் கியமும் பாடினார்கள். ஆனால் இந்த உண்மை நிலையே பிந்திய நூற்றாண்டுகளில் போலிச் சித்தர்கள் முளைக்கவும் இடம் கொடுத்தது.

இலக்கண இலக்கியங்கள் அல்லாமல் பிறதுறை நூல்களும் தமிழில் தோன்றின என்பதற்கு இந்நூற்றாண்டுக்குரியதாய் நாம் கருதும் கணக்கதிகாரமும் சான்றாகும். இதனுள் பண்டைய கணித நூல்கள் பல பெயர் சொல்லப்பட்டுள்ளன. ஆனால் இவற்றில் ஒன்றேனும் இன்னும் கிடைக்காதிருப்பது நமக்கு மிகவும் வருத்தம் தரும் செய்தி.

நாடோடிப் பாடல் என்ற துறையில் பாய்ச்சலூர்ப் பதிகம் என்ற சிறு நூலும் குறிப்பிடத்தக்கது.

இதுவே இந்நூற்றாண்டு வரலாற்று ஆராய்ச்சினுள் நாம் புகுமுன் அறிய வேண்டிய பொதுவான நிலை.

OOO

*அத்தியாயம் 1*

# இலக்கிய ஆசிரியர்

## *முன்னுரை*

*பேரிலக்கியங்கள் தோன்றுவது எந்த மொழியிலும் மிகவும் அருமை. பேரிலக்கியத்தைப் பெருங்காப்பியமென்கிறோம். பலநூறு ஆண்டுகளுக்கொரு முறையே காப்பியக் கவிஞன் தோன்றுகிறான். தமிழுக்கு மட்டுமன்று, உலக மொழிகள் அனைத்துக்குமே இது பொருந்தும் உண்மையாகும். இளங்கோ வடிகள் காலம் முதல் சேக்கிழார் பெரியபுராணம் பாடிய காலம் வரையில் தமிழ்மொழியில் பெருங்காப்பியங்கள் தொடர்பாகத் தோன்றிக் கொண்டிருந்தன. இதுவே வியப்புக்கு இடமான செய்தி. காப்பியங்கள் யாவுமே ஒத்த பெருமையுடையன என்றோ, பெருங் காப்பியத்துக்குரிய தகுதி முழுமையும் பெற்றன என்றோ கொள் ளுதல் கூடாது. காப்பியத்தின் இலக்கணங்கள் சிலவும் பலவும் அவற்றில் பொருந்தியிருந்தன என்று மட்டுமே கொள்ள வேண்டும்.*

*13ஆம் நூற்றாண்டின் பின் தமிழ்நாட்டில் ஏற்பட்டிருந்த அரசியற் குழப்பங்களால், பேரிலக்கியம் செய்யவல்ல புலவர்கள் எழுவதற்கான சூழ்நிலை நிலவவில்லை. 14ஆம் நூற்றாண்டில் வில்லிபுத்தூரர் பாரதம் பாடியதே ஓர் அபூர்வ நிகழ்ச்சி. சூழ் நிலை இவ்வாறு பாடுவதற்கு ஏற்றவாறு அமையவில்லை. நாம் கருதுகிற 15ஆம் நூற்றாண்டாகிய காலப்பகுதியில், பேராசிரியர் சிலர் வாழ்ந்த போதிலும், பேரிலக்கியம் எதுவும் தோன்றவில்லை. முருக பக்தியிலேயே திளைத்த அருணகிரி நாதர் இந்நூற்றாண்டில் புகழோடு விளங்கியவர். முருகன் புகழையன்றி வேறெதையும் பாடாத பக்தியுடையவராய், இன்றளவும் தெய்வபக்தி குறைந்தவர்கள் கூட, தம் பாடல் களைப் பரவசமாகப் பாடியாடும்படி செய்த பெரியார் அருண கிரிநாதர். அவரையொத்துப் பிறரொருவர் தோன்றவில்லை.*

## அருணகிரிநாதர்

அருணகிரி - திருவண்ணாமலை. இது அவருடைய இயற் பெயரா என்பது தெரியவில்லை. தலத்தால் அப்படி வந்திருக் கவும் கூடும். அருணகிரிக்கு இவர் திருப்புகழ் 80க்கு மேல். அருணகிரியை குமரனே என்றே பாடுகிறார். திருப்புகழ் என்பது ஒரு பழைய தொடர். சுந்தரர் திருமுறையில் 69ஆம் பதிகம் திருமுல்லைவாயில் - பாடல்கள் 2,4 திருப்புகழ் விருப்பால் என்று கூறுகின்றன. திருப்புகழ் ஒரு பாடலேனும் பாடாத தமிழர் இல்லை. அதைப் பாடியவர் அருணகிரிநாதர் என்ற பக்த சிகாமணி. அந்நூலையன்றி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு முதலான பல முருகன் புகழ் நூல்களையும் அவர் பாடியிருக் கிறார். எல்லா நூல்களுமே மிகவும் பிரசித்தமாய் வழங்குகின்றன. இருந்தும், அவருடைய சரித்திரமானது, பல வகையான அரு வருக்கத்தக்க கதைகளோடு கூட்டிப் பொய்மொழி மலிந்த செய்திகளோடு புனைந்து, உண்மைச் சரிதமென வழங்கி வருவது பெரிதும் வருந்தத்தக்கது. எவ்வளவுக்கு அவருடைய வாழ்க்கை கீழ்த்தரம் என்று காட்டலாமோ அவ்வளவுக்கு முருகனுடைய அருளின் பெருமை உயர்ந்து விளங்கும் என்று சரிதம் கூறிய வர்கள் எண்ணினர் போலும்! ஆனால் அவரே பாடிய பாடல்களில் காணும் குறிப்புக்களுக்கு இச்செய்திகள் முற்றிலும் முரணாக வுள்ளன. நெடுங்காலமாக வழங்கும் போலிக் கதைகளையெல்லாம் மறுத்து, அகச் சான்றுகளைக் கொண்டே அவருடைய உண்மை யான வரலாறு இவ்விதமாகத்தான் இருக்க வேண்டுமென்று ஆராய்ந்து, சைவ சித்தாந்த மகாசமாஜத் தலைவராயிருந்த ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களும், தணிகை மணி வ.சு. செங்கல்வராய பிள்ளையவர்களும் தனித்தனி வரலாறும் ஆராய்ச்சியும் எழுதியிருக்கிறார்கள். இவ்விருவர் கருத்துக் களைத் தழுவியே பின்வரும் சரித்திரம் சொல்லப் பெற்றுள்ளது.

முருகப் பெருமானையே பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டுப் பேறு பெற்ற தவராச யோகியாவார் அருணகிரிநாதர். தோத்திரங்களைச் சந்தப்பாவினால் மழைபோல் பொழிந்தவர். இவர் திருவண்ணாமலையில் பிறந்து வாழ்ந்தவர். இவர் முற்பிறவி பற்றிப் புலவர் புராணமுடையார் கூறும் கதைகள் இவரது பெருமையை இன்னும் சிறப்பிக்க வேண்டுமென்ற கருத்தால் எழுந்தனவேயன்றி, உண்மைக்குப் பொருந்துவன

அல்ல. சீலமான வாழ்க்கையுடைய ஒரு வேளாளர் குடும்பத்தில் தோன்றியவர். (இவர் அந்தணர் என்போர் கூற்றும், உருத்திர கணிகையின் புதல்வர் என்போர் கூற்றும், பொருந்தாதவை.) உரிய காலத்தில் மணம் புரிந்து கொண்டு மனைவி மக்களோடு வாழ்ந்தவர். எனினும், கன்மவசத்தால் விலைமாதரோடு கூடிச் சிற்றின்பத்துறையில் மூழ்கி, கைப்பொருள் யாவுமிழந்து வறுமை யுற்று, பிணிவாய்ப்பட்டு மிகவும் நொந்து போனார். உறவினரும் உலகிலுள்ளாரும் அருவருத்து இழித்தொதுக்கிய நிலையை அடைந்த இவர், உலகத்துன்பமும் தம் இழிநிலையும் பொறாராய் உயிரை விடத் துணிந்தார். இந்த நிலையில், இவரை உயிர் போகாமற் காத்து முருகப்பெருமான் அருள் செய்தார் என்று அறிகிறோம்.

**மனையவள் நகைக்க ஊரின் அனைவரும் நகைக்க லோக**
**மகளிரும் நகைக்க தாதை – தமரோடும்**
**மனமது சலிப்ப நாயன் உளமது சலிப்ப யாரும்**
**வசைமொழி பிதற்றி நாளும் – அடியேனை**
**அனைவரு மிழிப்ப நாடு மனவிருள் மிகுத்த நாடி**
**அகமதை எடுத்து சேமம் – இதுவோவென்று**
**அடியனும் நினைத்து நாளும் உடலுயிர் விடுத்தபோதும்**
**அணுகிமு னளித்த பாதம் – அருள் வாயே.**

என்ற பாடல் இங்கு கருதத்தக்கது. இவர் திருவண்ணாமலைக் கோபுரத்திலிருந்து கீழே குதித்தாரென்றும், அப்போது பெருமான் இவரைத் தாங்கிக் காத்துத் தரையில் விட்டு அருள்செய்தார் என்றும் வரலாறு வழங்குகிறது. இது இவர் முருகன் அருள் பெற்றார் என்ற அளவுக்குப் பொருந்துவதாகும்.

கோயில் மண்டபத்தூணில் உள்ள முருகன் இவரைத் தாங்கினார் என்று கம்பத்திளையனார் என்ற தூணில் உள்ள சிற்ப உருவை அன்பர் காட்டுகிறார்கள்.

இவ்வாறு இவர் அருள்பெற்றதோடு, இவர் வாழ்க்கையின் முற்பகுதி முடிந்தது. பிற்பகுதி இவர் தலயாத்திரை செய்ததும் முருகன் புகழைப் பாடி முத்தியடைந்ததுமாகிய வரலாறு.

அருணகிரிநாதரை ஆட்கொண்ட முருகப்பெருமான் ‘முத்தைத் தரு பத்தித்திரு நகை’ என்ற சந்தப் பாடலாக அடியெடுத்துக் கொடுத்து, “நீ நம்மைப் பாடுவாயாக” என்று

*கட்டளையிட்டு மறைந்தார். அவனருளே துணையாக இவர் பாடலானார். அங்கேயே இவர் அண்ணாமலையில் கோயில் கொண்டருளும் பெருமான் பிராட்டி இருவரின் அருளும் பெற்றார். பெற்று முருகன்மீது திருப்புகழ்ப் பாடல்கள் பாடி வருங்காலத்தில், பாடல்களின் சிறப்பால் இவர் பெருமை நாடெங்கும் பரவலாயிற்று.*

*அக்காலத்தில் அங்கு பிரபுடதேவராயன் என்பவன் அரசாண்டு வந்தான். அருணகிரியார் பெருமையை உணர்ந்து இவரைத் தக்கபடி வழிபட்டு முருகப் பெருமானுடைய திருக்கோலத்தைத் தனக்கும் காட்டியருளுமாறு வேண்டினான். அதுகாலை அவ்வரசனிடம் அவைப் புலவனாயிருந்தவன் சம்பந்தாண்டான் என்பவன். அவன் தேவி உபாசகன். அருண கிரிநாதரிடம் அவன் பொறாமை கொண்டிருந்தான். தான் பராசக்தியைச் சபையில் வரவழைத்துக் காட்டுகிறேன் என்று சபதம் கூறி அது முடியாமையால், அவன் தோல்வியுற்றிருந் தான். அந்த நிலையில் அரசன் வேண்டுகோளைக் கேட்ட அருணகிரிநாதர் முருகப்பெருமானை,*

கந்தப் பொழில் திகழ் குருமலை மருவிய பெருமாளே
சந்தச் சபைதனில் எனதுளம் உருகவும் வருவாயே.

*என்று பலவாறு துதித்துக் குறையிரந்தார்:*

அதல சேடனாராட அகிலமேரு மீதாட
  அபின காளி தானாட – அவளோடன்று
அதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
  அருகு பூத வேதாளம் – அவையாட
மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
  மருவு வானு ளோர்ஆட – மதியாட
வனச மாமி யாராட நெடிய மாம னாராட
  மயிலு மாடி நீயாடி வரவேணும்
உதய தாம மார்பான பிரபுடதேவ மாராஜன்
  உளமு மாட வாழ்தேவர் – பெருமாளே. 26

*அனைவரும் கண்டு 'அற்புதம் அற்புதம்' என்று அஞ்சி வியக்கும் படியாக முருகப் பெருமான், மயிலின் நடன ஒலி அனைவர் செவியிலும் விழ, மின்னல்போல் காட்சிகொடுத்து மறைந்தார். சம்பந்தாண்டான் வெட்கியோடினன். இந்த அற்புதத்தைப் பின்னர், அருணகிரிநாதர்,*

**சயிலம் எறிந்த கை வேற்கொடு**
**மயிலினில் வந்தெனை யாட் கொளல்**
**சகமறி யும்படி காட்டிய — குருநாதா.**

எனத் திரிசிராப்பள்ளியிலும், "உலகினில் அனைவர்கள் புகழ் பாடி - அருணையில் ஒரு நொடிதனில் வருமயில் வீரா" எனத் திருமுதுகுன்றிலும் குறிப்பிட்டுப் பாடினார்.

பின்னர் இவர் சைவ சமயாசாரியர் தலயாத்திரை செய்தது போலத் தாமும் முருகன் தலங்கள் சென்று தரிசிக்கும் நோக்கம் கொண்டு யாத்திரை தொடங்கி, திருவண்ணாமலையில் பல பாடல்கள் பாடி, நெடுகிலும் கோவலூர், அதிகை, பாதிரிப் புலியூர் முதலிய தல தரிசனம் செய்து பாடித் தில்லையடைந் தார். அங்கு பலநாள் தங்கிப் பல பாடல்கள் பாடி, மீண்டும் பல தலங்கள் போற்றிக் கொண்டு சீர்காழியடைந்தார். முருகப் பெருமானே சம்பந்தப் பிள்ளையாகத் திருவவதாரம் செய்தார் என்பது இவருடைய சித்தாந்த மாதலால், நெடுநாள் அங்குத் தங்கித் தரிசனம் செய்து கொண்டிருந்தார். பின்னர் அங்கு முருகன் தமக்குக் காட்சியளித்து விராலிமலைக்கு வருமாறு அழைத்தது உணர்ந்து, அங்கு சென்று வழிபட்டார். நெடுநாள் அங்கிருந்துவிட்டுக் கொங்குத்தலங்கள் பலவும் சென்று பணிந் தார். இறுதியாகப் பழனியில் நெடுங்காலம் தங்கியிருந்தார். இவருடைய திருப்புகழ்பெற்ற தலங்களில் பழனியே அதிகப் பாடல்களைப் பெற்றது (96 பாடல்கள்).

பின்னர் இவர் பாண்டி நாட்டை அடைந்தார். மதுரை யையும், பரங்குன்று, சோலைமலையையும் வணங்கி, பிற தலங் களும் கண்டு, திருச்செந்தூர் அடைந்தார். அங்கு முருகனைப் பலகால் தரிசனம் செய்து, திருப்புகழும் பிற பாடல்களும் பாடி வந்தபோது வில்லிபுத்தூராருடன் வாதுசெய்ய நேர்ந்த தென்று தெரிகிறது.

வில்லிபுத்தூரார் - அருணகிரி வாதம்வெறும் கதை, அது உண்மையுமல்ல, இருவர் புலமைக்கும் இழுக்கு என்று கருதுவோர் உளர். இருப்பினும், பின்வந்த நூலாசிரியர் பலரும் இக்கதையை உரைத்திருக்கிறார்கள். கந்தப்ப தேசிகர் செய்த தணிகையுலாவில் பின்வருமாறு பாடுகிறார்:

**— அக்கிளிதான்**
**வில்லிபுத்தூ ரன் செவியின் மேலரி வாள்பூட்டி**
**வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண்.**

செங்கோட்டை - கவிராச பண்டாரத்தையா திருமலை முருகன் பிள்ளைத் தமிழில் பின்வருமாறு கூறுகிறார்:

எதிரும் புலவன் வில்லி தொழ
    எந்தை யுனக்கந் தாதி சொலி
ஏழைப் புலவர் செவிக் குருத்தோடு
    எறியும் கருவி பறித் தெறிந்தே.

எனவே, இக்கதையையும் இங்கு சுருக்கமாக குறிப்பிட்டு விட்டு மேற்சொல்வோம்.

வில்லிபுத்தூராழ்வார் கொடிய வைணவராக அக்காலத்தில் வாழ்ந்தார். அரசனிடம் பெரும் சிறப்புப் பெற்றவராதலால் பல்லக்கில் செல்வார்; செல்லும்போது வழியில் சிவாலயம் இருக்குமானால் அது தம் கண்ணில் படாதிருக்க, திரையிடச் செய்து தம் பார்வையை மறைத்துக்கொண்டு செல்வாராம். (வில்லிபாரதத்தைக் கற்பவர்கள், இக்கூற்று மெய்யாயிருக்க முடியாது என்று கருதுவார்கள்.) இவ்வாறு இவர் செய்தமை கண்டு அருணகிரிநாதர் பரிதாபம் கொண்டு, பின்வரும் பாடல் பாடினார் என்று ஒரு வரலாறு கூறும்:

புரத்தைநர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை
எரித்தவர்க்குத் தாச னெதிரே – நினைத்த புகழ்த்
தேன்சொட்டும் சோணகிரித் தேசிகனைப் போற்றாமல்
ஏன்கெட்டுப் போனான் இவன்.

அருணகிரிநாதர் பெருமையை நேரில் கண்டுணர்ந்த வைணவரொருவர், அக்காலத்தே மிக்க சிறப்பொடு வயது முதிர்ந்தவராய் கவிதா சார்வ பௌமர் என்ற பட்டப் பெயரோடு விளங்கிய வில்லிபுத்தூராரைக் கண்டு, அவர் தம் பக்கத்தில் சந்தப் பாடல் பாடுவதில் தோற்றவர் காதை அரிவதற்கென்று வைத்திருந்த வாளாயுதத்தைப் பார்த்து, "இவ்வளவு பெருமை யுடைய நீர், சந்தப் புகழையே முருகன் மீது பாடிப் பிரசித்தி பெற்றிருக்கிற அருணகிரிநாதரை முடியுமானால் வெல்லும், பார்க்கலாம்" என்று தூண்டிவிட்டுப் போனார். முன்னமே செருக்கு மிகுந்திருந்த அவரிடம் இப்போது பொறாமைக் குணமும் முனைத்தெழவே, தம் பரிவாரங்களோடு இவர் இருந்த இடத்தை அடைந்து தம்மோடு சந்தப் பாடல் பாடுவதில் போட்டி யிடுமாறு அழைத்தார். இவரோ முருக பக்தியில் திளைத்திருந் தமையால் போட்டியில் மனம் பற்றவில்லை. எனினும், உடன்

இருந்த அன்பர்கள், ஏழைப் புலவர்களுக்கு வில்லிபுத்தூரார் செய்த கொடுமைகளை எடுத்துரைத்து, எங்ஙனமாயினும் அவருடைய செருக்கை யடக்குவது உலக உபகாரமாகும் என்று கூறி வேண்டவே, இவரும் அப்போட்டிக்கு உடன்பட்டார்.

இவருடைய பாடற் போட்டியும், பிரபுடதேவராயன் முன்னிலையில் நடைபெற்றது என்பது வரலாறு. இவ்வரலாற்றை ஐயங்கார் சுவாமிகளொருவர் எழுதியுள்ளதை இங்கு பெயர்த்தெழுதுவோம். இந்தச் சுவாமிகள் வில்லிபுத்தூராரைப் பன்மையால் குறிப்பிடுவார்; ஆனால் அருணகிரிநாதரைத் துறவி என்று குறிப்பிட்ட போதிலும், ஒருமையில் அவன் என்றே பேசுவார்; முருகப் பெருமான் மீது இவர் பாடிய நூலைக் "கந்தரந்தாதி" என்றே தமிழுலகில் அனைவரும் சொல்லியிருக்க, நம் ஐயங்கார் சுவாமிகள் "கந்தனந்தாதி" என்றே குறிப்பிடுவார். இவற்றை நாம் பொருட்படுத்தாமல் கதைப்போக்கை மட்டும் கவனிப்போம்.

"வில்லிபுத்தூரார் வந்தவுடனே அரசனமைச்சராதியோர் அந்தணனென்றிடும் முறைமையால், உபசரித்தனர். துறவியாகிய அருணகிரி நாதனெனும் புலவோனும் அவ்வாறு உபசரித்தான். தலத்துப் புலவன் துறவி வேடங்கொண்டவனென்பதையும் மதியாது, சாருவ பௌமன் அதட்டிப்பேசி "சந்தம் மொழிந்தனையெனக் கேட்டு இங்கு வந்தோம். சாற்றுக" என்று கூறினன். "சாற்றுகின்றேன் தடையொன்றில்லை. கோபங் கொள்ளாதீர்" என்று விடையளித்துவிட்டு 'விகட பரிமளம்' எனும் பாவை அருணகிரிநாதப் புலவன் விளம்பினான். இப்பாடல் எங்குளதோ புலப்படவில்லை. கோடையிடி இடித்தாற்போல் முழங்கிக் கவிகூறி, மற்றோர் கவி தொடுக்குமுன், சாருவபௌமன் சபையோர் கேட்க, "இவ்வகைக் கவிகளை நம் அடைப்பக்காரன் ஜாடையினில் சொல்லிவிடுவான்" என்று ஆணவத்தால் தவறிச் சொன்னான். அரசனும், 'இம்மாற்றம் இயல்பல்ல' என்றான். அருணகிரிப் புலவனும், கண்கள் நெருப்பெனச்சினந்து, "கூறிய கவியின் நயமுணராத நீ கவி எவ்வாறு கூறவல்லாய்?" என்று கூறி வில்லிபுத்தூராரை ஒரு மசகம்போல் எண்ணினான். உடனே அரசன் எழுந்து, "சிறப்புள்ள நீங்கள் இருவரும் இவ்வண்ணம் போர் புரிதல் நன்றல்ல; ஒருவர் நன்கவி நூறு கூற மற்றவர் அதனைக் கேட்டுப் பொருள் கூறுதல் வேண்டும்" எனப் பகர்ந்தனன். இதைக்கேட்டு உடனே அருணகிரிப் புலவன் பாட்டுரைக்க வாய்திறந்தான். வந்த புலவனாம் சாருவபௌமன் பொருளுரைக்க

உடன்பட்டுப் பொருளுரைத்துக் கொண்டே வந்தனன். தொடங்கிய அந்நூல் 'கந்தனந்தாதி'. அதிலடங்கிய யமகக் கவி நூறில் ஐம்பது வரை நிறைவேறிய மேல், அருணகிரிப் புலவன் கொஞ்சம் மனம் நொந்து முருகவேளை நோக்கினான். 'திதித்த' எனும் பாடல் தகர'மெனும் வருக்கத்தால் அருணகிரிப் புலவன் வாயிலுதித்தது. அதற்குப் பொருள் கூறமுடியாது வேதியன் மாழ்கிச் சோர்ந்தான். 'பற்பலர் காதை அந்தகன் போல் இது காறும் அறுத்த பாவம் இந்த நாள் வெளிப்பட்டதோ?' என மயங்கினன். மன்னவன் முதற் பலரும், தோற்றவன் காதைக் கொய்தல் தகுதி யென்றனர். "கொய்வதனாற் பயனில்லை. கொய்யாது விடுத்தால் யான் கொடுத்த காதெனப் பெயர் விளங்கும்" என்று அருணகிரிப் புலவன் மொழிந்து கருணை பாராட்டினன். எல்லோரும் அதிசயித்தார்கள். கைவாளை அந்தணனிடத்தி லிருந்து வாங்கிப் பிரபுடதேவனாம் அரசனிடம் கொடுத்து "அதனை நீ உபயோகம் செய்" என்று அருணகிரிப் புலவன் கூறினன். வில்லிபுத்தூரார் அவ்வொரு பாட்டிற்கு மட்டும் சொல்வகை கேட்டு அறிந்து பொருள் கூறி, மற்றைய பாடல் களுக்கும் உரை கூறிவிட்டு அருணகிரிநாதரைச் சுட்டி, "தீதில் லாத கவிக்கடலேழுங் கடந்ததென்று சிந்தை மகிழ்ந்தோம்" என்று வில்லிபுத்தூரார் ஒரு பாட்டுக் கூறினர்.

பின்னர் அரசன், வில்லியின் வாளாயுதத்தைக் கைப்பற்றி வைத்துக் கொண்டான் என்பது வரலாறு. துன்பமே செய்து வந்த வில்லியின் காதை அறுக்காமல் கருணையோடு விட்டமை யாலும், ஈகையையே மிகவும் வற்புறுத்திப் பாடியமையாலும், "கருணைக்கு அருணகிரி" என்று அருணகிரிநாதர் பாடலில் புகழப்பெற்றார் என்பர்.

போட்டிக்காகப் பாடிய **கந்தரந்தாதி**யில் திருச்செந்தூர் 26 செய்யுட்களில் சொல்லப் பெற்றிருப்பதால், அருணகிரி நாதர் இந்நூலைச் செந்தூரிலேயே பாடினார், வில்லிபுத்தூரார் வாக்குவாதமும் இங்கேயே நடந்தது போலும் என்று செங்கல் வராயப் பிள்ளையவர்கள் கூறுவர். வில்லிபுத்தூராரின் ஆடம் பரங்களைக் கண்டோ, அந்தக் காலத்துப் புலவர்களின் படா டோபங்களைப் பார்த்தோ, அருணகிரியார் மிக அஞ்சி, அத் தகைய ஆணவ அழுக்குத் தம்மை அசுத்தப் படுத்தாதிருக்க வேண்டும் என்னும் கருத்துடன்,

பழுதில் பெரு சீல நூல்களுந்தெரி – சங்கபாடல்
பனுவல் கதை காவி யாதியெ ணென்கலை
திருவளுவ தேவர் நாலடி என்கிற
பழமொழிகள் ஓதி யேயு ணர்ந்துபல் – சந்தமாலை
மடல் பரணி கோவை தூது கலம்பகம்
முதலிய அனேக கோடிப்ர பந்தமும்
வகை வகையி லாசு சேர் பெருங்கவி – சண்டவாயு
மதுர கவிராச னானென் வெண்குடை
விருது கொடி தாள மேள தண்டிகை
வரிசையொ டுலாவு மால கந்தை – தவிர்ந்திடாதோ
.................................................. வீறு செந்திலில்
உரிய அடியேனை ஆள வந்தருள் – தம்பிரானே. 940

எனச் செந்தூர்ப் பெருமானைப் பிரார்த்தித்தனர்.

அதன்பின் அருணகிரிநாதர் ஈழத்துத் தலங்கள் மூன்றையும் தரிசித்தார். பின்னர் பாண்டிநாடு திரும்பிப் பல தலங்கள் வழி பட்டுச் சோழநாட்டின் வழியே திருவண்ணாமலைக்கு மீண்டார். பின் வடநாட்டுத் தலங்களைத் தரிசித்தார். வள்ளிமலை, திருத் தணிகைமலை முதலியன இங்குள்ள சிறப்பான முருகன் தலங்கள். பின் வேங்கடம், காளத்தி, தமிழ்நாட்டு எல்லைக்கு அப்பாலுள்ள தலங்கள் யாவும் பணிந்து பாடி, திருவண்ணா மலையில் மீண்டு உறைந்து வரலானார். இங்கிருந்து கொண்டு தலக்குறிப்பில்லாத பல பாடல்கள் பாடினார்; குன்றுதோறாடல் க்ஷேத்திரக்கோவை, பொதுப்பாடல்கள் என்பன பாடிக் கொண்டிருந்தார்.

இவ்வாறு இருந்த காலத்தில், மீண்டும் சம்பந்தாண்டான் சூழ்ச்சி அருணகிரிநாதர் வாழ்க்கையில் தலையிட்டது. முன்னமே இவரிடம் தோற்ற அப்புலவன், சமயம் பார்த்து இவருக்குக் கொடுமை புரிய எண்ணியிருந்தான். இவரிடம் தெய்வத்தன்மை விளங்கியபடியால், தேவலோகத்திலுள்ள பாரிசாதமலர் கொண்டு வரும்படி அவன் தூண்டுதலால் அரசன் ஏவவே, இவர் தம் உடலைவிட்டுக் கிளி உருவத்தோடு சென்று மலர் கொணர்ந்தா ரென்றும், அது சமயம் பார்த்திருந்த புலவன் அரசனிடம் இவர் இறந்துவிட்டார் என்று சொல்லி, கோபுரத்தில் இவர் மறைத்து வைத்திருந்த உடலைக்காட்டித் தகனம் செய்துவிடச் செய்தான் என்றும், மலரோடு கிளி ரூபத்தில் வந்த இவர் நிகழ்ந்ததுணர்ந்து,

ஈசன் அருள் இது என மனம்தேறி, திருத்தணிகை சென்று, தணிகை நாயகன் திருக்கரத்தே தங்கிவிட்டார் என்றும், பழமை யாக வழங்கும் வரலாறு கூறுகிறது.

அருணகிரிநாதர் கிளி வடிவம் பெற்றுச் சென்றார்; பின்னர் தம் உடல் மறையவே தணிகைநாதன் கரத்தில் அமர்ந்தார் என்ற செய்திகள் மனிதவியல்புக்கு அப்பாற்பட்டவை. சுகபதம், சுகரூபம் (சுகம் - கிளி என்றும் பொருள்படும்) என்று தவறாகப் பொருள் பண்ணிக் கொண்டு கதைகள் எழுந்தன என்று இவர் பாடலில் வரும் தொடர்களைக் கிளி வடிவு என்று கருதத் தோன்றுகிறது. இக்கதைகளைக் கேட்டே கந்தப்பதேசிகர் தம் உலாவில் பாரிசாதப் பூக்கதையைக் குறிப்பிட்டிருக்கிறார். சிதம்பரசுவாமிகள் முதலிய பலர் குறிப்பிடவில்லை. எனவே, இக்கதை அவர்களுக்குப் பிற்காலம் தோன்றியது; அல்லது அவர்கள் இதை ஏற்கவில்லை என்று நாம் கருதலாம்.

இவ்வளவே அருணகிரிநாதர் வாழ்க்கையில் முக்கிய செய்திகள். அருணகிரிநாதர் வேளாளர். தமக்கை ஆதி; 5 ஆண்டு கழித்து இவர் பிறந்தார். பட்டினத்தாருக்கும் இவருக்கும் தந்தை மகன் முறைமை பாராட்டும் கதைகள், இவர் காமவுணர்வைப் போக்க இவர் தமக்கை தம்மையே கொடுக்க முன் வந்த கதை முதலியன உண்மைக்கு பொருந்தாதனவாயும், அருணகிரிநாதரின் பெருவாழ்வுக்கு ஒவ்வாத தாழ்ந்ததரத்தன வாயும் இருத்தலால், இங்கு சொல்லப் பெறவில்லை.

20ஆம் நூற்றாண்டில் சிறந்த முருக பக்தராக விளங்கிய பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருணகிரிநாதர் பற்றிக் கொண்டிருந்த கருத்து, சமாஜத் திருப்புகழ்ப் பதிப்பில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது. அருணகிரியார் முத்தம்மை என்ற உருத்திர கணிகையிடம் ஆண்மகன் புணர்ச்சியின்றியே இறைவன் அருளினால் பிறந்தார் என்றும், அவர் விலைமாதர் உறவு கொண்டிலர் என்றும், ஊழ் வலியால் அவருக்குப் பெருநோய் வந்ததென்றும், அதைப்போக்க அவர் அருணைக் கோபுரத்து அறுமுகன் சந்நிதியில் ஆறுநாள் நோன்பிருக்க முருகவேள் தோன்றி, “முத்தைத் தருபத்தித் திருநகை..... எனவோது” என்று அடியெடுத்துதவித் தம்மைப் பாடும்படி அனுக்கிரகம் செய் தலும் இவர் பாடினாரென்றும், பாடிவரும் போதே இவர் நோய் விலகிற்றென்றும், பிறகு பல தலங்கள் சென்று பாடியும் முருக வேளை மீண்டும் தரிசிக்க முடியாமல் வருந்தி, அருணைக்

கோபுரத்தின் மீதேறி நின்று தாம் பாடியவை அனைத்தையும் மீண்டும் பாடிய பின்னும் முருகன் வராதது கண்டு ஏடுகளை உருவிக் கீழே விடுத்துத் தாமும் கீழே குதித்தாரென்றும், உடனே முருகவேள் மானிடவுருவோடு தோன்றித் தடுத்து இவருக்கு ஆறெழுத்துபதேசஞ்செய்து தவஞ் செய்யுமாறு பணித்து மறைந் தாரென்றும், பின்பு அருணகிரியார் தவஞ்செய்ய முருகவேள் தேவியரொடு மயில்மீது தரிசனந்தந்தார் என்றும், பின்னர் அடியார் குழாத்துடன் தோன்றி ஓங்காரத்தை உபதேசித்து மோன நிட்டையிலிருத்தி மறைந்தாரென்றும், அருணகிரியார் பல அற்புதங்களைச் செய்து வயலூர், விராலிமலை, கொடுங் குன்றம், சிதம்பரம் முதலிய தலங்களில் விசேட தரிசனங் கண்டு வில்லிபுத்தூராரோடு வாதுசெய்து வென்று, சம்பந்தாண்டா னோடு வாதுசெய்து முருகவேளை அரசன் காணவரவழைத்து, கிளியுருவோடு விண்ணுலகெய்திக் கற்பகமலர் கொணர்ந்து மீண்டும் தமதுடலிற்புகுந்து, கந்தரலங்காரம், திருவகுப்பு முதலியன பாடி, இறுதியாகக், கந்தரனுபூதி பாடிப் பரமுத்தி அடைந்தார் என்றும் கூறுவர். (ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய அருணகிரிநாதர் சரித்திரமும் நூலாராய்ச்சியும், பக்கம் 23-24, சமாஜத் திருப்புகழ்ப் பதிப்பு.) தமதுடலிற் புகுந்தார் என்பது இங்கு புதுமை. கிளியுருவோடு விண்ணுலகடைந்து மீண்டார் என்பது முன் குறிப்பிட்டபடி மானிட இயல்புக்கு அப்பாற்பட்டது; ஏனைய பொருந்துவன.

### அருணகிரிநாதர் பாடல்கள்

அருணகிரிநாதர் தெய்வப்புலவர். பண்டைய திருமுறை யாசிரியர் மரபில் வைத்துச் சொல்லத்தக்கார் என்பதில் தடை யில்லை. நூற்றாண்டுகள் தோறும் தோன்றிச் சைவத்தை வளர்த்த அருட்குரவர்கள் வரிசையில் இவரும் எண்ணத்தக்கவர். சேக்கிழாரோடு (12ஆம் நூற்றாண்டு) திருமுறைக் காலம் முடி கிறது. இதன்பின் நூற்றாண்டு தோறும் தோன்றிய சமயப் பெரியார் இவரிவர் என்று பின்வருமாறு குறிப்பிடலாம்: 13 மெய் கண்டார்; 14 உமாபதி; 15 அருணகிரிநாதர்; 16 குட்டித் திருவாசகம் பாடிய அதிவீரராம பாண்டியன்; 17 குமர குருபரர், பரஞ்சோதி முனிவர்; 18 தாயுமானவர்.

திருப்புகழ்ப் பாடல்கள், தோன்றிய காலம் முதலே தமிழ் மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டன. இதற்குக்

காரணம் இவருடைய பக்திப் பெருக்கும், பாடல்களின் சந்தப் பொலிவும்; அடுத்து, குழந்தை முருகனிடம் மக்களுக்குள்ள இயல்பான ஈடுபாட்டுக்கு இவர் பாடல்கள் பெரும் துணை செய்தன.

> வாக்கிற்கு அருணகிரி வாதவூ ரர்கனிவில்
> தாக்கில் திருஞான சம்பந்தர் – நோக்கிற்கு
> நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
> சொற்குறுதிக்கு அப்பர்எனச் சொல்.

என்ற பிற்காலப் பாடல் இவர் வாக்கின் பெருமையை நன்கு உணர்த்தும். இவருக்கு வடமொழியும் தென்மொழியும் 'நான் முந்தி நான் முந்தி' என்று சொற்களைத் தந்து உதவுவது பெரு வியப்பாயிருக்கும். சொற்கள் இவர் நாவில் அமைந்து செய்யும் சப்தஜாலம் அதியற்புதமானது. "திருப்புகழ் படிக்குமவர் சிந்தை வலுவாலே ஒருத்தரை மதிப்பதில்லை உன்றனருளாலே" என்பது முற்றிலும் உண்மை. பாமர மக்களுடைய சொற்களை இவர் எடுத்துச் சொல்லியதும், அவற்றில் இலக்கிய நயம் ஏறிவிடுகிறது. கல்வியில் குறைந்தவர்களுக்கும் இவர் பாடல்களில் ஆர்வம் அதிகம்; இன்றுவரை, திருப்புகழ், படிக்கிற நூலன்று; எல்லோரும் பாடுகின்ற நூல்.

இவருடைய தமிழ் வளம், சொல் வன்மை, தொடை நயம், சந்தப் பொலிவு, கற்பனைத் திறன், இதயக் கனிவு, பக்திப் பெருக்கு முதலிய கவிதைப் பண்புகளைப் பாராட்டாதவர் இல்லை. சில பாராட்டுக்களை மட்டும் இங்கு குறிப்பிடலாம். திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் பாடிய மார்க்க சகாய தேவர், அருணகிரிநாதர் பாடியது திருப்புகழ் பதினாறாயிரம் என்றும், முருகன் "நம் பாதமலர் பாடு நீ" என்ன, "அடியேனும் எப்படிப் பாட?" என்ற அளவில், "பத்தி தரு முத்தி நகை சத்தி இறைவா என்று பாடு" என்று சொன்னான் என்றும் கூறுகிறார். திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் "அருணகிரிநாதன் அனுபவம் நாயேற்குக் கருணைபொழி போரூரா காட்டு" என்கிறார். தாயுமானவர் பல இடங்களில் போற்றியதோடு,

> கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன
> எந்தையருள் நாடி இருக்கும் நாள் எந்நாளோ?

என்று கந்தரனுபூதி நூலையும் குறிப்பிடுகிறார். "அற்புதத் திருப்புகழ், அருணகிரிநாதர் சொல் புலமையுறு சித்ரச் சந்த

ப்ரவாகமும்..." என்று தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் கூறுகிறார். "கொண்டலெனச் சந்தத் தமிழ் மாரிபெய் கொற்றவன் அருணகிரிக் கோமான்" என்பர் இலக்கண விளக்கம் - வைத்திய நாத தேசிகர். "அருணகிரிநாதன் திருப்புகழ் சந்தம் புகழ்ந்து உய்யலாம்" என்பர் அந்தகக்கவி வீரராகவ முதலியார். "அருண் கிரிநாதர் கடலென மகிழ்ந்து பாடும் திருப்புகழ்" -சிதம்பர முனிவர் செய்த க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ். இலஞ்சியுலா, திருமலைப் பிள்ளைத்தமிழ் என்பனவும் இவரைப் போற்றுவன.

கந்தப்ப தேசிகர் பாடிய நூல்களுள் திருத்தணிகையுலா வில் வருகிற பின்வரும் கண்ணிகள் இங்கு கருதத்தக்கன. இவை கிளியின் சிறப்பைக் கூறுமுகத்தான் அருணகிரிநாதர் வரலாற்றில் பல சம்பவங்களைக் குறிப்பிட்டுப் புகழ்வன.

கைக்கிளியைப் பார்த்துவெகு காதலுடன் அன்னைமீர்
இக்கிளியைத் தாரும் எனக்கென்றாள் – அக்கிளிதான்
வில்லிபுத்தூ ரன்செவியின் மேலரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்ததுகாண் – பல்லவையுள்
மற்றொருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்ததுகாண் – வெற்றிப்
பிரபுடதே வக்குரிசில் பேணியெதிர் காண
முருகன் மயில்மேல் முடுகி – வரவழைத்து
வந்ததுகாண் செவ்வேள் வரிசையலங் காரமுற்றும்
தந்ததுகாண் பேரின்பஞ் சார்ந்ததுகாண் – எந்தைபிரான்
முத்தித் திருவென்று முன்பதினா றாயிரமாம்
பத்தித் திருப்புகழைப் பாடுங்காண் – சித்தியெட்டும்
கற்றதுகாண் நம்தம்மைக் கண்ணாலும் பாராமல்
உற்றதுகாண் சிற்றின்பத் தோருறவும் – அற்றதுகாண்
நாமுரைக்கும் வார்த்தைகளை நற்செவிகே ளாதிருக்கும்
ஓமுரைக்கும் பூதியுங்கண் டுற்றிருக்கும் – தோமுரைக்கும்
மற்றைக் கிளிபோல் வசப்படா தென்றுரைத்துப்
பற்றிக் கொடுபோனார் பாவைதனை.

தணிகை முருகன் கையிலமர்ந்த கிளியை அருணகிரிநாதராகவே கொண்டு இவர் இவ்வாறு வருணிக்கிறார்.

உபதேசம் காண்டம் பாடிய ஞானவரோதயர் முருகன் வணக்கப் பாடலில் தரும் ஒரு குறிப்பு அருணகிரிநாதரைச் சுட்டுகிறது:

வயலூர் தனில் எந்தைக்கு
எங்கணுலகும் புகழ உபதேசம் செய்து
எளியேற்கும் அவ்வழி என்றிரங்கிக் கீர்த்தி
பொங்கு தமிழ் மொழியின்உப தேச காண்டம்
புகல்தி எனச் சிறிதருளும் புனிதன் செவ்வேள்.

வயலூரில் அருணகிரிநாதருக்கு (எந்தைக்கு) உபதேசம் செய்து தமக்கும் பாடும்படி பணித்தார் என்று கூறுகிறார். 'எந்தை' என்றமையால் அருணகிரிநாதர் ஞானவரோதயருக்கு ஞானத் தந்தை என்பது பெரியோர் கருத்து.

புலவர் புராணம் பாடிய தண்டபாணி சுவாமி அருணகிரி நாதர் சரித்திரத்தை 82 பாடலாற் பாடியிருக்கிறார். புனைகதைகள் பலவற்றையும் சேர்த்துச் சொல்கிறார். கிளிக்கதை முதலியன சொல்லி, முடிவில் அருணகிரிநாதர் பாடலைத் தினமும் செபித்து வந்தவர்கள் பெருஞ்சித்தியடைந்தனர் என்பதற்குச் சில உதாரணக் கதைகளும் கூறியிருக்கிறார்.

அருணகிரிநாதர், தம் திருப்புகழில் கலிசைச் சேவகன், சோமநாதன் என்ற இருவர் பெயரைக் குறிப்பிட்டுள்ளார்.

பழனியில் இருந்த காலத்தில் கலிசைச் சேவகன் அவருக்கு நண்பரானார். அவர் வீரை என்னும் தலத்தில் பழனியாண்டவர் திருவுருவத்தை யமைத்து வழிபட்டு வந்தார். "வீறு கலிசைவரு சேவகனது இதயம் மேவும் ஒரு பெருமை யுடையோனே" எனவும் "கலிசை வரு காவேரி சேவகனோடன்பு புரிவோனே" எனவும் அவரைப் புகழ்ந்து பாடினார்.

சோமநாதர் என்பவர் அண்ணாமலையாரை ஆன்மார்த்த மூர்த்தியாகக் கொண்டு பூசித்த சிவாசாரியர்; சமணர் குலத்தைக் கண்டித்தவர்; அவரையும் அவர் மடத்தையும் அருணகிரிநாதர் குறிப்பிட்டுப் பாடினார்:

அரிவையொரு பாகமான அருணகிரிநாதர் பூசை
அடைவு தவறாது பேணும் அறிவாளன்
அமணர்குல காலனாகும் அரிய தவராஜராஜன்
அவனிபுகழ் சோமநாதன் மடமேவும்....முருக.

என்பது பாட்டு. அருகிலுள்ள புத்தூர்க் கோயில் சாசனமொன்று, கி.பி. 1370இல் அம்மையப்பரான சோமநாத ஜீயருக்கு அப்புத்தூர்க் கோயிலும் மடமும் உரிமையாக உதவப்பட்டன

என்று தெரிவிக்கிறது. ஜீயர் என்பது அக்காலத்தில் சிவாசாரியருக்கும் வழங்கப்பெற்ற ஒரு பட்டப்பெயர் போலும்.

15ஆம் நூற்றாண்டில் சாளுவாப்யுதயம் என்ற வடமொழிக் காவியம் இயற்றிய ராஜநாத கவியின் தந்தை அருணகிரிநாதர் என்பவர்; இவரை அவர் சித்திரக் கவிப்ரபந்தம் இயற்றுவதில் வல்லவரென்று போற்றுகிறார்; இவர் திண்டிமம் முழக்கி வந்த சார்வ பௌமகவி என்றும் கூறுகிறார். இவரே திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர்; "ஆசுசேர் பெருங்கவி சண்டவாயு - அதிமதுர ராஜனானென் வெண்குடை விருது கொடி தாளமேள தண்டிகை வரிசையொடு வரவுமா அகந்தை தவிர்ந்திடாதோ" என்று அருணகிரிநாதர் பாடுவது, திண்டிமகவி என்ற கூற்றுக்குப் பொருந்துவதாகும். திண்டிமம் முழக்குவதைப் பகழிக் கூத்தரும் குறிப்பிடுகிறார். பின்தலைமுறையில் ஒரு பார்ப்பன மாது, முல்லண்டிரத்தில் அண்ணாமலை நாதர் கோயிலைத் தன் கணவர் குமாரத் திண்டிமர் புண்ணியமாகக் கட்டிய செய்தி தெரிவதால், 'இவர் அருணகிரிநாதர் சந்ததியினர்; அவரும் அந்தணர்; அவர் ஊரும் முல்லண்டிரம்' என்று மு. ராகவையங்கார் எழுதியிருக்கிறார். இவ்வளவும் ஆதாரமற்ற கற்பனை. அருணகிரிநாதர் அண்ணாமலையினர் என்பதே பழங்கருத்தும் வரலாறும். அந்தண மரபு என்று இவரை எக்காலத்தும் சொல்லியதில்லை. தம்மைப் பற்றிக் கூறிய இடத்தில் எங்கும் இவர் இவ்வாறு கூறியது இல்லை; இவர் அந்தண மரபல்லர் என்பதற்கே திருப்புகழகத்து ஆதாரங்கள் நிரம்பக் காணப்படுகின்றன. "அகந்தை தவிர்ந்திடாதோ" என்று கூறியது உலக வழக்குப் பற்றியே யொழிய, இவர் உண்மையாகவே அவ்வாறு ஆடம்பரமாக வாழ்ந்தார் என்பது இவருடைய வாழ்க்கைத் தத்துவத்திற்கும் பக்திப் பெருக்குக்கும் ஒவ்வாத கூற்றாகும். எனவே, ஐயங்காரவர்களின் கருத்து இவ்விடத்துச் சிறிதும் பொருந்தாத கருத்தாகும்.

### நூல்கள்

அருணகிரிநாதர் பாடியவை திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம், மயில் விருத்தம், திரு எழு கூற்றிருக்கை என்பன.

### திருப்புகழ்

இவை 16 ஆயிரம் என்பது பண்டையாசிரியர் குறிப்பிடும் வரலாறு. வ.சு. செங்கல்வராய பிள்ளை உரைப்பதிப்பில் 1304

பாடல்களே உள்ளன. சமாஜப் பதிப்பில் 1361 பாடல்கள் உள்ளன.* போலிப் பாடல்களும் ஏடுகளில் புகுந்துவிட்டன என்று தோன்று கிறது. "மலடி வயிற்று மகன் போலே" என்பது முதலான பஞ்ச ரத்தினத் திருப்புகழ் ஐந்தும் அருணகிரிநாதர் வாக்கல்ல என்ற கருத்தும் உண்டு. (இவை திருவையாறு வைத்தியநாத தேசிகர் பாடியனவென்று நாகலிங்க முனிவர் ஒரு பதிப்பு அச்சிட்டிருக் கிறார்.) எல்லாப் பாடல்களும் முருகன் புகழாயிருப்பினும், கைத்தலம் நிறைகனி, நினது திருவடி, உம்பர்தருத் தேனுமணி, பக்கரை விசித்ரமணி, முப்பழமொடு பொரி, விடமடைசு வேலை என்ற தொடக்கமுடைய ஆறு பாடல்களும் விநாயகர் துதியாகும். திருப்புகழின் சிறப்பைக் கூறும் தனிப் பாட்டுக்கள் 16க்கு மேல் உள்ளன. பின்வரும் வெண்பாக்கள் இரண்டும் ஏடுகளிற் காணப்படும் பாடல்கள்:

நடக்கின் நிலமதிரும் நற்சிறகால் வீசி
அடக்கின் அருவரைகள் நீறாம் – விடைக்கழியில்
கந்தண்ணர் எங்கள் கயிலாயம் வாழுமையாள்
மைந்தனார் ஏறும் மயில்.

திருப்புகழைக் கேட்கத் திருப்புகழைக் கற்கத்
திருப்புகழை நித்தந் தியானிக்கத் – திருப்புகழை
உற்றிருந்து கேட்பாருக் குற்ற வினையிரண்டும்
அற்றிருக்கத் தானே யறும்.

திருப்புகழ் என்ற பெயரைச் சூட்டிக் கொண்ட பக்தர் நம் நாட்டில் எண்ணிறந்தோர். திருப்புகழ்ச் சாமி என்னும் தண்ட பாணி சுவாமி, வள்ளிமலைச் சுவாமி சச்சிதானந்தா, திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயர் என்ற நீதிபதி முதலியோர் சிறப்பு மிக்க எடுத்துக்காட்டு.

அருணகிரி நாதர் திருப்புகழின் பின் திருமால் நூற்றெட்டுத் திருப்பதித் திருப்புகழ், இராமசெயத் திருப்புகழ், காமாட்சி திருப்புகழ், திருமலை முருகன் திருப்புகழ் முதலிய பல நூல்கள் திருப்புகழ் என்ற பெயரோடு உள்ளன. திறப்புகழ் என்று வேலாயுதக் கவி பாடினார்.

---

* ஏடுகளில் இன்னும் அச்சிடாத பாடல்கள் கிடைக்கின்றன. எம்மிடமுள்ள 1200க்கும் மேற்பட்ட பாடல்களுடைய திருப்புகழ் ஏட்டில் அச்சில் வரத 4 பாடல்கள் காணப்பட்டன.

*கந்தரந்தாதி*

*காப்பு உள்பட 102 கட்டளைக் கலித்துறைகள் அந்தாதி யாக முருகன் புகழைக் கூறுவன. நூல் முழுமையும் யமக அந்தாதி யானபடியால், பாடல்களின் பொருள் எளிதில் விளங்காது. இதுபற்றியே "கந்தரந்தாதியைப் பாராதே கழுக்குன்றத்து மாலையை நினையாதே" என்றொரு பழமொழியும் உண்டு. இது முருகனுக்குரிய அகப்பொருள் நூல் (திருக்கோவை) என்பர் செங்கல்வராய பிள்ளை. விநாயகருக்கும் உண்ணா முலையம்மைக் கும் காப்புச் சொல்லி நூல் தொடங்குகிறார். வரலாற்றில் கூறிய படி இது வில்லிபுத்தூரரால் உரை கூறப்பட்டது. 54ஆம் பாடல் தகரவருக்கமே உடையது; இதற்கு உரை அவர் சொல்லவியலாது போக, அருணகிரிநாதரே கூறுகிறார். நூறு பாடல்களும் சி சீ செ சே தி தீ தெ தே என்ற எட்டெழுத்துக்களில் ஒன்றாலேயே தொடங்குகின்றன. திருச்செந்தூர் இந்நூலில் அதிகமாகச் சொல்லப்பட்டுள்ளமையால், இவ்வூரிலேயே இந்நூல் பாடப் பட்டிருத்தல் கூடுமென்று சொல்வர். இது உண்மையென்று கொள்ள மற்றொரு பொருத்தமும் காணப்படுகிறது. செந்தில் என்ற இத்தலப் பெயருக்கு முதலெழுத்தோடு மோனைபட இவ் வந்தாதியின் ஒவ்வொரு பாடலும் தொடங்குகிறது. ஆகவே இது செந்திலுக்குரிய செந்திலந்தாதி என்று உறுதியாகச் சொல்ல லாம். இவ்விதமாக, தலப்பெயருடன் பொருந்தும் மோனை யமைப்பைச் சம்பந்தர் தேவாரம் மூன்றாம் திருமுறையில் வரும் திரு முக்கால் பதிகங்கள் ஆறிலும் (திருமுறை 3 : 94-99) காணலாம்; இங்கு, பதிகத்தின் 11 பாடல்களும் அவ்வத்தலப் பெயருடன் மோனையில் வரும்.*

*இங்கு குறித்த தகர வருக்கப் பாடலும் உரையும் பின் வருவன:*

**திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா**
**திதத்தத்தத் தித்த திதித்தித்த தேதுத்து தித்திதத்தா**
**திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து**
**திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே.**

*திதத்தத் தத்தித்த - திதத்தத் தத்தித்த என்னுந் தாளமானங் களை; திதி - திரு நடனத்தாற் காக்கின்ற; தாதை - பரமசிவனும்; தாத - பிரமனும்; துத்தி - படப் பொறியினையுடைய; தத்தி - பாம்பினுடைய; தா - இடத்தையும்; தித - நிலைபெற்று; தத்து - ததும்புகின்ற; அத்தி - சமுத்திரத்தையும் பாயலாகக் கொண்டு;*

ததி - தயிரானது; தித்தித்ததே - தித்திக்கின்றதென்று; து - உண்ட கண்ணனும்; துதித்து - துதி செய்து வணங்குகின்ற; இதத்து - பேரின்ப சொரூபியான; ஆதி - முதல்வனே; தத்தத்து - தந்தத்தை யுடைய; அத்தி - அயிராவதத்தால் வளர்க்கப்பட்ட; தத்தை - கிளி போன்ற தெய்வயானைக்கு; தாத - தாசனே; திதே - தீமையே; துதை - பொருந்திய; தாது - சப்த தாதுக்களால் நிறைந்ததும்; அதத்து - மரணத்தோடும்; உதி - சனனத்தோடும்; தத்து - பல தத்துக்களோடும்; அத்து - இசைவுற்றதுமான; அத்தி - எலும்பு களை மூடிய; தித்தி - பையாகிய இவ்வுடல்; தீ - அக்கினியினால்; தீ - தகிக்கப்படுகின்ற; திதி - அந்நாளிலே; துதி - உன்னைத் துதிக்கும்; தீ - புத்தி; தொத்தது - உனக்கே அடிமையாக வேண்டும். தீ - எழுவாய். தொத்தது - பயனிலை. ஏ - அசை.

கருத்து. திதத்தத் தத்தித்த என்னுந் தாளத்தால் நடிக்கும் பரமசிவனும், பிரமாவும், தயிரையுண்டு பாற்கடலையும் ஆதி சேடனையும் பாயலாகக் கொண்ட திருமாலும் வணங்குகின்ற முதல்வனே! தெய்வயானை தாசனே! சனன மரணத்திற்கு இடமாய் எலும்பு முதலிய தாதுக்கள் நிறைந்த பொல்லாத இவ்வுடற்பை தீயில் வேகுங்கால் உன்னைத் துதிக்கும் என் புத்தியை உனது அடியிணைக்கு ஆட்படுத்த வேண்டும்.

(இப்பாடலின் உரை வ.சு. செங்கல்வராயபிள்ளை உரைப் பதிப்பிலிருந்து எடுக்கப்பட்டது; பழைய உரையைத் தழுவியது.)

**கந்தர் அலங்காரம்**

இதை முருகனுக்குரிய திருவாசகம் என்பர்; உண்மை யிலேயே அத்தகைய சுவையும் நயமும் எளிமையும் பொலிகின்ற நூல். காப்பு உட்பட 102 கட்டளைக் கலித்துறைப் பாடல்களும் மிகைப் பாடல்கள் ஆறும் கொண்டது. நூறு பாடல்களும் ஒரே தொடர்பாகப் பாடியவையல்லவென்றும், வெவ்வேறு நிலையில் வெவ்வேறு காலத்தில் பாடிய தனிப்பாடல்கள் இப்பெயரால் ஒருங்கு தொகுக்கப்பெற்றன என்றும் சொல்வர். காப்புச் செய் யுளில் 'வட அருகு' என்று குறிப்பிடப்பட்டுள்ள இடத்தில் இருக்கும் 'கம்பத்திளையனார்' என்ற முருகவேளே அருணகிரி நாதரை ஆட்கொண்டு பாடும்படி "முத்தைத் தரு பத்தித் திரு நகை" என அடியெடுத்துக் கொடுத்தவர் என்று கூறுவர். வட மொழி இவருக்கு நினைத்தபடி வேலை செய்வதை இந்நூற் பாடல்களிலும் காணலாம். "மரணப்ரதாபம் நமக்கு இல்லையாம்" என்ற பாடலில் (21) முழுமையும் வடமொழித் தொடர்களையே

*அடுக்கியவர், அடுத்த பாடலில் முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன் என்று (22) முருகனுக்குத் தமிழினிடமுள்ள உவப்பை மிக்க அருமையாகப் போற்றுகிறார். இங்கு அதிக மாகக் கூறப்பெற்ற தலம் திருச்செங்கோடு. தானம் செய்வதைப் பல இடங்களில் மிக்க நயமாகவும் அழகாகவும் எடுத்து உரைக் கிறார். சிறந்த அனுபவங்களும், கூற்றுவனை வெருட்டுதலும், உலகுக்கு உபதேச மொழிகளும், ஈகையும் எளிய இனிய சொற் களால் சொல்லப்பட்டுள்ளன. இளம்பிள்ளைகள் இப்பாடல் களை மனப்பாடம் செய்தால் நல்ல தமிழறிவோடு, அஞ்சாமை, முருக பக்தி, இரக்கம் முதலான நற்பண்புகளையும் பெறுவர்.*

*ஈகையை வலியுறுத்திக் கூறுகின்ற பாடல்கள் பலவாயினும், சிறப்பாக இரண்டு இங்கு கருதத்தக்கன:*

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள் நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்போல்
கையிற் பொருளும் உதவாது காணும் கடைவழிக்கே.

மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கிஅன்பின்
நிலையான மாதவம் செய்குமி னோநும்மை நேடிவரும்
தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையும்கண்டீர்
சிலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந்து ஏற்றவர்க்கே.

*முருகன் அடியாருக்கு யமபயம் இல்லை என்று கூறுகிற பாடல்கள் அழகான கருத்தமைதி உடையன:*

தண்டா யுதமும் திரிசூ லமும்விழத் தாக்கிஉனைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய என் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாய் அடாஅந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

நாளென் செயும்வினை தானென் செயும்எனை நாடிவந்த
கோளென் செயும்கொடும் கூற்றென் செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

பட்டிக் கடாவில் வரும்அந்த காஉனைப் பார்அறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருத செவ்வேற் பெருமான்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாள்என்றன் கையதுவே.

கந்தர் அலங்காரம் முழுமையும் அடியார் விரும்பிப் பாடிய போதிலும், உள்ளத்துக்கு ஆனந்தமும் ஆறுதலும் தந்து வாழ்க் கைக்கே உபதேசமாயுள்ளவை பின்வரும் பாடல்கள்:

பெரும்பைம் புனத்தினில் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை
விரும்பும் குமரனை மெய்யன்பி னால்மெல்ல மெல்லஉள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம்; தித்தித் தறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச் செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள், மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள், முன்புசெய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும், பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே.

தடுங்கோள் மனத்தை, விடுங்கோள் வெகுளியை, தானமென்றும்
இடுங்கோள், இருந்த படிஇருங் கோள், எழு பாரும்உய்யக்
கொடுங் கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைக்கவை வேல்
விடுங்கோன் அருள்வந்து தானே உமக்கு வெளிப்படுமே.

நூற்பயன் கூறுகிற 'சலங் காணும்' என்ற பாடலில் 'கந்தன் நன்னூல் அலங்காரம் நூற்றுள்' என்று வருமிடத்து, அழகு பொருந்திய என்று கூற வந்த சொல்லாகிய அலங்காரம் என்ற சொல், நூற் பெயராகவே அமைத்துக் கொள்ளப்பட்டது என்று கருதத் தோன்றுகிறது, அல்லது முருகனுடைய திருவடிவம், அங்கங்கள், ஊர்தி, படை, கொடி முதலியவற்றைச் சிறப்பாக எடுத்துப் புகழ்வதால், நூல் கந்தர் அலங்காரம் என்று பெயர் பெற்றது எனலுமாம். இனி, முதல் முதலாகத் தோன்றிய ஏட்டில், 'சலங் காணும்' என்ற பாடலை எழுதிப் பின்னர் ஆறு பாடல்கள் எழுதப்பட்டிருந்தமையால், இவ்வாறும் மிகைப் பாடல்கள் என்று அச்சிட்டோர் கருதினர் போலும். இப்பாடல்களும் ஏனை யவை போன்ற சிறப்புடையன ஆதலாலும், நூல் அந்தாதியுமல்ல மாலையுமல்லவாதலால் நூறுபாட்டேதான் இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை ஆதலாலும், நூலுடன் சேர்த்து எண்ணத் தக்கனவேயன்றி, இவை மிகைப்பாடல்களாகா.

### கந்தரனுபூதி

இந்நூல் பத்தாந் திருமுறையாகிய திரு மந்திரத்துக்கொப்ப முருகனுக்குப் பத்தாந் திருமுறையாய்க் கொள்ளத்தக்கது என்பது பிள்ளையவர்கள் கருத்து. கந்தரனுபூதி 51 பாடல்கள்.

*திருமூலர் இடையன் உடலில் தங்கித் திருமந்திரம் பாடினார் என்ற வரலாற்றோடு ஒப்ப, இவரும் கிளியுடலில் தங்கி இம்மந்திர நூல் பாடினார் என்பர். சில ஏடுகளிலும் பதிப்புக்களிலும் 105 பாடல்கள் உள்ளன. அதிகமாயுள்ளவை பின் வந்தோர் பாட்டு. "அனுபூதி ஐம்பதுமே ஆருயிர் பேரின்ப - அனுபூதி நல்கும் அணி" என்பது தணிகையுலா. 51ஆம் பாடலில் குருவாய் வர வேண்டு மென்று குகனை வேண்டுகிற வேண்டுகோளோடு அருணகிரி நாதர் நூலை முடித்தார் என்பதே பெரியோர் பலர் கருத்து:*

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

*சிறுபான்மையோர், 'பேசா அனுபூதி பிறந்ததுவே' என்ற 43ஆம் பாடலே நூலுக்கு முடிவு என்றும் கருதுவர்:*

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா கியபின்
பேசா அனுபூதி பிறந் ததுவே.

*பின்னும் சிலர், 'சும்மா இரு' (12) என்ற உபதேசத்தோடு முடிந்தது என்றும் சொல்வர்;*

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் லறஎன் றலுமே
அம்மா பொருள்ஒன் றும்அறிந் திலனே.

சும்மா இருஎனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலம் என் றன்றுரைத்த – எம்மான்
அருணகிரி நாதன் அனுபவம் நாயேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு.

*என்று இப்பாடலைச் சுட்டிச் சிதம்பர சுவாமிகள் போற்றுவது காண்க.*

*இந்நூலின் 51ஆம் பாடல் ஏடுகளில் மாறுபட்டுக் காணப் படுகிறது. தஞ்சை சரசுவதிமகால் ஏட்டில்,*

ஒருகால் அடியேன் மனமுன்னை நினைந்
துருகா துருகும் படிதந் தருள்வாய்
பெருகா ழியிலும் துயிலும் பெருமாள்
மருகா முருகா மயில்வா கனனே.

வேறொரு ஏட்டில்,

கந்தரனுபூதி தன்னைக் கற்றுரைப்போர் தங்களிடம்
வந்தவினை யத்தனையும் மாயுமே – செந்தண்
திருத்தணியில் வாழ்முருகர் சேயோரடியார்
கருத்தணியில் வாழ்ந்திருப்பர் காண்.

இந்நூல் ஒரே சமயத்தில் பாடாமல் வெவ்வேறு சமயங்களில் பாடியிருத்தலும் கூடும். இப்பாடல்களில் வெவ்வேறான நான்கு நிலைகள் புலப்படுகின்றன. மனவமைதியின்றி பாசத் தளையில் பட்டுக் கலங்கிய நிலை; மனம் அமைதி பெற்றுத் தவத்தில் ஒன்றிய நிலை; முருகன் திருவருட் பேறு பெற்ற ஞான நிலை; உபதேச நிலை என்ற நான்கு. இப்பாடல்கள் சிறப்பாகப் பாராயணத் துக்குரியவை. ஈதலை இந்நூலினும் வற்புறுத்தியிருக்கிறார்:

கெடுவாய் மனனே கதிகேள் கரவாது
இடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

இங்கு கூறப்பெற்ற தலம் நாகாசலம் ஒன்றுமே.

## திருவகுப்பு

இப்பெயரால் அமைந்துள்ள பாக்கள் யாவும் சந்தப்பாக்கள். முருகன் அருட் பெருமை அடியார் சிறப்பு முதலிய கருத்துக் களை வகுத்துக் கூறுவதால் வகுப்பு எனப் பெயர்பெற்றது. 25 வகுப்புக்கள் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றுள் முதல் பதினெட் டுமே அருணகிரிநாதர் பாடியவை, ஏனையவை பிற்சேர்க்கை என்று ஆறுமுகநாவலர் கருதுவர். திருவகுப்புக்களில் அதிக மாய்க் குறிப்பிடப்பட்ட தலம் தணிகை. திருவகுப்பில் பொது வாகப் பெண்களைப் பற்றிய பேச்சும் யமபயத்திலிருந்து காக்க வேண்டும் என்ற பேச்சும் காணப்படவில்லை.

### 1. சீர்பாத வகுப்பு

முருகப் பெருமான் திருவடியின் சிறப்பை எடுத்துரைப்பது. முக்கால் பகுதி கழல்பெருமை, கால்பகுதி முருகன் பெருமை.

**2. தேவேந்திர சங்க வகுப்பு**

தேவியை மிகவும் அழகாகத் துதிக்கிறது. சந்த இன்பம் மிக்கது. அத்தேவியின் புதல்வனது அடியவரைத் தேவேந்திர சங்கத்தார் ஆராய்ந்து வணங்குவர் என்று கூறும். சம்பந்தாண்டானை வெல்ல வேண்டி அருணகிரிநாதர் இப்பாடல் பாடித் தேவியைத் துதித்தார் என்பர். இதில் முக்கால் அம்பிகை பெருமை.

**3. வேல் வகுப்பு**

15அடி வேலின் சிறப்பினையும் ஆற்றலையும் கூறுவது. வேல் வினை தீர்க்கும். இப்பகுதி ஆற்றுப்படையின் தன்மை யுடையது. விசித்திரமான சந்தத்தில் அமைந்துள்ளது.

**4. திருவேளைக்காரன் வகுப்பு**

வள்ளியம்மையோடு தமது வேளையைக் கழிப்பவன் என்று முருகன் பெருமையைக் கூறுவது. இதில் வரும் 'உடற்சிறை யிராமல் விடுத்தருள் நியாயக்காரன்' என்ற தொடர், கிளியான கதைக்கு ஆதரவு தருகிறது என்பர்.

**5. பெருத்த வசன வகுப்பு**

முருகப் பெருமான் சூரபதுமனோடு பொருதபொழுது போர்க்களத்தில் ஆடிய பூதங்களின் வருணனை. ஓரளவு பரணிப் பிரபந்த வருணனை போலிருக்கும். இராக தாளங்கள் பலபடக் கூறப்பட்டுள்ளன. மிக நீண்ட பாட்டு

**6. பூதவேதனை வகுப்பு**

தாளம், ராகம், இசைக்கருவி

**7. பொருகளத் தலகை வகுப்பு**

**8. போர்களத் தலகை வகுப்பு**

**9. செருக்களத் தலகை வகுப்பு**

இம்மூன்றும் அப்போர்க்களத்துள்ள பேய் (அலகை)களின் வருணனை.

**10. திருஞான வேழ வகுப்பு**

மௌன ஞானத்தின் விசேடம்.

**11. திருக்கையில் வழக்க வகுப்பு**

தணிகேசன் திருப்புகழைப் படிப்பவருக்கு அப்பெருமான் திருக்கையால் அளிக்கப்படும் பிரசாத மகிமையைக் கூறும்.

**12. வேடிச்சி காவலன் வகுப்பு**

வேடிச்சியாகிய வள்ளி காதலனான முருகன் பெருமை.

**13. சேவகன் வகுப்பு**

யமதூதர் அழைக்கும்போது வந்து உதவவேண்டும் என்பது.

**14. வேல் வாங்கு வகுப்பு**

முருகப்பெருமான் வேலைப் பிரயோகித்ததால் நடந்தவை.

**15. புய வகுப்பு**

பெருமானுடைய பன்னிரு புயங்களின் சிறப்பும் செயல்களும் கூறும் அரிய பாடல்; திருமுருகாற்றுப் படையைத் தழுவியது.

**16. சித்து வகுப்பு**

சித்திகள் பெறுவதற்கான இரசவாதம் முதலான பல வழி களையும் உரைத்து முருகன் திருப்புகழ் கற்றவரே சித்தருக்குள் பிரசித்தர் என்று கூறுவது. பச்சிலை மூலிகைகள் மருந்து வகை கள் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ளன. 125 வகைகள். அருண கிரிநாதர் பாடலா என்பது சந்தேகம்.

**17. கடைக்கணியல் வகுப்பு**

மயில், வேல், திருநோக்கு ஆகிய மூன்றையும் தியானித்து இன்னபேறு பெறலாம் வருக என்று உலகினரை அழைப்பது.

**18. சிவ லோக வகுப்பு**

இன்பம் நிறைந்த அன்பே சிவலோகம் என்பது.

இந்தப் பதினெட்டு வகுப்புக்களின் கருத்தையும் செங்கல்வ ராய பிள்ளையவர்கள் பின்வருமாறு சுருக்கித் தொகுத்துரைக் கிறார்: "முருகன் அடியார் சிறப்பு-1; முருகன் அடியார் பெருமை-2; முருகன் படை-3; 14; முருகன் சேனை-6; முருகன் போர்வீரம் 7, 8, 9, 13; முருகன் புயங்களின் பெருமை-15; முருகனுக்கு உவந்த நாயகி-4, 12; முருகன் திருவாய் மலர்ந்த உபதேசமொழி-5; முருகன் உபதேசத்தால் பெற்ற ஞானப்பிரசாதத்தின் சீரும் சிறப்பும்-10, 11; முருகன் திருப்புகழ்ப் பெருமை-16; முருகன் திரு நோக்கச் சிறப்பு-17; முருகன் திருவருளாற் பெற்ற அன்பின் சிறப்பு-18: ஆக இவ்வாறு பதினெட்டு வகுப்புக்களும் விளங்குவன ஆகும்."

அவர்களே எழுதிய கீழ்க்கண்ட குறிப்புக்கள் முருகன் அன்பர்களுக்குப் பெருவிருப்பாய் இருப்பன; "வகுப்புக்களின்

ஆற்றல்: 1. சீர்பாத வகுப்பு - ஞானத்தை அளித்து, யம பயத்தை நீக்கி, அருள் நெறியிற் சேர்த்து, வினைப் பகையை அழித் தொழிக்கும். 2. தேவேந்திர சங்க வகுப்பு - பூதம் பிசாசு ஆகிய துட்டப் பகைகளையும் யமனையும் வெருட்டவல்லது. 3. வேல் வகுப்பு - பலவித ஆபத்தையும் நீக்கி உயிர்த்துணையாய் நிற்பது. 4-6. வேளைக்காரன் வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு, புய வகுப்பு - இம்மூன்றும் பத்தித்துறை யிழிந்து ஆனந்த வாரிதியில் திளைத்து நிற்பதற்கு உதவும் துதி வகுப்புக்களாம். 7. வேல் வாங்கு வகுப்பு - போர் பூகம்பம் வெள்ளம் தீ ஆகிய பெரிய ஆபத்துக் களினின்றும் நம்மைக் காக்கவல்ல பேராற்றல் கொண்டது. 8. கடைக்கணியல் வகுப்பு - உலகோரை முருகனிடத்தே ஆற்றுப் படுத்தி உய்யும் வழியை எடுத்துரைக்கும் பெருங்கருணை வகுப்பு இது. இதைத் திருவருட் பிரசாத வகுப்பு அல்லது திருமுரு காற்றுப்படை வகுப்பு எனவும் கூறலாம். முதல் மூன்றும் மணி மந்திர மருந்து வகுப்புக்கள்."

திருவகுப்புகளின் பொதுச்சிறப்பு காமபயம் இல்லை, யம பயம் இல்லை.

மற்ற ஏழு வகுப்புக்களும் மயில், கொலு, வீரவாள், சிவகிரி, செந்தில், பழனி, திருப்பரங்கிரி வகுப்பு என்பன. மயில் - மயிலின் ஆற்றல் அழகு; கொலு - கொலு வீற்றிருத்தல்; வீரவாள் - வீரபாகு தேவரின் சங்கம்; சிவகிரி - பழனி திருவாவினன் குடி; செந்தில் - படைவீடு; பரங்கிரி - சிற்றிலக்கிய வளம் இவை அருண கிரிநாதர் வாக்கல்ல என்பர் ஆன்றோர்.

இவையன்றி வேறு நான்கு வகுப்புக்கள் 1937 சித்தாந்தம் பத்திரிகையில் (ப. 7) வெளிவந்தன. அவை சத்தி வகுப்பு, களவகுப்பு, சொரூப வகுப்பு, கர வகுப்பு என்பன. அவற்றுள் சத்தி வகுப்பு திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்துத் தேவி துதி என்று பிள்ளையவர்களால் காட்டப் பட்டது. மற்ற மூன்றில் களவகுப்பு ஒன்றே வகுப்பாகும். இது திருமலைராயன் பொருகளத்தின் வெற்றிச் சிறப்பைக் கூறும்; 'தவள விசித்திரக் குடை நிழலாலும் திரிபுவனேசன் நரபதி வெற்றித் திருமலைராயன் தரணிவராகன், கோபங்கொள் உக்ர களத்தின் வகையே' என்பது காண்க. திருமலைராயன்மீது பல பாடல்கள் பாடிய காளமேகமே இதைப் பாடியிருத்தல் கூடும்;

அருணகிரிநாதர் இதைப் பாடியதில்லை என்பது தெளிவு. ஏனைய இரண்டும் சந்தப்பாக்களல்ல: அகவற்பாக்கள்; எனவே வகுப் பல்ல; இவை இரண்டும் கந்தர் சஷ்டி கவசம் ஒத்த பாடல்கள்.

## வேல் விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம்

வேல்விருத்தம் பத்துச் சந்த விருத்தங்களால் முருகனுடைய வேலைச் சிறப்பிப்பது. மயில் விருத்தம் விநாயகர் காப்பு ஒன்றும் பதினொரு சந்த விருத்தங்களும் உடையது. மயிலைத் தொழு பவர் ஆயிரம் பிறை தொழுவர் என்பது இதன் கடைசிப் பாடல். இவ்விரு நூல்களும் அருணகிரிநாதர் வாக்கென்று நெடுங் கால மாய் வழங்கிவந்த போதிலும், அல்லவென்பதே ஆராய்ச்சியாளர் கருத்து. ஆனால் சேவல் விருத்தம் என்பது மிகமிகப் பிற்பட்டு வெளிவந்த நூல். ஐயரவர்களின் சுவடி நிலையத்திலிருந்து பிள்ளையவர்கள் எடுத்து அரும்பாடுபட்டுச் செப்பம்செய்து வெளியிட்டிருக்கிறார்கள். இது விநாயகர் காப்பும் 11 சந்த விருத்தங்களுமுடையது. அருணகிரிநாதர் நூலன்று.

## திருஎழு கூற்றிருக்கை

திருஞான சம்பந்தர் பாடிய திருவெழு கூற்றிருக்கை போலவே அருணகிரிநாதர் பாடிய பாடலொன்றும் அதே பெயரில் அச்சிடப்பட்டுள்ளது. வைணவ மரபில் திருமங்கை யாழ்வார் ஒன்று பாடியிருக்கிறார்; 11ஆம் திருமுறையில் நக்கீர தேவர் பாடிய திரு எழுகூற்றிருக்கை சேர்க்கப்பட்டுள்ளமையும் இங்கு நினைவு கூரத்தக்கது. எழு கூற்றிருக்கை என்பது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று; மாறனலங்காரம் இதற்கு இலக்கணம் உரைக்கிறது. அருணகிரிநாதர் பாடிய பாடல் 27 வரிகளை யுடையது. "காவிரி வடகரை மேவிய குருகிரி... ஏரகத்திறைவன்" என்று இதன் இறுதியில் சுவாமிமலையைக் குறிப்பிடுகிறார்.

## அருள் முருகாற்றுப்படை முதலியன

முற்காட்டிய சித்தாந்தம் இதழில் முருகாற்றுப்படை என்ற பெயரில் நான்கு பாடல்கள் வெளியாயின. அவை அருள். பொருள், அணி, வருமுருகாறு என்பன. நான்கும் ஆசிரியப்பா வால் இயன்றன. இவற்றுள், வருமுருகாற்றுப்படை என்ற நான்காம் பாடல் அருணகிரிநாதர் பாடல் என்று முந்திய பதிப்புக்களில் வெளியானதாகக் குறிப்புள்ளது. இது கந்தர் சஷ்டி கவசம் போன்ற நடையுடைய 64 அடி அகவற்பா. தொடக் கத்திலுள்ள கட்டளைக் கலித்துறை இது அருணகிரியுரைத்த

வருமுருகாற்றுப்படை என்று கூறுகிறது. இதுகொண்டு இப் பாடல் அருணகிரிநாதர் செய்தது என்று துணிதற்கில்லை. மற்ற மூன்றும் இவ்வாறே 69, 35, 41 அடிகளுடைய அகவற் பாடலாக அமைந்தவை. அருள் முருகு தொடக்கத்தில்,

> என்னுடைய நாதன் எழுத்தாறு பாவாறு
> மின்னுந் தலந்தாமும் ஈராறு – மன்னுமுகம்
> ஓராறு வேதத்தின் உள்ளாறு பொன்னெடுந்தோள்
> ஈராறு கண்ணா றிரண்டு.

என்ற வெண்பாவும், இறுதியில்,

> பாலைப் பதியுறைவாய் பன்னிரண்டு தோளுடையாய்
> மாலைக் கடம்புபடர் மார்புடையாய் – காலையினும்
> செய்யாய் வரைகிழியச் செவ்வேல் விடுத்தருளும்
> கையா கடைபோகக் கா.

என்ற வெண்பாவுமுடையது. பாலைப்பதி திருப்புகழ் பெற் றிருப்பதாகத் தெரியவில்லை. இச்சிறு பாடல் வருமுருகினும் சிறப்பான நடையுடையது. மற்ற இரண்டும் இவ்வளவு சிறப் புடையனவல்ல. இவை அருணகிரிநாதர் வாக்கு என்று கருது வதற்கு நியாயமில்லை.

### உடற்கூற்று வண்ணம்

பட்டினத்தார் பாடிய உடற்கூற்று வண்ணம் பிரசித்தம். அதுபோல் அருணகிரிநாதர் ஒரு வண்ணம் பாடினார் என்றும் சொல்வர். சந்தப்பாட்டெல்லாம் அருணகிரிநாதர் வாக்கு என்ற கருத்தால் இக்கூற்று எழுந்ததாகும். மற்று இவர் அவ்வண்ணம் பாடவில்லை.

### முத்தி விநாயகர் அகவல்

என்ற ஒரு சிறுநூல் அருணகிரிநாதர் பாடினார் என்று அச்சிடப்பட்டுள்ளது. இது போலியாகும். காப்பு வெண்பாவும் 98 ஆசிரிய வரிகளும் உடையது. வரிமுதல் எழுத்துக்கள் "அ"வில் தொடங்கி "வௌ" முடிய உயிர்மெய் யெழுத்துக்களால் முறையே தொடங்கப் பெறுகின்றன. வரிகள் எல்லாம் நமோ, நமோ என்று முடிகின்றன.

### அருணகிரிநாதர் காலம்

அருணகிரிநாதர் காலத்தைத் திட்டமாய்க் கூறுவதற்கான அகச்சான்றுகள் திருப்புகழினுள் காணப்படுகின்றன. முக்கிய

மான குறிப்பு முன் காட்டிய 'அதல சேடனாராட' என்ற திருப் புகழ்ப் பாட்டில் 'பிரபுட தேவமாராஜன் உளமும் ஆட வாழ் தேவர் பெருமாளே' என்பது. இப் பிரபுட தேவர் என்ற பெயர் விசயநகர வேந்தரான ராயர் சிலருக்கு வழங்குவது. எனினும், 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சி புரிந்த இரண்டாம் தேவராயரே இங்கு குறிப்பிடப்பட்டவராவார். இவரே அருண கிரிநாதர் குறிப்பிடும் பிரபுடதேவராயர். இவருடைய காலத்தை இவர் மகனுடைய காலத்தைக் கொண்டு திட்டமாய்க் கூற லாம். மகன் பெயர் மல்லிகார்ஜுன இம்முடிப் பிரபுட தேவரா யன்; காலம் கி.பி. 1447-1470. இவனுக்கு முந்திய பிரபுட தேவ ராயர் 1447இல் இறந்தார். அவர் காலமே அருணகிரிநாதர் காலம். அதாவது 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியே அருண கிரிநாதருக்கும் உரிய காலமாகும்.

மேலும், மதுரைச் சிவப்பிரகாசர் தமது சிவப்பிரகாசவுரை யில் "விந்து நாத ஓசைக்குத் தூரமானது" என்ற திருப்புகழ் வரியை எடுத்துக் காட்டுகிறார். இவர் உரை செய்த காலம் (சகம் 1410) கி.பி. 1488 என்று குறிப்பிடப்பட்டிருப்பதால், அருணகிரிநாதர் இவருக்கு முந்தியவர். ஆகவே, இவர் காலம் 15ஆம் நூற்றாண் டின் முற்பகுதி என்பது பொருந்துவதே.

கச்சியப்ப சிவாசாரியர் பாடிய கந்த புராணத்தின் அரங் கேற்றத்தில் முருகப் பெருமான் அருளால் ஒரு புலவன் வீர சோழியம் என்ற இலக்கண நூல் கொணர்ந்து காட்டிய செய் தியைத் திருப்புகழ்ப் பாடல்களில் குறிப்பிடுகிறார் (525, 793):

மருவு புலவனார் கவிக்குளே சிறு
வழுவ தறைமகா சபைக்குளேகியே
வகைய பெயரதா இலக்கணாவிதி – மொழிவோனே.

முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கென வேசபை
முற்பட்டு புதுத்துறை மாறிய – புலவோனே.

இக்குறிப்புக்கள் இவர் கச்சியப்பருக்குப் பின் வந்தவரெனக் காட்டி அவருடைய கால நிர்ணயத்திற்கும் உதவுகின்றன. அன்றி யும், காளப் புலவன் என்று ஈரிடங்களில் கூறுகிறார். "வாதிற் கோடிக் கூளக் கவிச்சேனை சாடக் கொடிக் கூறுகாளக் கவிப் புலவோன் யான்" (611); "பெரும் ப்ரபந்தம் விளம்பு காளப் புலவ னெனத்... திக்கியம்புகின்றது, புதுமையல, சிற்பரம் பொருந்துகை

தந்திடாதோ" 770; இரண்டிடங்களிலும் இத்தொடர் பொது வாக "ஆசு கவிபாடவல்ல புலவன் யான் எனத் தருக்கி நிற்பேன்" என்று பொருள்படுகிறது எனக் கொள்ளலாம்; அன்றி இரு குறிப்புக்களும் காளமேகப் புலவர் அக்காலத்தில் எங்கும் வசை பாடிப் பிரசித்தி பெற்றிருந்தமையால், அவ்வாறு தருக்கியிருப் பதைத் தவிர்க்க வேண்டும் என்ற உணர்வோடு இவர் தம்மையே சுட்டிப் பாடினார் என்றும் கொள்ளலாம். இதுவும் பொருத்தமே. காளமேகப் புலவர் இளைஞராயிருந்திருப்பார்; இளமையில் செருக்குத் தகாது என்ற நினைவோடு இவர் பாடினார் என்று கொள்வதும் தவறாகாது; எனினும் இதுபற்றி உறுதியாய்ச் சொல்வதற்கில்லை.

முருகனுடைய பெருமையைச் சொல்லித் துதிக்கின்ற அருணகிரிநாதர் பாடல்கள் திருப்புகழ் என்றே பெயர் பெறு கின்றன; 'திருப்புகழ் விருப்பமுடன் செப்பு என எனக்கு அருள்கை மறவனே' என்று அருணகிரிநாதர் கூறுவது, இவர் பாடலுக்கு இறைவனே இப்பெயரைச் சூட்டினான் என்று கருதும்படி உள்ளது. அருணகிரிநாதர் இப்பெயரையே வைத்தார் என்பது தெளிவு. திருமுல்லைவாயில் தேவாரத்தில் சுந்தரமூர்த்தி, 'திருப் புகழ் விருப்பால் பாடிய அடியேன் படுதுயர் களையாய் பாசு பதா பரஞ்சுடரே' என்று இருமுறை பாடியிருப்பது இங்கு நோக்கத்தக்கது. அருணகிரிநாதர் காலத்தில் முதியவராயிருந்த இரட்டையர், 'திருப்புகழ் பாடிக் கூடினும்' என்று தில்லைக் கலம்பகத்துள் அமைத்திருக்கிறார். அக்கலம்பகத்துள்ள சந்த அமைப்பை அருணகிரிநாதர் கொண்டிருப்பதை நன்கு காணலாம்.

திருப்புகழில் அருணகிரிநாதர் பெண்களின் வருணனை அதிகமாகப் பெய்திருக்கிறார் என்றும், காமத்தைப் பழிக்கும் முகமாக பெண் குலத்தையே மிகவும் பழித்திருக்கிறார் என்றும், சிலர் பொதுவாகக் கூறுவதுண்டு. இதை அப்படியே கொள்ளு தல் சரியன்று. பொது மகளிர் சிலரிடம் இவர் மிகவும் துன்புற் றிருக்கிறார். அத்துன்பத்தையே பாடல்களில் பெரிதாக்கிக் கூறுகின்றார் என்றே நாம் கொள்ள வேண்டும். இவர் கண்டிப்ப தெல்லாம் பொது மகளிரின் வஞ்சகத்தையே.

திருப்புகழ்ப் பாடல்கள் பலவற்றில் இவ்வாறு பொது மகளிரைப் பழித்திருப்பினும், பிற்பாதியில் முருகன் அருளையே எப்போதும் நாடிப் பாடியிருக்கிறார் என்பதை மறத்தலாகாது.

மேலும், பல பாடல்களில் திருமால் மருகன் என்று முருகனைக் கூற வரும்போது, பல பாடல்கள் தோறும் சில வரி களில் திருமாலின் புகழையே கூறுகின்றார். இது அவருடைய விரிந்த மனத்தையே காட்டுகிறது.

அருணகிரிநாதர் பாடல்கள் மிக்க விரைவிலேயே பிரசித்தம் அடைந்துவிட்டன. 1488இல் விந்துநாத ஓசைக்குத் தூரமானது என்று மதவாக்கியப் பிரகாசர் எடுத்துக் காட்டுகிறார். கேசரிப் பால் எங்கள் அருணகிரிநாதன் என்று (1575இல்) சேறை கவி ராச பிள்ளை தம் சேயூர் முருகன் உலாவில் (135) கூறுகிறார்.

**பதிப்பு**

முதன்முதலில் மழவை - மகாலிங்க ஐயர் நூறு பாடல் மட்டும் வெளியிட்டதாகவும், பின்னர் யாரும் வெளியிடாமை யால் தாம் நூறு பாடல் ஒரு புத்தகமாய் வெளியிடுவதாக, கலாரத்நாகர அச்சுக்கூடம் ஊ. புஷ்பரதச் செட்டியார் நூறு பாடல்கள் கொண்ட சிறு புத்தகங்கள் நான்கு, முதலில் திருத்த மாக அச்சிட்டார்; இரண்டாம் பதிப்பு 1906.

அடுத்த சிறப்பான பதிப்பு, வடக்குப்பட்டு த. சுப்பிர மணிய பிள்ளை பதிப்பு, மூன்று பாகம், 1304 பாடல் - 1926 வரை.

மதுரை கந்த சாமிக் கவிராயர் பதிப்பு இரண்டு பாகம் 1933-4.

சைவ சித்தாந்த மகாசமாஜப் பதிப்பு 1935; அகர வரிசையில் அமைத்த 1361 பாடல்கள்; மிகச் சிறந்த பதிப்பு; இதன் முகவுரையும் ஆராய்ச்சிக் குறிப்புக்களும் ஆராய்ச்சியாளருக்குப் பெருவிருந் தாயுள்ளன.

யாவற்றிலும் மிக மேலான பதிப்பு. வ.சு . செங்கல்வராய பிள்ளை உரையோடு கூடியது 1952-57; ஆறு தொகுதிகள், விரி வான பாஷ்யமும் ஆராய்ச்சியும் கொண்டது. திருப்புகழ்ப் பக்தர் களுக்கு இது வேதம் போல்வது. பிள்ளையவர்களே எழுதிய அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் - 1947 என்ற நூலையும் உடன் குறிப்பிட வேண்டும்.



*அத்தியாயம் 2*

# இலக்கிய ஆசிரியர் – 2

## *முன்னுரை*

இந்த நூற்றாண்டில் பெரும் கவிஞராயும் முருகன் அருள் பெற்ற அடியவராயும் இருந்த அருணகிரிநாதரை ஒப்ப மிகச் சிறந்த கவிஞர் தோன்றாவிட்டாலும் கூட, மக்கள் மனத்தைக் கவர்ந்த புலவர் சிலர் தோன்றியிருக்கிறார்கள். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர் காளமேகப் புலவர்.

அருணகிரிநாதர் போல இவரும் பெருங்காப்பியம் பாடாத போதிலும், அதற்கான தகுதிகள் வாய்ந்து தம் தனிப்பாடல் களாலும் இரண்டொரு சிறு பிரபந்தங்களாலும் தமிழை வளப் படுத்தியவர். தனிப்பாடல்களில் சிறந்த இலக்கியச் சுவை கண்டு மகிழும் நிலையைத் தமிழ் வரலாற்றில் தோற்றுவித்தவை, சென்ற நூற்றாண்டிலிருந்த இரட்டையர் தனிப்பாடல்களும், இவர் செய்த தனிப்பாடல்களுமே. இப்பாடல்களின் பெரும் சிறப்பு, இவை கல்விப் பயிற்சி குறைந்தோர் நாவிலும் பயின்றன என்பு தாகும். கவிதை, கல்வியாளருக்கு மட்டுமன்றி, கல்வி குறைந் தோருக்கும் உரியதாக முடியும் என்பது போன்ற ஒரு புதிய இலக்கிய ஜனநாயகத்தை இவர் பாடல்கள் தோற்றுவித்தன. தொன்றுதொட்டு இன்று வரை இவர் பாடல்களைப் பாடாத அறிவுடைய தமிழ் மக்கள் எவரும் இல்லை.

இனி, இந்த நூற்றாண்டில், வடமொழி இதிகாச சரித் திரங்கள் சில தமிழில் காப்பிய இலக்கணம் அமையப் பாடப் பெற்றிருந்தன என்று அறிகிறோம். வடமொழிக் காதம்பரி சரித்திரம் இவ்வாறு பாடப்பெற்றிருந்தது. இது வடமொழியில் உரைநடையாயினும், தமிழில் ஆதிவராககவி என்பவர் இதைச்

செய்யுளாகச் செய்தார். இந்நூல் 1912இல் அழகாகவும் அச்சிடப் பெற்றது. ஆனால் அச்சிட்ட நூல் யாருக்கும் தெரியாதபடி அமுங்கியே போய்விட்டது என்று அறிகிறோம். மற்ற இரு சரித்திரங்கள் இராமாயணமும் அரிச்சந்திர சரித்திரமும். இவற்றுள், இராமாய்ண வரலாறு வெண்பா யாப்பில் பாடப் பெற்றிருந்தது என்று பின்வந்த உரைக் குறிப்புக்களால் அறி கிறோமேயன்றி, நூல் இருப்பதாகத் தெரியவில்லை. அரிச்சந்திர கதை மட்டும், வெண்பாவும் உரைநடையும் கலந்த நூலாகச் செய்யப் பெற்றிருந்தது போலும்; நூலின் சில பகுதிகள் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் தமிழில் சிலவே உள்ளன. பெருந்தேவனார் பாரத வெண்பா, சீவசம்போதனை என்பன; இந்த வரிசையில் அரிச்சந்திர வெண்பாவுக்கும் ஓர் இடம் உண்டு.

இக்காலத்துக்குரிய மற்றொரு சிறப்பு, ஓர் அழகிய இலக் கியத் திரட்டு தொகுக்கப் பெற்றமையாகும். **புறத்திரட்டு** என்ற சிறப்பான விரிந்த புறப்பாடல் திரட்டு இக்காலத்தே தொகுக்கப் பெற்றது. சங்க இலக்கியங்களின் பின் தோன்றிய தொகை நூல்களின் வரிசையில் இதற்கு மிகவும் சிறப்பான இடம் உண்டு. இது பெரும்பான்மையும் சங்க நூல்களிலிருந்தே பாடல் களைத் தொகுக்கப் பெற்றதாகும்; சிறுபான்மை சிந்தாமணி யிலிருந்தும், இன்னும் குறைவான பாடல்கள் கம்பராமாயணம், மேரு மந்தர புராணம் முதலியவற்றிலிருந்தும் தொகுக்கப் பெற்றன. இதனுள் முப்பது நூல்களிலிருந்து திரட்டிய 1570 பாடல்களைக் காண்கிறோம். இதைத் தொகுத்தவர் பெயர் வரலாறு முதலியவை ஒன்றும் இப்பொழுது அறிய முடியவில்லை. இலக்கியச் சுவை - சொற்சுவை பொருட்சுவை - மட்டும் கருதிச் செய்யப் பெற்ற பழந்தமிழ்த் தொகை நூல் இது ஒன்றே. கவிச் சுவை தேரும் உணர்வு அந் நூற்றாண்டுகளில் கற்றோரிடையே மிகுதியாயிருந்தது என்பதற்கு இந்நூல் சிறந்த எடுத்துக்காட்டு.

மேற்கூறிய இலக்கியங்களின் வரலாற்றை இவ்வத்தியாயத் துள் விளங்கக் காண்போம்.



## காளமேகப் புலவர்

சென்ற தலைமுறை வரையில் காளமேகப் புலவர் வரலாற்றைப்போல் சுவை பயக்கின்ற சரித்திரம் தமிழ் மக்களுக்கு வேறு இருந்ததில்லை. இவர் பாடிய சிலேடைப் பாடல்கள், சமுத்திகள், சித்திரகவிகள் எண்ணிறந்தன. இவை யாவும் அறிவுடைய தமிழ் மக்களுக்கு, ஓரளவு படிப்புக் குறைந்தவர்களுக்குக்கூட, பெரு விருந்தாக இருந்து வந்திருக்கின்றன. ஆனால் இக்காலத்தில், சரித்திர ஆராய்ச்சி பகுத்தறிவு என்பன போன்ற சில புத்தியக்கக் கருத்துக்களில் மனம் செலுத்தும் நம்மவர்கள், இப்படிப்பட்ட பாடல்களை அனுபவிக்கும் திறனை அடியோடு இழந்து விட்டார்கள் என்றே கருதவேண்டியிருக்கிறது.

இப்புலவர் வரலாற்றை நாம் அறிவதற்கு இன்று ஆதார பூர்வமான குறிப்புக்கள் மிகவும் குறைவு. முதல் ஆதாரம் விநோதரச மஞ்சரி. இது சென்னை அரசாங்க வித்தியாசாலையில் தமிழ்ப் பண்டிதராயிருந்த அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார் புதிதாய் எழுதிய பல வழக்குக் கதைகளையும் கட்டுரைகளையும் கொண்ட ஒரு தொகுப்பு; முதல் பதிப்பு 1876 இல் அச்சாயிற்று. இதுவே இப்புலவர் சரித்திரம் கூறும் பல நூல்களுள்ளும் மிகவும் விரிவாயுள்ளது. இரண்டாவது, காலத்தில் இன்னும் மிகவும் முற்பட்டதான தமிழ் நாவலர் சரிதை என்ற ஒரு பழந்தொகுப்பு நூல். இதன் சுத்தப் பதிப்பைக் கனக சுந்தரம் பிள்ளை 1921இல் வெளியிட்டார். இதனுள் சில பாடல்களும் அவைபற்றிய குறிப்பும், காளமேகப் புலவர் வரலாற்றைக் கூறுகின்றன. மூன்றாவது, புலவர் புராணம் இதனுள் தண்டபாணி சுவாமிகள் (1840-99) 68 பாடல்களால் இப்புலவர் வரலாற்றைப் பாடியிருக்கிறார். நான்காவது, தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுள் சிந்தாமணி, பெருந்தொகை முதலியவற்றுள் திரட்டப்பட்டுள்ள காளமேகப் புலவர் பாடல்கள். புலவர் புராணத்துக்கும் ஏனையவற்றுக்கும் நிரம்ப வேறுபாடு உண்டு.

காளமேகப் புலவர் கும்பகோணத்தையடுத்த நந்திபுரம் (நந்தி கிராமம்) என்ற ஊரில் ஒரு வைணவ வேதியர் குலத்தில் பிறந்தார். (நந்திபுரம் இக்காலத்து நாதன் கோயில். இது பண்டைச் சோழர் தலைநகரான பழையாறையின் ஒரு பகுதி. இரண்டாம் நந்திவர்ம பல்லவ மன்னன் பழையாறைக்கு நந்திபுரமெனப் பெயரிட்டு, இங்கு நந்திபுர விண்ணகரம் என்ற திருமால் கோயிலும்

அமைத்தான்.) இவரது இயற்பெயர் வரதன் என்பது. உரிய காலத்தில், இவர் திருவரங்கம் பெரிய கோயிலில் பரிசாரகராக அமர்ந்தார். (ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது இவர் காலம். ஆதலால் இவர் வரலாற்றில் ஆங்காங்கு புனைந்துரையும் இயற்கைச் சம்பவங்களும் வேறு பிரித்துக் காண முடியாத வாறு கலந்திருக்கக் காணலாம்.) சில நாள் சென்றபின், இவர் அருகிலுள்ள திருவானைக்கா சிவாலயத்தில் தொண்டு பூண்டு ஒழுகி வந்த காரிகையாகிய மோகனாங்கி என்பவளுடைய அழகிலும் இசையிலும் குணத்திலும் ஈடுபட்டு மனத்தைப் பறி கொடுத்தார். பக்குவமாக நடந்து, மெல்ல அவளுடைய காத லைப் பெற்று அவளோடு வாழ்ந்து வந்தார். பெருமாளுடைய பிரசாதங்களை அவளுக்கே உரிமையாக்கி விடுவார்.

அக்காரிகையோ, முத்தமிழிலும் வல்லவள். தேவார திரு வாசகங்களை நாள்தோறும் ஓதியதோடு, இறைவன் சந்நிதி யிலும் பாடியாடுவாள். மார்கழி மாதம் வந்தது. தன்னொத்த பிற பெண்களோடு கூடி அவளும் கோயிலில் திருவெம்பாவையும் திருப்பள்ளியெழுச்சியும் பாடி வந்தாள். ஒரு நாள் அவளுடைய முறை வந்த போது, இயல்பாகவே, சிவபக்தி வெளிப்படும் பாசுரமாகிய

**உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று**
**அங்குஅப் பழம்சொல் புதுக்கும் எம்அச்சத்தால்**
**எங்கள் பெருமான் உனக்கொன்று உரைப்போம்கேள்**
**எங்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க**
**எங்கை உனக் கல்லாது எப்பணியும் செய்யற்க**
**கங்குல் பகல் எங்கண் மற்றொன்றும் காணற்க**
**இங்கிப் பரிசே எமக்குஎங்கோன் நல்குதியேல்**
**எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோ ரெம்பாவாய்.**

என்ற பாசுரத்தை இவள் பாட நேர்ந்தது. உடன் இருந்த தோழிகள் ஏளனமாக நகைத்தார்கள். காரணத்தை இவள் வினவியபோது, "நீ பாடுவது சிவபிரானுக்குரிய திருஎம்பாவை. ஆனால் வாழ்வது வைணவப் பரிசாரகனோடு! எத்தனை மாறுபாடு!" என்று சொல்லி மீண்டும் சிரித்தார்கள். கேட்ட அப்பெண் மிகவும் வெட்கமுற்று, வீடு திரும்பியவுடன், இரவு வந்த வரதரைத் தடுத்து, "நீர் சிவனடியாரானால்தான் உம்மோடு கூடி நான் வாழமுடியும்" என்று கூறினாள். வரதரும் அவ்விதமே, திருமண்ணைக்களைந்து, திருநீறு பூசி, அக்கமணி யணிந்து, அரங்கநாதனை மறந்து

ஜம்புகேசுவரனையே துதித்து வரலாயினார். வைணவர்கள் இவரை முன்போல் திருமால் பக்தி உடையவராக்க எவ்வளவோ முயன்றும் இயலவில்லை.

இவ்வாறிருக்கையில் ஒரு நாள் இவ்வரதர் தம் காதலியுடன் வீடு திரும்ப எண்ணிக் கோயிலில் காத்திருந்தவர், நேரம் அதிகம் ஆனமையால் அங்கேயே ஒரு மண்டபத்தின் புறத்தே உறங்கி விட்டார். அருகில், ஒரு வேதியர் நீண்ட நாளாகக் கலைமகளை நோக்கித் தவமிருந்து வந்தார். அவர் தவத்துக்கு மகிழ்ந்து அருள் செய்ய எண்ணி அவரை அணுகி வந்த கலைமகள், அவர் பக்குவ மின்றி இருந்ததையும், அருகில் இருந்த இவ்வரதர் பக்குவம் பெற்றிருந்ததையும் கண்டு, இவருக்கு உபதேசம் செய்து சென்றாள். அக்கணமே இவர் காளமேகம் போல் கவிதைமாரி பொழியும் ஆற்றல் பெற்றார். இறைவனைத் துதித்துப் பல பாடல்கள் பாடினார். ஆனைக்காவுடை ஆதியைப் புகழ்ந்து திருஆனைக்கா உலா என்ற பிரபந்தம் பாடினார்.

நினைத்தவுடனே தங்கு தடையின்றி எப்பொருளைப் பற்றியும் எவ்விதமாகவும் சாமர்த்தியமாகப் பாடும் ஆற்றல் இவருக்குக் கைவந்திருந்தமையால், உலகோர் இவரை ஆசுகவி என்று போற்றலாயினர். கார்மேகம் போல இவர் கவிதை மாரி பொழிந்தமை கண்ட பெரியோர் இவரைக் காளமேகம் என்றனர்.

> காசுக்குக் கம்பன் கருணைக்கு அருணகிரி
> ஆசுக்குக் காளமுகில் ஆனவனே – தேசுபெறும்
> ஊழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
> கூழுக்கிங் கவ்வை யெனக் கூறு.

என்ற பிற்காலப் பாடல் இவ்வாற்றலைச் சுட்டியது. அது முதல் வரதன் என்ற இவரது இயற்பெயர் மறைந்து காளமேகம் என்ற பெயரே நிலைத்துவிட்டது. தமிழ்நாட்டில் பல இடங்களினும் சென்று இறைவன் முன்னும் அரசர் முன்னும் கற்றோர் முன்னும் இவர் பாடல் பாடி வந்தார். இவர் நாவிலிருந்து எப்பொருள் பற்றியும் விசித்திரமான கவிதை பிறந்தது. இவ்வாறு இவர் பாடிய பாடல்கள் அளவில்லாதன. யார் எந்தக் கேள்வி கேட்டாலும் அதற்குச் சுவைபடப் பொருத்தமாகவும் சமத்காரமாக வும் அக்கணமே பாடலால் விடை கூறுவார். யார் எந்தச் சமுத்தி கொடுத்தாலும் அந்த நேரமே அதைப் பூர்த்தி செய்வார். எந்தப் பொருள்களையும் சேர்த்துச் சிலேடை பாடுவார்.

*நாகசாமியின் கூற்றுக்கேற்ப காமாட்சி கோயில் கல்வெட்டில் உள்ள பாடல்களில் காளமுகில் என்ற சொல் பயன்படுத்தப் பட்டுள்ளதால் அப்பாடல்களும் இவருடையதாய் இருக்கலாம். அப்பாடல்களில் ஒன்று,*

மண்ணில் இருவர் மணவாளர் மண்ணளந்த
கண்ணனவன் சிவன்பேர் காளமுகில் – கண்ணன்
அவனுக்கூ ரெண்ணில் அணியரங்கம் ஒன்றே
இவனுக்கூ ரெண்ணா யிரம்.

*திருவரங்கம் கோயிலில் பிள்ளையார் இருந்தார். அவருக்கு நாமம் போட்டிருந்தது. 'பெருமாள் கோயிலில் பிள்ளையார் ஏன் வந்தார்?' என்று இவரைக் கேட்டனர் உடனே இவர்,*

தந்தை பிறந்திறவாத் தன்மையினால் தன்மாமன்
அந்தம் பிறந்திறக்கும் ஆதலால் – முந்துமளி
நாணிக்கு வில்வேளும் மாய்தலால் நன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்.

*என்ற பாடலால் விடை கூறினார்.*

*இவரிடம் விளங்கிய கவிதை இயற்றும் ஆற்றலைக் கண்ட அங்கிருந்த பாகவதர் ஒருவர், "இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏறடி அம்பலத்தே" என்ற தொடரை இறுதியில் வைத்து ஒரு பாடல் பாடுமாறு சமுத்தி இட்டார். தயங்காமல் காளமேகம் பாடினார்.*

தடக்கட லிற்பள்ளி கொள்ளுவம் யாமதைச் சங்கரனார்
அடற்புலிக் குட்டிக்கு அளித்தன ரால் அது கேட்டுநெஞ்சம்
நடுக்கம துற்றது கைகால் எழாநளி னத்திஎன்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏறடி அம்பலத்தே.

*நாம் பள்ளி கொள்ளும் பாற்கடலைச் சிவபிரான் வியாக்கிர பாதர் புதல்வரான உபமன்னியுவுக்கு அளித்துவிட்டார்; அது கேட்டு நெஞ்சம் நடுங்கிக் கைகால் ஏழவில்லை; என்னே ஆபத்து! பாயைச் சுருட்டு, அம்பலத்தில் ஏறு (முறையிட, தில்லையம் பலத்தில்) என்பது இதன் கருத்து.*

*ஒருமா முதல் முக்கால் வரையுள்ள பின்ன எண்களை அமைத்துப் பாடுக என்றபோது,*

முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன் – விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றோதுண்.

*கவிராயரைப் பழித்து*

வாலெங்கே நீண்ட வயிறெங்கே இரண்டு
காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே – சாலப்
புவிராசர் போற்றும் புலவிர்காள் நீங்கள்
கவிராசர் என்றிருந்துக் கால்.

முன்னே கடிவாளம் மூன்றுபேர் தொட்டிழுக்கப்
பின்னே இருந்திரண்டு பேர்தள்ள – எந்நேரம்
வேதம்போம் வாயான் விகடரா மன்குதிரை
மாதம்போம் காத வழி.

*தம்மைப் பற்றி இவர் எப்போதும் மிக்க எடுப்பாகவும் தற் புகழ்ச்சியோடுமே பேசுவார். பின்வரும் பாடல் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு:*

கழியுந் தியகடலுப்பென்று நன்னூற் கடலின் மொண்டு
வழியும் பொதிய வரையினிற் கால்வைத்து வன்கவிதை
மொழியும் புலவர் மனத்தே இடித்து முழங்கிமின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே.

*இந்த இடத்திலிருந்து இவருடைய புகழும் பாடல்களும் பெருகத் தொடங்குகின்றன. சென்ற நூற்றாண்டில் தனிப் பாடலைத் திரட்டி 1878இல் வெளியிட்ட தில்லையம்பூர்ச் சந்திர சேகர கவிராச பண்டிதர், காளமேகம் பாடல்களுக்காகவே தனிப் பாடல் தொகுத்தாரோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. திரட்டு, காளமேகம் பாடிய 187 பாடல்களோடு தொடங்கு கிறது. அங்ஙனமே 1908இல் தனிப்பாடல்களைப் பெருக்கித் தொகுத்துத் தனிச் செய்யுட் சிந்தாமணி என்ற பெயரில் வெளி யிட்ட மு.ரா. கந்தசாமிக் கவிராயர் பதிப்பில் காளமேகம் பாடல்கள் 204 உள்ளன. காலப்போக்கில் பல்வேறு காலத்தில் பலர் பாடிய சமுத்திகளும் சிலேடைகளும் சுவையுடைய பாடல் களும் காளமேகப் புலவர் வாக்கென்று இவர் மேல் ஏற்றப்பட்டு விட்டன என்று நாம் கருத வேண்டியிருக்கிறது.*

*முதன் முதலாக இவர், அக்காலத்தில் தமிழ்நாட்டில் ஆட்சி புரிந்த சாளுவத் திருமலைராயன் அரசவையில் பெரும் புலவ ராய் இருந்த அதிமதுர கவிராயர் என்பவரை வென்று தமக்கு ராயர் அவையில் மிக்க செல்வாக்கைத் தேடிக் கொண்டார். ராயரைக் காண இவர் சபைக்குச் சென்றபோது அங்கிருந்த*

கவிராயரும் அவருடைய புலவர் 64 பேரும் இவருக்கு இருக்க இடமளிக்கவில்லை. அப்போது இவர் கலைமகளை வேண்டி,

> வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
> வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாய் – வெள்ளை
> அரியா சனத்தில் அரசரோடு எனைச்
> சரியாசனம் வைத்த தாய்.

என்ற பாடலைப் பாடின மாத்திரத்தில், அரசன் இருந்த ஆசனமே அகன்று வளர்ந்து, இவர் வந்து அமர்வதற்கு இடம் கொடுத்தது என்றும், கண்ட அரசன் பெரிதும் வியந்து இவருக்கு மிக்க சிறப்புச் செய்தான் என்றும் சொல்வர். பொறாமையினால் அக் கவிராயர் இவரைச் ஒழித்துவிட எண்ணி, யமகண்டம் பாடு வதற்கு இவரைச் சம்மதிக்கச் செய்து வேண்டிய ஏற்பாடுகளும் பண்ணி வைத்தார்.

யம கண்டம் பாடுவதன் இலக்கணம் விநோதரச மஞ்சரி யுடையார் பின்வருமாறு கூறுவார்: "பூமியில் பதினாறடி நீளம் பதினாறடி அகலம் பதினாறடி ஆழமாகச் சதுரத்திற்குச் சதுரம் ஒரு பெரிய குழி வெட்டி அதன் நான்கு மூலையிலும் பதினாறடி இரும்புக் கம்பங்கள் நாட்டிக் கம்பத்தின் மேல் நாலு பக்கத்திலும் இரும்பினால் நாலு சட்டமும் நடுவேயொரு சட்டமும் போட்டு, நடுச் சட்டத்தில் உறிகட்டி, குழிக்குள் பருத்த புளியங்கட்டை களை நெருங்க அடுக்கி கட்டைக்குள் நெருப்பு மூட்டி அது கனன்றெழுந்து சுவாலித்து எரிந்து கொண்டிருக்க, அந் நெருப் பில் ஓர் ஆளுயரமான இருப்புக் கொப்பரை வைத்துக் கொப்பரை நிறைய எண்ணெய்விட்டு அதில் அரக்கு, மெழுகு, குங்கிலியம், கந்தகம், சாம்பிராணிகளை நிரப்பி, அவை நான்றாய்க் காய்ந்து உருகிக் கொதித்துக் கொண்டிருக்க, நான்கு யானைகளைப் பாகர்கள் மதமேற்றிக் கொண்டு வந்து கம்பத்திற்கு ஒவ்வொன் றாக மலைகளைப் போல நிறுத்தி வைத்திருக்க, பின்புறத்தில் வளையம் வைத்து வளையத்திற் சங்கிலி கோத்து நயத்த எழுகி னால் கூர்மையாகச் சமைத்துப் பளபளவென்று மின்னும் படி சாணை பிடித்த எட்டுக் கத்திகளைக் கழுத்தில் நாலும் அரை யில் நாலுமாகக் கட்டிக் கொண்டு கத்திகளின் புறத்தில் உள்ள சங்கிலிகளை மேற்படி யானைகளின் துதிக்கையிற் கொடுத்து வைத்து தான் கொப்பரைக்கு நேராகத் தொங்குகின்ற உரிநடுவில் ஏறியிருந்து, எவரெவர் என்ன என்ன சமுத்தி கொடுத்தாலும் அவைகளை அந்நொடியிலே தானே தடையின்றிக் குறித்த

கருத்தின்படி இசைத்துப் பாட வேண்டியது. அவ்வாறு பாடும் பொழுது எவ்வளவாவது வழுவுமானால், சமுத்தி கொடுத் தவர்கள் யானை மேலிருக்கும் பாகர்களுக்குக் கண் சைகை காட்டி அவர்கள் யானைகளை மத்தகத்தில் அங்குசத்தாற் குத்தி அதட்ட; அவை தமது தும்பிக்கையிற் கொடுக்கப்பட் டிருக்குஞ் சங்கிலிகளை விசையாயிழுக்க, இழுத்தவுடனே புல வன் கழுத்தும் அரையும் கத்திகளால் துண்டிக்கப்பட்டுத் தலை யொரு துண்டமும் அரை முதற் காலளவும் ஒரு துண்டமுமாகி அந்த எண்ணெய்க் கொப்பரையில் விழுந்து மாண்டு போகி றது. இப்படிப் பாடுவதுதான் யமகண்டம்."

இந்தப் பயங்கரமான நிலையில் இருந்து கொண்டு காள மேகப் புலவர் அதிமதுர கவிராயரும் அவருடைய தண்டிகைப் புலவர் அறுபத்து நான்கு பேரும் விரைந்து கேட்ட மிகவும் கடி னமான கேள்விகளுக்கெல்லாம் தயங்காமல் உடனுக்குடன் விடை கூறி வந்து சிறப்பான வெற்றி பெற்றார். பார்த்துக் கொண் டிருந்த ராயர் இவரை மிகவும் கொண்டாடிப் போற்றினார். இவ்வாறு, இப்புலவர்கள் கேட்கக் காளமேகம் பாடிய பாட்டுக் களே விசித்திரமான சிலேடைகளும் சமுத்திகளும் ஆகும்.

புலவர் புராணமுடையார் இக்கதையில் சிறிது மாறுத லோடு கூறுவார்: "திருமலைராயன் என்ற அரசன் கயவரில் தலையானான். அவன் அவைப் புலவராயிருந்த அதிமதுர கவி ராயன் தமிழ்ப் புலவர் பலரைச் சயித்துக் கால் விலங்கிட்டு வைத்திருந்தான். இவ்வாறு நொந்திருந்த புலவர் எழுபதின்மர். இவர்களுள் ஒருவர் அந்தணர். அவ்வந்தணர் மனைவி எவ்வா றேனும் அதிமதுரகவியை வென்று தன் கணவனை மீட்க வேண்டும் என்று திட்டமிட்டு வந்தாள். ஒரு நாள் வீதி வழியே காளமேகம் வரக்கண்டு, 'தன் இனத்தார் மீது உரிமை செலுத்திக் காக்க எண்ணாது செல்கின்ற இது காளமேகம் என்னும் கட்டை விளக்குமாறு" என்று சொன்னாள். புலவர் காதில் இது விழுந் தது. 'அதைத்தான் பெருக்கச் சொல்வார்கள்' என்று சொல்லிக் கொண்டு, காளமேகம் அவர் அருகில் சென்று, 'ஏன் இவ்வாறு கூறினாய்?' என்று கேட்டார். அவள் தன் கணவனும் பிற புலவர் பலரும் அதிமதுர கவியால் சிறைப்பட்ட செய்தி சொல்லிக் கட்டமுது கட்டிக் கொடுத்து, காளமேகத்தைத் திருமலை ராயன் அவைக் களத்துக்கு அனுப்பி வைத்தாள். காளமேகமும் அவ்வாறே சென்று அரசவையில் 'வெள்ளைக் கலையுடுத்து' என்ற

வெண்பாப் பாடி, கலைமகளருளால் ஆசனம் பெற்று, அதிமதுர கவிராயன் கேட்டபடி யமகண்டம் பாடினார். யமகண்டம் பாடுவதில் தயக்கமோ பிழையோ நேர்ந்தால் அக்கணமே மரணம் என்பது அதற்குரிய ஏற்பாடு. கவிராயர் தாம் சிறையிட்டு வைத்த புலவர் எழுபது பேரையும் விலங்கு நீக்கிக் கொண்டுவந்து நிறுத்தி ஒவ்வொருவரும் ஒரு சமுத்தி வீதம் கேட்கச் சொன்னார். புலவர்களோ, காளமேகம் வெற்றி பெற்றால் தங்களுக்கும் விடுதலை, காளமேகம் தோற்றால் தாங்களும் உடன் சேர்ந்து மடிய வேண்டியிருக்கும் என்பதுணர்ந்து, மிகவும் அஞ்சினார்கள். இருப்பினும், அவர்கள் துணிந்து கேட்ட கேள்விகள் அனைத்துக்கும் அவர் உடனுக்குடன் அனாயாசமாய் விடை கூறி வெற்றி பெற்றுக் கவிராயன் எண்ணம் பாழ்படச் செய்தார். இவ்வாறு காளமேகம் அரும்பொருளும் புகழும் பெற்றாலும் கூட இறைவனுடைய அடியவன் என்ற பெயர் பெற முடியவில்லை. வித்தகப் புலமைக்கான காளமேகம் என்ற பெயரை மட்டும் நிலை நாட்டிக் கொண்டார். எமகண்டம் கேட்டுத் திருமலைராயன் மாய்ந்தான். இரண்டு பாடல்கள் பாடிக் காளமேகம் ஆவ்வூரை மண்மாரி கொள்ளச் செய்தார்."

இவ்வரலாறு சுவையுடையது எனினும், இது வெறும் கட்டுக்கதையேயன்றி உண்மைக்குப் பொருந்துவதன்று. திருமலைராயன் காளமேகத்தை நன்கு ஆதரித்துப் பெருஞ் சிறப்புச் செய்தான் என்று அவரே பாடுகிறார்.

இவ்வாறு ராயனுடைய சபையில் மிக்க சிறப்போடு சில காலம் வாழ்ந்த பின், காளமேகப் புலவர் பல தலங்களைத் தரிசிப்பதற்காகப் புறப்பட்டுச் சென்றார் போலும். பொதுவாக இவர் சிவபரத்துவமே பாடுபவர். எங்கு சென்றாலும் ஆங்காங்குள்ள சிவத்தலங்களில் சிவபிரானைக் கண்டு போற்றுவது இவர் இயல்பு. அவ்விடத்து மக்கள் விருப்பப்படி இறைவன் மேல் சிலேடையாகவும் நிந்தா ஸ்துதியாகவும் பாடிச் செல்வது இவர் வழக்கம். இருபதுக்கு மேற்பட்ட தலங்களில் இவ்வாறு பாடியிருக்கிறார்.

ஒரு சமயம் இவர் திருக்கண்ணபுரம் என்ற புகழ்பெற்ற திருமால் பதிக்குச் சென்றார். அங்கிருந்த வைணவர் இவரது சைவ வைராக்கியத்தைத் தெரிந்து, இவரை ஆலயத்துள் அடைத்து வைத்து, திருமாலைப் பாடினால் தான் வெளியே விடுவதாகச்

*சொன்னார்கள். முன்பு வைணவராயிருந்து பின் சிவனடியார் ஆகிய இவரால் திருமால் பரத்துவமாக ஒரு பாடலேனும் பெற வேண்டும் என்பது அவர்களுடைய எண்ணம். இதை நன்குணர்ந்த புலவர், பாடினால் தான் வெளியே விடுவார்கள் என்பதையும் அறிந்து, "கண்ணபுரமாலே கடவுளிலும் நீ அதிகம்" என்று ஒரு பாடல் தொடங்கினார். (கடவுள்-சிவன்.) கேட்ட வைணவர்கள் தங்கள் எண்ணம் கைகூடிற்று என்று கண்டு இவரை வெளியே விட்டார்கள். இவர் வெளியே வந்து இப்பாடலை வேறு விதமாக முடித்தார்:*

கண்ணபுர மாலே கடவுளிலும் நீ அதிகம்
உன்னிலுமோ யானதிகம் ஒன்றுகேள் – முன்னமே
உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்பெண் ணத்தொலையா தே.

*காஞ்சிபுரத்தில் வரதராசப் பெருமாள் கருட வாகனத்தின் மீது திருவீதியுலா வருதலைக் கண்டு புகழாப் புகழ்ச்சியாகப் பின் வருமாறு பாடினார்.*

பெருமாளும் நல்ல பெருமாள் அவர்தம்
திருநாளும் நல்ல திருநாள் – பெருமாள்
இருந்த இடத்தில் இராமையினால் ஐயோ
பருந்தெடுத்துச் செல்கிறதே பார்.

*காஞ்சிபுரத்தில் குமர கோட்டத்திலுள்ளார், இவரை இங்குள்ள விசேடங்களை அமைத்து ஒரு பாடல் பாடவேண்டும் என்று கேட்டனர். 'இங்கு என்ன விசேடம்?' என்று இவர் கேட்டபோது, ஊரார் குமரக் கோட்டக் கீரை முதலான ஆறு விசேடங்களைக் குறிப்பிட்டார்கள். இவர் அவற்றை அப்படியே வைத்து முன்னால் ஒரு சொல்லும் பின்னால் இருசொற்களும் சேர்த்து ஒரு வெண்பாவாகப் பாடிக் காட்டினார்:*

அப்பா குமரகோட் டக்கீரை செவ்வலிமேட்
டுப்பாகற் காய்பருத் திக்குழிநீர் – செப்புவா
சற்காற்றுக் கம்பத் தடியில் தவங்கருமா
றிப்பாய்ச்சல் யார்க்கும் இனிது.

*பின்னர் திருமால் அவதாரம் பத்தையும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாட வேண்டுமென்று இவரைக் கேட்டபோது, இவர் பாதி வெண்பாவிலேயே அடக்கிப் பாடினார்:*

மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சன்மம் எடுக்கவா – மச்சாகூர்
மாகோலா சிங்காவா மாராமா ராமாரா
மாகோபா லாமாவா வாய்.

*கயத்தாறு என்ற ஊருக்கு இவர் சென்றபோது அங்கு பெருமாள் கோயிலில் திருவிழா நடந்தது. சுவாமி தூக்குவதற்கு ஆள் குறை வாயிருந்தது. அங்கிருந்தவர்கள், அப்போது நல்ல கட்டான உடலோடு வீதிவழியே சென்ற இவரைப் பார்த்துத் தங்கள் வேலைக்கு ஏற்ற ஆள் என்று எண்ணிப் பிடித்துக் கொண்டு போய் வாரையில் தோள் கொடுக்கச் செய்து சுவாமி தூக்க வைத் தார்கள். புலவர் பாவம் என்ன செய்வார்? நேரமோ நடுநிசி; வயிற்றுப் பசியோ அதிகம்; வேலையோ பழக்கமில்லாத கடின வேலை; பாரமோ அதிகம்; போதாக் குறைக்கு, பெருமாளோடு கூட பட்டாசாரியர் ஒருவரும் என்றும் போல ஆராதனைக் காக மஞ்சத்தின் மேல் ஏறி உட்கார்ந்திருக்கிறார். மனம் நொந்து புலவர் பாடினார்.*

பாளைமணங் கமழ்கின்ற கயத்தாற்றுப் பெருமாளே
  பழிகா ராகேள்
வேளையென்றால் இவ்வேளை பதினாறு நாழிகைக்கு
  மேலா யிற்றென்
தோளைமுறித் ததுமன்றி நம்பியா னையுங்கூடச்
  சுமக்கச் செய்தாய்
நாளை இனி யார்சுமப்பார் எந்நாளுமுன் கோயில்
  நாசந் தானே.

*இச் சாபத்தால் பின்னர் கயத்தாற்றில் பெருமாள் கோயில் நாச மடைந்தது என்று சொல்வார்கள்.*

*காளமேகப் புலவர் சிதம்பரம் திருவாரூர் கும்பகோணம் முதலான தலங்களுக்குச் சென்றிருந்தபோது ஆங்காங்குள்ளோர் கேட்டுக் கொண்டபடி அவ்வச் சிவாலயங்களின் சிறப்பான அங்கங்களைத் தொகுத்துப் பாடலாகப் பாடினார்:*

ஞானசபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடந் திருமூலட் – டானம்பே
ரம்பலம்பஞ் சாவரணம் நாற்கோ புரம்பொற்செய்
கம்பமண்ட பஞ்சிவகங் கை.

சங்குதீர்த் தந்திருச் சாளரவா யில்வீர
சிங்கா சனந்திருவந் திக்காப்பு – பங்குனிமா
தத்திருநாள் தீர்த்தந் திருவினா தன்கோயில்
உத்தரபா கந்திருவா ரூர்.

திருக்குடந் தையாதி கும்பேசர் செந்தா
மரைக்குளங் கங்கை மகங்கா – விரிக் கரையின்
ஓரங்கீழ்க் கோட்டங்கா ரோணமங்கை நாயகியார்
சாரங்க பாணி தலம்.

*காளமேகப் புலவர் தொண்டை மண்டலத்தில் சுற்றிய காலத்தில், அங்கு ஆமூர் என்ற ஊரில் இருந்த களப்பாளன் ஆமூர் முதலி என்பவரால் ஆதரிக்கப் பெற்றிருந்தார் என்று தொண்டை மண்டல சதகம் (80) கூறும்; இதன் பதிப்பாசிரியர் ஆமூர் என்பது தொண்டை மண்டலத்தில் 24 கோட்டங்களுள் ஒன்று என்பர்; இதற்கு ஆதாரம் விளங்கவில்லை.*

மோதிச் சிவந்த கவிகாள மேகம் மொழிந்தவெண்பா
பாதிக்கு முந்திப் பரிசளித் தோன்களப் பாளனெனும்
ஆதிக்கம் பெற்றவன் ஆமூர் முதலி யரசிருப்பாம்
மாதிக்கெ லாம்புகல் கின்றதொல்சீர்த் தொண்டை மண்டலமே.

*ஆமூர் முதலியால் ஆதரிக்கப் பெற்ற காளமேகம் ஒருசமயம் பொருளின்றி வருந்திப் பலரிடம் சென்று கேட்டும் கிடைக் காமல், ஆமூர் முதலியை மறந்து வீணாகச் சென்று பிறரிடம் இரந்தோமே என்று இரங்கிப் பாதிப்பாடல் பாடும் முன்னமே, அம்முதலி இவர் தேடிய பொருளை அளித்து விட்டான். இதுவே சதகம் கூறும் பாடலின் பொருள். காளமேகம் பாடிய பாடல் பின்வருவது:*

உள்ளங்கால் வெள்ளெலும் பாக ஒருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே – வள்ளல்கோன்
ஆமூர் முதலி அரசர்கோன் இங்கிருக்கப்
போமூர் தெரியாமற் போய்.

*நாகை அருகே ஆமூர் என்ற வேளாளர் கிராமம் ஒன்று உள்ளது. காளமேகத்தின் வாழ்க்கை நாகப்பட்டினத்துடன் நிரம்பப் பிணைப்புப் பெற்றிருக்கிறபடியால், இவ்வாமூர் நாகையை அடுத்திருக்கும் என்பதே முறை.*

*ஆனைக்கும் அடிசறுக்கும் என்ற பழமொழி, ஒரு சமயம் காளமேகப் புலவர் சார்பில் உண்மையாயிற்று. சோழ நாட்டில்*

பல இடங்கள் சுற்றிய பின் ஒருநாள் நாகப்பட்டினம் நோக்கிச் சென்றார். நெடுந்தூரம் நடந்த களைப்பு, மிகுந்த பசி இவற்றால் மிகவும் வருந்தி நாகையடைந்து ஒருவீதி வழியே சென்றார். வயிற்றுக்குச் சோறு கிடைக்கும் இடம் அறிய எண்ணினார். அப்போது அங்கு, சில சிறு பிள்ளைகள் தெரு மண்ணில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஒரு பையனைப் பார்த்து, "தம்பி, சோறு எங்கே விற்கும்?" என்று கேட்டார். அவன் மிக்க குறும்புடைய பையன், ஆனால் மிக்க புத்திக் கூர்மையுடையவன். இவர் கேட்ட கேள்விக்குச் சிலேடையாகவே, "சோறு தொண்டையில் விக்கும்" என்று விடை கூறினான்.

கேட்ட சிலேடைப் புலியான புலவருக்கு மிக்க கோபம் வந்துவிட்டது. சிலேடையாக ஒரு சிறு பிள்ளை தம்மையே ஏளனம் செய்வதை அவரால் பொறுக்க முடியவில்லை. அவனுக்கு நிலையான சாபங்கொடுக்க வேண்டுமென எண்ணினார். சொல் லாக மட்டும் சொன்னால் சப்தம் காற்றோடு போய்விடும் என்றுணர்ந்து, சொல்லை எழுதி வைக்க நினைத்தார். அருகில் ஒரு கரித்துண்டு கிடந்தது. அதைக் கையில் எடுத்தார். பக்கத்தில் சுண்ணாம்பு வெள்ளையடித்த ஒரு வீட்டின் சுவர். அதில் தம் வசையை எழுதினார்.

> பாக்குத் தெறித்து விளையாடும் பாலகர்க்கு
> நாக்குத் தெறித்துவிழும் நாகையே –

இதற்கு மேல் அவருக்குப் பாட்டு ஓடவில்லை. பசி வந்திடப் பத்தும் பறக்குமல்லவா? பசி தணிந்த பின் மீண்டு வந்து மற்ற ஈரடிகளையும் எழுதி முடித்துவிடலாம் என்றெண்ணினார். மீண்டும் பசிப்பிணி மருத்துவன் இல்லம் எங்குள்ளது என்று தேடிச் சென்றார்.

விசாரித்தபோது, காத்தான் சத்திரத்தில் சோறு கிடைக்கும் என்று தெரியவந்தது. அங்கு சென்றார். அக்காலத்தில் நாகையில் செம்படவர் குலத்தில் கோனேரிராய வருண குலாதித்தன் மகன் வருண குலாதித்தன் காத்தான் என்பவன் பெருஞ் செல்வனாயும் வள்ளலாயும் வாழ்ந்து பல தருமங்கள் செய்து வந்தான். திருமலைராயரால் பெரிதும் அபிமானிக்கப் பெற்றிருந்த காரணத்தால் இவனுக்குத் திருமலைராய வருண குலாதித்தன் என்ற பெயரும் வழங்கும். இவன் வைத்திருந்த அன்னதான சத்திரத்திற்குக் 'காத்தான் சத்திரம்' என்று பெயர் வழங்கிற்று. காளமேகப் புலவர் வந்துசேர்ந்தபோது, நேரம் மிக்க அகாலமாய்

இருந்தது. சமைத்திருந்த உணவெல்லாம் தீர்ந்துபோய் நெடு நேரமாகிவிட்டது. அப்போது போய் இவர் உணவு கேட்டார். அங்கிருந்த பணியாளர் வழக்கம் போல் இவரை உபசரித்து இருக்கச் செய்து, புதிதாய் மீண்டும் விரைவாகவே சமையல் செய்தார்கள். எப்படியும் இதற்குச் சற்று நேரமாகுமாதலால், சமையல் முடிந்து இலையில் படைப்பதற்குள் புலவர் பசியால் மிகவும் துடித்துவிட்டார். பசியினால் கோபம்; வந்த வழியில் சிறு பிள்ளைகள் தம்மை ஏளனம் செய்த நினைவும் ஒரு பக்கம்; ஆகவே, சற்றும் யோசனை செய்யாது காத்தான் சத்திரத்தைப் பழித்து ஒரு வெண்பாப் பாடினார்:

> கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
> அத்தமிக் கும்போது அரிசிவரும் – குத்தி
> உலையில் இட ஊரடங்கும் ஓரகப்பை அன்னம்
> இலையிலிட வெள்ளி எழும்.

இதைப் பாடி முடிப்பதற்குள் இலையில் அன்னம் படைத்து இவரை உண்பித்தார்கள். இவரும் அமைதியாக உண்ணலானார். அச்சமயம் அங்கு ஒரு விபரீத சம்பவம் நடந்தது. இவர் அருகே சவையப்ப நாயன் என்ற அவ்வூர் அந்தணன் வந்து அமர்ந்து உணவு உண்ணலானான். அவன் பண்பாடு குறைந்தவன். உண்ணும் போது அவன் தலையிலே முடித்திருந்த முன் குடுமி அவிழ்ந்து வீழ்ந்தது. அதைத் தட்டி முடித்தான். ரோமம் ஒன்று இவருடைய இலையில் வந்து விழுந்தது. பார்த்த புலவருக்கு ஆறி இருந்த கோபமெல்லாம் பன்மடங்காய்ப் பாட்டாக வெளிவந்தது:

> சொருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
> பொருக்கெழுந்த வாயா புலையா – திருக்குடந்தை
> நாயா நரியாஉன் நாய்முகமும் பேய்வடிவும்
> தாயார்தான் கண்டிலளோ தான்.

முன்காலத்தில் சோழியப் பிராமணர்கள் முன்குடுமி வைத்திருப் பார்கள்; ஆகவே முன் குடுமிச் சோழியா என்றார். சத்திரத்ததி காரிகள் உடனிருந்து இவருடைய கோபத்தை எப்படியோ ஒரு வகையாக ஆற்றி வேறு சம்பவம் நிகழாமல் உணவு உண்டு முடிக்கச் செய்தார்கள். உண்டு முடிந்து சிறிது நேரம் பொறுத்து, இவர் சற்று ஓய்வாக இருந்த சமயம், சத்திரத்ததிகாரி இவரிடம் வந்து, "ஐயா புலவரே, நீங்கள் இங்கு வந்த உடனேயே அன்னம் படைக்கவில்லையென்று கோபமாக எங்கள் சத்திரத்தைப் பழித்துப் பாடிவிட்டீர்களே! காலத்தில் அரிசி வராமல் மாலை

யில்தான் நெல் வரும், உலையில் அரிசி போடும்போது நள்ளிர வாகிவிடும், அதை வடித்து ஓர் அகப்பை இலையில் படைப் பதற்குள் பொழுதே விடிந்து விடும் என்று பாடிவிட்டீர்களே, இது தருமமா?" என்று கேட்டான். அதற்குப் புலவர், "ஐயா, நம் பாடலுக்கு அப்படிப் பொருள் கொள்ள வேண்டாம். உலக மெங்கும் பஞ்சமே நிலவினாலும் இங்கு அரிசிவரும். உலை ஏற்றிய உடனேயே ஊரார் பசி அடங்கும் பரிமாறிய அன்னத்தின் வெண்ணிறத்தைப் பார்க்கும்போது வெள்ளி உதயம் செய்தாற் போல் இருக்கும் என்பதல்லவா இப்பாடலின் பொருள்!" என்று தாம் உணவு உண்ட மகிழ்ச்சியினாலே மிகுந்த சமத்காரமாக விடை கூறினார். பின்அங்கு இரவுப் பொழுதைப் போக்கிவிட்டு விடிந்து தம் வழியே சென்றார்.

இந்த ஆதித்தன் மீது காளிமுத்து என்ற ஓர் அம்மை பாடிய வருணகுலாதித்தன் மடல் என்ற மடற் பிரபந்தம் பிரசித்தமானது.

காத்தான் சத்திரத்தில் உணவு உண்டு மகிழ்ச்சியோடு புலவர் திரும்பி வந்தபோது, வழியில் பிள்ளைகள் முதல் நாள் பாக்கு விளையாடிய வீதி எதிர்பட்டது. தாம் முன்னமே பாடல் எழுதிய ஞாபகத்தோடு புலவர் சுவரைப் பார்த்தார். ஆனால் பாடலின் இரண்டாம் அடி தாம் முன் எழுதியது போல் இல்லை. முற்கூறிய புத்திசாலிப் பையன் "நாக்குத் தமிழ் மணக்கும் நாகையே" என்று பாடலைத் திருத்தியிருந்தான். பார்த்த புலவருக்கு இப்போது பசி நீங்கி மனத்தில் மகிழ்ச்சி இருந்தபடியால் கோபம் இல்லாமல் சந்தோஷமே உண்டாயிற்று. அதே பையனைத் தேடி அழைத்து, "பெரும் புலவன் ஆவாயாக" என்று வாழ்த்திவிட்டு, பாடலின் மற்ற இரண்டு வரிகளையும் பூர்த்தி செய்து அப்பால் சென்றார்.

இக்காத்தான் வரலாறு சரித்திரத் தொடர்புடையது என்பது போலவே, மற்றொரு வரலாறும் இப்புலவர் பாடலில் உண்டு. சகாத்தம் 1297இல் தொடங்கி, திருவானைக்காச் சைவருக்கும் சீரங்கத்தில் வாழ்ந்த வைணவருக்கும் பெரும் பூசல் நடந்த தென்று ஸ்ரீரங்கம் கோயிலொழுகு தெரிவிக்கிறது. இது கி.பி. 1375 ஆகிறது. இப்பூசலைக் காளமேகப் புலவர் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார்.

> சீரங்கத் தாரும் திருவானைக் காவாரும்
> போரங்க மாகப் பொருவதேன் – ஓரங்கள்
> வேண்டாம் இதெல்லாம் விகற்பம் தெரியாதோ
> ஆண்டியும் தாதனும் ஆனால்.

(ஆண்டியும் தாதனும் - சிவனடியாரும் திருமாலடியாரும்.)

*இப்பாடலால் கோயிற் பூசல் நடந்த காலத்துக்குச் சற்றுப் பின்னதாகவே காளமேகப் புலவர் வாழ்ந்திருந்தார் என்று கருத லாம்; அல்லது 1375இலிருந்து பல ஆண்டுக் காலம் அப்பூசல் தொடர்ந்து நடந்ததென்றும், உடன் காலத்தவராய் இரண்டு ஊர் களிலும் தொடர்பு பெற்றிருந்த காளமேகப் புலவர் அப்பூசலை நேரில் அறிந்திருந்தார் என்றும் நாம் கருத இடமுண்டு.*

*காளமேகப் புலவர் சிலேடை முதலிய சித்திரக்கவிகள் பல பாடியிருந்தாலும், நயமான இலக்கியச்சுவை நிறைந்த பாடல் களும் பல பாடியிருக்கிறார்.*

ஆனார் இலையே அயனும் திருமாலும்
கானார் அடிமுடிமுன் காண்பதற்கு – மேனாள்
இரவுதிரு ஆரூரில் எந்தைபிரான் சென்ற
பரவை மனை வாயிற்படி.

*என்பது அத்தகைய பாடல். பாண்டி நாட்டுச் சிவதலங்கள் அனைத்தையும் ஒரே பாடலில் தொகுத்துப் பாடும்படி கேட்ட போது, இவர் பாடிய பாடலும் இத்தகையதே:*

கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம்நெல் வேலிஇரா மேசுரம் – ஆடானை
தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்.

*இரட்டைப் புலவரும் காளமேகப் புலவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தார்கள் என்ற வரலாறு ஒன்று உண்டு. இது முழுமையும் பொருந்துவதாகாது. இவர்கள் மூவரும் ஒரு சமயம் ஆரூர்த் தியாகராசப் பெருமான் சந்நிதியில் வணங்கி நின்றபோது இரட்டையருள் ஒருவர்.*

நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான்–

*என்று பாடியபின், வழக்கமாய் இரண்டு வரி பாடி முடிக்கின்ற அவருக்கு, இங்கு நாக்குத் தடைபட்டு, மேல் சொற்கள் வர வில்லை. இரட்டையருள் மற்றவராகிய முடவர் தொடங்கு வதற்கு முன்னே, உடன் நின்ற காளமேகப் புலவர், 'மண் தின்ற பாணமே' என்று பாடி, குறைந்த இருசீர்களையும் பூர்த்தி செய்தார். கேட்டவுடனே முடவர்,*

– தாணுவே
சீராரூர் வாழுஞ்சிவனே சிரிப்பன்றோ
நேராரூர் செற்ற நிலை.

என்று பாடி முடித்தார்.

நெடுங்காலங் கழித்து, காளமேகப் புலவர் திருவானைக்கா வில் வாழ்ந்திருந்து காலஞ் சென்றார். அச்சமயம் அவரைப் பார்க்க வந்த இரட்டைப் புலவர்கள் மிகவும் மனம் வருந்தி 'ஆசு கவியால்' என ஒரு பாடல் தொடங்கி 'மண் தின்ற பாணம்' என்று அவர் அடிநிரப்பிக் கொடுத்த அருமையை அதில் குறிப் பிட்டுப் பாடினார்கள். (காளமேகம் திரு ஆரூரில் இறந்தார் என்று சொல்வதும் உண்டு.)

திருமலைராயனால் ஆதரிக்கப்பட்டு வாழ்ந்திருந்த காள மேகப் புலவர் வாழ்வில், நாகை அதிகத் தொடர்புடையது. நாகையில் வாழ்ந்த வேளாளர் பலர் கூடி, காளமேகம் பாடல் பாடினால் தங்களுக்குச் சிறப்புண்டு எனக் கேள்வியுற்று, அவரை யணுகி ஆயிரம் பொன் ஈந்து தங்கள் உரைச் சிறப்பித்துப் பாடல் பாடும்படி வேண்டினர். புலவர் தாமாகப் பாடினால் பாடுவாரே யன்றிப் பிறர் வேண்டிப் பாடுபவர் அல்லர். ஆகவே, பொருளுக் காகப் பாடச் சொன்னபோது அவர் மிக்க கோபங் கொண்டு, "உள்ளி நாறுவாயரும் உவட்டெடுத்த தலையரும்" என்ற நீண்ட வசைப்பாடல் பாடிவிட்டார். கேட்ட வேளாளர் மனம் சளைக்க வில்லை. மீண்டும் அவரை வேண்டி அவர் மனம் மகிழும் வண்ணம் நடந்து மீளவும் ஆயிரம் பொன் கொடுத்துப் பாடச் செய்தார்கள். மகிழ்ச்சி கொண்ட புலவர் நாகையின் செல்வ வளத்தைப் புகழ்ந்து ஒரு பாடல் பாடினார்.

குடக்கினிற் கலிங்கமும் வடக்கினில் துரங்கமும்
குணக்கினிற் பசும்பொன்னும் குளிர்ந்ததெற்கி லாரமும்
அடைப்பரை உடைக்கவந் தனேகவண்ண மாக வந்து
அஞ்சுவண்ண முந்தழைத்த றத்தின்வண்ண மானவூர்
கடற்கரை குவித்தசந் தனத்தைஇந் தனத்துடன்
கலந்திறைக்கும் மந்தியைக் கனன்றுமுற் கவிக்குலம்
புடைப்பதற் கெழுந்துகை முறுக்கினும் முறுக்குவாய்
புதைத்துமுத்தை விட்டெறிந்து பூகமேறு நாகையே.

இவ்வரலாறு சோழ மண்டல சதகம் 45ஆம் செய்யுளில் கூறப் பட்டுள்ளது.

*காளமேகப் புலவருடைய பூர்வ சரித்திரம் உண்மை என்பதற்கு இரண்டு ஆதாரங்கள் பழைய தமிழ்த் தொகுப்பு நூலாகிய தமிழ் நாவலர் சரிதையிலிருந்து கிடைக்கின்றன. முதலாவது, திருநள்ளாற்றிலிருந்த தெண்டி என்ற ஒரு தாசிக் குக் காளமேகப் புலவர் எழுதிக் கொடுத்த சீட்டுக் கவி:*

நள்ளாற்றுத் தெண்டிக்கு நல்வரதன் தீட்டுமயல்
விள்ளாமல் எத்தனைநாள் வெம்புவேன் – கள்ள
மதனப் பயலொருவன் வந்துபொருஞ் சண்டைக்
குதவக் கடுகிவர வும்.

*இப்பாடலைப் பெற்றுத் தெண்டியானவள் திருநள்ளாற்றில் இருந்து காளமேகம் இருந்த திருக்குடந்தைக்கு வந்தாளென்றும், அவள் வரக் கண்டு இவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தாரென்றும், அந்நூல் தெரிவிக்கிறது. இவர் மனைவி மக்களோடு குடும்ப மாய் வாழ்ந்தார் என்பதைப் பின்னேவரும் 'இந்திரன் கலையாய்' என்ற பாடலில் வருகின்ற அகத்துறு மக்களும் யானும் என்ற தொடரால் அறிகின்றோம். மேலும், அதிமதுர கவிராயன் பாடிய கையறம் என்ற வெண்பா ஒன்று தமிழ் நாவலர் சரிதையில் உள்ளது (222):*

வாசவயல் நந்தி வரதா திசையனைத்தும்
வீசுகவி காள மேகமே – பூசுரனே
விண்தின்ற வெவ் வழலில் வேவதோஜயகோ
மண்தின்ற பாணமென்ற வாய்

*(நந்தி - நந்திபுரம், காளமேகம் பிறந்தவூர்.)*

*காளமேகப் புலவர் இறந்த செய்தி கேட்டு, புலவர் "என் பொருட்டு மண் தின்ற பாணம் என்று பாடிய திருவாய் இவ் வாறு அழலில் வேவதோ?" என்று கேட்கிறார். இது முன்னமே இரட்டையர் பாடியதாகக் குறிப்பிட்டுள்ள "நாணென்றால்" என்ற பாடலைக் குறிப்பிடுகிறது. இப்பாடல் ஒருவர் கேள்வி கேட்டு மற்றவர் விடை கூறும் முறையில் அமைந்துள்ளமையால் இதை இரட்டையர் பாடினார்கள் என்றும் கொள்வதுண்டு. இப்பாடலில் திசை அனைத்தும் கவி வீசுகின்ற காளமேகத்தின் இயற்பெயர் வரதன் என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் வரதன் என்ற பெயரோடு இவர் முதலில் பரிசாரகராக இருந்தார் என்ற வரலாறும் கொள்ளத்தகும்.*

காளமேகப் புலவர் விரைந்து ஆசுகவி பாடியதாலும், யாரையும் பொருட்படுத்தாமல், சிறிதளவும் குற்றம் பொறுக்காமல், பிறரைக் கண்டித்து வந்தமையாலும், வசைக்கவி என்ற பெயரைப் பெற்றுவிட்டார். பின்வரும் பாடல் இதைக் குறிப்பிடும்.

வெண்பாவிற் புகழேந்தி; பரணிக் கோர்
செயங் கொண்டான்; விருத்த மென்னும்
ஒண்பாவிற் குயர் கம்பன்; கோவையுலா
அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்;
கண்பாய கலம்பகத்திற் திரட்டையர்கள்;
வசைபாடக் காள மேகம்;
பண்பாக உயர் சந்தம் படிக்காசு
அலா தொருவர் பகரொ ணாதே.

காளமேகம் என்று தங்களைக் கூறிக்கொள்வதில் பிற்காலப் புலவர் பெருமை கொண்டார்கள். மாறனலங்கார ஆசிரியரைக் குறிப்பிடும்போது ஒரு புலவர் 'தரு காளமேகம் கவிராசராசன் சடையன்' என்பர். சதாவதானி ஆதி சரவணப்பெருமாள் கவிராயர் முத்திருளப்பன் என்ற வள்ளலுக்கு எழுதி விடுத்த சீட்டுக்கவியொன்றில், 'இலக்கண இலக்கியக் கடலை முழுதுங் குடித் தேப்பமிடு காளமேகம் - இனிய கவி அவதானி சரணவப் பெருமாள்' என்று தம்மைக் கூறிக்கொள்கிறார். இருபதாம் நூற்றாண்டில் தென் திருப்பேரையில் வாழ்ந்த அனந்த கிருஷ்ணையங்கார் என்ற புலவர் தம்மை 'அபிநவ காளமேகம்' என்று பெயர் சூட்டிக் கொண்டார். 'காளமேகம் போல வசை பாட யாமும் இக்காசினியில் அவதரித்தோம்' என்று படிக்காசுப் புலவர் ஒரு சீட்டுக் கவியில் தம்மைக் குறிப்பிடுகிறார்.

இவர் பாடிய வசையால் பலர் கேடுற்றார்கள் என்ற கதைகள் உலவுகின்றன. புலவர் புராணமுடையார் இவரைத் திருமலைராயன் அசட்டை செய்தமையால், அவனுடைய நகரம் மண் மாரி பெய்து அழியும்படி இவர் சாபமிட்டார் என்று கூறுவார். தனிப்பாடல்களும் இப்படியே குறிப்பிடும். பின்வரும் இரு பாடல்களையும் இதற்கு மேற்கோள் காட்டுவதுண்டு.

செய்யாத செய்த திருமலைரா யன்வரையில்
அய்யா அரனே அரைநொடியில்–வெய்யதழல்
கண்மாரி யால்மதனைக் கட்டழித்தாற் போல்தீயோர்
மண்மாரி யாலழிய வாட்டு.

> **கோளர் இருக்குமூர் கோள்கரவு கற்றவூர்**
> **காளைகளாய் நின்று கதறுமூர் – நாளையே**
> **விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து**
> **மண்மாரி பெய்க இந்த வான்.**

*திருமலைராயன் காளமேகப் புலவருக்கு மிக்க ஆதரவளித்துப் பெருஞ்சிறப்புச் செய்தான் என்பதே உண்மையான செய்தி. இது முன்னமே விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. முதல் பாட்டில் வரும் 'செய்யாத செய்த' என்ற தொடர் அசட்டை செய்த என்ற பொருள்படாது; 'பிறர் எவருக்கும் செய்யாத பெருஞ்சிறப்பைத் தனக்குச் செய்த' என்றே பொருள்படும். "திருமலைராயன் வரையில்....தீயோர் மண்மாரியில் அழியவிட்டு.... மண்மாரி பெய்க இந்த வான் என்று பாடியுள்ளமையால், இவ்வாறு நடைபெற்ற இடம் திருமலைராயன் இடமன்று, வேறிடம் என்பது தேற்றம். அவனது நகர் அழியப் பாடினார்" என்று ஏற்பட்ட கதை, பாடல்களைச் சரியாய்ப் புரிந்து கொள் ளாமையால் ஏற்பட்ட கதை.*

*பிற்காலத்தில் எங்கு எந்த உற்பாதம் நடந்திருந்தாலும் அது காளமேகப் புலவர் சாபம் என்று சொல்லுகின்ற வழக்க மொன்று தமிழ்நாட்டில் வழங்குகிறது. பசுபதி கோயில் என்ற ஊரில் ரயில் நிலையத்திற்குத் தென்புறமாக விசாலமான பெரிய மண்முட்டுக்கள் காணப்படுகின்றன. கேட்டால் அவ்வூரார், 'இங்கு அரசன் ஆண்ட பெரிய நகரம் ஒன்று இருந்தது; காள மேகப் புலவரை அவமதித்த காரணத்தால் அவருடைய சாபத் தினால் இங்கு மண்மாரி பெய்து அரசனும் நகரும் அழிந்தன' என்று சொல்வார்கள். இப்படிப்பட்ட கதைகள் பல. இவற்றின் உண்மை எவ்வாறு இருந்தபோதிலும், இவை காளமேகப் புலவர் வரலாற்றுக்குப் பொருந்துவன ஆகா. இவை யாவும், வசைக்கவி என்ற பெயரால் பலருக்குக் காளமேகத்திடம் ஏற் பட்டிருந்த அச்சத்தின் விளைவுகளே ஆகும்.*

*காளமேகம் சித்திரக் கவிகள் பாடியிருந்த போதிலும் சிறந்த அருட்கவி என்பதை மறக்கமுடியாது. இவருடைய பாடற் சிறப்பினாலேயே பிற்காலத்தில் பலர் பாடிய பல்வேறு போலிப் பாடல்களும் விரசமான கூற்றுக்களும் இழிவான கதைகளும் இவருடைய வரலாற்றில் புகுந்துகொண்டன. இவற்றை நீக்கிப் பார்க்கும்போது இவர் ஒரு சிறந்த அருட் புலவர் என்று கருதத் தடையில்லை. அன்போடு உபசரித்த இடத்தில் புகழ்ந்துபாடு*

வதும், தம்மைப் புறக்கணித்த இடத்தில் வசைபாடுவதும், இவருக்கு இயல்பு. கடை மடை திறந்த வெள்ளமாக இவர் பாடியதால் இவருக்கு அமைந்திருந்த காளமேகம் என்ற பெயரைப் பிற்காலப் புலவர் அனைவரும் பெருமையோடு வைத்துக் கொண்டமை இவருடைய சிறப்பையே காட்டும். இவருடைய சித்திரக் கவிகளின் நயத்தைச் சொல்லிச் சொல்லித் தமிழ் மக்கள் என்றென்றும் மகிழ்ந்து கொண்டு இருப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

## காளமேகப் புலவர் நூல்கள்

### திரு ஆனைக்கா உலா

பழமையான உலாப் பிரபந்தங்களிலே திரு ஆனைக்கா உலாவும் ஒன்று. சோழநாட்டில் காவேரி நதியின் கரையில் அமைந்த ஆனைக்கா என்ற தலத்தில் எழுந்தருளியுள்ள ஐம்பு நாதர் ஐம்புலிங்கம் என்ற பெயர் பெற்றுள்ள வெண்ணா வலீசர்மீது காளமேகப் புலவர் பாடியது. இதிலுள்ள கண்ணிகள் 461, வெண்பாக்கள் 2.

தலச் சிறப்பு என்ற முதனிலைப் பகுதியில் ஆசிரியர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றார் அனைவருடைய செய்திகளையும் கூறுகிறார். பேதையின் இளம் பருவத்துக்குரிய அறியாத் தன்மையை இவர் மிக்க நயமாகவும் விரிவாகவும் புலப்படுத்தியிருக்கிறார். இலக்கணத்துட்கண்ட தசாங்கத்தை இவர் கூறவில்லை. சிற்றில் (222) பேதைப் பருவத்திலும், பாவை (217 - 225) பேதை பெதும்பைப் பருவங்களிலும் கழங்கு பெதும்பைப் பருவத்திலும், பந்தாடுதல் மங்கைப் பருவத்திலும், யாழ் (316) மடந்தைப் பருவத்திலும், அம்மானை அரிவைப் பருத்திலும், பொழில் விளையாட்டு (428 - 435) பேரிளம்பெண் பருவத்திலும் கூறப் பெற்றுள்ளன.

பெதும்பை கழங்காடுமிடத்து ஒன்று முதல் ஏழு வரையுள்ள எண்களைக் கூறும்போது கயிலை வெற்பெடுத்த வீரன் உடல் சரிய ஊன்றியதால் ஒன்று, ஆனைக்காவிலுறை ஓங்கார மூர்த்தி உருவிரண்டு, கோல மூன்றாக்கி முடிக்கும் திருக்கருமம் மூன்று, எம்மை எழு பிறப்பின் வீழாமற் காத்தெடுக்கும் கரம் நான்கு, மால் பார்காக்கத் தந்த படை ஐந்து, சேவடி சேரத் தவஞ் செய் பண்பினார் வெல்லும் பகை ஆறு, விடங்கர் என இருந்த இடங்கள் ஏழு என்று பாடியிருப்பது அழகுபெற அமைந்துள்ளது.

*இந்த நூல் சிறந்த பக்திச் சுவையைக் கொண்டுள்ளது. இறைவன் திருநாமத்தைக் கூறும்போது, அழகுக்கு ஆரும் ஒவ்வாதான், அனைத்துலகை ஆள்வான், என்னானைக்கன்று, செழுநீர்த்திரள், தேவர் குலக்கொழுந்து, பின்னிரக்கம் செய் வான் முதலான தொடர்களை இவர் எடுத்து அமைத்துப் பாடி யிருப்பது திருமுறைகளில் இவருக்குள்ள தோய்வைக் காட்டு கிறது. அம்பிகையை வடிவுடைய மங்கை என்று கூறுவார். இத் தொடர்கள் அப்பர் தேவாரத்துள் பயில்வன. இறைவன் திரு நாமங்களில் அழகன் என்ற பெயரில் இவருக்கு மிக்க ஈடுபாடு.' வழக்கம்போலத் தலச் சிறப்புக்களும் வரலாறுகளும் இந்நூலில் வரலாறாகவும் புனைந்துரையாகவும் சொல்லப்பட்டுள்ளன.*

*இவ்வுலாவுக்குக் காலத்தால் முற்பட்டவை திருக்கயிலாய ஞானவுலா, ஆளுடைய பிள்ளையார் திருஉலாமாலை, சோழர் மூவர் உலா, தில்லையுலா, இரட்டையர் பாடிய தில்லைத் தெய் விக உலா என்பன. பிற்காலத்தில் தோன்றிய உலாப் பிரபந்தங் கள் எண்ணில. இவற்றின் வரிசையில் இந்த நூலுக்கு மிகவும் சிறப்பான இடமுண்டு.*

*சித்திர மடல்*

*மடல் என்பது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. ஒரு பெண்ணைக் காதலித்த ஆடவன், அவளைத் தான் அடைய முடியாதபோது, பனை மட்டையால் ஒரு குதிரைசெய்து அதன் மீது ஏறி எருக்கமலர் மாலையணிந்து நகர்ப்புறத்து உலா வரவே, அவன் சாதனை கண்டு துணுக்குற்ற ஊரார் அவனுக்கு அப்பெண்ணை மணம்முடித்து வைப்பார் என்பது ஓர் இலக்கிய மரபு. மடல்ஏறுதல் என இது பெயர் பெறும்.*

மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப;
மறுகின் ஆர்க்கவும் படுப;
பிறிதும் ஆகுப, காமம் காழ்க் கொளினே

*என்பது குறுந்தொகைப்பாடல். திருக்குறளும் இம்மரபைக் குறிப்பிடுகின்றது:*

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல் அல்லது இல்லை வலி.

கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

பின்வந்த கோவைப் பிரபந்தங்கள் அனைத்திலும் மடலேறுதல் என்பது ஒரு தனித்துறையாகவே அமைக்கப்பெற்றுள்ளது. ஆடவரே மடல் ஏறுவர் என்பது மரபு. இம்மரபை ஒட்டியே பிரபந்தங்கள் செய்யப்பெறும். திருமங்கையாழ்வார் பெரிய திருமடல் சிறிய திருமடல் என இரு பிரபந்தங்கள் செய்திருக் கிறார்; இரண்டிலும் அவர் தம்மை நாயகியாக்கி, திருமாலைத் தலைவனாக்கிப் பெண் ஆகிய தாம் மடல் ஊர்வதாகப் பாடு கின்றார். மடற் பிரபந்தங்களும் அவற்றின் இலக்கண இலக்கிய மரபும் பின் வந்தவை; இவற்றின் இயல்பு திருமங்கையாழ் வாருக்குப் பொருந்தாது.

சித்திர மடல் வளமடல் என்பன மடற்பிரபந்த வகைகள். (சித்திர மடல் - உலாமடல்) உலாமடல் கனவிற்கண்ட பெண்ணைக் காதலிக்கும் தலைவன், அவளை அடையப்பெறாவிடில் உயிர் விடுவேன் என்னும் கருத்தமையப் பாடுவது; வளமடல், உறுதிப் பொருள் நான்கினுள்ளும் இன்பமே சிறந்தது என்று கூறி, தலை வன் பெயரை எதுகையிலமைத்து, கலிவெண்பாவால் எல்லா அடிகளும் ஒரே எதுகை அமையப் பாடுவது. இச்சித்திரமடலும் திருமங்கை ஆழ்வார் பாடிய மடற்பிரபந்தங்களும் இவ்விரு வகைக்கும் முறையே எடுத்துக்காட்டுக்களாம்.

காளமேகப் புலவர் பாடிய இச்சித்திரமடல், பாவை என்னும் ஊரில் வாழ்ந்த தெய்வங்கள் பெருமாள் (தெய்வச் சிலைத்தாதா) என்ற வள்ளலைப் புகழ்வது. 174 கண்ணிகளும் ஒரு காப்புச் செய்யுளும் உடையது. சித்திரமாக அழகு படப் புதுக் காவியம் புனைந்தமையால் இம்மடல் சித்தரமடல் என்று பெயர் பெற்றது போலும். கிளவித் தலைவன் ஒரு பெண்ணைக் கண்டு காமுற்று, பின் அவளைக் கனவிலே கலந்துகூடி விழித் தெழுந்து, அவளைப் பெறாமல், 'தெய்வங்கள் பெருமாள் என்ற வள்ளலின் நகராகிய பாவைநகர் வீதியிலே மடலேறி ஊர்ந்து அவளைப் பெறுவேன்' என்று கூறுவது இந்நூற்பொருள். பின் னர்த் தோன்றிய மடற்பிரபந்தங்கள் பாட்டுடைத் தலைவன் சிறப்பைப் பலவாக விரித்துத் தசாங்கம் முதலியன கூறும். அக் கூற்றுக்கள் இந்நூலுள் இல்லை.

### பரப்பிரம விளக்கம்

வைணவக் குறிப்பு அடக்கிச் சிவமே பரம்பொருள் என்று நிலைநாட்ட இவர் பாடிய பாடல்களின் தொகுதி. 55 பாடல் உடையது. முதல் பதிப்பு 1861. காஞ்சி இராமலிங்க தேசிகர்.

## சமுத்திர விலாசம்

கடல்விலாசம் என்றும் பெயர் சொல்லுகின்ற ஒரு பிரபந்தம் காளமேகப் புலவர் செய்ததாகச் சொல்லுவர்; அந்நூல் கிடைக்க வில்லை. பிற்காலத்தில் இதே பெயரோடு வேறு நூல்கள் சில செய்யப் பெற்றுள்ளன.

## களவகுப்பு

அருணகிரி நாதர் பாடிய திருவகுப்புக்கள் பதினெட்டுக்கும் மிகையாகப் பின்னும் சில வகுப்புக்கள் அவர் பெயரால் வெளி யாகி உள்ளன. அவை பொதுவாக அவரால் செய்யப்பட்டன வல்ல. அவற்றுள் இதுவொன்று. இது ஒரு நீண்ட சந்தப்பா. "உலகத்தை ஆளும் திரிபுவனேசன் நரபதி வெற்றித் திருமலை ராயன் தரணி வராகன் செயங்கொள் உக்ர களத்தின் வகையே" என்று முடிவது. போர்க்களத்தில் ஒவ்வொரு திரளாகப் பேய்கள் இன்னின்ன செயல்கள் செய்கின்றன என்று பதினான்கு திரள் களைக் கூறுகிறது. செயல்கள் பரணிப்பிரபந்தத்துட் கூறப்படு வதை ஒத்தன. திருமலைராயன் என்ற அரசனை அருணகிரிநாதர் பாடவில்லை என்பது உறுதி. 15ஆம் நூற்றாண்டில் தொடக்கத் தில் வாழ்ந்தவன் சாளுவத் திருமலைராயன். இவனால் போற்றப் பெற்றவர் காளமேகப் புலவர். இலக்கியத்தில் பயின்று வருகின்ற திருமலைராயன் இவன் ஒருவனே ஆதலால், இவனைப் புகழும் இப்பாடலைக் காளமேகப்புலவர் பாடியிருப்பார் என்று நாம் கருத லாம். எனினும், இக்கருத்துக்கு வேறு வகையில் ஆதாரமில்லை.

## காளமேகப் புலவர் காலம்

13ஆம் நூற்றாண்டிலேயே தஞ்சைச் சோழர் ஆட்சி முடிவடைந்து விட்டது. 14ஆம் நூற்றாண்டில் மதுரையை மாலிக்காபூர் என்ற டில்லி ஆட்சியின் முகம்மதியப் படைத் தலைவன் கைப்பற்றிப் பாண்டியர்களை அங்கிருந்து துரத்தி விட்டான். சில நாளில் விசயநகரப் பேரரசின் படைகள் முகம் மதியரை வெருட்டி மதுரையைக் கைப்பற்றின. மல்லிகார்ச்சுன ராயர் (1449 - 1465) விருபாட்சாரயர் (1466 - 1485) என்ற ராயர் குல அரசர் இருவர் காலங்களில் ஓரளவு நாட்டில் அமைதி ஏற் பட்டிருந்தது. இவர்கள் காலத்தில் விசயநகர ஆட்சியின் பிரதி நிதியாகத் தமிழ்நாட்டில் இருந்தவன் சாளுவத் திருமலை ராயன் என்பவன். இவன் பல ஆண்டுகள் இப்பதவியில் புகழோடு விளங்கினான். தமிழில் சிறந்த அறிவுடையவனாகப் புலவர் களால் மதிக்கப்பெற்றான். ஆசுகவி என்று புகழ்பெற்ற காள

மேகம் இவன் அவையை அலங்கரித்தவர். பல புலவர்களை இவன் ஆதரித்தான். காளமேகப் புலவருக்கு முன் இவனுடைய ஆத்தான வித்துவானாக இருந்தவர் அதிமதுர கவிராயர்.

பல பாடல்களில் காளமேகப் புலவர் இத்திருமலை ராயனுடைய பெயரைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார். ஒரு பாடலில் திருமலைராயனுடைய சிறப்பையும் அவன் மரபை யும் அவன் தமக்குச் செய்த பேருபகாரத்தையும் சுவைபடப் பாடியிருக்கிறார்; இப்பாடலில் அட்டதிக்குப் பாலகரையும் நயம் பொருந்தக் குறிப்பிட்டிருப்பது சிறப்பு:

இந்திரன் கலையாய் என்மருங்கிருந்தான்;
    அக்கினி உதரம் விட்டகலான்;
எமனெனைக் கருதான் அரனெனக் கருதி;
    நிருதி வந்தென்னைஎன் செய்வான்;
அந்தமாம் வருணன் இருகண்விட் டகலான்;
    அகத்துறு மக்களும் யானும்
அனில மதாகும் அமுதினைக் கொள்வோம்;
    ஆரெனை உலகினில் ஒப்பார்?
சந்ததம் இந்த வரிசையே பெற்றுத்
    தரித்திர ராசனை வணங்கித்
தலை செயும் என்னை நிலை செய்கல் யாணிச்
    சாளுவத் திருமலை ராயன்
மந்தர புயனாம் கோப்பய னுதவு
    மகிபதி விதரண ராமன்
வாக்கினாற் குபேர னாக்கினான் அவனே
    மாசில் ஈசானன் ஆ வானே.

இப்பாடலால் திருமலைராயன் வரலாறு நமக்குத் தெரிகிறது. இவன் சாளுவ வமிசத்துக் கோப்பயனுடைய புதல்வன்; இவர் களுடைய பூர்வக் குடிப்பெயர் கல்யாணி என்பது; பட்டப்பெயர் விதரண ராமன் என்பது. இவன் இயல் இசை உணர்ந்தவனாய்த் தன் அவைக்கண் தமிழ்க் கவிஞர் பலரை வைத்து ஆதரித்தவன். புலவர் மிக்க வறுமையில் மூழ்கி எந்நேரமும் திக்குப் பாலகர் அறுவர் தம்மொடு உறையப் பெற்றிருந்த நிலையை மாற்றித் தம்மைக் குபேரனாக ஆக்கினான் என்கிறார். அவனை ஈசானன் என்றே மிக்க சமத்காரமாக இப்பாடலில் பாடியிருக்கிறார். திருமலைராயன் புதிதாக அமைத்துக் கொண்டு அரசாண்ட நகரே இன்றைய காரைக்கால் பகுதியிலுள்ள திருமலைராயன்

பட்டினம் என்ற நகரம். தஞ்சை ஜில்லாவில் அரிசிலாற்றுக்கும் முடிகொண்டானாற்றுக்கும் இடையில் ஓடுகின்ற ஆறு திரு மலை ராயன் ஆறு; இது இவனால் வெட்டப்பட்டுக் கடல் வரை செல்கிறது. இவனுடைய கல்வெட்டுக்கள் திருவானைக்கா, தஞ்சாவூர், பாபநாசம்; பட்டீச்சுரம் முதலான ஊர்களில் காணப் படுகின்றன. இந்த ராயனுடைய சாசனம் ஒன்று திருவானைக்கா ஜம்புகேசுவரர் ஆலயத்தின் திருமதிலில் ஸ்ரீமுக வருஷம் சகாப் தம் 1375 இல் பொறிக்கப்பட்டுள்ளது:

"கட்டாரி சாளுவன் கோபராஜாவின் குமாரர் சாளுவத் திருமலை ராஜா நாச்சியார் அகிலாண்ட நாயகியார்க்குப் பதக்கம் பண்ணுவித்து ஸேவை பண்ணினார்." சகாப்தம் 1385இல் ஸ்ரீரங்கம் கோயிலில் அமைந்த கல்வெட்டு ஒன்று 'சாளுவத் திருமலை தேவ மகாராஜா" என்றும் 'சாளுவ கோபதிம்ம ந்ருபதிர் பூயாச்சிரம்' என்றும் கூறுகின்றது. இவ்விரண்டு கல்வெட்டுக் களும் முறையே கி.பி. 1453, 1463 ஆண்டுகளில் ஏற்பட்டவை.

தஞ்சைப் பெரியகோயிலில் இவனுடைய சாசனமொன்று சில ஊர்களை இவன் சர்வ மானியமாக வழங்கிய செய்தியை உணர்த்துகிறது. "சுபமஸ்து சகாப்தம் ஆயிரத்து முந்நூற்று எழு பத்தேழின் மேற் செல்லாநின்ற பவ வருஷத்துக்குச் செல்லும் யுவ வருஷம் சித்திரை மாதம் 17... ஸ்ரீமத் மகா மண்டலேச்சு வரன் மேதினீச்வரன் கண்டகட்டாரி சாளுவத்திருமலை தேவ மகாராசா..." என்று இக்கல்வெட்டு கூறுவதனால், இதில் கண்ட சகம் 1377க்கு நேரான கி.பி. 1455 இவன் ஆட்சி செய்தான் என் பது தெளிவாகின்றது.

முன்கூறிய பாடலில் 'என்னை நிலை செய் கல்யாணிச் சாளுவத் திருமலைராயன் கோப்பயன் உதவு மகிபதி' என்று குறிப்பிட்டுள்ளபடி, சாசனம் செய்த திருமலைராயனே காள மேகத்தால் பாடப்பட்ட புகழ் உடையவன் என்பது திட்டமா கிறது. இத்திருமலைராயர் காலம் கி.பி. 1453 - 1468. இதனால் இதுவே காளமேகப் புலவருடைய காலமும் ஆகும். அதாவது 15ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியாகும். புலவருடைய உடன் காலத்தவனாகிய அதிமதுர கவிராயன் காலமும், புலவருடைய குருவாகிய ஞானவரோதயர் காலமும் சற்று முன்னாகும். அதா வது 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

காளமேகத்தின் இளமையில் இரட்டையர் மிக்க முதியவர் களாயிருந்தார்கள் என்ற செய்தி உண்மையாகலாம். காள

மேகத்தின் புலமையையும் அவர்கள் வியந்து பாராட்டியும் இருத்தல் கூடும். ஆனால் 14ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்த இரட்டையர், 15ஆம் நூற்றாண்டின் முதற்பாதி முடிந்து, இரண்டாம் பாதியின் தொடக்கத்தில் இறந்த காளமேகத்தின் பிரிவுக்கு வருந்திப் பாடினார்கள் என்பது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. ஒருகால் அதிமதுர கவிராயர் பாடினார் என்று சில வரலாறுகள் கூறுவதுபோலக் கருதுவதே பொருத்தமாகும்.

## ஆதிவராக கவி செய்த காதம்பரி

வடமொழியிலிருந்து தமிழில் பல நூல்கள் செய்யப்பெற்றன என்பதை நாம் அறிவோம். தமிழில் எழுந்துள்ள இராமாயணமும், வில்லி பாரதமும், பாகவத புராணங்களும், வடமொழி நூலை மூலமாக வைத்துச் செய்யப்பெற்றவை என்பது உண்மையே; ஆயினும் இராமாயணமும் பாரதமும் ஒரு காலத்திலும் மொழிபெயர்ப்பு என்று சொல்லப்பெற்றதில்லை. சுருங்கச் சொல்லின், தாமே மூலநூல் என்ற சிறப்புக்குரிய தகுதிகள் யாவும் பெற்றுள்ளன என்பது தமிழ் அறிஞர் நன்கு அறிந்தது.

இம்மூன்றும் இதிகாசங்கள் என்று வடமொழியில் பெயர் பெறும். இவை போக, பெரும்பான்மை புராணங்களே இவ்வாறு மொழி பெயர்க்கப்பெற்றன என்பதை அறிகிறோம். காவியங்களாக மொழி பெயர்க்கப்பட்ட பண்டை இலக்கியங்கள் மிகச் சிலவே. வடமொழி நைடதத்தையொட்டித் தமிழில் 13ஆம் நூற்றாண்டில் புகழேந்தியின் நளவெண்பாவும், 16ஆம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியனின் நைடதமும் செய்யப் பெற்றிருந்தன; மொழி பெயர்ப்பாக அல்ல.

குறிப்பிடத்தக்க மற்றொரு காவியம் காதம்பரி என்பது. இது ஹர்ஷ சக்கரவர்த்தியின் சபையில் சிறப்புப் பொருந்திய பெருங்கவிஞராக விளங்கிய பட்டபாணர் என்பவர் வடமொழியில் வசன நடையில் செய்த ஒரு பிரசித்தமான காவியம். கந்தருவப் பெண்ணாகிய காதம்பரி என்பவளை உச்சயினி நகரத்தரசனாகிய சந்திராபீடன் என்பவன் மணம் புரிந்து கொண்ட வரலாறு இதில் மிக்க சுவைபட விரித்துக் கூறப் பெறும். நூல் பூர்வ காதம்பரி, உத்தர காதம்பரி என இரு பகுதியென்றும், முற்பகுதி பட்டபாண கவியாலும் பிற்பகுதி அவர் புதல்வராலும் செய்யப்பட்டன வென்றும் இந்நூல் 12,000 கிரந்தம் கொண்டதென்றும் வடமொழிவாணர் சொல்வர்.

*"காதம்பரீ ரஸக்ஞானம் ஆஹாரோபி நரோசதே" என்ற வடமொழியிலுள்ள பழமொழி (காதம்பரியின் சுவையறிந்தவர்களுக்கு ஆகாரம் கூடச் சுவைப்பதில்லை) இந்நூலின் சுவையில் முந்தையோர் எவ்வளவு ஈடுபட்டார்கள் என்பதை விளக்கிக் காட்டுகிறது. உலகம் முழுமையுமே பாணனுடைய எச்சில் என்று பொருள் படுகின்றதாகிய 'பணோச்சிஷ்டம் ஜகத் சர்வம்' என்ற பழமொழியும் பாணருக்கிருந்த புலமைச் சிறப்பை உணர்த்தும்.*

*இவ்வளவு சிறந்த காவியம் தமிழில் செய்யுளாக மொழி பெயர்க்கப் பெற்றிருக்கிறதென்று பாலசரசுவதி என்ற பட்டம் பெற்ற சிறந்த பண்டிதராகிய பி.ஆர். கிருஷ்ணமாசாரியர் செந்தமிழ்த் தொகுதி 5, பகுதி 10இல் (1907) ஒரு கட்டுரை எழுதியிருந்தார். பின்னர் அவருடைய பார்வையிலேயே நூல் 1912 இல் அச்சாகி வெளியாயிற்று.* இதன் பாடல் தொகை பாயிரம் 14, நூல் 1218 பாடல்:*

அருளாளன் அளித்தருள் ஆதிவராகன் நீதிப்
பொருளா கரன்பின் னவன் பொன்னி நாடன் ஒன்றின்
மருளா மறையாழ் பொருளோர்ந்திவண் வாழ வந்தோன்
தெருளா கரன்இக் கதை செந்தமி ழாகச் செய்தான் **11**

*என்ற பாடல் ஆசிரியர் பெயர் தெரிவிக்கிறது. இதனால் இவர் பெயர் ஆதிவராக கவி; இவர் அருளாளர் என்ற அந்தணரின் புதல்வர்; பொருளாகரன் என்பவருக்குப் பின்னவர் என்று சொல்வர். பொன்னி நாடன் என்றமையால் இவர் சோழ நாட்டினர் என்று அறிகிறோம். 10ஆம் பாடல் இவர் காவிரியார் கோமான் என்று கூறுகிறது:*

அருங்கலி யுகத்து நாலா யிரத்தைந்நூற் றாறிரண்டு
திருந்திய வருடந் தன்னில் சிறந்தகா விரியார் கோமான்
தருந்தரு அனையான் ஆபத் தம்பசூத் திரத்து நல்லோர்
விரும்பிய பாரத் துவாச கோத்திரம் விளங்க வந்தோன்.

---

* *வெளியிட்டவர் ஸ்ரீரங்கம் வக்கீல் ஜே. கிருஷ்ணயங்கார் என்பவர். மூலத்தோடு அவர் இக் கிருஷ்ணமாசாரியரையும் ஸ்ரீரங்கம் தமிழ்ப் பண்டிதர் குரு சுப்பிரமணிய ஐயரையும் கொண்டு 188 பக்கம் கொண்ட விரிவான வசனமும், 17 பக்கம் கொண்ட அரும்பதவுரையும் எழுதுவித்துச் சேர்த்து மிகவும் அழகான பெருநூலாக அச்சிட்டார். ஆனால் பின்னர் ஏற்பட்ட ஒரு பூசல் காரணமாக அச்சிட்ட புத்தகம் அத்தனையும் கொளுத்தி விட்டார்கள் என்று அறிகிறோம்.*

*இதனால் இவர் பாரத்துவாச கோத்திரம் ஆபத்தம்ப சூத்திரத்துக்குரிய அந்தண மரபினர் என்று அறிகிறோம். நூல் செய்த காலம் கலி. 4512; கி.பி. 1411 ஆகிறது. பாயிரம் 6,7 பாடல்களால் பாண்டி நாட்டுச் சுந்தராபுரியில் வாழ்ந்த அமரர் கோமான் தேவன் என்பவர் விருப்பப்படி இப்புலவர் காதம்பரியை மொழி பெயர்த்துத் தமிழ்ச் செய்யுளாகச் செய்தார் என்று அறிகிறோம். அமரர் கோமான் சுந்தராபுரி வாழ்தேவன் (7), கருணையன் அமரர் கோமான் (9), சுந்தரை வாழ் தேவர்நாயன் (125), சேம நிதியாம் அமரர்கோன் தேவன் (1218) என்ற தொடர்களால் இவ் வள்ளல் பெயர் தேவநாதன் என்றிருக்கலாமென்று தெரிகிறது.*

*ஆசிரியர் வடமொழி வல்ல தமிழ்வாணராயினும் தம் நூலைச் சுருக்கமாகவே பாடியிருக்கிறார்:*

பாற்கடல் சென்ற பூசை பாலின் மேல் ஆசை வைத்து
மேற்கொள வரினும் எல்லா வெள்ளமும் கொள்ள வற்றோ
பாற்கடல் அனைய காதம் பரிக்கடற் பரப்பில் ஆசை
மேற்கொளும் என்றன் நெஞ்சும் வேண்டுவ கொள்ளும் அன்றே.

*என்ற பாடல் காண்க. இவர் திருமால் வழிபாட்டோடு நூலைத் தொடங்குகிறார்.*

பொன்கொண்ட நேமிப் புயல்பூமகள் புல்லி வாழும்
மின்கொண்ட மார்பன் எழுபார் சதுவேதனோடு
முன்கண்ட நாபி முதன் மூவகை மூர்த்தி யான
வென்கண்ட கோமான் இருபாதம் இறைஞ்சலுற்றேன்.

*இதனாலும் நூலின் கண் உள்ள வேறு சில குறிப்புக்களாலும் ஆசிரியர் வைணவராயிருக்கலாமென்று தெரிகிறது. எனினும், இவர் சிவபிரானுக்கும் கலைமகளுக்கும் விநாயகர் முருகருக்கும் முறையாக வணக்கம் கூறும்போது, இவர் சமயக்காழ்ப்பில்லாத வைணவர் என்று அறிகிறோம்.*

*சிவபிரான்*

சொல்லும் பொருளும் கனியும் சுவையும் சுடரும்
எல்லும் சசியும் நிசியும் இயலும் இசையும்
ஒல்லும் உடலும் உயிரும்மென நாளும் ஒன்றிச்
சொல்லும் பரசத்தி சிவன்தனைச் சிந்தை செய்வாம்.

*கலைமகள்*

முன்னான் முகன் நாவி லிருந்து மொழிந்து வேதம்
தன்னால் உலகம் தழைப்பித்தருள் தையல் துய்ய
நன்னாமம் எந்நாளும் நவின்று நவின்று வாழும்
என்நா வுளதாக எனக்கரிதாய துண்டே.

*விநாயகர்*

செங்கோல மேனிச் சிவனார்திரு மைந்த னெங்கள்
பங்கோன் முராரி மருகன் கடம்பற்கு முன்னோன்
வெங்கோப வேழ முகவன் வினை வேரறுக்கும்
எங்கோனடி சேர்பவர் இந்திரன் என்ன வாழ்வோர்.

*முருகன்*

மஞ்சுண்ட கோல மயிலுண்டயில் வேலு முண்டு
துஞ்சுண் டினிநான் மறலிக்குயிர் தோற்ப துண்டே
நஞ்சுண்ட நாதர் மகனார் திரு நாம முண்டு
நெஞ்சுண்டு பாட நினைவுண்டதி நேய முண்டே.

*நூல் முழுமையும் எளிய பாடல்களால் செய்யப் பெற்றிருக்கிறது; சந்தப் பாடல்கள் பல. முதல் 904 பாடல்கள் பூர்வ காதம்பரி; எஞ்சியன உத்தர காதம்பரி. இப்பாகுபாடன்றி வேறு எவ்விதப் படலப் பிரிவும் நூலினுள் காணப்பெறவில்லை.*

## *இராமாயண வெண்பா*

*வெண்பா யாப்பில் காப்பியம் செய்து புகழேந்தி காட்டிய புதுவழியில் சென்றார் பலர். பின்னர் ஒருவரைக் குறிப்பிடுவோம். மற்றொருவர் இராமாயண வெண்பா பாடினாரென அறிகிறோம். சென்னை அரசாங்கக் கையெழுத்துப் புத்தக சாலையிலுள்ள பல திரட்டு என்ற சுவடியிற் கண்ட செய்யுட்களிலே இராமாயண வெண்பா என்ற தலைப்பின் கீழ் நான்கு செய்யுட்கள் காணப்படுகின்றன:*

சனகன் மொழிகேட்டுத் தவமுனிவன் சொன்னான்
தினகரனார் தெய்வக் குலத்தோன் – மனமகிழ
வந்தசிறுச் சேவகனை மன்னா அறியீரோ
இந்தவகை என்நினைந்தீர் என்று.

தயரதனும் புத்திரரும் தாமரையோன் பெற்ற
நயமுனியும் தானையுடன் நண்ணச் – சுயமுடைய
கோதமன்தன் புத்திரனைக் கொண்டு மிதிலேசன்
ஏதமிலான் வந்தா னெதிர்.

வசிட்டனும் கோசிகனும் மன்னவருங் கூடி
விசித்திரமா மங்கலச்சொல் விண்டு – சசிக்கு நிகர்
மாமுகத்துச் சீதைக்கும் வாழும் உருமிளைக்கும்
மாமுகுர்த்த மிட்டார் மகிழ்ந்து.

சூரியனார் வம்சத் துதித்த தயரதனாம்
ஆரியனை இங்கே அழைமினென்றான் – ழூரி
வளைக்குலங்கள் முன்றில்தொறு மாமுத்த மீன்று
திளைக்கும் மிதிலையர் கோன் தேர்ந்து.

*இவை நான்கும் தொடர்ந்த பாடல்கள் அல்ல. திரட்டி வைத்தவை போலும். வீரசோழிய உரையிலும் இராமாயண வெண்பாப் பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.*

மன்னன் நசரதற்கு வாய்த்த மருமகளாய்
மன்னன் சனகன் மகளாகி – மன்னனிரா
மன்றார மாகியபொன் மாதகன்நாண் மீண்டெய்தாள்
என்நலார் துன்புறா ரீங்கு.

மற்றிவனை மாலென் றறிந்தாலங் வாளரக்கண்
பெற்றி கருதுவதென் பேதையர்காள் – மற்றிவன்றன்
கண்டான் கடைசிவத்தற் குண்டோ கடலிலங்கை
வண்ணா ரரக்கன் வலி.

ஐயிருப தோசனையு மாங்கோ ரிடமின்றிக்
கைபரந்த சேனைக் கடாலொலிப்பத் – தையல்
வழிவந் திராமன் வடகரையா னென்றான்
விழிவந்து வேறாக மீட்டு.

*இவற்றால், வெண்பா யாப்பிலமைந்த இராமாயண வெண்பாவொன்று இருந்ததென அறிகிறோம். இதன் காலம் 15ஆம் நூற்றாண்டாகலாம். நூல் கிடைக்கவில்லை. மு. ராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி, பக்கம் 19 பார்க்க.*

## *அரிச்சந்திர வெண்பா*

*நல்லூர் வீரை - ஆசு கவிராசர் பாடிய அரிச்சந்திர புராணம் என்னும் அரிச்சந்திர சரித்திரம் தமிழ் மக்கள் நன்கறிந்த ஒரு இதிகாசக் கிளைக்கதை; 1838இல் வெளிவந்த இதன் முதற் பதிப்பு அரிச்சந்திர சரித்திரம் என்றே கூறும். ஆக்கியோன் பெயர் முதலியன கூறுகின்ற புராணத்தின் இரு விருத்தங்கள் இங்கு கருதத்தக்கன. (பாயிரம் 13, 14):*

தண் கவிகைக் குரிசிலரிச் சந்திரன்தன்
சரிதமதைத் தாரணியோர் விருப்ப மெய்த
வண்கவிஞர் வகைவகையே வகுத்து ரைத்த
வடமொழியும் தென்மொழியில் வழுவி லாத
வெண்கவியும் கண்டரங்கில் மாதர் ஆடல்
விதங்கேட்டு மழைஎனவே வெருண்டு சோலைக்
கண்கவிகள் குதிபாயும் நல்லூர் வீரை
கவிராச னேவிருத்தக் கவிசெய் தானே.

விதியினர சிழந்த அரிச் சந்தி ரன்தன்
வியன்கதையாம் வெண்கவியை விருத்தமாக்கி
அதிவிதமாம் கலியுகத்தில் வருச காத்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேல் மண்ட பத்துள்
கதிதருசீர் நல்லூர்வாழ் வீரை ஆசு
கவிராசன் கவியரங்கம் ஏற்றி னானே.

*இதனால் நாம் பெறுவது, வீரை ஆசுகவிராசர் என்பவர் சகம் 1446ஆம் ஆண்டில், வடமொழியில் பல நூல்களில் சொல் லப்பட்ட அரிச்சந்திர சரிதத்தையும் தென் மொழியில் அவன் சரிதம் கூறும் (வெண்கவியை) வெண்பா நூலையும் ஆய்ந்து விருத்தப்பாவினால் புதுநூல் செய்து திருப்புல்லாணித் திருமால் முன்னே சக்கரதீர்த்தக்கரை மேல்மண்டபத்துள் அரங்கேற்றி னார் என்பதாகும். இதில் குறித்த ஆண்டு சகம் 1446-கி.பி. 1524. எனவே, இதற்கு முன்னர் அரிச்சந்திரன் சரிதம் கூறும் வெண்பா நூலொன்று இருந்தது என்பது தெளிவாகிறது.*

*அரிச்சந்திர வெண்பா எனப் பெயர்பெறும் இந்நூலானது, மலையாள நாட்டில் கிடைத்த ஓர் ஏடு கொண்டு, மு. ராகவையங்கார் அவர்களால் நன்கு பரிசோதித்துத் திருவிதாங்கூர் சர்வகலாசாலையாரால் 1949இல் வெளியிடப்பெற்றது. கிடைத்த ஏட்டில் தொடக்கப் பகுதியும் முடிவும் பகுதியும் பழுதுற்றிருந்தன. அரிச்சந்திரன் பிறப்பு, இளமை, சந்திரமதி வரலாறு கேட்டுக் கன்னோசி நாட்டுக்கு அவன் புறப்படுதல், வழியில் அவன் பார்வைபட்ட துர்க்கை கோயில் முன் நின்றிருந்த கல் தேரும் யானையும் முதலியன தமது முந்தைய சாபம் நீங்கப்பெற்றுத் தம் பண்டைய உருவடைதல் வரையில் இங்கு இல்லை. பின்னுள்ள பகுதிகள் சுயம்வரம், சலம்வரு காண்டம், யாகம், மிருக யாத்திரை, விசுவாமித்திரப் பிரவேசம், இராச்சியதானம், காசி யாத்திரை என்ற 7 காண்டங்கள். இவற்றின் பின், அரிச்சந்திரன் தன் மனைவியையும் மகனையும் விற்றுத் தானும் அடிமை யாகியது முதலுள்ள பகுதிகள் சிதிலமாயின. இடையிடையே சிற்சில பகுதிகளும் பொடிந்து போயுள்ளன.*

*கிடைக்கும் பகுதி மட்டும் 304 வெண்பாக்கள் கொண்டது. நூலின் இடையில் உரைப்பகுதிகள் நிரம்ப உள்ளன. எனவே, இது பெருந்தேவனார் பாரதம், சீவசம்போதனை என்ற நூல்கள் போல, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகும்; இவ்வகை இலக்கியத்தை வடநூலார் சம்பு காவியமென்பர். தகடூர் யாத்திரையும் இத்தகையதொரு நூலேயாகும். பாரத வெண்பாவிளுள் உரைப்பகுதி குறைவு. இந்நூலிலும் சீவசம்போதனையிலும் உரைப்பகுதி அதிகம். இங்கு ஒவ்வொரு வெண்பாவை யடுத்தும் உரைநடை அமைந்துள்ளது. வெண்பாக்கள் நல்ல ஓசை நயமும் சொல்வளமும் பொருள் வளமும் கொண்டவை. உரைநடையே கதையின் தொடர்ச்சியைக்கூறி நடத்திச் செல்கிறது; சிலப்பதிகாரத்துள் உரைப்பாட்டு மடையையும் அரசர் மெய்க்கீர்த்தியையும் ஒத்த நடையுடையது. அருந்துதி, நெதி, மனித்தர், தார் (தா - என்னேவல்) போன்ற பழஞ்சொற்கள் இதனுள் காணப்படுவதால், இந்நூல் காலத்தால் பழையதென்பதும் வீரை ஆசுகவிராசருக்கு முதனூலாயமைந்தது இதுவேயாகலாம் என்பதும் ஐயங்காரவர்கள் குறிப்பு.*

*குறித்த நாளில் பொருளைக் கொடாவிடில் இன்ன நிலை அடைவேனாக என்று அரிச்சந்திரன் கூறும் சூளுரை (239)*

தந்ததாய் சொல் மறுத்தாரும்
　　தங்குலத்தைப் பேணாதாரும்
வெந்திறல்அரசர் களத்துடைய
　　விட்டுமீண்ட பெரும்பாவியும்
சாமவேதம் பழித்தாரும்
　　சகாயவோரம் பண்ணினாரும்
(காம) மேவிக் கன்னியரைக்
　　கட்டழித்த பெரும்பாவியும்
பஞ்சமா பாதகரும்
　　பரநாரியை உகந்தாரும்
தஞ்சமில்லாக் கடுஞ்சொல்லரும்
　　தன்மாகிதம் பண்ணினாரும்
எடுத்தகோயில் இடித்தாரும்
　　இழித்தகுளம் உடைத்தாரும்
அடுத்தவரைக் கெடுத்தாரும்
　　ஆவினைச்சென் றுதைத்தாரும்
குருவாக்கியம் மீறினாரும்
　　கோப்பிராமணரைப் பிழைத்தாரும்
ஒருவார்த்தை மொழியாதாரும்
　　உதையராசியிற் புணர்ந்தாரும்
புகுதும்நர கிடைப்புகுவன்
　　பொருள்தன்னை நீகொடுத்த
பகுதிதன்னில் கொடெனெனில்...

*206 ஆவது பாடல் நீதிநூல் போல:*

சத்தியம் என்றும் தவறாதிரு
　　கன்மநெறி இகழாதிரு
தெய்வத்தையும் பிராமணரையும்
　　சீர் குருவையும் மறவாதிரு
மைவைத்த கண்ணியர்க்காய்ப்
　　பிறர் மனையை வழுவாதொழி
நன்றி என்றும் மறவாதிரு
　　நம்பினரைக் கெடாதொழி.

*என்று உபதேசிக்க வேண்டியவர் குரு என்கிறது.*

*இந்நூலில் வரும் உரைப்பட்டுப் பகுதிக்குப் பின்வருவது எடுத்துக்காட்டாகும்:*

பாதார விந்தத்தே பரிபுரங்கள் கிடந்தரற்றச்
சூதாகும் இடை என்று தோழிமார் அருகுவரப்
பல்லியங்கள் புறம்பரற்றப் பனிமொழியார்க் கருள்கொடுப்ப
வல்லியும் சுயம்வர மண்டபத்தே வந்தேறி
மணியரைத்து மயனிட்ட .........
..............................
சித்திரமாகிய மண்டபத்துள் திருக்கழுத்துத் தோன்ற நிற்றலும்
உத்தமரிற் பிரதானரரான வேந்தனும் உற்று நோக்கி
யாது கண்டானோ எனில்:

*ஆசிரியர்*

*இந்நூலாசிரியர் கதையைச் சில இடங்களில் விரித்தும் சில இடங்களில் சுருக்கியும் கூறுகிறார். வேறுபாடுகளும் உள்ளன. வட நூல்களையொட்டி இவ்வாறு செய்தார் போலும். இதுவே கவியரசர் பாடிய புராணத்துக்குத் தமிழ் முதல் நூலாயிருந்திருக் கலாமென்று கொள்ளத் தடையில்லை.*

*நூல் முழுமையும் இராமையால், ஆசிரியர் வரலாறு புலப்பட்டிலது. இவர் ஒவ்வொரு காண்டத் தொடக்கத்திலும் விநாயக வணக்கம் கூறியிருத்தலால், சைவ சமயத்தினர் என்பது தெளிவாய்த் தெரிகிறது:*

நண்ணித் தொழுமனனே நாடோறும் நாடோறும்
எண்ணும் கருமமெலாம் ஈடேறும் – தண்ணார்
தவளநிறத் தந்தச் சரிவயிற்று நால்வாய்ப்
பவளநிறத் தந்தி பதம்

*என்ற பாடல் (107) காண்க. விசுவாமித்திரர் தவத்தைக் குறிப் பிட்ட இடத்தில், சிவபெருமானையும் ஐந்தெழுத்தையும் இவர் குறிப்பிடுகிறார்; இவற்றாலும் இதை நன்கு தெளியலாம்:*

காமமதம் கோபம் கடிந்தஞ்சு மோதியே
தாமரையின் ஆசனத்தே தானிருந்து – நாமச்
சிவன்தனக்கா யானிருந்து செய்தவத்தே பாதி
அவன்தனக்கா கென்றான் அவன்.

**சொற்கள்:**

*வேட்டை நாய்களுக்குப் பெயர் வைத்தழைக்கிறார். இது இலக்கிய உலகில் மிக்க அருமை. கந்தன் - மகன் - நெல் - மாடு - சிலம்பு - பள்ளு - சாதிகளை அடுக்கிக் கூறும். குழைபிடித்தல் -*

காரியத்தைத் தடை செய்தல். உரைநடைப்பகுதி வெண்பாவில் பொழிப்புரையாக உள்ளதேயன்றி இதில் வேறு புதுப்பொருள் இல்லை. குலத்தனவேயாகும் குணம் என்ற மூதுரைப்பாடல் வரியை இவர் சொல்கிறார். பொருள் தேடுவதற்காகக் காசி ராஜ்யத்தைத் தேர்ந்து கொள்ளும்போது அதன் சிறப்புக்களைக் கூறியிருப்பது சிறப்பு. பல கதைப் போக்குகள் வாதங்கள் புதுமை. விசுவாமித்திரன் அனுப்பிய இரு மகளிரை அரிச்சந்திரன் ஐம் புலன்களில் மெய் ஒன்று தவிர மற்ற யாவையும் அவர்களிடம் அனுபவித்துவிட்டான் என்று காட்டுதல் நன்றாயிருக்கிறது.

நூலில் மலையாளச் சொல் வழக்குகள் மிக அதிகமான மையாலும், திருவனந்தபுரம் அரண்மனையில் ஏடு கிடைத் தமையாலும் ஆசிரியர் நாஞ்சில் நாட்டவர் எனக் கருதலாம். வேறு எக்குறிப்பும் இவர் பற்றித் தெரிந்திலது.

காலம்

இந்நூலின் வெண்பா ஓசை, நளவெண்பாவை ஒட்டியது. புகழேந்தி நூல் செய்தபின் அனேகர் அவருடைய வெண்பா யாப்பைப் பின்பற்றி நூல் செய்தனர். அவ்வாறு செய்யப் பெற்ற வற்றுள் சீவசம்போதனை என்ற சைன சமய நூல் ஒன்று. இவ் வரிச்சந்திர வெண்பா நூல் மற்றொன்றாகும். நளன் போன்ற மற்றோர் இதிகாச அரசன் வரலாற்றை இது விரித்துக் கூறுவ தாகும். ஆசுகவிராசரின் காலமாகிய 16ம் நூற்றாண்டுக்கு முற் பட்டதெனவே, இதை 15ஆம் நூற்றாண்டுக்குரியதென்று கொள் ளல் பொருந்துவதாகும்.

## புறத்திரட்டு

இது சங்க நூல்கள் தொடங்கிக் கம்பராமாயணம் இறுதி யாக உள்ள நூல்களில் முப்பது நூல்களினின்றும் திரட்டிய 1570 பாடல்களைக் கொண்டது. இதைத் தொகுத்தார் பெயர் முதலியன ஒன்றும் இன்று அறிதற்கில்லை.

இத்திரட்டை நாம் நோக்கும்போது ஒவ்வொரு காலத்தி லும் பாடல்களை அவரவர் மனங்கொண்ட நெறிபற்றித் தேர்ந் தெடுத்துத் தொகுக்கும் முயற்சி வந்திருப்பது நன்கு புலனாகிறது. பன்னிருபடலம் என்ற இறந்துபோன பண்டைய இலக்கண நூல், பலர் செய்த பகுதிகளின் தொகுப்பு என்ற வரலாறு உண்டு.

அதுபோலவே, சற்றுப் பின்வந்த பாட்டியல் இலக்கண நூலாகிய பன்னிருபாட்டியல் என்பது, பண்டைய பாட்டியலாசிரியர் பலர் செய்த இலக்கண நூல்களிலிருந்து தொகுத்த சூத்திரங்களை, தொடர்பான பொருளமைதியை வைத்துத் தொகுத்துக் கூறுவது. இதன்மூலம் பாட்டியல் நூல்கள் இன்று கிடைக்கவில்லை. இவ் விரண்டும் இலக்கணத்துறையில் எழுந்த தொகை நூல்களாகும்.

இலக்கியத்துறையில் பார்க்கும்போது, சங்க இலக்கியங்கள் என்று வழங்கும் நூல்கள் யாவுமே தொகை நூல்களாய் உள்ளன.

பத்துப்பாட்டே ஒரு தொகை நூலல்லவா? `அது பலர் பல்வேறு சமயங்களில் பாடிய பத்து நெடும் பாட்டுக்களைக் கொண்டது. ஏனைய எட்டுத்தொகை நூல்களும் அடிவரை யறை, யாப்பு, எண், பொருள், திணைப்பாகுபாடு, அகம், புறம் என்ற பொருட்பாகுபாடு என்னும் பல்வேறு நெறிகள் ஆகிய வரையறைகளுக்குள் தொகுக்கப்பெற்ற எட்டுத் திரட்டுக்களே யாகும். இவையாவும் தனிப் பாடல்களையோ தொகுதிப் பாடல் களையோ சேர்த்துக் கோத்தவை.

அங்ஙனமன்றி, புறத்திரட்டானது, அன்றுவரை வழக் கிலிருந்த பல்வேறு நூல்களிலுள்ள சில பாடல்களைப் பொருட் சிறப்புக் கருதித் தேர்ந்தெடுத்துத் தொகுக்கப்பெற்ற நூலாகும். தொகுத்தவர் தம் தொகுப்பைத் திருக்குறளின் பால் அதிகாரப் பாகுபாடு பற்றி அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பனவாக முப்பாலாகப் பிரித்துக்கொண்டார். (காமத்துப் பால் மட்டும் **புறத்திரட்டு** ஏடுகளில் காணப்படாமல், **புறத் திரட்டுச் சுருக்கம்** என்ற ஏட்டுப் பிரதியில் மாத்திரமே காணப் படுவது). பிரித்தவர் பெரும்பான்மை திருக்குறள் அதிகாரத் தலைப்புக்களையே தம் நூலுக்கும் அமைத்தார். அமைத்து, திருக்குறளின் அதிகாரங்களில் அடங்காத பல புறப்பொருள் களையும் தனித்த அதிகாரங்களாய்ச் சேர்த்திருக்கிறார். நிரை கோடல், நிரை மீட்சி, பகைவயிற் சேறல், பாசறை, வஞ்சினம், படைச் செருக்கு, எயில்காத்தல், குதிரை மறம், மூதின் மறம், நகர், திறை, களம், வென்றி என்பன சில உதாரணங்கள். அறத்துப்பால் 45 அதிகாரங்களும் 473 செய்யுட்களும் உடையது. பொருட்பால் 86 அதிகாரங்களும் 1032 பாடல்களும் உடையது. காமத்துப்பால் கைக்கிளை ஒன்றே பற்றி 65 செய்யுட்களை உடையது; ஆக மொத்தம் 1570 பாடல்கள். காமத்துப்பால்

செய்யுட்கள் யாவும் முத்தொள்ளாயிரப் பாடல்கள். இவை பாட்டுடைத் தலைவனையே கிளவித் தலைவனாகக் கொண்டுள் ளமையால், புறப்பொருட் கைக்கிளை என்று பொருளிலக்கண நூல்களிற் கூறப்பெறும்.

| | குறள் | புறத்திரட்டு |
|---|---|---|
| அறம் | 38 | 45 |
| பொருள் | 70 | 63 |
| | 108 | 108 |
| போர் | - | 23 |
| காமம் | 25 | 1 |
| | 133 | 132 |

புறத்திரட்டினால் தமிழிலக்கியத்துக்கு விளைந்திருக்கும் நன்மைகள் மிகப்பல. இத்திரட்டாசிரியர் ஒவ்வொரு பாடலும் இன்னநூலில் உள்ளது என்று குறிப்பிட்டிருக்கிறார். இக்குறிப் புக்களால் இன்று பெயர் மட்டும் அறிந்தனவும் அறியாதனவும் ஆகிய பல நூற்பாடல்களை நாம் அறிய முடிந்திருக்கிறது. இந் நூல்களையும் பாடல்களையும் வேறு வகையால் நாம் இன்று அறிய இயலவில்லை. அவ்வாறு இறந்துபோன நூல்களில் இத் திரட்டால் நாம் அறிய வருவன பின்வருவனவாகும்: ஆசிரிய மாலை, இரும்பல் காஞ்சி, சாந்தி புராணம், தகடூர் யாத்திரை, நாரத சரிதை, பெரும்பொருள் விளக்கம், முத்தொள்ளாயிரம், குண்டலகேசி, வளையாபதி, பாரதம்.

ஐம்பெருங் காப்பியங்களில் இறந்துபோன இரண்டான குண்டலகேசி வளையாபதிப் பாடல்கள் முறையே 19, 66 பாடல்கள். சிறுபஞ்சமூலம், பதிற்றுப்பத்து, பாரத வெண்பா ஆகியவற்றில் முன்னமே பல பாடல்கள் இறந்து போயின. இவற்றுள் இத்திரட்டு முறையே 3, 2, 33 பாடல்களைத் தருகிறது. பரிபாடலில் இறந்துபோன பாடல்களிலிருந்து 6 உறுப்புக்களைத் தருகிறது. வேறு வழியில் யாதும் அறியப் பெறாத நூற்பாடல் களையும் எடுத்துத் தருகின்றது. ஆசிரிய மாலை 16; இரும்பல் காஞ்சி 3; சாந்தி புராணம் 9; தகடூர் யாத்திரை 44; நாரத சரிதை 8; பெரும்பொருள் விளக்கம் 41; முத்தொள்ளாயிரம் 109.

இது திரட்டியுள்ள பிற நூல்கள் பதினெண்கீழ்க் கணக்கில் ஆசாரக்கோவை முதலான 10 நூல்கள்; எட்டுத் தொகையுள் புறநானூறு; சிந்தாமணி, சூளாமணி, அறநெறிச்சாரம்; கம்ப ராமாயணம் 27; மேருமந்தர புராணம்; யாப்பருங்கலவுரை மேற்கோள் பாடல் 2; புறப்பொருள் வெண்பாமாலை 75; பழமொழியிலும் நாலடியிலும் மிகுதியான பாடல்கள்; முறையே 319, 212. இவ்வளவு அதிகமான பாடல்கள் கொண்ட திரட்டில் 13 பாடல்களே மூலம் விளங்காதன; ஒருகால் இன்னும் அதிகமான ஏடுகள் கிடைத்து ஆராய்ந்தால், எதிலாவது இவற்றுக்குரிய நூற்பெயர் காணப்படலாம்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பல திருத்தமான பாடம் இல்லாதவை; இத்திரட்டானது நல்ல பாடம் கொண்டுள்ளமையால், பழைய பாடங்கள் திருத்தவும் இத்திரட்டு உதவியிருக்கிறது. டாக்டர் சாமிநாதையரவர்கள் "இது எனக்குக் கண்ணைக் கொடுத்த நூல்" என்று கூறியிருப்பதனால் இதனுடைய அருமையை உணரலாம்.

பிற்காலத்தே இப்புறத்திரட்டுக்கும் ஒரு சுருக்கம் ஏற்பட்டது. இதனுள் அறம் 195, பொருள் 418, ஆக 613 செய்யுட்களே உள்ளன. பின்னர் காமத்துப்பால் முத்தொள்ளாயிரச் செய்யுட்கள் 65; திருக்குறட்பாக்கள் 99 சேர்க்கப்பட்டுள்ளன. இவையன்றி, திருநெல்வேலிச் சீமையை யாண்ட வடமலையப்பப் பிள்ளையனுக்குப் பின்வந்த திருமலைக் கொழுந்துப் பிள்ளையன் மீது பாடப்பெற்ற திருமலைக் கொழுந்து வெண்பா என்ற நீதிநூற் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இப்பிள்ளையன் காலம் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி (1663 - 82); ஆதலால் புறத்திரட்டுச் **சுருக்கம்** இதன் பின்னர்த் தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டும்.

இப்புறத்திரட்டுச் சுருக்கம் கற்றோருக்கும் பிரசங்கம் செய்தோருக்கும் உதவும் கையேடு போல் இருந்து உதவினமையால், இதற்குப் **பிரசங்காபரணம்** எனவும் ஒரு பெயர் வழங்கியிருந்தது.

புறத்திரட்டின் பதிப்பாளர் வையாபுரிப்பிள்ளையவர்கள் இந்நூல் 15ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் தொகுக்கப் பெற்றிருக்கும் என்று முடிவு செய்திருக்கிறார்கள். புறத்திரட்டுச் சுருக்கம் இருவகை. ஒன்று திருமலைக்கொழுந்து வெண்பா

உடையது; காலம் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி; மற்றது, இப்பாடல்கள் இல்லாதது, சற்று முந்தியதாய் இருக்கலாம். இவ்வாறு ஒரு சுருக்கம் ஏற்படும் அவசியம் தோன்றியதென்றால் மூலத்திரட்டு நன்கு பிரசாரம் எய்தியிருக்க வேண்டும். இவ்வாறு எய்துவதற்கு இருநூறு ஆண்டுகளேனும் ஆதல் நூல் இயல்பு. ஆதலால் புறத்திரட்டின் காலம் இதற்கு இருநூறு ஆண்டு களுக்கு முற்பட்ட காலமாகிய 15ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்பது அவர்கள் கருத்து. இக்கருத்தை வேறு இருவகையாலும் வலியுறுத்த முடியும்.

ஒன்று மேருமந்தர புராணத்தின் காலம். இப்புராணப் பாடல் ஒன்று திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. புராணத்தின் காலம் கி.பி. 1388க்கு முன் பின்னாக இருக்கலாம் என்று குறிப்பிட்டிருக் கிறோம். ஆதலால் இதிலிருந்து ஒரு பாடலை கி.பி. 1400-50இல் ஏற்பட்ட ஒரு திரட்டில் தொகுத்துக் கொள்வது இயல்பே.

இனி அக்காலக் கல்வி நிலை, முந்திய நூற்றாண்டுகளில் அருட் பாசுரங்களும் நீதி நூல்களும் பேரிலக்கியங்களும் கட லெனப் பெருகியிருந்தன. கல்விமான்களாயுள்ளோர் தம்தம் நெறிபற்றி இவற்றில் ஒரு சிறு திரட்டு இருந்தால் தினந்தோறும் பயிலவும் பாராயணம் செய்யவும் உதவும் என்று கருதினர். மூவர் பாடிய தேவாரங்களான 8266 பாடல்களையும் யாரும் தினந்தோறும் பாராயணம் செய்தல் இயலாது; இதற்கொரு சுருக்க நூல் வேண்டுமென்ற ஆவல் எல்லோருக்கும் இருந்தது. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சைவ சமய சந்தான ஆசாரியரான உமாபதி சிவாசாரியர் தாம் பாடிய சித்தாந்த சாத்திரமாகிய திருவருட் பயன் பத்து அதிகாரங்களின் தலைப்புக் களுக்குப் பொருந்துமாறு மூவர் தேவாரங்களிலிருந்து மட்டும் 99 பாடல்களைத் திரட்டி அதே தலைப்புக்களில் அமைத்தருளி னார். அதே நூற்றாண்டின் இறுதியில் சோழ நாட்டில் வாழ்ந்த சிவாலய முனிவர் என்பவர் நாள்தோறும் தேவார முழுமையும் பாராயணஞ்செய்ய இயலாமையை முறையிட்டு, பொதிகையில் வாழ்ந்த முனிவர் ஒருவரால் 25 பதிகங்கள் மட்டும் திரட்டிக் கொடுக்கப்பெற்றார், அது அகத்தியர் தேவாரத்திரட்டு என்ற பெயரால் வழங்குகிறது என்றும் நாம் அறிவோம்.

அடுத்த நூற்றாண்டாகிய 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த வேதாந்தியாகிய தத்துவராய சுவாமிகள், தம் வேதாந்தக்

கொள்கையை நிறுவுவதற்காகப் பண்டைய சமய சாத்திரங்களிலிருந்தும் தேவாரங்களிலிருந்தும் பெருந்திரட்டு குறுந்திரட்டு என்ற இரு நூல்களைத் தொகுத்தார். முந்திய இரு தொகுப்புக்களும் **தோத்திரங்களாய்** இருக்க, இவை **சாத்திரத்** தொகுப்புக்கள் ஆயின.

இவ்விரு வகைகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் தோன்றிய **இலக்கியத்** தொகுப்பே புறத்திரட்டாகும். இது, நீதியையும் ஏனைய புறப்பொருளையும் அகப்பொருளையும் கருத்திற் கொண்டு தொகுக்கப் பெற்றதாகும். தமிழ் மொழியின் சிறப்பான சுவையும் ஆற்றலும் இத்தொகுப்பெங்கும் தேங்கித் ததும்புவதைக் காணலாம். நல்லறிவு ஊட்டுவதையும், சிறப்பாகக் கவிதை உணர்ச்சி ஊட்டுவதையுமே இத்திரட்டு நோக்கமாய்க் கொண்டுள்ளது. தமிழ்க் கருத்துக்களின் வியாபகத்தை இதன் மூலம் நாம் நன்கு காண்கிறோம். அதனோடு தமிழ் நூற்பெருக்கம் எவ்வளவு இருந்தது, எத்துணை அரும்பெரும் இலக்கியச் செல்வங்களை நாம் இழந்து விட்டோம் என்பதையும் இது நமக்கு உணர்த்துகிறது.



அத்தியாயம் 3

# இலக்கண ஆசிரியர்

## முன்னுரை

பதினைந்தாம் நூற்றாண்டில் சிறப்பான எந்த இலக்கண நூலும் எழுதப் பெற்றதாகத் தெரியவில்லை. ஒருவகையில், பண்டைய மரபையொட்டித் தமிழ் இலக்கணநூல் எழுதும் தொடர்பு சென்ற நூற்றாண்டோடு நின்றுவிட்டது போலும். இனிப் பிந்திய நூற்றாண்டுகளில் வரும் இலக்கண நூல்கள் பொதுவாகப் பிற நாடுகளின் தொடர்பும், பிற மதங்கள், மக்களின் தொடர்பும் ஏற்பட்ட பின்னரே, அத்தொடர்பின் விளைவாய், எழுந்தன என்று தெரிகிறது.

நிகண்டுத்துறையில் திவாகரம் முதற்கொண்டு நூல்கள் வளர்ந்து வந்திருக்கின்றன. பிற துறைகளில் நூல்கள் அருகி யிருந்த போதிலும், இத்துறையில் மட்டும் நூல்கள் பல்வேறு யாப்பிலும் அமைதியிலும் காலம்தோறும் பெருகி வந்திருக் கின்றன. நிகண்டுகள், சிறப்பாக, நூல் செய்வோருக்கே பயன் படுவன; மனப்பாடமாகவே இருந்து வந்துள்ளன. அந்தாதித் தொடையிலும் செய்யப்பட்டு வந்தன. இவ்வாறு வந்தவற்றுள், பொருளாலும், அமைப்பாலும் சிறப்புப் பொருந்திய கயாதர நிகண்டு என்பது இந்த நூற்றாண்டில் தோன்றிற்று. நிகண்டு செய்தோர் பொதுவாக வேறு இலக்கியம் செய்ததாக வழக்கு இல்லை. எனினும், இந்த நூற்றாண்டில் கயாதரரும், அடுத்த நூற்றாண்டில் ரேவண சித்தரும், நிகண்டுடன் கூட வேறு நூல் களும் செய்திருந்தார்கள்.

நூற்பாவில் அமைந்த உவமான சங்கிரக நூலொன்று இந்த நூற்றாண்டில் எழுந்ததென்று கருதுகிறோம். இது பற்றிய குறிப்பையும் இனிக் காண்போம்.

சிறப்பான இலக்கண நூல்கள் பலவற்றுக்கு இக்காலத்தே உரைகள் எழுந்தன. அவற்றை அடுத்த அத்தியாயத்துள் காணலாம்.

## கயாதரர்

கயாதர நிகண்டு செய்த ஆசிரியர் கயாதரர். இவர் தேவை என்ற பெயருடைய இராமேச்சுரத்தில் அந்தணர் மரபில் காசியப கோத்திரத்தில் பிறந்தவர். சிறந்த சிவபக்தர். இந்நிகண்டுகள் தமது கல்வி கேள்வியையும் சிவபத்தியையும் பல இடங்களில் புலப்படுத்துகிறார். இவர் பெயர் கயாகரர் எனவும் நிகண்டு கயாகர நிகண்டு எனவும் ஏடுகளில் காணப்படுகிறது; கயாதரம் என்பதே திருத்தமான சொல்லாட்சி.

இவர் பாடிய கயாதர நிகண்டானது, "காரிகை ஏறும் ஒரு நூலும் பெண்ணும் கலித்துறையுமாகும்" (412) என்று கூறுகிறது. ஒரு நூல் என்பது யாப்பருங்கலக் காரிகை. எனவே, இந்நிகண்டு யாப்பருங்கலக் காரிகையின் காலமாகிய 11ஆம் நூற்றாண்டுக்குப் பின் தோன்றியதாகிறது. அன்றியும், கி.பி. 1575இல் எழுதப்பட்ட மாறனலங்கார வுரையானது, கயாதர நிகண்டைச் சூடாமணி நிகண்டுக்கு முற்பட்டதாக வைத்துக் கணக்கிடுகிறது. சூடாமணி நிகண்டு 16ஆம் நூற்றாண்டின் தொடக்கம். அக்காலத்தில் கயாதரத்துக்குப் புலவர் உலகில் சிறப்பான அங்கீகாரம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகவே அக்காலத்துக்கு ஒரு நூற்றாண்டாவது முன்னதாகக் கயாதர நிகண்டு செய்யப் பெற்றது என்று நாம் கொண்டால், இதன் காலம் உத்தேசம் கி.பி. 1450 ஆகும் என்பது அந்நூற்பதிப்பாளரான வையாபுரிப் பிள்ளை கருத்து.

உரிச்சொல் நிகண்டு (14நூ.) பற்றிய குறிப்பில் சொல்லிய நூலியற்றல் மரபுக்கும் (நூற்பா, வெண்பா, கலித்துறை, விருத்தம் என்ற வரிசைமுறை) இக்காலவரையறை பொருந்துவதாயுள்ளது.

நிகண்டில் பல தொகுதிகளின் இறுதிப்பாட்டில் கயாதரர் தம்மைப்பற்றிச் சில செய்திகளைச் சொல்கிறார். (பாடல்கள் 2, 4, 147, 187, 223, 243, 285, 403, 566.) இவற்றால் இவர் வரலாறு நமக்குச் சிறிது புலப்படுகிறது. தம்மை இவர் குறிப்பிடும் பாடல்களில் தமிழ்ச்சுவையும் பக்திச்சுவையும் மிகுந்து காணப்படுகின்றன. இடபகேதனன் பற்று மறவாத தேவைக் கயாதரன் (2), கிளர்ந்த பெரும் புகழ்ச் சோமீசன் தேவைக் கயாதரன் (3), மங்கை

தன் பங்கன் மலரடிக்கீழ்க் கிடக்கும் தனி நெஞ்சுடையோன் (4), வாரிய கேள்வி மறையவர் வேந்தன் வடகலைதேர் ஆரியநாடன் தமிழ் நாடன் தேவை அதிபன் (147), மறைபயில் நாவினன் என்றும், செழுந்தமிழ் நூல் கேட்ட செவியினன் கேளா அறிவன் (187), காசிப கோத்திரம் வாழவந்தோன், தென்கலைத் தமிழ்தேர் மாசில் பெருந்தகை மாறா அறிவன் மலரயனும் - கேசவனும் புகழ் தேவை நன்னாடன் (223) என்றும் தம்மைக் கூறுவார்.

கயாதர நிகண்டு செய்த கயாதரர் திவாகரர் புதல்வர்; என்றும் இந்நிகண்டு வழங்கவில்லை என்றும் சிறப்புப் பெயரக ராதி கூறும். கயாதரர் திவாகரருடைய புதல்வராகார் என்பது மேற்காட்டிய காலவரையறைகளால் நன்கு விளங்கும் (திவா கரர் காலம் 9ஆம் நூற்றாண்டு என்பர்; கயாதரர் 15ஆம் நூற்றாண்டு.)

இவர் செய்தனவாகத் தெரியும் நூல்கள் மூன்று.

### கயாதர நிகண்டு

திவாகரம் பிங்கலந்தை போல இதுவும் ஆசிரியன் பெயராற் பெயர் பெற்றது. பதினொரு தொகுதிகளையும் 566 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களையும் கொண்டது. பாயிரம், தெய்வப் பெயர், இடம், மக்கள், விலங்கு, மரம், பல்பொருள், செயற்கை வடிவு, பண்பு, செயல், ஒலி என்ற பெயர்கள் பற்றிய பத்துத் தொகுதிகளும், ஒருசொற் பல்பொருளியலும் உடையது. நூல் முழுமையும் அந்தாதித் தொடையாலானது. புலவராயுள்ளோர் மனப்பாடம் செய்து வைத்திருக்க எளிதாயுள்ளது. நிகண்டு வரிசையில் மிகவும் பழமையான நூல்களில் இதுவுமொன்று.

கயாதர நிகண்டு பொருளமைப்பில் பெரும்பாலும் திவாகரத்தைப் பின்பற்றி அமைந்துள்ளது. திவாகரத்துக்குத் திருத்தமான பதிப்பு இதுவரை வெளிவரவில்லை. இதில் பிழை யாயுள்ள பல இடங்களில் சொற்களின் திருத்தமான வடிவம் காணக் கயாதரப் பாடல்கள் உதவுகின்றன.

நிகண்டு என்ற நூலானது 16ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலம் வரையில் உரிச் சொற்பனுவல் என்றே வழங்கி வந்தது. இவ்வாசிரியரும் தம் நூலை உரிச்சொல் என்றே குறிப்பிடு கிறார் (பாயிரம் 2-4, 566).

### இராமீச்சுரக் கோவை, தேவையந்தாதி

இவ்விரண்டு நூல்களையும் தாம் செய்ததாக நிகண்டில் (402, 566) கூறுகிறார்.

> மேவும் அரும்பொருள் அந்தாதி கேட்டிந்த மேதினியோர்
> தாவும் வினைகெடச் சாற்றிய தென்தமிழ்த்தேவை மன்னும்
> கோவை இராமீச் சுரக்கோவை சொன்ன குருபரன்.

> அரும்பொருள் அந்தாதி சூடிய சீதரன் அம்பிகையைத்
> தரும்பொருள் செய்த பராபரை யான்தினம் தண்டமிழோர்
> விரும்பிய கோவை உரிச்சொற் பனுவல் விரித்துரைத்தான்.

இவ் ஈரிடங்களில் அரும்பொருள் அந்தாதி என்றே கூறுகிறார். அந்தாதியும் கோவையும் இன்று கிடைக்கவில்லை; நூற்பெயரே அரும்பொருள் அந்தாதி போலும்; இதுவும் ஒரு வகையான நிகண்டுத் தொகுப்போ என்று எண்ணத் தோன்றுகிறது.

### பதிப்பு

கயாதரம்: ச. வையாபுரிப்பிள்ளை; சென்னை சர்வகலா சாலை 1939.

## உவமான சங்கிரகம்

தொல்காப்பியம் கூறும் தமிழ் இலக்கணத்துள் மூன்றாம் பகுதியான பொருளதிகார இயல்கள் பிற்காலத்தில் தனிப்பிரிவு களாக வளர்ந்தன. செய்யுளியலின் ஒரு பகுதி பாட்டியலாக விரிந்தது. அங்ஙனமே, இதனோடு நெருங்கிய தொடர்புடைய உவமவியற் கருத்துக்களின் ஒரு பகுதி 'உவமான சங்கிரகம்' என்ற நூலாக வளர்ந்தது. உவமம் நான்கு வகையாகத் தொல்காப்பியம் கூறும். ஆனால் உவமான சங்கிரகம் இவற்றைக் கருதாது, பெண் களின் அங்க வருணனைக்கான உவமைகளை மட்டும் தொகுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. 13ஆம் நூற்றாண்டின் பின் பிரபந் தங்கள் பெருகலாயின. உலா தூது மடல் போன்ற பிரபந்தங்கள் விரிந்தன. உலா ஏழு பருவ மகளிரை வருணிப்பது; தூது, தலைவி தூது அனுப்புவதாக அமைந்தது; மடல், தலைவியின் பொருட்டுத் தலைவன் மடல் ஏறுவதாகக் கூறுவது. இவை அனைத்திலும் பெண்களின் அங்க வருணனை முக்கிய பகுதி, பெரிய பகுதி: எனவே, இவ்வகைக் கவிதைகளை இயற்றுவோருக்கு உதவி

யாக உவமைகளை நினைவில் வைத்துச் செய்யுள் இயற்ற உதவும் பொருட்டு, உவமானம் மட்டும் உரைக்கும் உவமான சங்கிரகம் என்ற பெயரில் பல நூல்கள் செய்யப்பெற்றன போலும்.

உவமான சங்கிரகம் என்ற பெயரால் மூன்று சிறு நூல்கள் உள்ளன. இவை முறையே நூற்பா, வெண்பா, விருத்தப்பா வினால் ஆனவை. காலம் 15, 17, 18 நூற்றாண்டுகள். நாம் இங்கு கருதுவது முதல் நூல் ஒன்றுமே. இதன் ஆசிரியர் வரலாறு தெரியவில்லை. இது 31 பாக்களும் 117 வரிகளும் உடையது; பாதாதிகேச முறையில் உவமை கூறும். பாதாதிகேசம் கேசாதி பாதம் என்று இறைவனை வருணிக்கும் முறைகள் நாலாயிரப் பிரபந்தத்திலும் திருவிசைப்பாவிலும் காணப்படும். இந்நூலில் உள்ளங்கால் தொடங்கிக் கூந்தல் முடிய, பெரும்பான்மை அடைமொழி இன்றியே உவமைகள் கூறப்பெற்றுள்ளன. நூலின் இறுதியில் பெண்களுக்குரிய சில பொது உவமைகளும் சொல் லப் பெறுகின்றன.

ஆண்பால் பெண்பால் பிள்ளைத்தமிழ் கூறுமிடத்து உவமை கூறுகிறது. ஆண்: பொங்குகதிர், இளம்பிறை, புலியின் சிறுபறழ், குஞ்சரக்குழவி, கோளரிக்குருளை, அடலிளவிடை. பெண்: மானின் கன்று, மயிலின் பிள்ளை, தேறல், கரும்பின் இளமுளை, கல்லாக்கிள்ளை, இளந்தளிர், வல்லி போன்றவை.

பின்வந்த இரு நூல்களும் இதனினும் சற்றே பொருள் வளர்ச்சி பெற்றவை. இரத்தினச் சுருக்கம் என்ற ஒரு சிறு நூலும் உவமை கூறும் நூல்; புகழேந்தி செய்தார் என்றே பலரும் இதை அச்சிட்ட போதிலும், இதன் காலம் 16-17 நூற்றாண்டு என்று புலப்படுவதால் இது புகழேந்தி செய்ததன்று.



அத்தியாயம் 4

# உரையாசிரியர்

## முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில், பண்டைய இலக்கிய இலக்கண உரைகளுக்குச் சிறப்பான இடம் உண்டு. களவியல் என்ற அகப் பொருள் இலக்கண நூலை இறையனார் (சிவபெருமானே) செய்தாரென்றும், அதற்கு நக்கீரர் உரை வகுத்தார் என்றும் பண்டைய வரலாறுகள் கூறும். நக்கீரர் உரை, வாய்மொழி யாகப் பல தலைமுறைகள் பயிலப்பெற்று, பின்னர் ஏட்டில் எழுதப்பெற்றது என்று அறிகிறோம். மேலும், காலத்தால் பழமை வாய்ந்தன பெரும்பகுதி இலக்கண உரைகளே. இவ்வாறு அமைதல் இயல்பே. இலக்கணம் கூறிய ஆசிரியர், நூற்பாவால் பொது உண்மைகளைக் கூறினார். அவரிடம் பயின்ற மாணாக் கரும் அவர் வழிக் கற்று வந்தோருமே ஆசிரியர் கருத்தையும் அவர் கூறும் இலக்கணம் பொருந்துமாற்றையும் உணர முடியும். மாணாக்கர் பலர் தாம் கேட்ட உரைகளை எழுதி வைத்தார்கள். சிலர் தம் கல்விப்பெருக்கால் நுனித்துணர்ந்து புதிய உரைகளை யும் எழுதினார்கள். தொல்காப்பிய உரைகள் யாவும் புதிதாய் உணர்ந்து எழுதப்பெற்ற உரைகளே. யாப்பருங்கல விருத்தியுரை, ஆசிரியரிடம் கற்ற மாணாக்கர் கற்றறிந்து எழுதிய உரை. இவ் வாறு கற்று அறிந்தெழுதிய உரைகள் அபூர்வம்.

இனி, இங்கு நாம் கருதும் காலப் பகுதியில், இலக்கண வுரைகளே மிகுதி. இவை தொல்காப்பிய உரைகள், நேமி நாத வுரை, புறப்பொருள் வெண்பாமாலையுரை என்பன. இக்காலப் பகுதியில் பரிதியார் திருக்குறள் உரை எழுதினார் போலும். இவர் பரிமேலழகருக்கு முற்பட்டவர் என்று கருதுமாறு,

பரிமேலழகருரைச் சிறப்புப்பாயிரம் இருந்த போதிலும், பிற் பட்டவராகக் கருதுவதற்கே நியாயம் உள்ளது.

தக்கயாகப்பரணிக்கு இக்காலப் பகுதியில் ஒரு பெருங் கல்வியாளர் உரை எழுதினார். தமிழில் உள்ள மிக்க நயமான உரைகளில் இதுவுமொன்று.

மேற்கூறிய இலக்கண இலக்கிய உரைகளை இவ்வத்தி யாயத்துள் ஆராய்வோம்.

## பரிதியார்

திருக்குறளுக்கு உரை எழுதினோர் பதின்மர் என்று பழம் பாடலொன்று தெரிவிக்கும்:

> தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
> பரிதி பரிமே லழகர் – திருமலையர்
> மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்கு
> எல்லையுரை கண்டார் இவர்.

இவருள் பரிப்பெருமாள் என்ற பெயர் கவிப்பெருமாள் எனவும் வழங்குவதுண்டு. தொண்டை மண்டல சதகம் 41ஆம் பாடல் வள்ளல் சிலைப் பெருமாள் நச்சர் சாத்தர் வழுதி முதலானோர் உரையை வென்றவர் பரிமேலழகர் என்று கூறுகின்றது. இங்ஙன மாக, திருக்குறளுக்கு உரை செய்தோர் பலர் என்று அறிகிறோம். இப்பலர் உரையுள்ளும் பாட்டில் உள்ள வரிசை முறையில் மணக்குடவர், பரிதி, பரிமேலழகர், பரிப்பெருமாள், காளிங்கர் என்ற ஐவருரைகளே அச்சாகியுள்ளன. இவற்றுள்ளும் இடை யிடையே சிறு பகுதிகள் கிடைக்காமலுள்ளன.

இவ்வைவர் உரைகளின் காலத்தை ஒரு வகையாகப் பின்வருமாறு வரையறை செய்வது பொருந்தும். மணக்குடவர் கி.பி. 950 - 1050; பரிப் பெருமாள் 1000 - 1100; காளிங்கர் 1100 - 1200 பரிமேலழகர் 1250 - 1300; பரிதியார் 1450. இவர்களுள் நாம் கருதும் காலப்பகுதிக்கு உரியவர் பரிதியார்.

பரிதி - சூரியன். இச்சொல் பருதி எனவும் வழங்கும். பரிதி நியமம் என்ற ஊரில் இவர் தோன்றினார், ஆகவே இப்பெயர் பெற்றார் என்றும் சொல்வதுண்டு. இவர் சைவ சமயத்தவர். இதைப் பாடல் தோறும் புலப்படுத்தி இருக்கிறார். (சைவவுரை என்றும் பெயர் உண்டு போலும்) பின்வரும் எடுத்துக்

காட்டுக்களைக் காண்க: சிவன் சீபாதம் - குறள் 2, 3; மும்மல வித்தானது சிவகீர்த்தி பாராட்டுவானிடத்து இல்லை 4; தர்ம மென்னும் சமுத்திரமாகவுள்ள பரமேசுவரன் 8; உலகத்தை ரட்சிக்கின்ற பரமேசுவரன் 388; பிறவியாகிய சமுத்திரத்தை நீந்துவர் சிவனடி சேர்ந்தார் 10; சிவபுண்ணியம் பசு புண்ணியம்296; புலன்களைத் துறந்து பயனென்னாம் சிவஞானம் அறியாவிடில் 354; தத்துவம் 96-310; இவை போல்வன பல.

இவர் உரையில் வட சொற்களும் வடமொழித் தொடர்களும் மிக்க அதிகமாய்க் காணப்படுகின்றன. ஆத்துமா, ஆதித்த கிரணம், உதராக்கினி, உதாசினம், இராச சூரியன், காமியம், சத்திய வாக்கிய சுத்தம், சர்வர் (அனைவர்) சங்கீத லட்சணம், சுகசீவி, சற்புருஷர், சத்துரு மித்துரு, ஞானஞேயம், தசதானம், தாதா, தீபாக்கினி, திரிவித கரணங்கள், துர்ச்சனர், சொர்ண தானம், தோஷபரிகாரம், நவதாது, நாஸ்தி, பதார்த்த வேள்வி, பரிபாலனம், மாஹந்த காலம், மனக்கிலேசம், ரிஷபம், வங்கிஷம், வேஷ தாரி, ஸ்திரீ பர்த்தா என்பன சில.

இவர் தமக்கென்று சில சொல்லாட்சிகளைக் கொண்டிருக்கிறார். வேறு யாரிடத்தும் இவ்வளவு அதிகமான ஆட்சிகளைக் காண இயலாது; அவை - ஆஸ்தானம் என்றே சொல்வார். துன்பம் எல்லா இடங்களிலும் விதனம் என்றே எழுதுவார். ஊக்கம் - விகாரம்; முயற்சி - உத்தியோகம்; வலி - சத்துவம்; தூது - தானாபதி; உணவு - அசனம்; இரப்பவன் - தேகி என்பவன்; கரப்பவன் - நாஸ்தி என்பவன்; கொடுப்பவன் - தாதா. இன்னும் சில சொல் விசேடங்கள்: தலை - சிகாமணி, காசு - அரைக் கழஞ்சு, அரங்கு - களரி.

மரூஉ மொழிகள்: கடிச்சு, கழிஞ்சு, ஆச்சு, போச்சு, பிறத்தியிலே.

உரையுள் கண்ணகி, நந்திகேசுவரர், மார்க்கண்டேயர் கதைகளைக் குறிப்பிடுகிறார். நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் - நோய் செய்யார் நோயின்மை வேண்டுபவர் - (320) என்ற குறளுக்கு விளக்கமாக, ஒரு பிரமராக்கதன் ஓர் அரச குமாரியைப் பற்றி ஆற்றின் கரையில் நின்றபோது வந்த அந்தணச் சிறுவன் இக்குறளை மனப்பாடம் பண்ணக்கேட்டு மீண்டும் மானிட வடிவோடு அச்சிறுவனிடம் இக்குறளைக் கேட்டுப் பொருள் உணர்ந்து வருந்தி அரச குமாரியை விட்டு நீங்கினான் என்ற கதையைச் சொல்கிறார்.

இவர் உரை எவ்விடத்துமே தனித்துச் செல்லும் இயல் புடையது. குன்றன்னார் - மேருகிரி ஒத்த பெரியோர் (898). பொறை ஒருங்குமேல் வருங்கால் - நாட்டாண்மைக்காரருக்குச் சேதம் வந்தால் (733). நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் - நெருப் பினுள்ளும் நித்திரை செய்யலாம், அக்கினித்தம்பம் பண்ணி (1049). மருந்தென வேண்டாவாம் என்ற குறள் 942: செரித்தால் சாமம் பார்த்து அசனம் இரண்டு கூறும் தண்ணீர் ஒரு கூறும் வாயு சஞ்சரிக்க ஒரு கூறும், வாதபித்த சிலேட்டுமத்திற்கு வேண்டாக் கறியை விட்டு அசனம் பண்ணக் கடவன். மாதர் முகம்போல் தேய்தலற்று மறுவற்று விரசப் பார்வை அற்புதப் பார்வை உண்டாகில் (1118). கோட்டுப் பூ - பிற உரையாளர் பக்கப்பூ ஒப்பனைப் பூ என்று கூறியிருக்க, இவர் செண்பகப் பூ பாதிரிப் பூ புன்னைப் பூ என்று கூறுவர் (1313). பயன்படுமரம் - மா பலா, பனை (216). குறி எதிர்ப்பை - வட்டி. அருளாதான் செய்யும் அறம் குழந்தை கையில் மாணிக்கம் போல்வது (249). மாலூராகிய வைகுண்ட பதம் (397). கல்வி என்ற அதிகாரத்தின் அவதாரிகை: ஆசாற்கு மனுசாஸ்திரம் மந்திர சாஸ்திரம் தொண் ணூற்றெட்டாயுதக் கல்வி வேணும். ஊருணி - வானேரி (215).

பிறவா நெறியாகிய முத்தி என்றே பலவிடத்தும் எழுதுவார். திருமகள் என்று குறிப்பிட வேண்டிய எல்லா இடங்களிலும் லஷ்மி என்றே கூறுவார். தவ்வையைச் சேட்டை, சேஷ்டா தேவி என்பர். வாக்கினிற் குற்றம் நாலு (119), எல்லா விளக்கும் என்பதன் பொருள் (299), மருந்து - வியாதி கொண்டவர், பண்டிதர், மருந்து, பரிகாரம் பண்ணுவார்-ஒவ்வொருவருக்கும் நந்நான்கு குணம் (950), கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று (1101) என்ப தன் விளக்கம். ஊடியிருந்தே மாத்தும்மினார் என்ற விடத்து (1312) நாயகி தன் மங்கல நாணைத்தொட்டு வாழ்த்தினாள் எனல். காமக்கணிச்சி (1251) என்ற பாடலின் உரை: பயிர்ப்பாகிய வீட்டில் அச்சம் என்னும் நிலையில் மடம் என்னும் கதவில் இட்ட நாணம் என்னும் தாளை வெட்டும் காமமாகிய மழு.

இவ்வாறு எல்லா வகையால் ஆராய்ந்தாலும், பரிதியார் உரை மிகவும் புதுமையாயுள்ளது. நடை, பொருள் கோள், உரை எழுதும் முறை, எடுத்துக் காட்டுக்கள், நயங்கள் யாவுமே புதுமை. இவற்றால் இவர் முந்தைய உரைகாரர் மரபில் வந்தவரல்லர் என்பது தெளிவு. அன்றியும் இவருரையைப் பிறர் எவரும் பார்த்த வருமல்லர். பல குறட்பாக்களுக்கு இவர் கருத்துரை கூறியும் செல்வார். 659 - பிறர் அழக் கொண்ட பொருள் தன்னையும்

அழப்பண்ணிப்போம்; இழந்தாலும் பின்னே வந்து கைகூடும் நீதியால் தேடும் பொருள்; என்பதனால் நல்வினையால் பொருள் தேடுவான் என்றவாறு. 660 - அநீதியினால் தேடும் பொருள் தன்னையும் கெடுத்துத் தானும் போம், எப்படி என்றால் பச்சை மண் பாத்திரத்தில் வார்த்த தண்ணீரும் பாத்திரமும் கெட்டாற் போல. 1035 - தாங்கள் ஓரிடத்திலும் இரவார். இரப்பவர்க்கும் கரவாது கொடுப்பர். ஆதலால் உழவே நன்று என்றவாறு. 129 - தீயினாற் சுட்டபுண் உள்ளே ஆறி மேலே வடுவாய் நிற்கும். நாவினால் சுட்டபுண் மேலே ஆறி உள்ளே வடுவாய் நிற்கும்.

பெரும்பாலும் இவர் பதவுரையோ பொழிப்புரையோ கூறாமல் பாடலின் கருத்தை மட்டும் சொல்லிக் கொண்டு போவார். ஓரளவுக்கு குறளின் கருத்தை மட்டும் அறிந்து கொள் வதற்கு இவர் உரை உதவும்.

**காலம்**

சில குறிப்புக்களைக் கொண்டு இவர் காலத்தை ஒரு வகை யாக அறுதியிட முடிகிறது. பரிமேலழகர் உரைச் சிறப்புப் பாயிரமானது, குறளுக்கு முன்னமே ஒன்பது பேர் உரை செய் திருந்தும் பொருள் விளக்கமுறாமையால் சிறப்பாக விழுப் பொருள் தோன்ற உரைத்தார் பரிமேலழகர் என்று கூறுகிறது. "முப்பாலுக்கு ஒருரையின்றி ஒன்பது சென்றும், ஐயுறலாக நையுறு காலை, வள்ளுவன் மீளவும் வந்து... உரைத்தனன் என்ன, விழுப்பொருள் தோன்ற விரித்தின்று உரைத்தனன்...... பரிமேலழகன்" இதனால் பரிமேலழகரையும் சேர்த்துப் பதின்மர் திருக்குறளுக்கு உரை செய்தார் என்று ஏற்படுகிறது. இப்பதின்மர் பெயரைத் தொடக்கத்தில் கூறிய தருமர் மணக்குடவர் என்ற வெண்பா உரைக்கிறது. இவ்விரு கூற்றுக்களாலும் பரிதியார் அவ் ஒன்பதின்மருள் ஒருவர், பரிமேலழகருக்கு முற்பட்டவர் என்று கருதத் தோன்றுகிறது.

பரிமேலழகர் உரைச் சிறப்புப் பாயிரம் அவர் காலத்திலோ சற்றுப் பிற்பட்டோ செய்யப்பட்டிருந்தாலும் கூட, தருமர் மணக்குடவர் என்ற வெண்பா மிகவும் பிற்பட்டே எழுந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. ஒன்பதின்மர் என்று சிறப்புப் பாயிரம் கூறியதால், பின்வந்தோர் ஒருவர், தாம் அறிந்த ஒன்பது உரைகாரர் பெயரையும் ஒரு சேரப் பாடி விட்டார் என்றே நாம் கருத வேண்டும். இவ்வொன்பதின்மருள், மணக்குடவர் பரிப் பெருமாள் காளிங்கர் என்ற மூவரும் பரிமேலழகருக்கு முற்

பட்டோர் என்று திட்டமாய்த் தெரிகிறது. தருமர், தாமத்தர், நச்சர், திருமலையார், மல்லர் என்பார் உரைகள் கிடைத்தில. கிடைத்தால் ஒருவேளை பிறிதோர் உரையும் கிடைத்தல் கூடும். கிடைக்கும்போது, அவ்வுரையே பரிமேலழகருக்கு முந்தியது, பரிதியார் உரையன்று என்பதுஉம், இப்பாடல் குறிப்பிடும் ஒன்ப துமே பரிமேலழகருக்கு முந்தியன, பரிதியார் உரை முந்தியதன்று என்பதும் தெளிவாகும். காளிங்கர் உரையால் முந்திய உரைகள் இன்னும் சில இருந்தனவென்றும் அறிகிறோம்.

இனி பரிதியார் உரை மிகவும் பிற்பட்டது என்பதற்கு அவர் உரையிலேயே சான்றுகள் சில உள்ளன. உரையுள் வரும் சில சொற்களை இங்கு கருதலாம். ஆற்றறுக்கும் கல்லாமா (814) என்றவிடத்து இராவுத்தன் சேவகத்தைக் கெடுக்கிற திருந்தாக் குதிரை என்று பொருள் எழுதுகிறார். இராவுத்தன் என்ற சொல் குதிரை வீரன் என்ற பொருளுடைய புதுச்சொல். முகம்மதியர் தமிழ்நாட்டில் பிரவேசித்த காலத்தில் தமிழில் இச்சொல் வழக்குக்கு வந்திருக்கிறது. இதன்மூலம் நன்கு விளங்கவில்லை. ஆனாலும் 13ஆம் நூற்றாண்டினர் என்று கருதப்படும் பெரும் பற்றப்புலியூர் நம்பி தாம் பாடிய திருவிளையாடற் புராணத் தில் மூன்றிடங்களில் இராவுத்தன் என்று குறிப்பிடுகிறார். இச் சொல் இக்காலத்தில் தான் ஆட்சிக்கு வரத் தொடங்கிற்று எனக் கருதலாம். பின்னர் அருணகிரிநாதரால்தான் இத்தொடர் அதிகம் பயன்படுத்தப் பெறுகிறது. மயிலேறிய இராவுத்தனே என்ற கந்தரலங்காரப் பாடல் முதலாயின காண்க. அதிகம் வழக்கில் இல்லாத நூல் நம்பி திருவிளையாடல்; அருணகிரி நாதர் பாடல் அதிகம் வழக்குடையது. பரிதியார் காலம் இரு வருக்கும் இடைப்பட்டதாயிருத்தல் கூடுமென்று தோன்றுகிறது.

பவிசு என்பது இதையொத்த மற்றொரு சொல். சூது.... மனத்தில் லட்சுமி துலங்கிய பவிசையும் கெடுக்கும் என்று (934) எழுதுகிறார். பவிசு (பவிஷு) பெருமை குறிக்கும் ஒரு பிற்காலச் சொல். இதையும் அருணகிரி நாதரே திருப்புகழில் பிரயோகிக்கிறார்.

பெண்சாதி என்பதோர் சொல்; பெண் சாதிக்குப் பயன் படுவானாகில் என்று (904) எழுதுகிறார். பெண்சாதி இங்கு மனைவி. இப்பொருளில் இச்சொல் ஆட்சிக்கு வருவது மிகவும் பிற்கால நூல்களில் தான்; நச்சினார்க்கினியர் மதுரைக் காஞ்சி யுரையில் பெண் என்ற சாதி என்று குறிப்பிட்டு எழுதுகிறார். வேறு பழைய ஆட்சி இச்சொல்லுக்கு இல்லை.

பணம் (932), சடுதி, காவடி (1196) என்பன இவை போன்ற வேறு சில சொற்கள். இவற்றுக்கு இன்று நாம் கருதுகின்ற பொருளில் பரிதியார் உபயோகிக்கிறார். சடுதி என்ற சொல்லை அதிகமாய் உபயோகிக்கிறார். ஆனால் இச்சொற்கள் 16ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு இவ்வாட்சி பெற்றுள்ளனவேயன்றி, முன்னால் இவ்வாட்சி பெற்றது அருமை.

விதனம் என்ற சொல்லை முன்னர்க் குறிப்பிட்டோம். கம்பராமாயணம் இச்சொல்லைக் கூறுகிறது. விதனங்கள் ஏழு என்று பரிமேலழகர் கூறுகிறார்: "வேட்டம் கடுஞ்சொல் மிகு தண்டம் சூது பொருள் - ஈட்டம் கள் காமமோடேழு" எனப் பட்ட விதனங்கள் என்கிறார். இங்கு துக்கம் என்பது பொருள். கம்பராமாயணத்திலும் இச்சொல் அருமையாய் வந்துள்ளது. ஆயினும் இச்சொல்லை நம் உரைகாரர் துன்பம் என்ற கருத்தைக் குறிப்பிட மிக அதிகமான இடங்களில் எடுத்தாளுகிறார். இச்சொல்லை அருணகிரிநாதரும் பிரயோகிக்கிறார். எழுபிறப்பு என்பதற்கு இவர் பரிமேலழகரைத் தழுவி தேவர், மனிதர், மிருகம், ஊர்வன நீர் வாழ்வன, பட்சி, தாவரம் என்கிறார். எனவே அவருக்குப் பிற்பட்டவர் எனல் பொருத்தம்.

எனவே, இங்கு ஆராய்ந்து குறிப்பிட்ட சொற்களின் வரலாற்றை நாம் ஒரு தொகுப்பாகப் பார்க்கும்போது இவ்வகைச் சொற்களை உபயோகிக்கும் பரிதியார் காலம் 13ஆம் நூற்றாண்டுக்குப்பின் 15ஆம் நூற்றாண்டு வரையில் என்று குறிப்பிடலாம் என்று தோன்றுகிறது. பேரளவாயுள்ள ஒற்றுமைகளால் இவர் காலம் அருணகிரிநாதர் காலத்தை ஒட்டியிருக்கலாமோ என்றெண்ணத் தோன்றுகிறது.

மேலும் பல உரையாளர் கருத்துக்களைச் சுட்டியும் மறுத்தும் எழுதுகின்ற பரிமேலழகர் பரிதியார் கூற்றுக்களில் ஒன்றையும் குறிப்பிடவில்லை. இதனால் பரிமேலழகர் காலத்தில் பரிதியார் உரை இல்லை என்றே எண்ண வேண்டியிருக்கிறது.

### திருமுருகாற்றுப்படை யுரை

திருமுருகாற்றுப் படைக்கு உரை எழுதினோர் பலர்; இவர்கள் நச்சினார்க்கினியர், பரிமேலழகர், உரையாசிரியர், கவிப்பெருமாள், பரிதியார் என்போர். (கவிப்பெருமாள் பரிப்பெருமாள் என்பவரே போலும்.) பரிதியார் உரைகாசி மடத்தார் வெளியிட்ட திருமுருகாற்றுப்படை உரைக்கொத்தில் சேர்த்து,

வேலம்பாளையம் வித்துவான் வே. ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டருக்குக் கிடைத்த ஏட்டின் துணைகொண்டு வெளியிடப்பட்டுள்ளது.

நக்கீரர் செய்த நன்முருகாற் றுப்படைக்குத்
தக்கவுரை சொன்ன தகுதியான் – மிக்குலகில்
பன்னூல் அறிந்த பரிதி மறைப் புலவன்
தொன்னூல் அறிவால் துணிந்து.

என்பது பரிதியார் உரைச் சிறப்புப்பாயிரம். பாடபேதங்களும் இவ்வுரையுட் காணப்படுகின்றன. உரையின் நடையும் தன்மையும் நோக்கும்போது இவர் குறள் உரை செய்த பரிதியாரே என்று கொள்ளத் தடையில்லை.

## கல்லாடர்

கல்லாடர் என்ற பெயரோடு தமிழ்நாட்டில் வெவ்வேறு காலத்தில் புலவர் மூவர் இருந்திருக்கிறார்கள் என அறிகிறோம். இவர்களுள் காலத்தால் பிந்திய புலவரையே நாம் இங்கு கருதுகிறோம். இப்புலவர் பெயரானது கல்லாடர் என்பதோர் ஊர் பற்றி வந்த பெயர் போலும்.

கல்லாடத்துக் கலந்தினி தருளி
நல்லாளோடு நயப்புறவு எய்தியும்.

என்பது திருவாசகம், கீர்த்தித்திருவகவல் 11-12 அடிகள்.

இப்பெயருடைய புலவர் மூவருள், காலத்தால் முந்தியவர் சங்ககாலப் புலவர். இவர் பாடல்கள் அகநானூறு (ஏழு பாட்டு), குறுந்தொகை (இரண்டு), புறநானூறு (ஐந்து) என்னும் தொகைகளில் சேர்க்கப்பட்டுள்ளன. திருவள்ளுவ மாலையில் "ஒன்றே பொருளெனின் வேறென்பர்" என்ற பாடல் கல்லாடர் பாடல் என்று குறிக்கப்பட்டுள்ளது. திருவள்ளுவ மாலையே போலி நூல் என்பது அறிஞர் கருத்தாதலால், இவ்வொரு பாடலை மட்டும் நாம் தனிப்படுத்திச் சொல்வதற்கில்லை.

இனி, யாப்பருங்கல விருத்தியுரையில் செய்யுளியல் புறனடைச் சூத்திரமாகிய 93ஆம் சூத்திரவுரையில் உரைகாரர் மிகப்பலவான பண்டையாசிரியர் பெயர்களைக் கூறுகின்றார்: "அவிநயனார் மயேச்சுரர் நக்கீரனார் பேராசிரியர் பொய்கையார் குடமூக்கிற் பகவர் பெருஞ்சித்திரனார், மேலும் இருடி

களல்லா ஏனையோராகி, மனத்தது பாடவும் ஆகவும் கெடவும் பாடல் தரும் கபிலர் பரணர் கல்லாடர் மாமூலர் பெருந்தலைச் சாத்தர் இத்தொடக்கத்தோராலும் பெருஞ்சித்திரர் தொடக்கத் தோராலும் ஆரிடச் செய்யுள் போல மிகவும் குறையவும் பாடப்படுவன" என்ற இடத்தில் இவர் குறிப்பிடும் கல்லாடர் இச்சங்க காலக் கல்லாடரே. இவர் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகும்.

மற்றொரு கல்லாடர் கல்லாடம் என்ற இலக்கியச் சுவை பொருந்திய அகப்பொருள் நூல் செய்தவர். இந்நூல் அகத் துறையில் அமைந்து 100 பாடல்கள் கொண்டது.

"கல்லாடர் செய் பனுவல் கல்லாடம் நூறு" என்பது இதன் சிறப்புப் பாயிரத்துள் ஒன்று. இவ்வாசிரியர் சிறந்த சைவர். விநாயக வணக்கம் வேலன் வணக்கம் கூறியுள்ளமையாலும் திருவிளையாடற் செய்திகளை மிகவாகக் கூறியுள்ளமையாலும் இது நன்கு விளங்கும்.

> கல்லாடர் செய்பனுவல் கல்லாடம் நூறும் நூல்
> வல்லார்கள் சங்கத்தில் வதிந்தருளி – சொல் ஆயும்
> மாமதுரை ஈசர் மனமுவந்து கேட்டுமுடி
> தாமசைத்தார் நூறுதரம்.

என்பது ஒரு சிறப்புப் பாயிரப் பாடல். "கல்லாடம் கற்றவனோடு சொல்(மல்)லாடாதே" என்ற பழமொழி இந்நூலையே குறிக்கும்.

பதினொராந் திருமுறையுள் கண்ணப்ப தேவர் திருமறம் என்ற ஒரு பாடல் உள்ளது. இதன் ஆசிரியரும் ஒரு கல்லாடர்; இவர் கல்லாடம் பாடிய கல்லாடரே என்பது பலர் கருத்து. ஆனால் இங்கு ஓர் இடர்ப்பாடுள்ளது. கல்லாடம் பாடிய கல்லாடர் 11ஆம் நூற்றாண்டினர் என்பது சில ஆராய்ச்சியாளர் கருத்து. ஆனால் நம்பியாண்டார் நம்பி (பதினொராம் திருமுறை தொகுத்தவர்) காலம் ஆதித்த சோழன் காலம் (கி.பி. 871 - 907) என்றும் இராசராசன் காலம் (985 - 1014) என்றும் இருவகை யாகச் சொல்வர்;* இரண்டில் எதுவாயினும் கண்ணப்ப தேவர் திருமறம் பாடிய கல்லாடர் 11ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவ ராயிருத்தல் இயலாது. (அங்ஙனமாயின், திருமறம் பாடிய 11ஆம் திருமுறைக் கல்லாடர் இரண்டாமவர், கல்லாடம் பாடியவர் மூன்றாமவர் எனல் வேண்டும். இருவரும் ஒருவரே என்பது சரி.)

---

1. நம்பி இராசராசன் காலம் என்பதே பொருந்துவது.

மூன்றாம் கல்லாடரே நாம் கருதும் காலப் பகுதியில் வாழ்ந்து தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரை எழுதிய கல்லாடர். இவர் பெயர் இயற்பெயர் போலும். முன்னமே இப்பெயர் தாங் கியோர் வேறு பலர் வாழ்ந்திருத்தலும் கூடும். இவர் வரலாறு எதுவும் புலப்படவில்லை. கல்லாடர் அனைவரும் ஒரே பரம் பரையினராகலாம்.

இவர் ஊர் முற்கூறிய கல்லாடம் எனவே நாம் கருதலாம். இது பாண்டி நாட்டிலுள்ளதொரு சிவஸ்தலம் என்பர்; அதற் கேற்பவே இவர் தம் உரையுள் "நாடு யாது என்றாற்குப் பாண்டி நாடு என்றாற் போல்வன" என்று எழுதுவதால் இவர் பாண்டி நாட்டினர் எனல் பொருத்தமே.

17ஆம் நூற்றாண்டில் பிரயோக விவேகம் என்ற இலக்கண நூல் செய்த சுப்பிரமணிய தீக்கிதர் 22ஆம் சூத்திர உரையில் இக்கல்லாடரைப் பெயர் சுட்டிக் கூறுகிறார்: "மக்கட் சுட்டு என்பதனைக் கல்லாடரும் பன்மொழியாகு பெயராய் நின்ற இரு பெயரொட்டுப் பண்புத் தொகை என்பர்." எனவே, கல் லாடர் இக்காலத்துக்கு முற்பட்டவர் என்பது தெளிவு.

இவர் இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் தழுவியே தம் சொல்லதிகார உரையை எழுதியிருக்கிறார். பரிமேலழகரின் திருக்குறளுரையில் காணும் தொடர்களும் இவர் உரையில் வருகின்றன. இவற்றால் இவர் இம் மூவருக்கும் பிற்பட்டவர் என்பது உறுதி. இளம்பூரணர் மிகவும் முற்பட்டவர். பரிமேலழகர் 13ஆம் நூற்றாண்டு, நச்சினார்க்கினியர் 14ஆம் நூற்றாண்டு. ஆகவே, கல்லாடர் இக்காலத்துக்குப் பின் 17ஆம் நூற்றாண்டுக்கு முன் வந்தவர் என்று அறிகிறோம். இவர் காலம் முந்திய உரை யாசிரியர்கள் காலத்தை அடுத்தே வரக்கூடும் என்று எண்ணலாம்; ஆகவே 15ஆம் நூற்றாண்டு என்ற கருத்தே பொருத்தமுடையது.

இவர் உரையுட் காணும் செய்திகள் இவர் சைவ சமயத்தவர் என்பதைத் தெரிவிக்கின்றன; இரண்டாம் கல்லாடர் மதுரைத் திருவிளையாடற் கதைகளை நிரம்பக் கூறியவர் என்ற கல்லாடர் மரபுக்கு இது பொருந்துவதே.

இவர் உரை கல்லாடர் விருத்தியுரை என வழங்கும். இவர் முந்திய உரையாசிரியர்களைத் தழுவியே உரை செய்தாரேனும் ஆங்காங்கு அவற்றிற் காணாத விளக்கங்களை மிக்க அடக்கத் தோடு தந்து செல்கின்றார். இவர் உரை சொல்லதிகார முழுமைக்

கும் கூடக் கிடைக்கவில்லை; இடையியல் 10 சூத்திரங்கள் வரையில் தான் உள்ளது. ஏனைய 38 சூத்திரங்களுக்கும் உரியியல் எச்சவியலுக்கும் இவர் உரை கிடைக்கவில்லை.

இனி கல்லாடர் தொல்காப்பியத்துக்கு உரை செய்தார் என்று ஒரு பழம் பாடலில் குறிப்பிட்டிருக்கக் காண்கிறோம். அக்குறிப்பினால் இவர் தொல்காப்பியம் முழுமைக்குமே உரை செய்தார் என்று கொள்ள இடமுண்டு. தம்முடைய சிலப்பதிகாரப் பதிப்பில் டாக்டர் சாமிநாதையரவர்கள் இப்பழம் பாடலை எழுதிப் பின்வரும் குறிப்பையும் சேர்த்தார்கள். "இச்செய்யுள் பாண்டி நாட்டுள்ள செவ்வூர் சிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டிலிருந்த பழைய ஏட்டுப் புத்தகமொன்றில் எழுதப் பட்டிருந்தது. இவ்வகவலிலுள்ள சிலபகுதிகள் மறுத்தற்குரியனவாக இருந்தும், ஒரு சாராருடைய கொள்கை தெரிவதற்கே இஃது இங்கே பதிப்பிக்கலாயிற்று". இப்பாடல் மதுரைச் சங்கங்களின் வரலாறுகளை விரிவாய்க் கூறுகிறது. கடைச்சங்கப் புலவர்களைக் கூறுமிடத்து சிறுமேதாவியார் என்று தொடங்கி,

> புவிபுகழ் புலமைக் கபிலர் பரணர்,
> இன்னாத் தடிந்த நன்னாகர், அன்றியும்
> ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத் துக்கு
> உரையிடை யிட்ட விரகர்கல் லாடர்,
> பேர்மூல முணரும் மாமூலர் தம்மொடு
> விச்சை கற்றிடு நச் செள்ளையார் முதல்
> தேனூற் றெடுப்பச் செந்தமிழ் பகர்ந்தோர்
> நானூற்றுவர் முதல் நாற்பத் தொன்பதின்மர்.

என்று அப்பாடல் சொல்லிக்கொண்டு போகிறது. கபில பரணரும் தொல்காப்பிய உரை எழுதிய கல்லாடரும் சங்கப் புலவர் என்று இப்பாடல் கூறுவது பிழை என்பது, தானே விளங்கும். இப்பாடல் பாடியவர், சங்ககாலக் கல்லாடரை நினைத்தே தொல்காப்பிய உரையை இவர் மீது ஏற்றிவிட்டார்; அவ்வளவே. இப்பாடல் பழம்பாடல் அன்று. 15ஆம் நூற்றாண்டுக்குப் பின் தோன்றிய பாடல்; செவி வழியாகக் கேட்டு வந்த செய்திகளில் பல கவிராயர் முன்னோரொருவர் இதனுள் தொகுத்துச் சொன்னார். எனினும், கல்லாடர் தொல்காப்பியத்துக்கு உரை செய்த சிறந்த புலவர் என்ற செய்தி மட்டும் இது நமக்கு நன்கு உணர்த்துவது போற்றற்குரியது.

## தொல்காப்பியம் சொல்லதிகாரம் பழைய உரையாசிரியர்

தொல்காப்பிய உரையாசிரியர் அறுவர் என்பது பிரசித்தம்: இவ்வறுவருள் சொல்லதிகாரத்துக்கு மட்டும் பேராசிரியர் தவிர ஏனைய ஐவர் உரையும் இன்று கிடைத்து அச்சிடப் பெற்றுள்ளது. இவ்வைவருக்கும் மேலாக, சொல்லதிகாரத்துக்குப் பழைய உரை யொன்று அபூர்த்தியாகக் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது. 117சூத்திரங்களே (வேற்றுமை மயங்கியல் 33 வரை) உள்ளன. உரையாசிரியர் பெயரோ பிற வரலாறுகளோ விளங்கவில்லை. எனினும், நாட்டுக்கு உதாரணமாகப் பாண்டி நாட்டைக் குறிப்பிடுவதால் இவர் பாண்டி நாட்டினர் என்றும், நறு மணத்துக்குப் பூதி நாற்றம் என்று கூறுவதால் சைவ சமயத் தவர் என்றும் நாம் அறிகிறோம். தம் உரையுள் சேனா வரையர், உரையாசிரியர் (இளம்பூரணர்) என்று பெயர் சுட்டி உரைக்கிறார்; மற்றும் நச்சினார்க்கினியர் உரையைப் பல இடங்களில் மறுத்தும் எழுதுகிறார். இவற்றால் இவர் அனை வரினும் பிந்தியவராகிய நச்சினார்க்கினியருக்கும் பிற்பட்டவர் என்று தெரிகிறது. உத்தேசம் கி.பி. 15ஆம் நூற்றாண்டின் தொடக்கமாயிருக்கலாம்.

இவ்வுரையானது பண்டைய உரையாசிரியர் பரம்பரை யில் வந்தது எனத்தகும் சிறப்புடையது. இவர் உரையால் சில புதிய எடுத்துக்காட்டுக்களும் மேற்கோட் பாடல்களும் தெரிய வந்துள்ளன. சில அருந்தொடர்களின் பொருளை நன்கு விளக்கியுள்ளார்.

இவ்வுரையை ஊன்றி நோக்கும்போது முந்தைய பேருரை யாசிரியரான இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகியோர் காலத்துக்குப் பின் புலமை மிக்க தமிழாசிரியரொரு வரிடத்தில் பல இளம் புலவர்கள் தொல்காப்பியம் பயின்றார் களென்றும் அவர்களுள் மூவராகிய இவ்வுரைகாரர், கல்லாடர், தெய்வச்சிலையார் என்போர் தாம் தனித்தனிப் புதிய உரைகள் எழுதினார்கள் என்றும் அறிகிறோம். முழு நூலுக்கும் இவர்கள் உரை எழுதியிருந்தார்கள் போலும். இவர்கள் போலவே வேறு சிலரும் எழுதியிருத்தல் கூடும்.

## பதிப்பு

கல்லாடர் உரை சில பகுதிகள் மட்டும் முன்னமே வெளி வந்தன. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாக 1964 இல் வித்துவான். கு. சுந்தரமூர்த்தி, கிடைக்கும் பகுதிகள் முழுமையும் சிறப்பான முறையில் அச்சிட்டார். இதனோடு பழைய உரை யையும் சேர்த்து அச்சிட்டிருக்கிறார். இப்பழைய உரை திரு விதாங்கூர்ப் பதிப்பாகிய சொல்லதிகார உரைக்கோவை என்ற நூலில் முன்னமே வெளிவந்துள்ளது.

## நேமிநாத உரையாசிரியர்

நேமிநாதம் என்பது இருபத்திரண்டாவது சைன தீர்த்தங் கரர் பெயரால் குணவீர பண்டிதர் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் திரிபுவன தேவன் என்னும் குலோத்துங்க சோழன் (III) காலத்தில் செய்த இலக்கண நூல்; எழுத்து சொல் என்ற இரண்டு அதி காரங்கள் மட்டும் உடையது. தொல்காப்பியத்தைப் பின்பற்றி வெண்பாவினால் செய்யப்பெற்றது. சின்னூல் என்றும் இது வழங்கப்பெறும். முற்காலத்தில் தொல்காப்பியம் கற்குமுன்னர் மாணாக்கர் இதைக் கற்று வந்தனர். இதன் பாடல்கள் 97.

இந்நூலுக்குச் சிறந்த பழைய உரையொன்று உண்டு. அதன் ஆசிரியர் யாரென்பது தெரியவில்லை. சிறப்பாக இலக்கிய இலக்கண உரைகள் எழுந்த காலமாகிய 12-14ஆம் நூற்றாண்டு களே இவ்வுரைக்கும் உரிய காலமாகிறது. எண் ஓகாரத்துக்கு இலக்கியமாக இவ்வுரைகாரர் நேமிநாதம் 74ஆம் பாடல் உரையில், "முத்தன் என்கோ முதல் மூர்த்தி என்கோ" என்ற திரு நூற்றந்தாதிப் பாடலை (31) மேற்கோளாக எடுத்துக் காட்டு கிறார். இவ்வந்தாதியின் காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதி; ஆகவே இவ்வுரையாசிரியர் காலம் இதே காலம் அல்லது இதற்குச் சற்றுப் பிற்பட்டது. 14ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது 15ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்று கொள்வது பொருத்தமாகும்.

இவ்வுரையானது பொழிப்பாகவும் கருத்துரையாகவும் உள்ளது. வினாவிடை விளக்கங்கள் கொண்ட விருத்தியுரை யாகவும் உள்ளது. இவர் தொல்காப்பியச் சூத்திரங்களை எங்கும் எடுத்துக் காட்டுகிறார். மற்றச் சங்க நூல்களாகிய பத்துப்பாட்டு எட்டுத் தொகை ஆகியனவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

முத்தொள்ளாயிரம் சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய நூல்களும் திருவள்ளுவ மாலையும் பயில்கின்றன. வச்சணந்தி மாலையும் இவ்வுரையினுள் வருகின்றது. (வச்சணந்தி மாலை என்பது நேமிநாத ஆசிரியரான குணவீர பண்டிதர் தம் ஆசிரியரான வச்சணந்தியின் பெயரால் செய்த பாட்டியல் இலக்கண நூல்.) இன்று இறந்துபோன நூலாகிய அவிநயமும் குறிப்பிடப்பட்டுள்ளது. "ஆசையல்குற் பெரியாரை" என்ற நாரத சரிதைப் பாடல் (புறத்திரட்டு 1060) இங்கு வருகிறது. இதுவும் இன்று இறந்து போன நூல். பண்டைய உரையாசிரியர்கள் கூறும் மேற்கோள் பகுதிகள் பல இங்கு வந்துள்ளன.

பல இடங்களில் புணரியலில் எடுத்துக்காட்டாகத் தாவரப் பெயர்களையே இவர் காட்டுதலால், தாவரவியல் வல்லவரென்று உரைகாரரைக் கருத இடமுண்டு. இவர் சமயத்தால் சைனர். இது நூற்பெயரையும் இவர் குறிப்பிடும் முறையால் விளங்குகின்றது. "இந்நூல் என்ன பெயர்த்தோ எனின், இந்நூல்,

> எய்திய சிறப்பின் எழுத்தையும் சொல்லையும்
> மெய்தெரி வகையான் விளங்க நாடித்
> தேனிமிர் பைம்பொழில் தென்மயி லாபுரி
> நீனிறக் கடவுள் நேமி நாதர்தம்.

திருப்பெயராற் செய்தமையான் நேமிநாதம் என்னும் பெயர்த்து. இந்நூல் செய்தார் யாரோ எனின்;

> உளமலி பேரருள் உயிர்மிசை வைத்த
> வளமலி களந்தை வச்சணந்தி முனிவரன்
> கொள்கையின் வழாஅக் குணவீர பண்டிதன்.

"செய்தமைத்தார் என்பது" என வருவது காண்க. ஆயினும், இவர் "கூற்றுவனை மன்மதனை" என்று தொடங்கும் சிவபிரான் துதியையும், "ஆடவர்கள் எவ்வாறு அகன்றொழிவார்" என்ற திருமால் துதியையும் எடுத்துக்காட்டுவதால், சமரச நோக்குடையவர் என்று அறிகிறோம்.

இந்நூலாசிரியர் பெயர் தெரிந்திலது என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோமாயினும், இவர் வயிரமேகர் என்ற பெயருடையவர் என்றும் இவரே நேமிநாத விருத்தியுரை எழுதியவர் என்றும் அவ்வுரை வயிரமேகவிருத்தி என வழங்கும் என்றும் மு. ராகவையங்கார் அவர்கள் தம் கட்டுரைகளில் ஒன்றில் மிகவும் பொருத்தமாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

மூவரா யவரின் முதல்வ ராய் அதிதி
புதல்வ ராய முப்பத்து முத்–
தேவரா யவர் தம் ராச ராசபுரி
வீதி மாதர் கடை திறமினோ. 16

என்ற தக்கயாகப் பரணித் தாழிசையில் அதன் உரையாசிரியர் வயிரமேக விருத்தி என்ற நூலைக் குறிப்பிடுகிறார். முப்பத்து முத்தேவராயவர் தம் ராசராசபுரி என வரும் தொடருக்கு, முப் பத்து மூன்று தேவர்கள் ஆராயும் அவருடைய இராசராசபுரி என்று பொருள் கூறிப் பின்னர் "தேவராயவர் தம் என்பதில் தேவர் ஆயும் அவரெனச் செய்யுமென்னும் பெயரெச்சத்தின் உகரமும் மகரவொற்றும் கெட்டன எனவுணர்க. இது வயிர மேக விருத்தியுள் விளங்கும்" என்று குறிப்பு எழுதியிருக்கிறார். இக் குறிப்பினால் பெறுவது என்ன எனில், வயிரமேக விருத்தி என்பது இலக்கணம் பற்றிய ஓர் விருத்தியுரை என்பதாகும். அன்றியும், செய்யும் என்னும் பெயரெச்சத்தில் மெய்யுடன் உகரம் கெடுதலையே தொல்காப்பியம் இளம்பூரணவுரை (233) நன்னூல் மயிலைநாதருரை ஆகியன குறிப்பிடும். ஆனால் மெய் யுடன் உகரம் கெடுதலோடு ஈற்று ஒற்றும் கெடும் என்பதை விளக்கிக் கூறியவர் வயிரமேக விருத்தியுரைகாரர் என்பது தக்க யாகப் பரணி உரையாசிரியர் கூற்றாகின்றது.

இந்தக் கொள்கையை முதல் முதலில் வெளியிட்ட நூலா சிரியர் நேமிநாதம் செய்தவரேயாவர். அவர்,

செய்யு மென்னும் பேரெச்சத்தீற்று மிசைச்சில்லு கரம்
மெய்யொடும்போ மொற்றொடும்போம் வேறு. 63

என்பதனால் இக்கருத்தை வெளியிடுதல் காணலாம். இவ்வாறு நேமிநாத ஆசிரியர் இக்கருத்தைச் சொன்னாரேயொழிய, சொற் சுருங்கக்கூறிய அவரது சூத்திரக் கருத்தினை முன்னூல் பிரமா ணத்துடன் விளக்கிக் கூறியவர் அந்நேமிநாத உரைகாரரேயாவர். ஆகவே ஆயவர் என்பதை ஆயுமவர் என விரித்து அதற்கு விதி விளங்குமிடமாகத் தக்கயாகப் பரணியுரையாசிரியர் கூறும் வயிரமேக விருத்தி என்பது நேமிநாத விருத்தியே என்று கருத லாம். நேமிநாதவுரை விருத்தியுரை என்றே முன்னோரால் வழங்கப்பட்டது. எனவே, நேமிநாதவுரையாசிரியர் பெயர் வயிரமேகர் என்று அறியலாம்.

# தக்கயாகப் பரணி உரையாசிரியர்

தமிழில் இன்றுள்ள முதல் பரணி கலிங்கத்துப்பரணி; இதன் காலம் 11ஆம் நூற்றாண்டின் இறுதி. கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டார் முதலாம் குலோத்துங்க சோழனுடைய கலிங்க வெற்றியைப் பாராட்டி இப்பரணி பாடினார். அடுத்துத் தோன்றியது தக்கயாகப் பரணி. தக்கயாக சங்காரத்தைப் பொருளாக வைத்து இரண்டாம் இராசராச சோழனைச் சிறப்பித்து இந் நூலை ஒட்டக்கூத்தர் பாடினார். இதன் தாழிசைகள் 814. கலிங் கத்துப் பரணிக்குப் பழைய உரை இல்லை. ஆனால் தக்கயாகப் பரணிக்குச் சிறப்பான உரை ஒன்று பண்டைக் காலத்தில் ஏற்பட் டிருப்பது இந்நூலின் பெருமையைக் காட்டுகிறது.

இவ்வுரையாசிரியர் பெயர் தெரியவில்லை; காலமும் தெளி வாகச் சொல்ல முடியவில்லை. ஆயினும் உரையில் காணும் ஒரு சிறப்பு இதற்கு ஓரளவு உதவுகிறது. 16ஆம் தாழிசையுரையில் இவர் வயிரமேக விருத்தி என்ற ஒரு நூலைக் குறிப்பிடுகிறார். இது நேமிநாத இலக்கண உரைநூல் என்பது முந்திய கட்டுரை யில் விளக்கப்பட்டுள்ளது. அதன்படி நேமிநாத விருத்தியுரை யின் காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதி அல்லது 15ஆம் நூற் றாண்டின் தொடக்கம் என்று குறிப்பிட்டோம். ஆகவே இதற்குப் பின், வந்த தக்கயாகப் பரணி உரையாசிரியர் காலம் இக்காலத்திற்குச் சற்றுப் பின்பு அதாவது 15ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி அல்லது பிற்பகுதி என முடிவு செய்யலாம்.

இராசராசன் காலம் 1146-62. இப்பரணி நூல் இக்காலத்தில் எழுதப்பட்டது. இதன் உரையில் 536ஆம் தாழிசைக்கு உரை யாசிரியர் உரை எழுதிவிட்டு, இப்பாட்டு கவிச்சக்கரவர்த்திகள் வாக்கல்ல என்பாரும் உளர் என்று கூறுகிறார். இவ்வாறே வேறிடங்களில் உரையாசிரியர் வேறு பாடல்களைக் கூறி இப் பாடம் அழகியது ஓசையுமுண்டு என்றெல்லாம் எழுதுவார். இவற்றைக் கூர்ந்து ஆராயும்போது ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணி பாடிய பிறகு சிலகாலம் கழித்து அதில் இடைச்செருக லாகப் பாடல்கள் செருகப்பட்டன என்றும், பாடபேதங்கள் பல ஏற்பட்டன என்றும், இவற்றுள் வேறுபாட்டை உணர முடியாத நிலை ஏற்பட்டது என்றும் நாம் அறிகிறோம். இந்த

நிலை ஏற்படுவதற்குச் சில நூற்றாண்டுகளேனும் சென்றிருக்கும் எனக்கருதுதல் நியாயம். ஆகவே 12ஆம் நூற்றாண்டிலிருந்து இரண்டு அல்லது இரண்டரை நூற்றாண்டு கழித்து இவ்வுரை ஏற்பட்டது என்றால் 15ஆம் நூற்றாண்டு என்ற காலவரையறை பெரிதும் பொருந்தக் கூடியதாகும்.

இவ்வுரையாசிரியர் தமிழ் வடமொழி இரண்டிலும் வல்ல வர். தமிழில் சங்கநூல்கள் ஐம்பெருங்காப்பியங்கள் சூளா மணி, உதயணன்கதை முதலியவற்றை எடுத்துக் கொடுக்கிறார். ஓரிடத்தில் இவர் "வளையாபதியை நினைத்தார் கவியழகு வேண்டி" என்று கூறுவதனால், ஒட்டக்கூத்தருக்கு மட்டுமன்றி இவருக்கும் கவியழகில் உள்ள ஈடுபாடு புலனாகிறது. இப்போது கிடைக்காத நூல்களான தகடூர் யாத்திரை, இரும்பல் காஞ்சி, மாடலம், பைரவம் முதலிய பழைய நூல்களையும் எடுத்துத் தருகிறார். தகடூர் யாத்திரையில் "கனவே போலவும் நனவே போலவும்" என்று தொடங்கும் 21 வரிகளுடைய நீண்ட பாட்டு ஒன்றை மேற்கோள் காட்டுகிறார். மாடலம் என்பது பிறவிடத்து அறியப்படாத நூல். வடமொழியில் வேதாகமபுராண இதிகா சங்கள் வியாகரணம் யோகம் சோதிடம் வைத்தியம் முதலிய வற்றிலும் பல சமய நூல்களிலும் இவர் நன்கு பயிற்சி உடையவர்.

இவர் சிவபெருமானிடத்து மிகுந்த பக்தியுடையவர். அடி யார்களிடத்தும் அன்பு நிறைந்தவர். பண்பு காப்பதில் பக்குவம் நிரம்பியவர். பாண்டிய மன்னன் சமணரைக் கழுவேற்ற முற் பட்டபோது "இராசாவை நோக்கி இது ஆகாதென்று பிள்ளை யார் விலக்கியருளினார்" என்று சம்பந்தமூர்த்தியினுடைய பெருங்கருணையை இவர் எடுத்துக்காட்டுவது இதற்கு உதாரண மாகும்; பிறர் இவ்வாறு கூறவில்லை.

இவர் சோழ குலத்தில் மிக்க அன்புடையவர்; மிக்க தமிழன்பு உடையவர். சொல்லையும் பொருளையும் மிகவும் ஆராய்ந்து எழுதுபவர். எல்லாவிடத்தும் சுவைபடவே பொருள் எழுது வார். சொல்லாராய்ச்சித் திறன் மிக்கவர். ஒரு சொல்லிற்குரிய இரண்டு பொருளைச் சேர்த்து எழுதுபவர். அலகில் - குற்றமும் கணக்கும் இல்லாத; பள்ளி வேலை - கோயிலும் படுக்கையும் இடமான சமுத்திரம் முதலான இடங்கள் காண்க. இதேபோல ஒரே பொருளைத் தருகின்ற இரண்டு சொற்களைச் சேர்த்து வழங்குவார். கடகவளையல், குமுதமான அரக்காம்பல், நூபுர

மான சிலம்பு, பணைக்கவடுகள், மதுச் சமுத்திரமான கட்கடல். பல இடங்களில் இது பொருள் அல்ல என்று எழுதுகிறார். தெய்வத்தையும் பெரியோரையும் குறிப்பிடும்போது மரபு போற்றி எழுதுவார். அருக பரமேஷ்டி, ஆளுடைய பிள்ளை யார், பாண்டியன் குல மகா தேவியார், ஸ்ரீ கிருஷ்ணபகவான், திருக்கோயில், திருநிழல், திருவடி, திருஉள்ளம், எழுந்தருளல், பிரசாதித்தருளல் முதலியன காண்க. வடிவுடைய மங்கை என்பது பரமேசுவரியின் பெயர். இவர் பல சமயங்களையும் நன்கறிந்தவர். பதினைந்து சமயங்களை உரையில் சொல்லு கின்றார்.

ஒட்டக்கூத்தர் இராசராசனுடைய பாட்டனாராகிய விக்கிரம சோழன் மீது மற்றொரு பரணி பாடியிருக்கிறார் என்பது இவ்வுரையால் தெரிய வருகின்றது. மேற்கோள் தரும் போது இவர் இது சிலப்பதிகாரம் இது திருமந்திர மாலை இது காரிகை என்று குறிப்பிடுவார். அரிய விஷயங்கள் பல இவ் வுரையினால் விளங்குகின்றன. குலச்சிறையார் அதிகாரி பெரு நம்பி என்னும் பட்டங்கள் பெற்றவர். சோழன் மனிதனுடைய வரம்பு அழியாமல் காப்பவன். மகாதேவர் வாகனமாகிய விடை இளமை நீங்காதது. வாது செய்த வாரணம் என்னும் ஊர் மதுரைக்குப் பக்கத்தில் உள்ளது. வீரபுருஷர் பட்டால் அவர் வயிற்றில் உள்ள உதிரத்தை வீரர்கள் நெற்றியில் இடுவர். ஈசுவர பத்தர் வேண்டிய வடிவு கொள்வரல்லது கர்ப்பக்கிரகம் புக்குப் பிறவார். இவைபோன்ற உதாரணங்கள் பல.

இவ்வாறு பொருள் சிறப்பும் சொல்நயமும் படச் சுவை யோடு இவர் எழுதிய உரை ஆராய்ந்து இன்புறத்தக்கது.

பாரும் விசும்பும் புகழ்தக்க யாகப் பரணியின் பால்
ஆரும் சுவைபல ஆருந் தெளிய அணியுரைசெய்
சீரும் சிறப்பும் உடையோய் இருமொழிச் செல்வநின்றன்
பேரும் தெரிந்திலன் என்செய்கு வேன்இந்தப் பேதையனே.

என்று ஐயரவர்கள் இரங்குவது உருக்கமாயுள்ளது.

## பதிப்பு

ஐயரவர்கள், இருமுறை.

## சாமுண்டிதேவ நாயகர்

உரையாசிரியர் வரிசையில் குறிப்பிடத்தக்க ஒரு சிறந்த ஆசிரியர் சாமுண்டி தேவ நாயகர் என்பவர். இவர் புறப்பொருள் வெண்பாமாலை என்ற புறப்பொருள் இலக்கண நூலுக்கு நல்ல உரையொன்று எழுதியிருக்கிறார். இது ஐயரவர்கள் பதிப்பாகப் பலமுறை வெளியாகியிருக்கிறது.

புறப்பொருள் வெண்பாமாலை என்பது தொல்காப்பியத் துக்குப் பின்வந்து இன்று கிடைக்கின்ற ஒரே புறப்பொருள் இலக்கண நூல். இதைச் செய்தவர் "சேரமான்கள் வழியினுள் ளான்." இவர், "அகத்தியர் மாணாக்கரான தொல்காப்பியர் முதலான பன்னிருவரும் சொன்ன பன்னிரு படலமென்னும் நூலை அறிந்தான்;" மூல நூலான பன்னிரு படலத்தையொட் டித் தம் நூலையும் பன்னிரு பகுதிகளாகச் செய்து ஒவ்வொரு பகுதிக்கும் படலம் என்றே வைத்தார். அவை முறையே வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொது, கைக்கிளை, பெருந்திணை என்னும் பன்னி ரண்டும் ஒழிபும் ஆகி, சூத்திரம் 361 ஆக உள்ளன. முதலில் கொளுவும் பின்னர் ஆசிரியர் செய்த வெண்பாவுமாக அமைந் துள்ளன; ஒழிபியல் 19 சூத்திரங்களுக்கும் கொளு இல்லை. கைக்கிளைப் பகுதி மட்டும் மருட்பா. இவ்விரு பகுதிகளுக்கும் இவ்வுரையாசிரியர் உரை செய்துள்ளார்.

இவ்வுரையாசிரியர் பெயரும் ஊரும் சில ஏட்டுப் பிரதி களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

> ஒப்பரிய மாகற லூரான் கிழாரதிபன்
> செப்பரிய தெய்வநாய்கன் தெரிந்து – தப்பரிய
> வெண்பாமா லைதனக்குத் தக்க விருத்தியினை
> நண்பால் உரைத்தான் நவின்று.

"செயங்கொண்ட சோழ மண்டலத்து மேற்கா நாட்டு மாகறலூர் கிழான் சாமுண்டி தேவநாயகன் உரைத்த வெண்பாமாலையுரை ஒரு வகையான் முற்றும்" என்பது ஏட்டுப்பிரதி. செயங்கொண்ட சோழமண்டலம் - தொண்டை மண்டலம்; மாகறலூர் - காஞ்சி புரத்தின் அருகிலுள்ள திருமாகறல் என்ற பாடல் பெற்ற சிவ

ஸ்தலம். கிழான் என்பதனால் இவர் வேளாள மரபினர் என்று அறிகிறோம். இவர் பெயர் தெய்வ நாயகர்; தந்தை பெயர் சாமுண்டி என்றிருக்கலாம்.

இந்நூலின் உரை பதவுரையாக மட்டும் இருப்பதன்றிப் பெரும்பாலும் அனுவயித்து எழுதப்படவில்லை. பதவுரையின் பின் முடிபுகள் பெரும்பாலும் எழுதப்பட்டுள்ளன. அம் முடிபு களிற் சில வினாவிடையிறுக்கு முறையில் அமைந்துள்ளன. இலக்கணக்குறிப்பு முதலியன மிகுதியாகக் காணப்படவில்லை. இது பெரும்பாலும் வட சொற்கள் பயின்றதாக அமைத்துள் ளது. இவ்வுரை இல்லையாயின் இந்நூலின் அருமை பெருமைக ளும் பாடல்களின் பொருள்களும் நன்கு புலப்படா என்பது ஐயரவர்கள் இவ்வுரைபற்றி எழுதியுள்ள குறிப்பு. பல இடங் களில் இவ்வுரையாசிரியர் வேறு பாடத்தைத் தந்து, "வேறு பொருள் உரைப்பாருமுளர்" (1.4.182) என்று கூறுவதால் வேறு பாடமும் வேறுரைகளும் இவருக்கு முன்னே இருந்தனவென்று அறிகிறோம்.

கோழிவென்றி (348) கூறுமிடத்துக் கோழி நூலையும் பூழி வென்றி கூறுமிடத்து (351), "சொல்லக்கடவ மந்திரம் பலவாவன தீற்றும் அரிசி ஓது மந்திரமும் பச்சிலை பிசைந்து தடவும் போது சொல்லு மந்திரமும் செவியுள்ளூறுத்து மந்திரமும்" என மந்திரங் களையும் குறிப்பிடுகிறார்.

இவ்வுரையாசிரியர் குறிப்பிடும் சில தொகை விரிகள் அறிந்து மகிழத்தக்கன. அவையமுல்லை என்ற துறையில், நடுவுகூறும் அவை மாந்தரியல்பு, "எட்டின் வழிப்படர்வது" என்ற இடத்துப் பின்வரும் செய்யுளைத் தருகின்றார்: (173)

> குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை
> நடுச் சொல்லும் நல்லணி யாக்கம் – கெடுக்கும்
> அழுக்காறு அவாவின்மை அவ்விரண்டோ டெட்டும்
> இழுக்கா அவையின்கண் எட்டு.

மாநிலத்துக்கு வரும் இடர்கள் ஐந்து என்று சேக்கிழார் "மாநிலங் காவலனாவான்" என்ற பாட்டுள் கூறுகிறார். ஆனால் இங்கு நூலாசிரியர் கூறிய எட்டை (205) இவ்வுரையாசிரியர் மேற் கோள் மூலம் விளக்கிக் காட்டுகிறார். இடர் எட்டாவன:

**விட்டில் கிளி நால்வாய் வேற்றரசு தன்னரசு**
**நட்டம் பெரும்பெயல் காற் றெட்டு.**

*விட்டில் - வெட்டுக்கிளி; இந்த இருபதாம் நூற்றாண்டிலும் வெட்டுக்கிளி உணவுப் பயிருக்குப் பெரும்பகையாய் பல நாடுகளில் உள்ளது. இதை இவ்வாசிரியர் கூறியிருப்பது வியக்கத் தக்கதாயிருக்கிறது.*

*உழவன் வென்றி (346) என்ற பகுதியில் நெல் முதலான எண்பதனும் உழவன் வித்திவிளைவுசெய்து தருபவன் என்ற இடத்து, எட்டுத்தானியங்கள் யாவை என்பதை உரையாசிரியர் ஒரு பாடலால் கூறுகிறார்:*

**நெல்வரகு சாமை தினை இறுங்கு கேழ்வரகு**
**கொள் உழுந்தோடு எண் விளைவாகும்.**

*இம்மேற்கோள், பாடல்கள் இவ்வுரைகாரரே செய்தனவோ என்று ஐயுறுவதற்கு இடமுண்டு. முன்காட்டிய மூன்றினுள் இரண்டாம் பாடலை நச்சினார்க்கினியரும் மேற்கோள் காட்டிய போதிலும் பின்வரும் பாடலின் அமைப்பை ஆராயும் போது இச்சாமுண்டி தெய்வ நாயகர் தாமே இப்பாடல்களைச் செய்து வைத்தார் என்ற கருத்து வலியுறுகின்றது. ஓம்படை என்ற 225ஆம் பாடலும் உரையும் பின்வருவனவாகும்.*

**ஒன் றி லிரண்டாய்ந்து மூன் றடக்கி நான்கினால்**
**வென் று களங்கொண்ட வேல்வேந்தே – சென் றுலாம்**
**ஆழ்கடல்சூழ் வையகத்துள் ஐந்துவென் று ஆறகற்றி**
**ஏழ்கடிந்து இன்புற் றிரு.**

*"ஞானத்தாலே காரியா காரியங்களைத் தெரிந்து, நட்புப் பகை உதாசீனமென்னும் மூன்றினையும் உட்கொண்டு, யானை தேர் குதிரை காலாலாலே பூசலைவென் று, போர்க்களத்தைக் கைக் கொண்ட வேல் மன்னனே, பெயர்ந்து கரையைப் பொரும் ஆழ்ந்த கடல் சூழ்ந்த குவலயத்து இந்திரியங்கள் ஐந்தையும் வென் று, ஆறினையும் பெருக்கி, ஏழினையும் கடிந்து இனிமை யுற்று நெடுங்கால மிருப்பாயாக." இவ்வாறு உரை எழுதிய ஆசிரியர், ஆறு ஏழு என்ற இரண்டு தொகையையும் இங்கு விளக்காமல் விட்டமையால் அவற்றை விளக்க வேண்டித் தனியே ஒரு பாடல் கூறுகிறார். அவ் ஆறும் ஏழும் பின்வருவன:*

நாடிய நட்புப் பகைசெலவு நல்லிருக்கை
கூடினரைப் பிரித்தல் கூட்டல் ஆறு – ஈடிலா
வேட்டம் கடுஞ்சொல் மிகுதண்டம் சூதுபொருள்
ஈட்டம் கள் காமம்இவை ஏழு.

இங்கு ஆறு ஏழு என்ற இரண்டு பகுதிகளையும் ஒரே பாடலுள் சேர்த்துச் சொல்லப்பட்டுள்ளது. இங்ஙனம் ஒரே வெண்பாவில் இரண்டு கருத்துக்களையும் சொல்வது மிகவும் காண்பதற்கரிய செய்தி. திருக்குறள் உரையில் இப்பாடலின் பின்னிரு வரிகளை மட்டும் எடுத்துக்காட்டி இவை ஏழு விதனங்கள் என்று பரிமேலழகர் கூறுகின்றார். இவ்வரிகள் பழம் பாடலாகலாம். முன்னிரு வரிகளை ஆறு என்ற தொகைக்கு விரியாக இவ்வுரையாசிரியரே செய்து சேர்த்துக் கொண்டார் என்று நாம் கருத இது இடம் கொடுக்கிறது. அன்றியும், அடுத்து ஒன்று முதல் ஆறு வரையுள்ள தொகைகளுக்குப் பின்வருமாறு இவர் வேறு வகை விளக்கமும் கூறுகிறார்:

ஒன்று - ஆன்மா; இரண்டு - புண்ணிய பாவம்; மூன்று - காமம் வெகுளி மயக்கம்; உற்சாகசக்தி பிரபுசக்தி மந்திரசக்தி; நான்கு சாம தான பேத தண்டம்; ஐந்து - சத்தப் பரிச ரூப ரச கந்தம்; ஆறு - படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என்றுமாம்.

இங்கு ஏழாவது தொகையை மட்டும் விட்டு மற்றவற்றைக் குறிப்பிட்டமையால் ஏழுக்குரிய கருத்து பலர் அறிந்த பாடலால் சொல்லப்பட்டது என்றும் மற்றவை அவருடைய சொந்தக் கருத்துக்கள் என்றும் கருதவேண்டும். ஆகவே ஆறைக் குறித்த தொகை விரியைத் தாமாகப் பாடி ஏழைக் குறித்த ஒரு பழைய குறள் வெண்பாவுக்கு முற்பகுதியில் அமைத்துக்கொண்டார் என்று நாம் கருதலாம்.

நூலாசிரியரும் உரையாசிரியரும் இருவருமே சைவ சமயத்தினர் என்று கருதுவதற்குச் சான்றுகள் நூல்முழுதும் காணப்படுகின்றன.

பின்வந்த உரையாசிரியர்கள் அனைவரும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடல்களை எடுத்து ஆள்கிறார்கள். இளம்பூரணர் (11நூ) நச்சினார்க்கினியர் (14நூ) களவியல் காரிகை உரையாசிரியர் முதலியோர் குறிப்பிடத்தகும். 15ஆம் நூற்றாண்டில் தொகுத்த புறத்திரட்டு இதிலிருந்து 75 பாடல்களைத்

தருகிறது. புறப்பொருள் வெண்பாமாலை பன்னிரு படலத்தின் வழி அதன் ஒரு பகுதி தொல்காப்பியர் செய்தது என்ற கருத்துக்களை இளம்பூரணர் மறுக்கிறார். நச்சினார்க்கினியர் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடல்கள் பலவற்றைத் தொல்காப்பிய உரையுள் எடுத்துக் கூறுவதால் அவர் காலமாகிய 14ஆம் நூற்றாண்டுக்குச் சில காலம் முற்பட்டது இந்நூல் எனக் கருதலாம். வெண்பா மாலைக் கருத்துக்களைச் சில இடங்களில் இவர் மறுக்கிறார். மறுக்கும் முறையும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது. உரைக்குறிப்புகள் நச்சினார்க்கினியர்க்கு பிற்பட்டவை என்று கருதத்தக்கன. பன்னிரு படலம் பிற்பட்ட நூலென்பது அறிஞர் கருத்து. அதைத்தழுவி எழுந்த இவ்வெண்பாமாலை 13ஆம் நூற்றாண்டுக்குரியதாகக் கொள்ளலாம். உரை எழுதிய சாமுண்டிதேவ நாயகர் 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கருதுவதும் பொருத்தமாயிருக்கும்.

## தெய்வச் சிலையார்

தொல்காப்பியத்துக்கு உரை எழுதினோர் பலர். அவர்களுள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோர் இருவர் உரைகள் மட்டுமே ஏறக்குறைய நூல் முழுமைக்கும் கிடைத்துள்ளன. ஏனையவை நூல் முழுமைக்கும் கிடைக்கவில்லை.

சொல் அதிகாரத்துக்கு உரை எழுதினோர் அறுவர் என்று சொல்லுவர். இவ்வறுவருள் பேராசிரியர் உரை கிடைக்கவில்லை. ஏனைய ஐவராவார் இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் கல்லாடர் தெய்வச்சிலையார் என்போர். இவர்களுள் காலத்தால் பிந்தியவர் தெய்வச்சிலையார். இவருரை கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடாக 1924இல் வெளிவந்தது. பதிப்பித்தவர் ரா. வேங்கடாசலம் பிள்ளை. இவர் இவ்வுரை பேராசிரியர் உரை என்றே முதலில் கருதினார்; பின்னரே வேறுரை என்று தெரிந்தது; டாக்டர் சாமிநாதையருடைய ஏட்டினால் தான் இவ்வுரையாசிரியர் பெயர் தெய்வச்சிலையார் எனத் தெரியவந்தது என்று குறிப்பிட்டுள்ளார்.

தெய்வச்சிலையார் பற்றிய எந்த வரலாறும் தெரியவில்லை. இவர் தம் உரையில் மற்றைய உரையாசிரியர் பெயர் ஒன்றையும் கூறவில்லை. அங்ஙனமே இவருடைய உரையையும் ஏனைய உரையாசிரியர் யாரும் குறிப்பிடவில்லை.

இவ்வுரையாசிரியர் சைவர் என்று தெரிகிறது. 37ஆம் சூத்திரவுரையில் இவர் முருகனை வாழ்த்தும் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகிறார். 438ஆம் சூத்திரவுரையில் "மந்திரப் பொருள்வயின் ஆகும் சொல்" என்பதற்கு அவர் பின்வருமாறு ஒரு பாடலைக் காட்டி விளக்குகிறார்.

> மண்ணைச் சுமந்தவன் தானும் வரதராசன் மகன் தானும்
> எண்ணிய வரகாலி மூன்றும் இரண்டு மரமும் ஓர்யாறும்
> திண்ண மறிய வல்லார்க்குச் சிவகதியைப் பெறலாமே.

'இதனுள் மண்ணைச் சுமந்தவன் ந. வரதராசன் மகன் ம. வரகாலி மூன்று சி. இரண்டு மரம் வா. ஓர் யாறு ய எனக்கூற நமச்சிவாய எனப் பொருளாயிற்று' என்கிறார். 32ஆம் சூத்திர உரையில், "வேதாகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்துமிடத்து உலகும் உயிரும் பரமும் அனாதி, பதியும் பசுவும் பாசமும் அனாதி என வரும்" என்பர். இவ்வுதாரணங்கள் இவர் சைவர் என எண்ண இடந்தருகின்றன.

இவர் உரையானது விருத்தியுரை என்று பெயர் பெற்றிருந்தது. இவர் உரைக்கு நாட்டில் அதிக வழக்கு ஏற்படவில்லை போலும். ஒவ்வோர் இயலின் இறுதியிலும் இவர் எழுத்தெண்ணி வடமொழி மரபையொட்டி, இத்துணைக் கிரந்தம் என எழுதிச் செல்கிறார்.

இவ்வுரையாசிரியர் தமக்குப் புலனாகாத கருத்துக்களைத் தமக்கு விளங்கவில்லை என்றே எழுதிச் செல்கிறார். பல இடங்கள் இவ்வாறு உள்ளன.

இவர் தம் உரையில் மணிமேகலை, சூளாமணி, புறநானூறு முதலான எட்டுத் தொகை நூல்கள், சில பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் ஆகியவற்றையே மேற்கோளாகக் காட்டுகிறார். பல இடங்களில் வேறு பாடங்களைக் கொண்டிருக்கிறார். பிறர் ஒன்றாய்க் கூறிய சூத்திரத்தைப் பலவாய்ப் பிரித்தும், பலவாய்க் கூறியவற்றை ஒன்றாய்ச் சேர்த்தும் உரை எழுதுகிறார். இவர் ஆங்காங்குக் கூறியுள்ள கூற்றுக்கள் இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் ஆகிய மூவர் உரைகளையும் மறுத்துக் கூறுவனவாகத் தெரிகின்றன. உதாரணமாக 393ஆம் சூத்திர உரையில் கண்ட பின்வரும் பகுதி காண்க:-

"செந்தமிழ் நாடாவது வையையாற்றின் வடக்கும் மருத யாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையானும், வையையாற்றின் தெற்காகிய கொடுங்கோளூரும் மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டுமாதலானும், அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு:

வடவேங் கடந் தென் குமரி யாயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி.

என்றமையானும், இதனுள் தமிழ் கூறும் நல்லுலகமென விசேடித்தமையானும் கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற் கெல்லை கூறியவதனாற் குமரியின் தெற்காகிய நாடுகளை யொழித்து வேங்கடமலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந் தமிழ் நிலமென்றுரைப்பர்."

இவ்வாறு இவர் முந்தையோர் கருத்தை மறுத்துக் கூறுவ தால் அம்மூவருக்கும் இவர் பிற்பட்டவராகிறார். அம் மூவருள் பிந்தியவராகிய நச்சினார்க்கினியர் காலம் 14ஆம் நூற்றாண் டின் இடைப்பகுதி என்று முன்னமே கண்டோம். ஆதலால் தெய்வச்சிலையார் காலம் 15ஆம் நூற்றாண்டின் இறுதி என முடிவு செய்வது பொருந்தும்.

தெய்வச்சிலை என்பது பெரிதும் வழக்கத்தில் இல்லாத பெயர். எனினும், இந்நூற்றாண்டின் இடையில் வாழ்ந்த காள மேகப் புலவர் பாவை என்ற ஊரில் வாழ்ந்த தெய்வச்சிலைப் பெருமாள் என்ற வள்ளல் மீது சித்திர மடல் பாடியுள்ளார் என்பது இங்கு அறியத்தக்கது.

திருப்புல்லாணியில் எழுந்தருளியுள்ள திருமாலின் பெயர் களுள் தெய்வச்சிலை என்பதும் ஒன்று.



அத்தியாயம் 5

# புராண ஆசிரியர்

## முன்னுரை

புராணம் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலே நவீன ஆராய்ச்சியாளரும் புதுத்தமிழ் அன்பரும், இதுபோலி, கர்நாடகம், வடமொழிக் கதை, தமிழ் மரபுக்குப் பொருந்தாது என்று பேசுகிறார்கள். இப்பேச்சு அத்துணை பொருத்தமுடைய தன்று என்று மட்டுமே இங்கு குறிப்பிட விரும்புகிறோம். இடைச்சங்க காலத்தாருக்கு உரிய நூல்களுள் பூதபுராணம், மாபுராணம் என்பனவும் அடங்கும் என்று அறிகிறோம். திருக்குறள் கடைச் சங்ககால நூல் என்பர்; அதுவே தமிழிலக்கியத் துக்குப் பழமையானதோர் அச்சாணி என்போர், அதற்கு முன் எழுந்த நூல்களையும் ஒப்புக் கொண்டேயாக வேண்டும். பழமை யான இப்புராணங்களின் பொருளோ அமைப்போ விளங்க வில்லை. மதிநலங் கனிந்த மாபுராணம், புதுநலம் புனைந்த பூத புராணம் என்று இவற்றைப் பழம்பாடல் குறிப்பிடும். மா புராணம் என்பது மகாபுராணம் என்ற சைன நூல் என்று கருது தலும் உண்டு. சீவகசிந்தாமணி, ஒரு காப்பியமாயினும் புராண மென்றே கருதுதற்குரியது. ஒரு சைன தீர்த்தங்கரர் சரிதம் கூறும் நூலாகச் சாந்தி புராணம் என்றொரு நூல் இருந்து பிற்காலத் தில் இறந்தது; அப்படியே நாரத சரிதை என்பதுமாகும்.

இவைபோக, புராணம் என்ற பெயரில் இப்போது கிடைக்கும் நூல்களுள் முதலாவது நூல் திருத்தொண்டர் புராணமேயாகும். இது அடியார்கள் வரலாற்றைக் கூறுவது ஆகும். இதற்குப் பின் வந்த நம்பி திருவிளையாடல் என்பது, மதுரைத் தல புராணமென்று கூறத்தக்கது. கச்சியப்பர் பாடிய கந்தபுராணம், இவற்றின் பின் எழுதப்பட்டு, முருகன் சரிதம் கூறும் பெருங்காப்பியமாய் அமைந்தது.

இவற்றின் பின், 15ஆம் நூற்றாண்டில் சில புராணங்கள் எழுந்தன. இவற்றுள் மிக்க சிறப்புடையது, கடவுள்மா முனிவர் செய்த திருவாதவூரடிகள் புராணம். இது, திருத்தொண்டத் தொகையுள் சொல்லப் பெறாமையால் பெரிய புராணத்துள் வரலாறு கூறப்பெறாத சைவ சமயாசாரியராகிய மாணிக்க வாசகர் சரித்திரத்தைப் பக்திச்சுவை பொருந்தச் செய்யப்பெற்ற நூலாகும். அளவாற் சிறியதாயினும், கருத்தாலும் நடையாலும் மிக்க உயர்வுடையது. இனி, இந்த நூற்றாண்டில், சைவ புராண மாக, இரு மொழிபெயர்ப்பு நூல்கள் எழுந்தன. உபதேச காண் டம் என்ற வடமொழி நூலை ஞானவரோதயர், கோனேரியப்ப நாவலர் என்ற இருவர் புராணங்களாகத் தனித்தனியே மொழி பெயர்த்தார்கள். இரண்டும் பெரு நூல்கள், இருவரும் முந்திய நூற்றாண்டில் வாழ்ந்த கச்சியப்ப சிவாசாரியரின் மாணாக்க ரென்று அறிகிறோம்.

இம்மூன்று புராணம் செய்த ஆசிரியர்களின் வரலாற்றை இங்கு ஆராய்வோம். இம்மூவருள், ஞானவரோதயரின் காலமே திட்டமாகத் தெரிந்தது. மற்ற இருவர் காலமும் முதன்முதலாக இங்கு வரையறுக்கப்படுகின்றன. சைன மணிப்பிரவாள உரை நடை நூலாகிய ஸ்ரீபுராணம் என்ற நூலைச் சைன இலக்கியம் என்ற அத்தியாயத்தில் பார்ப்போம்.

## கடவுள் மாமுனிவர்

மாணிக்கவாசகருடைய வரலாறு தமிழில் பல நூல்களில் சொல்லப்பெற்றுள்ளது. 11ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்று அறிஞர் கருதுகின்ற கல்லாடத்துள் மதுரை சோமசுந்தரக் கடவு ளுடைய திருவிளையாடற் சரித்திரப் பகுதிகள் பல உள்ளன. 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த செல்லி நகர்ப் பெரும்பற்றப்புலியூர் நம்பி பாடிய பழைய திருவிளையாடல், 64 திருவிளையாடல்களைக் கூறுகிறது. இவற்றுள், ஞானோப தேசம் செய்தது, நரி குதிரையானது, குதிரை நரியானது, மண் சுமந்தது ஆகியவை மாணிக்கவாசகர் சரித்திரம் கூறுவன. இனி, 17ஆம் நூற்றாண்டின் இறுதியில் பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற்புராணம் என்பது இன்று மிகவும் பிரசித்த மாக உள்ளது; இதனுள் முற்கூறியவாறே நான்கு படலங்கள் மாணிக்கவாசகருடைய சரித்திரத்தைக் கூறுவன. இவையன்றி,

தலபுராணங்களாகிய பெருந்துறைப் புராணமும், உத்தரகோச மங்கைப் புராணமும், சுந்தரபாண்டியமும், கடம்பவன புராண மும், மாணிக்கவாசகர் வரலாறு கூறுகின்றன.

இனி, மாணிக்கவாசகருடைய வரலாற்றை மட்டும் விரித்துக் கூறும் புராணம் திருவாதவூரர் புராணம் என்பது; மூலமும் உரையுமாகப் பல பதிப்புக்கள் வெளியாகியுள்ளன. காப்புடன் 545 செய்யுட்களுடையது. கடவுள் வாழ்த்து, மந்திரிச் சருக்கம், திருப்பெருந்துறைச் சருக்கம், குதிரையிட்ட சருக்கம், மண் சுமந்த சருக்கம், திருவம்பலச் சருக்கம், புத்தரை வாதில் சென்ற சருக்கம், திருவடி பெற்ற சருக்கம் என்பன இப்புராணத்தில் அடங்கிய பகுதிகள். சில ஏடுகளில் கடைசி மூன்று சருக்கங்களும் திருவம்பலச் சருக்கம் என்று தலைப்பிட்டுக் காணப்படுகின்றன. இப்புராணம் கடவுள் மாமுனிவர் என்பவர் பாடியது. இவரைப் பற்றி எந்த வரலாறும் தெரிந்திலது. எவ்விதத் தனிப்பாடலும், இவரைக் கூறவில்லை. இவர் காலத்தை அறிவதற்கு எவ்வாதா ரமும் இல்லை. எனினும், கிடைக்கும் குறிப்புக்களைத் துணை வைத்து இவர் காலத்தை வரையறை செய்ய முயல்வோம்.

கடவுள் மாமுனிவர் காலம் பிற புராணகாலம் அனைத் துக்கும் முன் என்று சிலர் சொல்லுவர். அது பொருந்தாது என்பது பின்னே விளங்கும். ஆனால் அவர் பாடிய புராணம், மாணிக்கவாசகர் சரித்திரத்தைத் தனியே விரித்துக் கூறுவது. சுந்தரமூர்த்தி தம் திருத்தொண்டத் தொகையுள் குறிப்பிட்ட சிவனடியார்களின் வரலாறுகளை மட்டும் விளக்குவதற்காகச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடினார். சுந்தரமூர்த்தி மாணிக்கவாசகரைக் குறிப்பிடாமையால் சேக்கிழாரும் தம் நூலுள் மாணிக்கவாசகருடைய வரலாற்றைப் பாடினார் இலர். எனவே, பின்வந்த பெரியாராகிய கடவுள் மாமுனிவர் மாணிக்க வாசகருடைய வரலாற்றை மட்டும் தனியாகப் பாடியுள்ளார் என நாம் இப்போது கருதுகிறோம்.

சிவயோகி ஒருவர் பொதிகை மலை செல்ல வழிக் கொண்ட போது, காவேரிக் கரையை அடைந்தார் என்று கூறுமிடத்து, "பரமேசுவரனுக்குக் கடல் ஆலகாலவிடம் அளித்தமையால், காவிரியாறு கடல் வயிற்றை நிறைக்காமல், தன் நீரினால் நாட்டில் வளம் நிறைத்தது" என்று காவேரியைச் சிறப்பித்துச் சேக்கிழார் திருமூலர் புராணத்தில் பாடுகிறார்:

தடநிலை மாளிகைப்புலியூர் தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்
அடல்விடையின் மேல் வருவார் அமுதுசெய அஞ்சாதே
விடம்அளித்த தெனக்கருதி மேதினிக்கு வளம் நிறைத்தே
கடல்வயிறு நிறையாத காவிரியின் கரை அணைந்தார்.

*இக்கருத்தைக் கடவுள் மாமுனிவர் மந்திரிச்சருக்கம் முதல் பாட்டில் அப்படியே வைகைக்கு ஏற்றிப் பாடி இருப்பது இங்கு அறியத்தக்கது.*

முக்கணொடு நான்குபுய ஐந்துமுக முன்னோன்
சொக்கனருள் நன்மைபெறு தொன்மைதிகழ் நன்னாடு
அக்கடு விடத்தைஅர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைகலொழி வைகைவள நாடு.

*வைகைக்கு இவர் ஏற்றிய இக்கருத்து, பிற்காலத்தில் ஒரு தனி வெண்பாப் பாடலிலும் இடம் பெற்றுள்ளது:*

நாரியிடப் பாகருக்கு நஞ்சளித்த பாவி என்று
வாரியிடம் போகாத வையைதான் – தேரின்
இடத்தும் வலத்தும் இருபுறமும் பாய்ந்து
நடத்துமாம் தண் பாண்டி நாடு.

*இனி, நம் முனிவர் நூல் வரலாறு கூறும் பொழுது, "அகத்தியர் கூறிய சிவபிரானது 64 திருவிளையாடல்களுள் சில கூறுகிறேன்" என்கிறார்:*

தென் பொதிய மாமுனி சிறக்க அருள் எண்ணென்
இன்பவிளை யாடல தெனுங் கடலுள் நாயேன்
மின்பயிலும் மாமதுரை மேவுதமிழ் மாறன்
துன்பமுற நல்குகதை சொல்லலுறு கின்றேன்.

*இதனால் 64 திருவிளையாடல் என்ற வழக்கு ஏற்பட்ட பின் இவர் புராணம் பாடினார் என்பது தெளிவு. கல்லாடம் முப்பது திரு விளையாடல்களைக் குறிப்பிடுகிறது. திருவிளையாடல்களை முதலில் முறையாக விரித்துக்கூறும் நூல் நம்பி பாடிய பழைய திருவிளையாடல். எனவே, கடவுள் மாமுனிவர் புராணம் பழைய திருவிளையாடலுக்குப் பிற்பட்டது என்பது தெளிவு.*

*திருவாதவூரர் புராணம் எக்காலத்தில் தோன்றியதாயினும், அது தோன்றிய நாள் தொடங்கிச் சைவப் பெருமக்களாலும், தமிழ் மக்களாலும் சிறப்பாக விரும்பிப் பயிலப்பெற்ற நூலாகும். யாழ்ப்பாணத்துச் சைவமக்கள் தில்லை நடராஜப் பெருமா*

னிடத்தும், மாணிக்கவாசகப் பெருமானிடத்தும் ஈடுபாடு மிக்க வர்கள். ஆதலால் இந்நூலினிடத்தும் மிகவும் ஈடுபட்டுள்ளார் கள். இப்புர்ராணத்திற்குச் சிவபுராணம் என்றும் அங்கு பெயர் வழங்கும். இது சிறந்த செம்பாகமான நடை உடையதாய்ப் பக்திச்சுவையொன்றே நிரம்பியதாய், சிங்கார வருணனைகள் இல்லாததாய், சிவச் சின்னங்களின் பெருமைகளையும், திரு வைந்தெழுத்தின் மகிமையையும், சித்தியார் போன்ற சைவ சித்தாந்த சாத்திரங்களில் காணும் நுண்பொருள்களையும் ஆங்காங்கே விரிப்பதோடு, அவற்றின் சொற்களை எடுத்து ஆளுவதாயும் அமைந்துள்ளது. சிவ பக்தியூட்டும் சிறந்த நூல் களில் இதுவும் ஒன்று.

ஆங்கிலத்தில் தமிழ் இலக்கிய வரலாறு எழுதி 1929இல் வெளியிட்ட முந்நீர்ப்பள்ளம் பூரணலிங்கம் பிள்ளை, கடவுள் மாமுனிவர் கச்சியப்ப முனிவருக்குச் சமகாலத்தவர் என்றும், அவர் தூண்டுதலால் திருவாதவூரர் புராணம் பாடினார் என்றும் எழுதினார். இவர் கூற்றுக்கு ஆதாரம் இல்லை. இவர் ஆங்கில நூல் எழுதிய காலத்து தமிழ் இலக்கிய சரித்திரமே விளக்கம் பெறாமலிருந்தது. தாம் அறிந்தவற்றையும், கேட்டவற்றையும் ஆராய்ந்தவற்றையும், பரம்பரைக் கதைகளையும் ஒருங்கு சேர்த்து அவர் தம் வரலாறு எழுதினார். அவருடைய அக்கால முயற்சி பெரிதும் பாராட்டுதற்குரியது. ஆனால் அவர் புத்தகத்துள் பிழை பட்ட செய்திகள் பல உள்ளன. இதுவுமொரு பிழைபட்ட செய்தி.

அவர் கூற்றை ஆதாரமாக வைத்துத் தமிழ் இலக்கிய வர லாறு எழுதிய கா. சுப்பிரமணிய பிள்ளை, "கடவுள் மாமுனி வர் சிவஞான முனிவரது முதன் மாணாக்கராகிய கச்சியப்பரின் நண்பர். தமது உடலிற் கண்ட பிணி நீங்கும் வண்ணம் கச்சி யப்பரால் திருவாதவூரடிகள் புராணம் பாட ஊக்கப்பட்டவர். இவர் தேசிகரோ தம்பிரானோ தெரியவில்லை" என்று எழுது கிறார். இக்கூற்று பொருந்துவதன்று. இதற்கு ஆதாரம் வாய் மொழியாக வழங்கும் வரலாறு என்று இவர் கூறுவதை அறிந் தார் அரியர்; வேறு ஆதாரம் இருப்பதாயும் தெரியவில்லை. இக்கதை ஆராய்ச்சிக்குப் பொருந்தாது.

சிவஞான சுவாமிகள் சீடரும் கச்சியப்பரின் உடன் மாணாக்கருமாய்க் காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் என்ற துறவி யொருவர் இருந்தார். இவர் சிறந்த பக்திமான்; கவிஞர். இவருக்கு உடற்பிணி இருந்து வருத்தியது. முருகப் பெருமான் மீது ஒரு

பிரபந்தம் பாடும்படி இவரைக் கச்சியப்பர் தூண்டவே, இவர் முருகன் தலங்கள் நூற்றைக் குறிப்பிட்டு, நூறு பாடல்களால் க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ் என்ற அழகான பிரபந்தம் பாடினார். இவரைப் பிணித்திருந்த உடற்பிணி நீங்கியது. முருகன் அருளால் பிணி நீங்கியதைப் பாடலில் குறிப்பிட்டிருக்கிறார்:

மாணிக்கம் நிறைகங்கையாடி யுன்னைப் பணிய
    வந்திடும் பூதலத்தோர்
வாயூமர் பாடவும் குருடர் கண் பார்த்திடவும்
    மலடிகள் பின் மைந்தர் பெறவும்
காணிற் குமாரவேலா என்னும் அன்பரைக்
    கரடி புலி யானை சிங்கம்
காவிற் பணிந்தஞ்சி யோடவும் கந்தனே
    கண் கண்ட தெய்வம் எனவே
ஆணிப் பொன் முத்தி மண்டபமேவு கச்சியினுள்
    அடியேனை பாண்டு கொண்டுஎன்
ஆகத்தில் வந்த பிணி தீர்ந்திடவும் முன்னிற்கும்
    ஆறுமுக மெய்த் தெய்வமே.

என்பது செங்கீரைப் பருவம் மூன்றாம் பாடல். இலக்கியத்தில் பயின்ற இக்கதையைக் கா. சுப்பிரமணிய பிள்ளை தவறாகவே கடவுள் மாமுனிவருக்கு ஏற்றி விட்டார் என்று கருதத் தோன்று கிறது.

இனி, கடவுள் மாமுனிவர் தம்முடைய புராணத்தில், சித் தாந்த சாத்திரக் கருத்துக்களையும் தொடர்களையும் அப்படி அப்படியே எடுத்துப் பெய்திருக்கிறார். அவற்றுள் சிலவற்றை இங்கு நாம் குறிப்பிடலாம். மாணிக்கவாசகர் நிலையை ஆசிரியர்,

– உண்மை
தரும் உணர்வு என்னும் நாலாஞ் சத்திநிபாதம் எய்திப்
பரம அஞ்செழுத்தும் ஒன்றாம் பராபரம் உணர்த்தும் ஞான
குருபரன் திருத்தாள் சென்று கூடுதல் வேண்டும்.

என்று உரைக்கிறார் (பாட்டு 30). "நாலாஞ் சத்திநிபாதம் எய்தும் தன்மையர் ஆதலாலே" என்று மற்றோர் இடத்தில் (பாட்டு 85) கூறுகிறார். சத்திநிபாதம் நாலுவகை என்பது தமிழில் சித்தாந்த சாத்திரங்கள் தோற்றுவித்த கருத்து. "நாடிய சத்திநிபாதம் நாலு பாதம்" என்பது சிவப்பிரகாசம் 49ஆம் செய்யுள்.

முன்னை வினைப் பெருங்காடு மூடுற ஐம்புல வேடர்
துன்னியலைத் திடர் செய்யுந் துன்ப வழிச் செல்லாமல்

என்பது புராணம் 70ஆம் செய்யுள். இது சிவஞான சித்தியார் பாடலை (253) எடுத்தமைத்தது என்பது வெளிப்படை:

துன்னிய ஐம்புல வேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை.

சித்தியார் 265ஆம் பாடல் மிகச் சிறந்த கருத்தொன்றைத் தெரிவிக்கிறது. "இதுவே சமயம், இதுவே பொருள், இதுவே நூல் என்று கூறும் பிணக்கு உடையவை சமயங்களல்ல; இப் பிணக்கின்றி நின்றதே சமயம்" என்று அது கூறுகின்றது. இக் கருத்தைப் புராணமானது, "இது நூல் மற்றல்லது நூல் இல்லை எனும் அறு சமய வித நூல்" என்று தழுவியுரைக்கின்றது.

சாத்திரக் கருத்தாகிய மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் எனும் ஆறு அத்துவாக் களும் 103ஆம் பாடலில் கூறப்பட்டுள்ளன. மாணிக்கவாசகர் ஊமைப் பெண்ணைப் பேச வைத்துப் புத்தரை வென்றார் என்ற செய்தி கூறுமிடத்து, புராணத்தில் காணும் "ஆவது பொன்றக் கேடாய் அழிவது முத்தி யென்றான்" (464) என்ற வரியானது சித்தியார் பரபக்கத்தில் 94ஆம் பாடலில் வரும் "ஆங்கவை பொன்றக் கேடாய் அழிவது முத்தியின்பம்" என்ற வரியை எடுத்து அமைத்தது. இப்படியே புத்தரை வாதில் வென்ற செய்தி முழு வதும் சித்தியார் கருத்தின் தழுவலேயாகும். "அஞ்செழுத்தே - ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம் மோனந்த மா முத்தியும்" என்ற சித்தாந்த சாத்திர உண்மை விளக்கக் கருத்து. "தத்துவ முடிவிலாடும் தாண்டவம்" என்று (414) புராணத்தில் பயில்கிறது.

மேலும், மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தின் கீழ்ப் பரம்பொருளின் குருவடிவைக் கண்ட பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சியைப் புராணக்காரர் கூறுவது இங்கு கருதத் தக்கது. மந்திரியாகச் சென்ற மாணிக்கவாசகர் குருந்த மரத்தின் கீழ்க்கண்ட குருமூர்த்தியின் "செங்கை மீது பொருத்தமுறு புத்தகம் ஏது, ஐயா" என்ன, அவர் "பொய்மையிலாச் சிவஞான போதம்" என்றார். அதன் மேல் இவர் சிவம், ஞானம், போதம் என்பவற்றை விளக்கியுரைக்குமாறு கேட்க, குருமூர்த்தி விளக்குகிறார்:

என்றலுமே சிவமேது ஞானமேது இங்கு
　　இலங்கியிடும் போத மேது இயம்புவீரேல்
அன்று வட நீழலில் வந் திருந்தார் நீரே
　　அடியேனும் உமக்கடிமை யாவேன் என்ன
நின்றசிவம் ஒன்று, அதனைத் தேர்தல் ஞானம்
　　நிகழ் போதம் தேர்ந்ததனைத் தெளிதலாம் என்று
ஒன்றிய நற் பொருள் வினவி நிற்பார் சிந்தை
　　உருகும் வகை உரை செய்தார் உவமையில்லார்.

இச்செய்தி சிவஞான போதத்தையே பெயர் சுட்டி உரைக்கிறது. மேற்கூறியவற்றால் திருவாதவூரர் புராணம் செய்த கடவுள் மாமுனிவர், சிவஞான போதம், சித்தியார், உண்மை விளக்கம், சிவப்பிரகாசம் என்ற சாத்திரங்கட்குப் பின் வாழ்ந்தவர் என்று முடிவு செய்தல் பொருந்துவதாகும். சிவப்பிரகாசம் செய்த உமா பதியார் காலம் கி.பி. 1300-1325. இக்காலம் கடவுள் மாமுனிவர் காலத்துக்கு முன் எல்லையாக அமைகிறது.

திருவாதவூரர் புராண காலத்துக்குக் கீழ் எல்லையாக நமக்கு ஒரு குறிப்புக் கிடைக்கிறது.

ஞானாவரண விளக்கவுரை எழுதிய வெள்ளியம்பல வாணத் தம்பிரான் அதன் சுபக்கவுரை 125ஆம் பாடலில் திருவாதவூரர் புராணத் திருப்பெருந்துறைச் சருக்கம் 35-36 பாடல்களை எடுத்து மேற்கோள் காட்டுகிறார். மாணிக்கவாசகருக்குச் சிவ ஞான போதத்தால் சுத்தாவத்தைத் தோன்ற அருளிச் செய்தது என்று கூறி, குருந்த மரத்தடியில் குருமூர்த்தி செங்கையில் புத்தக மேந்தி அமர்ந்திருந்ததும் கண்ட வாதவூரர் “பொருத்தமுறும் புத்தகமேது ஐயா” என்று கேட்பதும், குருமூர்த்தி சிவஞான போதம் என்று விடை கூறுவதும், அதன் மேல் வாதவூரர் ‘சிவ மேது? ஞானமேது? போதமேது?’ என்று வினவுவதும் குறிப்பிடு கிறார். இக்குறிப்பினால் கடவுள் மாமுனிவர் காலம் வெள்ளி யம்பலவாண முனிவர் காலமாகிய 17ஆம் நூற்றாண்டிற்கு முற் பட்டது என்பது தெளிவாகிறது. திருவண்ணாமலை ஞானப் பிரகாசர் திருவாதவூர்ப் புராணத்தைக் குறிப்பிடுகிறார்.

மேலும் குமரகுருபரர் பாடலில் உள்ள ஒரு குறிப்பு இங்கு கருத்தத்தக்கது. அவர் பாடிய சிதம்பர மும்மணிக் கோவை 23ஆம் பாடல், மாணிக்கவாசகர் தாம் பாடிய திருக்கோவை யாருக்கு (காமஞ்சான்ற ஞானப் பனுவல்) பொருள் அம்பல வாணரே என்று சுட்டினார் எனக் கூறுகிறது:

கடங்கலுழ் கலழிக் களி நல் யானை
மடங்கலந் துப்பின் மானவேல் வழுதிக்கு
இருநிலம் அகழ்ந்தும் எண்ணில் பல் காலம்
ஒருவன் காணாது ஒளித்திருந் தோயை
வனசப் புத்தேள் மணி நாப்பந்திக்
கவனவாம் புரவியிற் காட்டிக் கொடுத்துப்
பைந்தமிழ் நவின்ற செந் நாப் புலவர்
ஐந்திணை யுறுப்பின் நாற் பொருள் பயக்கும்
காமம் சான்ற ஞானப் பனுவற்குப்
பொருளெனச் சுட்டிய ஒருபெருஞ் செல்வ.

“மதம் கலங்கி ஒழுகுகின்ற வெள்ளத்தை உடைய களிப்பு மிக்க நல்ல யானையையும், சிங்கம் போன்ற வலிமையையும் பெருமை மிக்க வேலையும் உடைய பாண்டியனுக்குத் திருமால் எண்ணிலாத பலகாலம் வலி மிக்க நிலத்தைத் தோண்டியும் காண முடியாமல் ஒளித்திருந்த உன்னைப் பிரமதேவனுடைய நாவாகிய அழகிய பந்தியிலுள்ள தாவுகின்ற கதியை உடைய வேதக் குதிரைக்குக் காட்டிக் கொடுத்த (அதாவது வேதமாகிய பரியின் மீது குதிரைச் சேவகனாக எழுந்தருளி வரச் செய்த) பைந்தமிழ் பாடிய செந்நாப் புலவராகிய மாணிக்கவாசகர் செய்த அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற் பொருளும் தரவல்ல ஐந்திணைக் கோவையாகிய காமச் சுவைமிக்க திருக் கோவையாருக்குப் பொருள் இவனே என்று சுட்டப்பட்ட ஒப்பற்ற பெருஞ் செல்வனே” என்பது இதன் பொருள்.

தில்லையம்பலவன் ஒரு வேதியர் வடிவம் கொண்டு மாணிக்கவாசகர் முன்னே தோன்றி “ஐயா! யாம் பாண்டி நாட்டில் இருந்து இங்கு வந்தோம். உம்முடைய பெருமை அந்நாட்டினர் அறிந்து மகிழ்ந்தார். சிவபிரானை அன்பினாலே நீர் பாடிய பாடலைக் கற்றுப் பாட எண்ணி இங்கு வந்தோம். அப்பாடல் களை நீர் இப்போது சொல்லும். நாம் ஏட்டில் எழுதிக் கொள் கிறோம்” என்றார். அவ்வாறே மாணிக்கவாசகர் சொன்ன பின்னர், வந்த வேதியர், “தையல் பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டும்” என்றார். மாணிக்கவாசகர் அங்ஙனமே பாடினார். வேதியரும், திருவாசகமும் அகப்பொருட் கோவை நானூறும் எழுதி முடித்த இடத்து, “உயர் வாத வூரன் மொழி தரித்து, எழுதும் அம்பலவன் எழுத்து” என்று கையெழுத்திட்டு மறைந் தார். பின்பு அங்கு வாழ்ந்திருந்த அன்புடையார், “தில்லையில் எம்பெருமானைச் செப்பிய இத்தமிழ் மாலை நல்ல பொருள் கூற

வேண்டும்" என நவின்றார்கள். மாணிக்கவாசகர் அவர்களோடு பொன்னம்பலத்திற்குச் சென்று, "இத் தமிழ் மாலையின் பொருள் இவரே" என்று உரை செய்து அவர்கள் காண மன்றினுள் சென்று மறைந்தார். இது வாதவூரர் அடிகள் முத்தி பெற்ற வரலாறு.

இங்கு, தமிழ் மாலையாகிய திருவாசகம் திருக்கோவை என்பவற்றின் பொருள் அம்பலவாணர் என்ற கருத்து கருது தற்குரியது. பொதுவாகத் திருவாசகத்தின் பொருள் நடராசப் பெருமானே என்று தான் வரலாறு வழங்குகின்றது. ஆனால் குமரகுருபரர் தம் பாட்டில் குறிப்பிட்ட "காமம் சான்ற ஞானப் பனுவல்" என்பது திருவாசகமன்று, திருக்கோவையார் ஆகும். இதன் பொருள் அம்பலவாணர் என்று மாணிக்கவாசகர் சுட்டிய தாகக் குமரகுருபரர் கூறுகிறார். ஆகவே இவர் திருவாதவூரர் புராண இறுதிப் பகுதியைத் தம் கூற்றுக்கு ஆதாரமாகக் கொண் டார் என்று சொல்லுவது பொருந்தும்.

பழைய திருவிளையாடற் புராணக் கதைப்போக்கே வேறு வகை. மண் சுமந்த திருவிளையாடல் நிகழ்ந்த பிறகு வாதவூரர் ஆலயத்துள் சென்று,

> என்னை ஆளுதற்கு, நாதா! இனப் பரியிட்ட தன்றி,
> மன்னிய முடிவருந்த மண் சுமந்த கடலே, அந்தோ
> வன்னமா மேனி நோவ அடியு முண்டனையே!

என்று பாடினார். "சித்திரக் கோவை பாடித் தில்லையம்பலத்து வா" என்று அத்தன் வானத்துரைத்தான் என்பது அப்போக்கு. ஆனால் இக்கதைக்கு நாட்டில் வழக்காறு இல்லை. எனவே, குமரகுருபரர் கடவுள் மாமுனிவர் கூறும் வரலாற்று முறை யையே கொண்டிருக்கிறார். ஆதலால், கடவுள் மாமுனிவர் குமர குருபரருக்குக் காலத்தால் முந்தியவர் என்று கொள்வதே முறை. குமரகுருபரர் காலம் 17ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதி.

இதுகாறும் காட்டியவற்றால், கடவுள் மாமுனிவர் 1325க்குப் பிறகும் 1600க்கு முன்னும் வாழ்ந்தவர் என்பது தெளிவாகிறது. இக்கால எல்லைக்குள் அவர் 15ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்திருக்கலாம் என்பதற்குச் சில ஆதாரங்கள் கிடைக்கின்றன.

முதலாவது அக்காலத்துப் புலமை நிலை; எண்ணற்ற ஓசை யின் பேதங்கள் கொண்ட விசித்திரமான சந்தங்களால் தமது தெய்வத் திருப்புகழைப் பாடி அன்று முதல் தமிழ்நாட்டில்

சொற்சித்திரமும் சந்த ஓசையும் கொண்ட பக்திப் பாசுர வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுமாறு செய்த அருணகிரிநாதர் இக்காலத்தே வாழ்ந்தார். அவர் பாடிய நூல்களில் கந்தரலங்காரம் ஒன்றே சந்தமும், தாள விசித்திரமும் இல்லாதது. மற்றவை யாவும் சந்தக் கவிகள் அல்லது சித்திரக் கவிகள். வைணவ மரபில் பாரதம் பாடிய வில்லிபுத்தூரரும் இக்காலத்தே வாழ்ந்தார். அவர் நூல் முழுமையும் சந்தத்தினால் புகழ் பெற்றது. திருவாதவூரர் புராணமும் சந்தத்தினால் சிறப்புடையது. அவர் பாடியுள்ள அளவு சந்தப் பாடல்களைப் புராணங்களில் அமைத்து வேறு யாரும் பாடியதில்லை. அவர் பாடிய முதல் பாட்டே சந்தத்துடன் தொடங்குகின்றது. கடவுள் வாழ்த்து முழுமையும் சந்தப்பாடல்; அவர் பாடும் சந்தங்களும் எளியனவாய்ச் செம்பாகமாய்ச் சொல்லையோ சீரையோ சிதைக்காதனவாய் அமைந்துள்ளன. ஆதலால் சிறந்த பக்திமானான அவர் இந்தச் சந்தக் கவிஞர் சூழலில் வாழ்ந்தார் என்று கூறுவது பொருத்தமாகும். அவரும் பக்திக் காவியம் பாடினார்; சந்தக் காவியம் பாடினார். எனவே, அருணகிரிநாதரோடு தொடர்புடையவர் என்று கூறுவதும் பிழையாகாது.

தமிழிலக்கிய சரித்திரத்தை ஆராய்ந்தால் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகையான நூற்போக்கு மேலோங்கி இருந்தமை தெளிவாகும். இலக்கண நூல்கள் அதிகம் செய்யப் பெற்றது ஒரு காலம். உரைகள் செய்யப்பெற்றது மற்றொரு காலம். யமகம் திரிபுகள் அதிகம் இடம்பெற்றது 17-18ஆம் நூற்றாண்டுகள். இவைபோல, சந்தப் பாடல்கள் இடம் பெற்றது 15ஆம் நூற்றாண்டு. ஆதலால் சந்தப் பாடல்கள் அதிகம் கொண்ட திருவாதவூரர் புராணம் பாடிய கடவுள் மாமுனிவர் 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று கருதுவது, பிற வகை யால் செய்யும் முடிவுக்கு ஆதரவாக உள்ளது.

இரண்டாவதாக திருவாதவூரர் புராணத்தில் பயிலும் சில சொற்கள். தமிழ்நாட்டில் 15ஆம் நூற்றாண்டில் முகம்மதியர் ஆதிக்கம் ஏற்பட்டு அது காரணமாக அவர்களுக்குரிய பல சொற்கள் தமிழ் மொழியிலும் ஏறி இலக்கியத்திலும் இடம் பெற்ற நிலையைக் காட்டுகின்றன. சபாஷ், சலாம், ராவுத்தன் முதலான சொற்களை அருணகிரியாரிடம் காணலாம். தொப்பி என்ற சொல்லை நம் முனிவர் எடுத்தாளுகிறார். சோம சுந்தரப் பெருமான் குதிரைச் சேவகனாக வந்தபோது தொப்பி அணிந்து வந்தார் என்கிறார்:

ஒப்பரிய சட்டையும் உடுத்திலகு பட்டும்
தொப்பியும் முகத்திடை துலக்க முளராகிச்
செப்பரு நலங்குலவு செண்டொருகை கொண்டே
இப்படியில் இப்படிவம் யாவருளர் என்ன.

இவருக்கு முந்தி, தொப்பி என்ற சொல் இலக்கிய ஆட்சி பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

மோகரித்தல் என்பது இதுபோன்ற மற்றொரு சொல். மோகரம் ஆரவாரம்; மோகரித்தல் ஆரவாரித்தல்; இச்சொல் லைப் பேராரவாரம் என்ற பொருளில் பெயர்ச் சொல்லாகவும், வினைச் சொல்லாகவும் வில்லிபுத்தூரார் உபயோகிக்கிறார். "விறல் வீமனும் மோகரித்து அவுணரைத் தடிந்து கடன் முளரி நாயகனும் மூழ்கினான்" - பாரதம், வேத்திரகீயச் சருக்கம், 63; "பன்றி பெரு மோகரத் தோடு இன்று உன்தாது பருகியிடுமென மிகவும் பயப்பட்டாயோ!" - அருச்சனன் தவநிலைச் சருக்கம் 95. மோகரித்தல் என்ற சொல் இப்போது தான் புதிதாக ஆட்சிக்கு வருகிறதென்று நாம் அறிகிறோம். இதற்குச் சிறப்பாக இலக்கிய ஆட்சி இல்லை. இச்சொல்லை நம் புராணக்காரர் உபயோகிக் கிறார். மண் சுமந்த கூலியாளாக வந்த நம் பெருமான் மீது பட்ட பிரம்படி தம்மீதும் பட்டது என்று உலகத்தோர் செய்த ஆரவாரம் கடல் முழக்கம் போன்றது என்று கூறுகின்றார்:

எந்த உலகங்களிலும் இருந்துளோர்கள்
 எம்முடலில் அடியுறைத்த தென்றுகூற
முந்தி எழும் பன் மொழிகள் உகாந்தமலை
 மோகரிக்கும் எழு கடலின் முழக்கம் போன்ற.

மோகரித்தல்* என்ற சொல்லின் ஆட்சி நாம் கருதுகின்ற காலப் பகுதியில் தோன்றியிருக்கிறது. அதுவும் குறிப்பிட்ட இப்புலவர் சூழலில் தோன்றியிருக்கிறது என்றால் பிழையாகாது.

இனி மூன்றாவதாக முற்கூறிய சாத்திரங்களில் கண்டசொல் ஆட்சி. உமாபதி சிவத்தினின்று ஒரு புதிய சமயப் பிரவாகம் இருநூறு ஆண்டுகள் வரை பெருகியுள்ளது. 14-15ஆம் ஆண்டு களில் பின்னர் இது வெவ்வேறு வடிவில் தொடர்ந்து வளர்ந்து

---

* மோகரம் என்ற சொல் முகரம் என்ற வட சொல்லின் திரிபு போலும்; முகரம் - கடிய ஒலி: 'முகரப் பாய்மா' - கம்பராமாயணம், யுத்த காண்டம், அதிகாயன் வதைப் படலம் 186; முகரம் - ஆரவாரம்: தக்கயாகப் பரணி 686.

கொண்டு வந்திருக்கிறது. இப்பிரவாகம் எழுந்தபோது, உமாபதியார் சீடர் வழிகளில் பல்வேறு பிரிவுகள் எழுந்து அவற்றுள் எண்ணற்ற துறவிகள் தோன்றினார்கள். அனைவரும் துறவு நிலை பூண்டு காவியுடை அணிந்தமையால் தம்பிரான் என்றும் முனிவர் என்றும் பெயர் பெற்றனர். அவர்களுள் நம் முனிவரும் ஒருவர். இவர் சமய சாத்திரங்களின் தொடர்புகளையும் கருத்துக்களையும் தம் நூலில் நிரம்பப் பெய்திருப்பது இவர் சந்தான ஆசாரியருக்குப் பின் நெருங்கிய காலத்திலேயே வாழ்ந்திருந்தார் என்றும், மெய்கண்ட சந்தான பரம்பரையில் தான் வந்தார் என்றும் கருத இடம் கொடுக்கிறது. எனவே, இவர் காலம் 15ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என முற்கூறியது இதனால் உறுதி பெறுகிறது.

சமயத்துறையில் சைவ சித்தாந்தம் தனிப் பெரும் பிரிவாக உருவெடுத்து மூல நூல்கள் தோன்றி, கிளர்ச்சியும் நூல் ஆக்கமும் உரை விளக்கமும் ஆசாரிய பரம்பரைகளும் ஏற்பட்ட காலம் 13-15 நூற்றாண்டுகள். இப்பகுதிக்குரியவர் நம் முனிவர் என்று கொள்வது எல்லா விதத்திலும் பொருத்தமுடையதே.

இதுகாறும் கூறியவற்றால், திருவாதவூரர் புராணம் செய்த கடவுள் மாமுனிவர் சந்தான ஆசாரிய பரம்பரையில் வந்த முனிவருள் ஒருவர் என்பதும், இவர் 15ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் புகழ் பெற்றிருந்த அருணகிரிநாதர் முதலிய புலவரோடு சமகாலத்தில் வாழ்ந்தார் என்பதும் தெளிவாகும்.

கடவுள் மாமுனிவர் வரலாறு குறித்து யாதும் தெரியவில்லை. மேலே விளக்கியவாறு இவர் சந்தானாசாரியரை அடுத்து அதே பரம்பரையில் வந்த ஒரு துறவியாதல் வேண்டும். முனிவர் என்ற பெயர் இதை உணர்த்துகிறது. திருவாதவூரர் புராணத்தை இவர் அகத்துறை வருணனை எதுவும் பொருந்தாமல் பாடியிருத்தல் இவர் துறவி என்பதை வலியுறுத்தி, வாதவூரரிடத்து இவருக்குள்ள மெய்யன்பையும் புலப்படுத்துகிறது. சைவமலர்ச்சி புதிய உயிரோடு எழுந்து உலவிய காலமாகிய 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர், நாயன்மாருக்கும், சேக்கிழாருக்கும் புராண மேற்பட்டிருக்க, மாணிக்க வாசகருக்குப் புராணமில்லாத குறையை நீக்கவும், அவருடைய வரலாற்றைச் சைவ அன்பர்கள் நன்குணரவும், வரலாற்று வரம்பாக இது பாடினாரெனக் கருதலாம். சாத்திரக் கருத்துக்களின் கருவூலமாய் திருவாசகத்தின் பக்திப் பிரவாகத்துக்கு ஏற்ற பக்திச் சுவை

நிரம்பித் ததும்புவதாய் இவர் பாடியிருக்கிறார். இதுவும் இவர் சந்தானசாரியர் பரம்பரையில் வந்த ஒரு பக்திமான் என்ற கருத்துக்கு அரண் செய்கிறது. மா முனிவர் என்பன இவர் பெருமையை விளக்கப் பிற்காலத்தவர் கொடுத்த அடைகள் போலும். இவரது இயற்பெயர் கூடப் புலப்படவில்லை. கடவுள் என்பது இயற்பெயராக வியலாது. இவரைக் குறித்து வேறு எவ்விவரமும் அறிய இயலவில்லை. (தத்துவராயர் பரம்பரை யில் ஒரு கடவுள் முனிவர் பெயர் வருகின்றது. அம்மரபினர் சமய நிலையே வேறு.)

புராணம் பழைய உரையோடுதான் ஏடுகளில் காணப்படு கிறது. பதிப்பு 1908. திருவருணை சரசுவதி சுவாமிகள் காஞ்சி புரம் குமாரசுவாமி தேசிகர் செய்த பொழிப்புரையை பழைய ஏட்டுப் பிரதிகளோடு ஒப்புநோக்கி பரிசோதித்து அச்சிட்ட தாகக் கூறுகிறது. இதில் சருக்கந்தோறும் பாடல் உள்ளன.

## ஞானவரோதயர்

தமிழில் **உபதேச காண்டம்** பாடினோர் இருவர்; அவருள் முந்தியவர் கோனேரியப்ப நாவலர். பிந்தியவர் ஞானவரோ தய பண்டாரம் என்னும் பெயர் பெற்றவர். இவர் திருச்சிராப் பள்ளிக்கு மேற்கே ஆறு மைல் தூரத்திலுள்ள வயலூரில் வாழ்ந்த சைவத்துறவி. (துறவிகளை அன்றும் இன்றும் பண்டாரம் என்று குறிப்பிடும் வழக்கமுண்டு.) இளமையில் இவர் பள்ளிப் பிரம்படிக்கு அஞ்சிப் பள்ளிக்குப் போகாது வயலூர் முருகப் பெருமான் சிலை உருவத்தின் பின்புறத்தில் ஒளிந்து கொண் டார். இரவெல்லாம் கோயிலில் ஒருவரும் அறியாமல் அடை பட்டுக் கிடந்த இவ்விளம்பிள்ளைக்கு இரங்கி முருகப் பெரு மான் பரஞானத்தையும் கவிபாடும் ஆற்றலையும் அருள் செய் தார். மறுநாள் கோயில் திறந்து வழிபாடாற்றிய சமயம், இவர் இருப்பது தெரிந்து, இவரிடம் விளங்கிய ஞான ஒளியை யும் கவித்திறனையும் கண்டு, பெற்றோரும் மற்றோரும் வியப் படைந்தார்கள்.

பின்னர் இவர் விராலிமலை சென்று, அங்கிருந்த அழகையா என்ற அழகிய மணவாள தேவருடைய ஆணையாலும் முருகன் அருளாலும் அங்கு முருகன் கோயிலை மலைமேல் கட்டினார். பின்னர் இவ்விருவருமே அக்கோயில் பரிபாலகராயிருந்தார்கள்.

ஞானவரோதயர் என்பது இவருக்கு முருகன் அருள் காரண மாக வந்த பெயர் போலும். அவன் கட்டளைப்படியே தாம் **உபதேச காண்டம்** பாடியதாகக் கூறுகிறார்; கூறும் இடத்தி லேயே அருணகிரிநாதருக்கு முருகன் அருள் செய்தமையும் குறிப்பிடுகிறார்:

சங்கு குட வயிறுளைந்து தரள மீன்று
　　தவழ் கழனி வயலூரதனில் எந்தைக்கு
எங்கணுலகும் புகழ உபதேசம் செய்து
　　எளியேற்கும் அவ்வழி என்றிரங்கிச் சீர்த்தி
பொங்கு தமிழ் முனியின் உபதேச காண்டம்
　　புகல்தி எனச் சிறிதருளும் புனிதன் செவ்வேள்
ஐங்கரன் பின்னவன் கந்தன் உமைகோன் மைந்தன்
　　அமரர் பணி குமரனடி அகத்துள் வைப்பாம்.

என்பது இந்நூலின் கடவுள் வாழ்த்து (6) முருகன் துதி. இப் பாடல் ஆசிரியர் இந்நூலை முருகன் கட்டளையால் பாடிய வரலாற்றை ஒருவகையாகத் தெரிவிக்கிறது. மேலும் "வயலூர் தனில் எந்தைக்கு எங்கணுலகும் புகழ உபதேசம் செய்து" என்பது அருணகிரிநாதர் வரலாற்றைக் குறிப்பது. எந்தை என்று கூறுவதால், அருணகிரிநாதர் இவருக்குக் குரு ஆவார் என்று நாம் ஒருபுடை கருதலாம்; வயலூரில் உபதேசம் பெற்றவர் அருணகிரிநாதர்.

இதனோடு, இவ்வாசிரியர் 13ஆம் பாடலில், கந்த புராணத் தைத் தமிழில் பாடிய கச்சியப்பருக்கு வணக்கம் கூறியிருக்கிறார்.

பருதிஎன வருசூதன் உரைத்த காந்தப்
　　பரவையருள் முகிலமுதம் பருகித் தென்னூல்
தருவும்நன் காண்டப் பணையும் படலமான
　　சாகையுலவையும் விருத்தத் தழையும் ஓசை
வருதுணரும் முன்வரமன் ஞிமிறும் ஓங்க
　　வளரொளியாம் பொருட்கனியை வழங்கும் சீர்த்தி
கருதரிய காஞ்சிவளர் கச்சியப்பக்
　　கற்பகத் தாருவையிறைஞ்சிக் கருத்துள் வைப்பாம்.

"காஞ்சி **வளர்** கச்சியப்பர்" என்று கூறியமையால், கச்சி யப்பர் இவர் காலத்தே வாழ்ந்தார் என்றும், ஆகவே இவர் அவரிடம் கல்வி பயின்றிருத்தல் கூடும் என்றும் கருத இடங் கொடுக்கிறது. மேற்குறிப்பிட்ட இரு பாடல்களாலும், ஞானவ

ரோதயர் கச்சியப்பரிடம் கல்வி பயின்ற மாணாக்கர், அருணகிரி நாதரிடம் ஞானோபதேசம் பெற்றவர் என்று கொள்ளலாம்.

இனி, உபதேச காண்ட ஏட்டுப் பிரதியில் எழுதியுள்ள பின்வரும் குறிப்பும் கருதத்தக்கது. "இதில் ஆறு காண்டமும் காஞ்சிபுரம் ஆயிரக்கால் மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும் ஆறுமுகசுவாமி உலகமுட் கொண்டுவப்பச் 'செந்தமிழ்க் கொரு சீர்வரம்பாகிய' என்று பாடச் சொல்லிக் கச்சியப்பருக்கு அனுக் கிரகம் பண்ண, அவர் ஆறு காண்டமும் 10500 பாடினார். பின்பு உறையூருக்கு மேற்கே வயலூரில் எழுந்தருளியிருக்கும் ஆறுமுகசுவாமி "உலகமுட் கொண்டுவப்ப முருகவேள்" என்று பாடச்சொல்ல, ஞானவரோதய பண்டாரம் ஏழாம் காண்டம் உபதேச காண்டமொன்றும் 2600 ஆகப் பாடினார். சங்கர சங்கிதையில் சிவரகசிய காண்டம் 13000 கிரந்தமும் ஏழு காண் டமாகத் தமிழ் பண்ணின பாட்டு 13221. ("செந்தமிழ்க்கு வரம் பெனச் செப்பிய" என்பது கந்த புராணம் - அவையடக்கம் 19ஆம் பாடல். "உலக முட் கொண்டுவப்ப முருகவேள்" என்பது இவ்வுபதேச காண்டத்தின் காப்புச் செய்யுள். இவ்வுபதேச காண்டத்தின் ஏடு எழுதினார் கருத்துப்படி, இரண்டு நூல் களும் ஒரே தொகுதி, ஒன்றையொன்று பூர்த்தி செய்கிறது, இரு ஆசிரியரும் ஒரே காலத்தில் இருந்தவர்கள் என்றாகிறது.)

இனி, தமிழ் நாவலர் சரிதையில் பின்வரும் குறிப்பொன்று காணப்படுகிறது; ஞானவரோதயர் மதுரைக்குப் போனபோது, காளமேகப் புலவர் எழுதி அனுப்பின பாடல்:

> முதிரத்தமிழ் தெரி நின்பாடல் தன்மை முறையறிந்தே
> எதிரொக்கக் கோப்பதற்கேயேழு பேரில்லை இன்தமிழின்
> பதரைத் தெரிந்தெறி கோவில்லை ஏறப் பலகையில்லை
> மதுரைக்கு நீ சென்ற தெவ்வாறு ஞான வரோதயனே.

(சிறப்பான நின் புலமையை உணர்வதற்குச் சங்கப்புலவர் நாற்பத்தொன்பது பேருமில்லை, பாண்டியனுமில்லை, சங்கப் பலகையுமில்லை. நீ எவ்வாறு மதுரைக்குச் செல்கின்றாய்? என் பது இதன் பொருள்.)

இவ்வாறு காளமேகம் ஞானோவரோதயரைப் புகழ்கின் றமையால் இவர் அவருக்குக் குருவாயிருக்கலாமென்று தோற்று கிறது. காளமேகப் புலவர் 15ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்தவர். ஆதலால் அவர் போற்றும் ஞானவரோதயரும்

இதே காலத்தில் வாழ்ந்தவராகலாம். இவருக்கு ஞானாசிரிய ராகிய அருணகிரிநாதர் காலமும் ஏறக்குறைய இதுவே என்று முன்னர் அறிந்தோம்.

இப்புராணம் 2602 செய்யுட்கள் உடையது. 2713 செய்யுட்கள் என்று ஏடுகளில் தொகை காணப்படுகிறது. மற்றச் செய்யுட்கள் கிடைக்கவில்லை. 85 அத்தியாயங்கள். உபதேச காண்டம் முழுமையும் சிவமான்மியங்களைக் கதைகள் மூலமாய் விரித் துரைப்பது. விபூதி, உருத்திராக்கம், ஐந்தெழுத்து, சிவவிரதம், சிவதருமம், சிவபுராணம் ஆகிய மான்மியங்களும் சிவத்துரோக பலனும் கூறப்பட்டுள்ளன. பின்னர் சிவபூசை மான்மியம் என்பது மட்டும் 821 பாடல்களால் விவரிக்கப்பட்டுள்ளது. இறுதியில் வேதாந்த ஞானம், மூர்த்தி மான்மியம் என்ற பகுதிகள் சிறப் பானவை. சுருங்கக்கூறின் சரியையாதி நெறியில் நிற்கும் சைவர் களுக்கு இதுமிகச் சிறந்ததொரு சமயக்கருவூலமாகும். ஞான வரோதயர் என்பது இவருக்குக் காரணப் பெயர் போலும்; இயற்பெயரன்று. முருகனே இவருக்கு அடியெடுத்துக் கொடுத் தான் என்ற வரலாறு சுமார் கி.பி. 1773இல் எழுதப்பட்ட ஓலை யேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் பண்டைய அருட் பாசுரங்களிலும் காப்பியங்களிலும் நன்கு தோய்ந்தவர், வட மொழியும் வல்லவர். சந்த வகைகளும் பாடி இருக்கிறார். நூலில் பல பாடல்கள் அழகான சந்தப்பாடல்கள். பொருட் சிறப்பையே கருதிப் பாடியவர். இவருடைய வாக்கு, எளிமையும் தெளிவும் கொண்டதாய்ப் படிப்போரைச் சிவபுண்ணியத்தில் ஈடுபடுத்தும் நோக்குடையது. முருகப்பிரானிடத்து இவர் ஈடுபாடுமிக்கவர். பாடல் 957 கம்பரின் நிலம் செய்தவம் என்ற பால காண்டப் பாடலைத் தழுவியது. பாடல் 976 புட்பகிரி சிவாசாரியர் மரபு குறிப்பிடுகிறார். பாடல் 1066 தோட்கோப்பு - கட்டுச்சோறு.

“வடமொழி மூலத்தோடு ஞானவரோதயர் நூலையும் கோனேரியப்பர் நூலையும் ஒப்பு நோக்கின், முந்தியது மூலத்தை யொட்டிச் செய்யப்பட்டதாகத் தோன்றும். வாக்கை நோக்கின் கந்த புராணத்தோடு உடன் வைக்கத்தக்கது கோனேரியப்பர் மொழி பெயர்ப்பே.”

### பதிப்பு

வ.சு. செங்கல்வராயப் பிள்ளை, அரசாங்கத் தொன்னூல் நிலைய வெளியீடு, 1950.

## கோனேரியப்பர்

வடமொழி உபதேச காண்டத்தைத் தமிழில் மொழி பெயர்த்த இருவருள் ஒருவர் கோனேரியப்ப முதலியார். இதன் மூலம் மட்டும் 1887இல் கலாரத்நாகரம் அச்சுக் கூடத்தில் வெளிவந்தது. பின்னர் ஈக்காடு இரத்தினவேல் முதலியார் செய்த உரையோடு சஞ்சிகை வடிவத்தில் வெளிவந்து 1913இல் முற்றுப் பெற்றது. இப்பதிப்புக்களில் ஆசிரியர் வரலாறு ஓரளவு சொல்லப்பட்டுள்ளது.

இவர் தொண்டை நாட்டில் காஞ்சி மாநகரில் செங்குந்த மரபில் பிறந்தவர். (ஆழ்வார் திருநகரியில் பிறந்தவரென்று தனிச் செய்யுட் சிந்தாமணி தொகுத்தவர் கூறுவர்; இது பொருந்துவ தாகத் தெரியவில்லை.) தாய் தந்தையர் அமுதாம்பிகை, சிவா னந்த முதலியார் இவர்கள் மகப்பேறின்றி, குகாலய மொன் றமைத்து, அதனருகே ஒரு தீர்த்தங்கண்டு, அதற்குக் கோனேரி என்று பெயரிட்டு, வழிபாடியற்றி வந்தபோது, நெடு நாட்கழித்து ஒரு புதல்வர் பிறந்தார். இவருக்குக் கோனேரியப்பர் என்று பெயரிட்டனர். இவர் முறையாகக் கல்வி கற்று வல்லுநராகிப் பின்னர் தமது குலகுருவும் அக்காலத்துக் குமர கோட்டத்து அருச்சகருமாகிய கச்சியப்ப சிவாசாரியர்பால் சமய தீக்ஷை பெற்றுத் திருமுறைகளும் இதிகாச புராணாதிகளும் ஓதி இரு மொழி வல்லுநரானார். உரிய காலத்தில் விசேட நிருவாண தீக்ஷைகளையும் பெற்று, சித்தாந்த சாத்திரங்களைப் பயின்று, ஆகமங்களை ஆராய்ந்து, சிவத்தியான பரராய் வீற்றிருந்தார்.

அக்காலத்தில் குமரவேள் அருளால் கச்சியப்பர் கந்த புராணம் ஆறு காண்டம் பாடி முடித்து, ஏழாவது காண்ட மாகிய உபதேச காண்டத்தைத் தமிழில் பாடும்படி இவருக்குக் கட்டளையிட்டார். அங்ஙனமே இவரும் சொற்சுவை பொருட் சுவை சிறக்கும்படியாக அப்பகுதியை 4348 செய்யுளாகப் பாடி முடித்தார். ஆசிரியர் விருப்பத்தின்படி குமர கோட்டச் சந்நிதி யில் நூலை அரங்கேற்றினார். அப்போது,

> அன்றாழி நின்றுதித்த ஆரமுதை ஒப்பிடுவர்
> பொன்றாமைக்கே யதுவாம் புந்தி நினைந்து – ஒன்ற
> உகநேரில் தாருவெனல் ஒக்குமலால் வேறென்
> குகனேரி நாவலன்நூற் கு.

என்ற பாடலைப் பாடிக் கச்சியப்பர் இவரை வாழ்த்தினார். ஏனையோர் பாராட்டிக் கூறிய பாடல்கள் பின்வருவன:

மூவர்தமிழ் வேத முதற்பொருளின் முன்பெவையும்
தேவர் தொழச் செப்பிய பின் சேக்கிழார் – பூவலய
மாந்தர்க்கா றங்கமுற வந்த கோ னேரிஎனத்
தீந்தமிழ் செய் தான் உபதேசம்.

சதுமுகனிற் பழமறையோன் கும்ப யோனி
தலைசாய்க்கும் தமிழ்வாணர் தரணி தாங்கும்
மதுவொழுகுந் தார்த் தடந்தோள் மன்னர் சேடன்
மன்பதையன் பொடுகுழைந்து செவியால் மாந்த
உததிகடைந் தெடுத்த அமு தன்ன பாடல்
உயர் தமிழ்ச் செந்தூரில் உப தேச காண்ட
மதுரியன் முத்தமிழ்க்கு நாற் கவிக்கும் வேந்தன்
மாபுலவன் கோனேரி வடித்திட் டானே.

(1887ஆம் ஆண்டுப் பதிப்பு). இதன்படி கோனேரியப்பர் இந் நூலைத் திருச்செந்தூரில் செய்தாராவர். இதற்கு வேறு ஆதாரம் கிடைக்கவில்லை.

கோனேரியப்பர் பல சந்தர்ப்பங்களில் சாதுரியமான பல கவிகள் புனைந்தார் என்றும் சொல்லப்பட்டுள்ளது. ஒரு சமயம் குமரவேள் ஆலயத்தில் பிரமோற்சவம் நடைபெற்றபோது பெரு மழை பெய்து உற்சவம் தடைப்படவே, அது கண்டு இவர்,

கார்க்கும் மழைக்கும் கவலேம் கடுஞ்சிறையால்
சூர்க்குடைந்த நின்னைச் சுகத்திருத்தி – ஊர்க்குள் விழும்
கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்தல்
அந்தமோ ஆகண்ட லா.

என்ற ஒரு பாடல் பாடவே, மழை நின்று, உற்சவம் வழக்கம் போல் சிறப்பாக நடைபெற்றது என்று சொல்வர்.

ஒருபோது முருகக் கடவுளை வழிபடும் பொருட்டுக் குகனேரியப்பர் திருத்தணிகைக்குச் சென்றார். அங்குள்ளார் சிலர், அம்பிறை என்ற மொழி மூன்று இடங்களில் அடுக்கி வரும் படியும் முருகப் பெருமான் பெயரும் வள்ளி நாயகியார் சிறப்பும் அமையவும், பாங்கி தலைவற்குணர்த்துந் துறையில் பின் முடுகு வெண்பாவாக ஒரு செய்யுள் செய்தருளுதல் வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். அவ்வளவில் கேட்டோர் வியக்குமாறு.

அம்பிறைக்கும் ஐந்துமலர் அம்பிறைக்கும் நொந்துமிக
அம்பிறைக்குங் கண்ணாட் கருள்புரிவாய் – நம்புதணி
கைக்கிரிக்கு ளூற்றசித்ர கச்சுடைத்த கைகுறத்தி
யைக் களித்த ணைந்தவத்த னே.

என்று செய்யுளைப் பாடியருளினார்.

சமயத்திற்குத் தக்கபடியாகவும் விரைவாகவும் பாடுவதில் இவர் மிகவும் ஆற்றல் படைத்தவர்.

கோனேரியப்பர் காஞ்சியிலுள்ள பிள்ளைப்பாளையம் என்னும் பகுதியில் வாழ்ந்தமையால், பிள்ளைப்பாளையம் கோனேரியப்ப முதலியார் என்றும் வழங்கப் பெறுவார்.

கோனேரியப்பர் தமது உபதேச காண்டத்துப் பாயிரப் பகுதியில், தம் ஆசிரியர் வணக்கமோ, நூல் மரபோ எதுவும் குறிப்பிடவில்லை. ஆகவே, இவர் கச்சியப்பருடைய மாணாக்கர் என்பதற்கு, வழக்காறுகளையன்றி இவர் வாக்கில் எந்த ஆதாரமும் கிடைக்கவில்லை; காலம் முதலியன எவையும் அறியுமாறில்லை.

எனினும், இன்று கிடைக்கும் வழக்காறுகளையும் ஆதாரங்களையும் வைத்துச் சில முடிவுக்கு நாம் வர முடியும். முன்னமே வரையறை செய்தவாறு கச்சியப்ப சிவாசாரியர் கி.பி. 1400ஐ ஒட்டி வாழ்ந்தார். அவருக்கு மாணாக்கர் இருவர் இருந்தனர். முதியவரும் துறவியுமான ஞானவரோதயர் முதலில் உபதேச காண்டம் பாடினார். இது பொருட் சிறப்புக் கொண்டிருந்த போதிலும், இலக்கிய நலம் சிறப்பாகப் பெற்றிராமையால், இளைய மாணாக்கராகிய கோனேரியப்பர் மீண்டும் ஓர் உபதேச காண்டம் பாடினார்; இது கந்தபுராணத்தை யொத்த இலக்கிய நயம் பெற்றிருந்தது. எனினும், ஆசிரியரான கச்சியப்பர் இரு நூல்கள் தோன்றிய போதும் இரு மாணாக்கரையுமே வாழ்த்தினார்.

இந்த நூற்றாண்டுக்கு முன்னமேயே கோனேரியப்பர் நூல் அச்சாகியிருந்தது (1887). சிறந்த உரையோடு மீண்டும் (1913இல்) அச்சாயிற்று. ஆகையால் மக்களிடையே இதற்குப் பிரசாரம் மிகுதி. ஞானவரோதயர் நூல் இருந்ததே ஆராய்ச்சியாளர் தவிர ஏனையோருக்குத் தெரியாது. அரசாங்கத் தொன்னூல் நிலைய வெளியீடாக இது வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்களால் 1950இல் அழகாகப் பதிக்கப்பட்ட பின்னர்தான் இந்நூல்

இருப்பதே தெரியும். ஞானவரோதயர் கச்சியப்பரோடு சமகாலத்தவராய் வாழ்ந்து நூல் செய்தார் என்றும், கோனேரியப்பர் காலத்தால் சற்றுப் பின்வந்து, கச்சியப்பரின் முதுமையில் இளைஞராயிருந்து நூல் செய்தார் என்றும் நாம் கருதுவது பொருந்துவதாகலாம்.

கோனேரியப்பரின் உபதேச காண்டத்தை வெள்ளியம்பலவாணத்தம்பிரான் (சு. 1700) தம் உரையுள் பல இடங்களில் எடுத்து ஆளுகிறார்.

வடமொழியில் அத்தியாயம் என்ற பிரிவின் தலைப்பைக் கோனேரியப்பர் சருக்கம் என்று கூறுகிறார். வடமொழி உபதேச காண்ட அத்தியாயத் தொகை பாடல் தொகையையும், தமிழ் நூல்கள் இரண்டின் அத்தியாயத் தொகை பாடல் தொகையையும் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

| | வடமொழி | ஞான வரோதயர் | கோனேரி யப்பர் |
|---|---|---|---|
| பாயிரம் | | 13 | |
| கைலாயம் | 1, 2-77 | 1, 2-50 | 1-75 |
| சூரபத்மன் | 3-5-124 | 3-22 | 2-137 |
| மாயை | 6-8-93 | 4-8-113 | 3,4-94 |
| விபூதி | 9-12-221 | 9-12-137 | 5-209 |
| உருத்திராக்கம் | 13-19-372 | 13-19-193 | 6-254 |
| பஞ்சாட்சரம் | 20-22-153 } | 20-26-213 | { 7-138 |
| சிவநாமம் | 23-26-236 } | | { 8-174 |
| சிவவிரதம் | 27-39-432 | 27-38-157 | 9-414 |
| சிவபுண்ணியம் | 40-47-516 | 39-47-336 | 10-426 |
| சிவபுராணம் | 48-118 | 48-79 | 11-57 |
| சிவத்துரோகம் | 49-60-650 | 49-60-356 | 12-504 |
| சிவபூசை | 61-86-1526 | 61-81-802 | 13-38-1669 |
| சரியையாதி | 87-89-112 | 82-84-73 | 39-50 |
| பஞ்சவிம்சதிமூர்த்தம் | 90-44 | 85-53 | 40-35 |
| சிவகாட்சி | 91-100 | | 41-93 |

நூலின் அத்தியாயப் பெயர்களை நோக்கினால், உபதேச காண்டமானது சைவர்களுக்கு எவ்வளவு சிறப்பான சமய நூலாகும் என்பது விளங்கும்.

இவர் தமக்கு அரசன் இட்டிருந்த விலங்கு முறியும்படி பின்வரும் பாடல் பாடினார் என்று தனிச்செய்யுட் சிந்தாமணி தொகுத்தார் கூறுவர்: இது பிழை இது இறைவிடந்தாதியில் 8ஆம் பாடல் - 17 நூற்றாண்டு.

செய்வ தொன்றறிகிலன் செழுமென் போதுதாட்
பெய்வ தொன்றறிகிலன் பேதையேன் சுடர்
வைதிகழ் வேற்படை முருக வன்தளை
கொய்தெனக் கிரங்கியாட் கொள்ள வேண்டுமால்.

இக்கூற்றுக்கு வேறு ஆதாரம் கிடைக்கவில்லை. இந்த வரலாறு பற்றி எந்த விளக்கமும் இல்லை.

## ஐயரவர்கள் குறிப்பு:

கையெழுத்துப் பிரதி விளக்கம், பக்கம். 631.

கோ. முதலியார், கோ - நாவலர் என அழைக்கவும் படுவார். பிறந்த இடம் காஞ்சிக் காலாண்டார் வீதியையடுத்து வடக்கேயுள்ள தெருவாகிய கோனேரிக்குப்பம் என்பது. இதுவே சங்கமங்கலம் என வரும். நாவலர் இதில் தான் இருந்து வந்தார். இதனால் இங்ஙனம் கோனேரிக்குப்பம் எனப் பெயர் பெற்றது. இவர் கச்சியப்ப சிவாசாரியருடைய சிஷ்யர். அவருடைய கட்டளையின்படி உபதேசக்காண்டம் இவராற் செய்யப்பட்டது.

## பதிப்பு

உபதேச காண்டம் மூலப் பதிப்பு, புஷ்பரதச் செட்டியார் 1887. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் உரைப்பதிப்பு, 1913. அனவரத விநாயகம் பிள்ளை கட்டுரை - உபதேச காண்டம், கலைமகள் பத்திரிகை.



*அத்தியாயம் 6*

# சைவ இலக்கிய ஆசிரியர் – 1

## *முன்னுரை*

*தனிப்பட்ட சைவ இலக்கியமானது, சம்பந்தர் காலத்துக்கு முன், திருமூலர் - காரைக்கால் அம்மையார் வாழ்ந்த காலத்திலேயே தொடங்குகிறது. மூவர் பாடிய தேவாரமும், திருவாசகமும் சைவ அருட்பாசுரங்களில் மிக்க உன்னதமான நிலையில் உள்ளன. அக்காலம் முதல், நூற்றாண்டு தோறும் இவ்விலக்கிய வளம் பெருகிக்கொண்டே வந்திருக்கிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார்பாடிய பெரியபுராணமானது, சைவ இலக்கியநெறிக்கு, வேறெதற்குமில்லாத ஓர் ஏற்றம் அளித்தது. அதன் விளைவாக, நாடெங்கும் சைவ நூற்பயிற்சியும், ஆலய வழிபாடும் அடியார் வழிபாடும் பெருகின. சோழ மன்னர் நானூறு ஆண்டுகளாக இடையீடின்றி ஒழுகிவந்த சைவ சமய ஒழுக்கமும் வழிபாடும் ஆலய நிர்மாணமும் சைவத்துக்குப் பேராதரவு தந்தது மட்டுமன்றி, சைவ தத்துவ சாத்திரங்களும் சைவ இலக்கியங்களும் தோன்றுவதற்குத் தூண்டுகோலாயும் இருந்தன. மெய்கண்டார் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தமது சிவஞானபோதம் பாடினார் என்பது இதுகாறும் ஒப்புக்கொண்ட வரலாறு. இந்நூல் சைவ சமயத்திற்கே மூலமான தத்துவசாத்திரம். இந்நூல் பின்வந்த எல்லாச் சமய இலக்கியத்தையும் ஒரு நெறிப்படுத்திற்று. அவர் வழியிலே பல ஞானாசாரியர்கள் தோன்றினார்கள். அடுத்த நூற்றாண்டு வரையில் மெய்கண்ட சாத்திரம் எனப்படும் சித்தாந்த தத்துவநூல் செய்தார்கள். இன்றுவரையில் இச்சமய மரபுக்கு இந்நூல்களே ஆதார நூல்களாய் அமைந்திருப்பதோடு, அடுத்த நூற்றாண்டுகளில் இச்சமயத் தத்துவ அறிவு வளர்ந்து புதுக் கருத்துக்களைக் காணவும் இடம்கொடுத்திருக்கின்றன. இந்த விரிவுகளைப் பதினைந்தாம் நூற்றாண்டில் பார்க்கிறோம்.*

மெய்கண்டாருக்குப் பின் அவர் சமய பரம்பரை ஞான மார்க்கத்தில் பல புதிய பிரிவுகளாக இக்காலத்தில் கிளைத்து வளர்ந்தது. மடங்கள் அடுத்த நூற்றாண்டில் ஏற்பட்ட போதிலும் அவற்றிற்கான ஆசாரியர்கள் பல பிரிவுகளாக இக்காலத்தில் வாழ்ந்தார்கள். சம்பந்த முனிவர் வழியாகப் புதிதாய் ஒரு பரம்பரை பிரிந்து வேறுபட்டு வளர்ந்தது. இந்நூற்றாண்டு முழுமையிலும் அம்மரபில் தோன்றிய ஆசிரியர்கள் நூல் செய் திருக்கிறார்கள். அம்முனிவர் வழியாகவே மற்றொரு பரம்பரை காவை அம்பலநாதத் தம்பிரான் என்பவரோடு தொடங்கிற்று. இவர் சிறப்பமைந்த ஆசாரியர் போலும். இவர் பலவான சிறு நூல்கள் செய்திருக்கிறார். பின்னும் சில நூல்கள் இருந்துமிருக் கலாம். இப்போது கிடைப்பவற்றைப் பார்க்கும்போது இவர் செயல்களில் இரண்டு வகை புலப்படுகிறது. ஒன்று முன்னோர் நூலுக்கு இவர் அமைத்துக் கொடுத்த வரம்பு. சிவப்பிரகாசக் கொளு முதலியன இதை உணர்த்தும். மற்றோர் இயல்பு சாத்திர தத்துவ நுட்பங்களை இவர் வளர்த்தமையாகும். பிராசாதம், சத்திநிபாதம் ஆகிய பெயரில் இவர் எழுதியுள்ள அகவற்பாக்கள் இதற்கு எடுத்துக்காட்டு. உருப சொரூப அகவல் என்பதும் இத்தகையதே. இவர் போலப் பிற்காலத்தில் தத்துவ நுட்பங் களைக் காணமுயன்றார், அல்லது வகுத்து அமைத்தோர் அரியர். இவர் மரபில் பின் வந்தோர் சிலர் சிறந்த உரையாசிரியர்களாக விளங்கியிருக்கின்றார்கள். மதுரை ஞானப்பிரகாசர், சிவப்பிர காசர் என்போர் இத்தகையோர். இக்காலத்தில் இச்சமய ஆசிரி யரிடையே வடமொழி அறிவும் சிறந்து விளங்கிற்று. களந்தை ஞானப்பிரகாசத் தம்பிரான் ஆகமங்களின் சுருக்கமாகச் சகலாகமசாரம் என்ற ஒரு நூல் பாடி இருப்பது இக்கருத்துக்குச் சிறந்த சான்று.

தமிழில் தனியாகச் செய்யப் பெற்ற பண்டைத் தருக்க நூல்கள் இல்லை. களந்தைத் தம்பிரான் சில நூல்கள் செய் திருந்தார் போலும். அவை இன்று கிடைக்கவில்லை.

இங்ஙனமாக, இந்த நூற்றாண்டில் சைவ சமயத்துறையில் சிறப்பான இலக்கியங்களையும் இலக்கிய நெறிகளையும் செய் திருக்கிறார்கள் என்று அறிகிறோம்.

இவை அன்றி, புராண இலக்கியங்களும், பிரபந்த இலக் கியங்களும் மிகப் பல தோன்றின. இவற்றை அவ்வத் தலைப்புக் களில் ஆராய்வோம்.

## திருநெறி விளக்கமுடையார்

சம்பந்த முனிவரின் மாணாக்கர் பலர் என்று நாம் கண்டோம். அவர்களுள் ஒருவர் தத்துவ விளக்கம் பாடிய ஆசிரியர் சம்பந்த சரணாலயர். அவரிடம் ஒரு மாணாக்கர் உபதேசம் பெற்று வாழ்ந்தார். இவரே திருநெறி விளக்கம் செய்தார் என்று சம்பந்த சரணாலயர் வரலாற்றில் அறிந்தோம். இவர் பெயர் தெரியவில்லை; ஆனால் நூல் மட்டும் புண்ணிய வசமாக இப்போது நமக்குக் கிடைக்கிறது.*

இந்த நூல், சிறந்த பண்டைய உரையாசிரியராகிய மதுரைச் சிவப்பிரகாசர் மிகவும் வியந்து பாராட்டுகிற நூல்களில் ஒன்று. அவர் கருத்துப்படி, இந்நூற்பாடல்கள் நூறும் சிவப்பிரகாசப் பாடல்கள் நூறுக்கும் நேரான கருத்தைத் தெரிவிக்கும் பாடல்களைக் கொண்டதாகும். "இந்தத் திருநெறி விளக்கம் பின்னூலாயிருக்க, இதனை எடுத்துக் காட்டியதேதென்னில் இந்தச் சிவப்பிரகாசத்துக்குப் பின்சென்ற நூலாகையால் சத்தம் வேறுபட்டும் அர்த்தம் ஒன்றுபட்டும் வருகையாலே அது காட்ட வேண்டியதென அறிக. இந்த நூலில் இவை வந்த இடமெல்லாம் இதுவே கருத்தென்பது கண்டு கொள்க" என்று எழுதுகிறார்.

---

* இந்நூல் இன்று அச்சாகிக் கிடைக்கக்கூடிய நிலையில் இருப்பதே ஒரு சுவையான வரலாறு. 1940இல் மதுரைச் சிவப்பிரகாசர் செய்த சிவப்பிரகாசவுரையைச் சைவசித்தாந்த மகாசமாஜப் பதிப்பக வெளியிடும் பொறுப்பை யாம் மேற்கொண்டிருந்தோம். நூலின் அனுபந்தமாக உரையாசிரியர் பற்றி மூன்று பக்கம் கொண்ட ஒரு சிறிய குறிப்பு எழுதிச் சேர்த்தோம். அதில் திருநெறி விளக்கம் பற்றிக் குறிப்பிட்டோம். அடுத்த ஆண்டு தருமபுரம் ஞான சம்பந்தம் பத்திரிகையில் சிவப்பிரகாசர் உரையால் இந்நூலில் தெரியவந்த ஆறு பாடல்களை விளக்கி இத்தகைய அரிய நூல் கிடைக்கச் சைவ மக்கள் முயலவேண்டும் என்றும் எழுதியிருந்தோம். பின்னர் தி.கி. நாராயணசாமி நாயுடு அவர்கள் முயன்று தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தில் ஏடு பார்த்துப் பிரதி செய்வித்துச் சித்தாந்த இதழ்களில் (1959 - பக்கம் 347, 1960 - 315, 377) வெளியிட்டார். இதன்பின், இதைப் பிறர் போற்றுவதையறிந்து இராம. கோவிந்த சாமி பிள்ளை உரையோடு இது 1963இல் தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாக வந்தது.

இந்நூல் 117 விருத்தங்களுடையது. முதல் இருபாடல்கள் எண்சீர். ஏனையவை அறுசீர் ஆசிரிய விருத்தங்கள். 12, 117 பாடல் களில் ஆசிரியரே நூற் பெயரைக் கூறுகிறார். சிவப்பிரகாசம் என்ற பெயரின் அமைப்புப் போலவே இங்கும், "இதன் பேர் முத்திக்கான திருநெறி விளக்கம்" என்று கூறுகிறார். இந்த நூல் மிகச்சிறந்த சாத்திர நூல். அக்காலத்துச் சைவ சித்தாந்த இலக்கிய மரபு அறிவதற்கும் இது அருந்துணையாய் உதவுகிறது. ஆசிரியர் இங்கு, விநாயகர், நடராசர், சிவகாம சுந்தரி, சம்பந்தர், அப்பர், சுந்தரர், வராவூரர், திருத்தொண்டத் தொகை கூறும் சிவனடி யார், சம்பந்த சரணாலயர், சேக்கிழார், சிவாலய முனிவர் என் போருக்கு வணக்கம் செலுத்துகிறார். இவ்வாறு இவர் சம்பந்த சரணாலயர் சிவாலய முனிவர் என்ற இருவரையும் போற்று வதை நாம் ஆராயும்போது, இவ்விருவர் வரலாற்றோடு வேறு பல செய்திகளும் நன்கு விளங்குகின்றன. இவற்றை 14ஆம் நூற் றாண்டு வரலாறுகளில் ஆராய்ந்தோம்.

இந்நூலின் அமைப்பே தமிழில் புதிதானது. சிவப்பிரகாசப் பாடல்கள் நூற்றையும் எடுத்து அதிலுள்ள சொற்களையும் தொடர்களையும் அப்படி அப்படியே வைத்து இவ்வாசிரியர் புதிய விளக்க நூல் செய்திருக்கிறார். ஆங்காங்கு நுட்பங்கள் புலப்படுகின்றன. சிவப்பிரகாசத்தை விளக்கவேண்டும் என்று இவ்வாசிரியர் கருதியதே சிறப்பு; அதனினும் சிறப்பு இவர் விளக்கியிருக்கும் முறை. சைவ மக்கள் சிவப்பிரகாசம் பயிலும் போது, இந்நூலையும் உடன் வைத்துப் பயிலுதல் மிக்க தெளிவு தருவதாயிருக்கும்.

இனி, இந்நூலின் இறுதியில் ஏட்டில் காணப்படும் ஒரு வெண்பா இங்கு குறிப்பிடத்தக்கது:

> வாழிபுகழ்க் காழிநகர் வாழிதிருத் தண்டைக்கால்
> வாழிதிருக் கண்ணுடைய வள்ளல்தான் – வாழி
> சுருதி தொடர்ந்தபெருந் தோணியிறை வாழி
> திருநெறிக் கான திரள்.

இப்பாடலால் இந்நூலாசிரியர் கண்ணுடைய வள்ளல் என்ற கருத்து சிலருக்குண்டு. இது பொருந்துவதன்று. இப்பாடல் கண்ணுடைய வள்ளலை வாழ்த்துகிறது; திருநெறிக்கான திரள் என்பது அடியார் கூட்டம். தஞ்சை சரசுவதி மகாலிலுள்ள ஒரே

ஏடுதான் திருநெறி விளக்க ஏடு. இது சீகாழியிலிருந்து* வந்த ஏடு. ஆகவே அங்கு ஏடெழுதினோர், தங்கள் ஞானாசிரியர்களுள் ஒருவரான கண்ணுடைய வள்ளலைப் போற்றி ஒரு பாடல் செய்திருந்தார்; இப்படிச் செய்வது எங்குமே காண்கின்றதோர் இலக்கிய மரபு. ஆதலால் இப்பாடல் நூலாசிரியர் பெயரைக் குறித்ததென்று கருத அவசியமில்லை. மேலும், கண்ணுடைய வள்ளல் நடையும் செய்யுட் போக்கும் வேறு வகையான கருத்தமைதி கொண்டவை. இப்பாடல்களோ பூரணமாய்ச் சிவப்பிரகாசத்தைத் தழுவியே வந்தவை. இவை கண்ணுடைய வள்ளல் பாடலாயிருக்க வியலாது. சம்பந்த சரணாலயர் என்ற அவருடைய பழைய நிலையில் உபதேசம் பெற்ற மாணாக்க ரொருவர் செய்தது என்பது பொருந்தக் கூடியதே.

மேலும், மதுரைச் சிவப்பிரகாசர் இந்நூலை எடுத்துக் காட்டும் முறை முன் கூறப்பட்டது. அவரோ, உத்தமமான சைவ சித்தாந்த நூலையன்றிப் பிறவற்றைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டார். ஆனால் பிற்காலத்தில் சைவ சித்தாந்த பரம்பரையில் வந்து நூல் செய்து, தம்பிரான் என்று பெயர் படைத்திருந்தோர் சிலர், பிற மத நூல்கள் பலவற்றைத் தம் உரைகளில் விரிவாக எடுத்துக் கூறுவதை நாம் காண்கிறோம். பிற்காலச் சைவ சித் தாந்தியொருவர் நம்மாழ்வார் பாடல், தத்துவராயர் பாடல், வீர சைவ நூல்கள் போன்றவற்றையும் விரிவாகத் தம் உரையுள் காட்டுகிறார்.❖ ஆனால் நம் சிவப்பிரகாசரோ தம் மத நூலன்றி, பிற மத நூலைக் கூறுவது இழுக்கு என்று கருதுபவர். பொது வாக இதுவே இலக்கிய மரபுங்கூட. **திருநூற்றந்தாதி** உரை யாசிரியர், வாமன முனிவர் போன்ற சைன சமயப் பெரியார், தங்கள் உரைகளில் தம்மதக் கிரந்தங்களைச் சொல்கிறார்களே

---

* சில ஆண்டுகளுக்கு முன், சீகாழி சென்று, அங்கு பெருநிலக் கிழாரும், சிறந்த சைவ சாத்திர அறிஞரும் ஆக இருந்து, திருவாவடுதுறைப் பண்டார சாத்திரங்களைப் பதிப்பித்த சிதம்பரநாத முதலியாரின் புதல்வரைச் சந்தித்துப் பேசிக் கொண் டிருந்தபோது, அவர் தங்களிடமிருந்த ஏடுகளைப் பராமரிப் போரின்மையால் தஞ்சை சரசுவதி மகாலுக்குக் கொடுத்து விட்டதாகக் கூறினார். அவ்வாறு கொடுக்கப்பட்ட ஏடுகளில் இத்திருநெறி விளக்கமும் ஒன்று. அவ்வேட்டைத் தவிர வேறெங்கும் இதற்கான ஏட்டுப் பிரதி இருப்பதாகத் தெரியவில்லை.

❖ வெள்ளியம்பல வாணத் தம்பிரான்.

யன்றிப் பிறநூல்களைச் சொல்வதில்லை; திருக்குறளை மட்டும் தம் வேதமாய்க் கருதி 'எம்மோத்து' என்பார்கள்.

சிவப்பிரகாசரும் இந்தச் சீரிய நெறியில் வந்தவரே. இவர், அக்காலத்தே பிரசித்தமடைந்திருந்த கண்ணுடைய வள்ளலையோ அவருடைய நூல்களில் பெருஞ் சிறப்புடையதாகிய ஒழிவிலொடுக்கத்தையோ குறிப்பிடவில்லை; ஆனால் திருநெறி விளக்கத்தை மிகவும் புகழ்ந்து கூறுகிறார். இதனால், இவர் கருத்து கண்ணுடைய வள்ளல் சைவ சித்தாந்தியல்ல என்பதும், திருநெறி விளக்கம் சிறந்த சைவ சித்தாந்த சாத்திரம் என்பதுமாகும். எனவே, திருநெறி விளக்கம் செய்தவர் கண்ணுடைய வள்ளல் அல்லர் என இவர் கருதினார் என்பதும் தெளிவு.

சம்பந்த சரணாலயர் கண்ணுடைய வள்ளல் ஆனபின் செய்த நூல்களையும் அவர் வரலாற்றையும், வள்ளல் பரம்பரை என்ற அத்தியாயத்தில் காண்போம்.

## சத்திய ஞான பண்டாரம்

சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத்தமிழ் என்ற பெயரோடு தஞ்சை சரசுவதிமகால் புத்தகசாலை வெளியீடாக ஒரு பிள்ளைத் தமிழ், மூன்று பிள்ளைத் தமிழ் அடங்கிய பிரபந்தத் தொகுப்பில் ஒன்றாக, 1950இல் வெளியிடப்பட்டது. இதன் ஆசிரியர் பெயர் சிதம்பரநாத முனிவர்.* வழக்கம்போல் 100 பாடல்களும் இறுதியில் ஒரு வாழ்த்துப்பாடலும் இதனுள் காணப் பெறுகின்றன. பதிப்பில் பிழைகள் மிகவும் மலிந்துள்ளன. எனினும் இந்த நூலிலிருந்து பல செய்திகளை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

இதிலிருந்து மட்டும் தெரிகின்ற செய்திகள் பின்வருவன: இச்சத்திய ஞான பண்டாரம் சிதம்பரநாதர் என்றும் மாசிலாமணி என்றும் பெயர் பெறுகின்றார். "சத்திய ஞான விசித்திர தேசிக, கருணை மாசிலாமணி முனிவ, தமிழாபரணா" என்பன இங்கு பயில்கின்ற தொடர்கள். "சிதம்பரநாத நின் பங்கயத்தாள் பரவுந் தொழும் பனுனக் கமுதம் பழுத்த தமிழ் - மாலிகை நறும்பூந்தாரிற் புனைய வந்தனன்" என்று பிள்ளைத் தமிழ் ஆசிரியர் கூறுகிறார். இந்தச் சத்தியஞான முனிவர் பிறந்தது

---

* முதல் பதிப்பில் ஆசிரியர் பெயர் தெரியவில்லை என்று உள்ளது.

சிவபுரம். "சிவபுரி நகர் வருதவ முனிவரர் பதி கொட்டுக சிறு பறையே" (80) என்பது காண்க. பின்னர், பொருநை யாற்றின் கரையில் அமைந்த வேளை நகர் என்ற ஊரில் வளர்ந்தவர். பொருநை வளநாட்டு அமுதே (27), பொருநை சூழ்வேளை நகராள (16, 74), பொருநையும் புடையுடுத்து ஓங்கிவளர் வேளை நகராளி (35), தமிழ் பயில் வேளை நகர்க்கொரு தருவே (25), வேளை வளநகர் வழுத்து முகில் (61) முதலான தொடர்களைக் காண்க. அங்கு வாழ்ந்தவர், பின்னர் சிற்றம்பல நாடிகளுடைய மாணாக்கரின் மாணாக்கரான காவை அம்பலநாதத் தம்பி ரானுக்கு மாணாக்கராகி அவர் காலத்தின் பின் திருவாரூர் சென்று புகழோடு நெடுங்காலம் வாழ்ந்திருந்தார். நூல் முழுமை யும் "கமலை நகர் வாழும் சத்தியஞானி" என்றே இவர் சொல்லப் பெறுகின்றார். சைவ சித்தாந்த குருதேசிகன் ஆரூரன், மாசிலா மணி (1), கமலைவாழ் ஆகமவரோதயன் (4), கமலை மாசிலாமணி என்னும் சித்தாந்த தேசிகன் (6), பொன்னி வளநாடன் (36), காவிரி யாற்றுக்கதிபா (85) - இவை போல்வன மிகப்பல.

இவர் பிறந்த ஊர் சிவபுரம் என்று இப்பிள்ளைத் தமிழ் மட்டுமன்றி, வேறிரு நூல்களும் குறிப்பிடுகின்றன. இவர் மாணாக்கரான களந்தை ஞானப்பிரகாச பண்டாரம், தாம் செய்த தசகாரியத்தில் குரு வணக்கமாகச் செய்த பாட்டில்,

> பேரூரும் திருவுருவும் கொண்டு பூவிற்
> பேசுபுகழ்ச் சிவபுரத்தில் வந்த பெம்மான்
> பாரோர்கள் புகழவரும் சத்திய ஞானி.

என்று பாடுகிறார். சிவபுண்ணியத் தெளிவு என்ற நூலின் பெயர் விளங்காத ஆசிரியர், கண்கட்டி மடம் என்னும் குகை மடம் மறை ஞான தேசிகரின் மாணாக்கர். இவர் சத்தியஞானி வணக்க மாகத் தம் நூலில் ஒரு பாடல் பாடியுள்ளார்:

> முத்திசேர் சிவபுர முதல்வன் எம்மையாள்
> சத்திய ஞானி தன் சரணம் போற்றுவாம்.

அதில் சிவபுர முதல்வன் என்று குறிப்பிட்டிருப்பதும், சத்தியஞானியின் பிறந்த ஊர் சிவபுரம் என்றே காட்டுகிறது. இம் மறைஞான தேசிகர் சத்திய ஞானியின் மாணாக்கரான களந்தை ஞானப்பிரகாச பண்டாரத்தின் சீடர். எனவே சிவ புண்ணியத் தெளிவின் ஆசிரியர் தம் குருவின் முன்னோரான

சத்திய ஞானியை நேரில் கண்டோ அல்லது அவர் பெருமையைத் தம் ஆசிரியர் மூலம் உணர்ந்தோ இங்கு வணக்கம் சொல்லி யிருக்கிறார் என்று நாம் கருதவேண்டும்.

மற்றொரு செய்தியும் இங்கு அறியத்தக்கது. சிவபுரத்தில் இதே காலத்தில் சிவஞானிகள் பலர் தோன்றியிருக்கிறார்கள். இவ்வூர் குடந்தையருகே உள்ளதொரு பாடல் பெற்ற சிவத்தலம். இவ்வூரில் சம்பந்த முனிவரின் (1375) மாணாக்கராய் ஒரு ஞானப் பிரகாசர் (1425) இருந்தார். இவர் மாணாக்கராய் இவ்வூரிலேயே தத்துவப் பிரகாசர் தோன்றி (1475) ஆசாரியராய் விளங்கினார். இவ்விருவரும் சிற்றம்பல நாடிகள் சந்ததியில் வந்து தருமபுரம் மடத்தின் பூர்வாசாரியர்களாக முறையே வாழ்ந்தவர்கள். ஏறக் குறைய இதே காலத்தில் இவ்வூரில் சத்தியஞானி என்ற பெய ரோடு மற்றொரு சிவஞானியும் தோன்றினார் என்ற வரலாறு எல்லா வகையிலும் பொருந்துவதாகும்.

இவர் சைவசமயப் பரிபாலனம் செய்தார்-வளவர் வட நாடவர் சிவசமய பரிபால மாசிலாமணி (51), பொதியத் தமிழ் உணரும் சைவப் பெருமாள் (53) சித்தசித்து உணர்போதவித்து சத்தியஞானி (71) முத்தி அருள்புரி சத்தியஞானி (76). இனி இவருடைய மாணாக்கர் வரலாற்றையும், குடும்ப வரலாற்றை யும் இரண்டு பாடல்கள் குறிப்பிடுகின்றன.

> கண்ணிற் சிறக்கும் ஆகமம் உணர்ந் தினியதச
> காரியம் தமிழினிற் செய்
> களந்தைவரு ஞானப்ரகாசன் உல கத்தவர்கள்
> கருதரு சிவப்ரகாசம்
> பண்ணிற் சிறக்குமுரை எழுதும் அன்பூர் அவனி
> பரவு ஞானப்ர காசன்
> பகரரிய இருவரும் தலைவணங்கக் கருணை
> பாலிக்கும் ஒரு குரவனே. 52

இதனால் நாம் பெறுவது இவரிடம் ஞானப்பிரகாசர் இருவர் உபதேசம் பெற்றார்கள், ஒருவர் ஆகமம் உணர்ந்து தசகாரியம் தமிழில் செய்த களந்தை ஞானப்பிரகாசர், மற்றவர் கருதரிய சிவப்பிரகாசத்திற்குச் சிறந்த உரை எழுதிய ஞானப்பிரகாசர். தசகாரியம் இன்று அச்சில் உள்ளது. ஞானப்பிரகாசர் சிவப் பிரகாச உரை இன்னும் அச்சாகி வெளிவரவில்லை. இவ்விரு ஞானப்பிரகாசர் வரலாறும் இப்பாடல் குறிப்பிடுகின்றது. சிறப்பு

மிக்க இவ்விருவருக்கும் சத்தியஞான பண்டாரம் கருணை மிக்க குருவாய் இருந்தார். இவர்களன்றி, இப்பிள்ளைத் தமிழ் பாடிய பெயர் தெரியாத ஆசிரியர் அவருக்கு மூன்றாவது மாணவர் ஆகிறார். (அன்பூர் - அன்பு பொருந்திய; அன்பூர் ஊர் எனின் இது மதுரையையடுத்ததோர் ஊராகலாம்.)

இனி மற்றொரு பாட்டு:

**தமிழொப் பிலா மணிக்குப்**
**பெருகும் புகழ்நன் மருகன்எனும்**
**பேரும்தையல் பாகமுனி**
**பின்னே உதிக்க முன் உதித்த**
**பெருமான் என்னும் பேரும்உளம்**
**உருகும் உலகம் துதித்தேத்தி**
**உரைக்க இசைந் தாய். 47**

இந்த வரிகளால் நாம் அறிவது, இச்சத்தியஞான பண்டாரம் ஒப்பிலாமணி என்ற புலவருக்கு மருகராகவும், தையல் பாகமுனி என்ற புலவருக்குத் தமையனாராகவும் வாழ்ந்திருந்தார். மருகர் என்றதனால் இவர் இல்லறத்தார் என்று அறிகிறோம். வேதாகமத்தின் பொருள் உணர்ந்த வேதாரணியன் உயிர்த்துணையே என்று மற்றோரிடத்தில் வருவதால் (27), இவர் காலத்தில் வேதாரணியன் என்ற பெயருடைய சமயப் பெரியார் ஒருவர் சிறந்து விளங்கினார் என்றும், அவருக்கு இவர் உயிர்த் துணைவராய் இருந்தார் என்று அறிகிறோம்.

இனி, கமலை சத்தியஞான சிதம்பரநாத மாசிலாமணி பண்டாரம் என்று இவருக்குப் பெயர் சூட்டியமையால், இவரே தருமை குருஞான சம்பந்தரின் குருவாகிய கமலை ஞானப் பிரகாசர் என்ற ஒரு குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. அவருக்கும் சிதம்பரநாத மாசிலாமணி என்ற பெயர் உண்டு. ஆனால் அவர் வேறு; அவரினும் பார்க்க, நாம் காணும் சத்தியஞான பண்டாரம், காலத்தால் ஒரு நூறு ஆண்டேனும் முற்பட்டவராவார். கமலை ஞானப்பிரகாசர் காலம் கி.பி. 1566. சத்தியஞான பண்டாரத்தின் மாணாக்கரும் உரைகாரருமான ஞானப்பிரகாசரின் மாணாக்கர் மதுரைச் சிவப்பிரகாசர் என்பவர் கி.பி. 1488இல் மற்றொரு சிவப்பிரகாச உரை எழுதினார். இதிலிருந்து பார்த்தால், சத்தியஞானி காலம், குறைந்தது 50 ஆண்டு முற்பட்டது என்று கொண்டாலும் கூட, கி.பி. 1440ஆகும். இதற்கும் கமலை ஞானப்

பிரகாசர் காலத்திற்கும் கால இடைவெளி அதிகம். இருவரும் ஒருவராகார். மேலும் களந்தை ஞானப் பிரகாசரிடத்துக் கல்வி பெற்ற மறைஞான சம்பந்தருடைய நூல்களில் ஒன்றாகிய முத்தி நிலை என்ற நூலை மறுத்துத் தருமைக் குரு ஞான சம்பந்தர் முத்தி நிச்சயம் என்றொரு நூல் எழுதினார். சத்திய ஞானியே கமலை ஞானப் பிரகாசராய் இருப்பாரேயானால் மறைஞான சம்பந்தரும், குருஞான சம்பந்தரும் ஒரே உபதேச பரம்பரையில் வந்தவராவர். ஆகவே முன்னவரைப் பின்னவர் மறுத்து எழுத நியாயம் இராது.

ஒரு கால் சத்திய ஞானி கமலையில் குடியேறியபின் அவர் பரம்பரையிலேயே கமலை ஞானப்பிரகாசர் தோன்றியவரா யிருக்கலாம். இவர்கள் துறவிகளல்லர், இல்லறத்தார். சிதம்பர நாத மாசிலாமணி என்பது புத்திர சந்தானத்தில் தரிக்கும் குடும் பப் பெயராய் இருக்கலாம்.

அன்றியும், பிள்ளைத் தமிழில் இவரைக் குறிப்பிடும்போது ஓரிடத்திலும் கூட ஞானப் பிரகாசர் என்ற பெயர் வரவில்லை. 52ஆம் பாடலில் இரண்டு ஞானப் பிரகாசர் சீடராய் இருந்தனர் என்று குறிப்பிடினும், இவர் பெயரும் ஒரு ஞானப் பிரகாசர் என்று சொல்லவில்லை. ஒரு கால் இது இவருக்கு ஆசாரியத் தன்மை சிறந்து விளங்கிய பிற்காலத்தில் அமைந்த ஒரு பட்டம் என்று கருதினாலும், ஞானப்பிரகாசர் வரலாற்றில் ஓரிடத்திலும் அவர் 'பொருநை சூழ் வேளை நகரினர்' என்பது குறிப்பிடப் படவில்லை. அவர் தந்தை திருவாரூர் செட்டித் தெரு ஞானப் பிரகாசர் என்றும், இளமையில் சிதம்பரநாதன் என்று பெயர் வைத்திருந்த அவர் புதல்வர் பின்னால் ஞானப்பிரகாசர் ஆனார் என்றுமே வரலாறு கூறும். இதனாலும் இருவரும் வெவ்வேறு என்ற கருத்து உறுதியாகிறது.

இங்ஙனமாக, இப்பிள்ளைத் தமிழின் ஆசிரியர் பெயர் சிதம்பரநாத முனிவர் என்பது பாடல் 58இல் சிதம்பரநாதர் பாட்டு என்று உள்ளதன் மூலம் அறியமுடிகிறது. இந்நூல் சைவ ஆசாரியர் - இலக்கிய ஆசிரியர் பரம்பரையில் பல செய்திகளை விளக்குவதாக உள்ளது. நூலும் சொல் நயமும் தொடை நயமும் பொருள் நயமும் பொருந்தியது. சத்தியஞானி "வைய முழுதும் அளித்தாலும் மறந்து நரரைத் துதியாதான்" என்று (58) சொல்லி யிருப்பது சிறப்பு.

இனி, மதுரைச் சிவப்பிரகாசர் சிவப்பிரகாசத்துக்கு எழுதிய உரையின் அவதாரிகையால் காவை அம்பலநாதத் தம்பிரான் முதல் சிவப்பிரகாசர் வரையுள்ள பரம்பரை வரலாறு விளக்க மாகிறது. தாம் இத்தம்பிரான் மரபில் மதுரை ஞானப்பிரகாச ருடைய மாணாக்கர் என்று சிவப்பிரகாசர் எழுதுகிறார். சத்திய ஞானியின் மாணாக்கர், களந்தை ஞானப் பிரகாசர், மதுரை ஞானப்பிரகாசர் என்ற இருவர் என்றும் கண்டோம். எனவே, சத்தியஞானி, தம்பிரானது பரம்பரையில் வந்தவராகிறார். மேலும், தம்பிரான் காலம் 1375-1400 என்று முன்னமே முடிவு செய்தோம். சிவப்பிரகாசம் உரை செய்த காலம் கி.பி. 1488. ஆதலால் இம்மாணாக்கர் பரம்பரைக்குப் பின்வருமாறு கால வரையறை செய்வது பொருத்தமாயிருக்கும். காவை அம்பல நாதத் தம்பிரான் 1375-1400; அவர் மாணாக்கர் சத்தியஞானி 1400-1450; அவர் மாணாக்கர் இருவர், களந்தை ஞானப் பிரகா சரும் மதுரை ஞானப்பிரகாசரும், 1450-1475; மதுரைச் சிவப் பிரகாசர் 1475-1500 (1488). ஒரு கால் காவைத் தம்பிரானுக்கும் சத்திய ஞானிக்கும் இடையில் மற்றொரு தலைமுறை ஆசா ரியர் இருந்துமிருக்கலாம்.

களந்தை ஞானப்பிரகாசருடைய மாணாக்கர் கண்கட்டி மறைஞான சம்பந்தர் 1548-1555இல் புராணங்கள் செய்தார் என்று 16ஆம் நூற்றாண்டுப் புலவர் வரலாற்றால் அறிகிறோம். மிகப் பலவான சமய நூல்கள் செய்த இவர் நீண்ட ஆயுளோடு வாழ்ந்திருக்கிறார். களந்தை ஞானப்பிரகாசர் 1500க்கு மேலும் வாழ்ந்தவராகவும், மறைஞான சம்பந்தர் 1500க்கு முன்னமே பிறந்து 1575க்கு மேலும் வாழ்ந்தவராகவும் கருதுதல் வேண்டும். சத்தியஞானி நூல் எழுதியதாகத் தெரியவில்லை.

(கண்கட்டி மறைஞான சம்பந்தர் குகைமடத்தில் வாழ்ந்த காரணத்தால் குகை-மறைஞான சம்பந்தர் என்ற பெயரும் அவருக்கு உண்டு. அவரையே சிவ புண்ணியத் தெளிவின் ஆசிரியர் பாயிரப் பகுதியில் துதிக்கிறார். இம்மறைஞான சம்பந்தரின் சீடர் மறைஞான தேசிகரென்பவர், சிவஞான சித்தியாருக்கு உரை எழுதியிருக்கிறார். ஆகவே, அவ்வுரை காரரே சிவபுண்ணியத் தெளிவு பாடினார் என்று நாம் கருதுதல் பொருந்துவதாகும்.)

## களந்தை - ஞானப்பிரகாச பண்டாரம்

ஞானப்பிரகாசர் என்ற பெயருடைய துறவிகள் பலர் மெய் கண்டார் காலத்தின் பின் மூன்று நூற்றாண்டுகள் வரை சைவ உலகத்தில் புகழோடு விளங்கியிருக்கிறார்கள். அவர்களுடைய ஞான பரம்பரை, அவர்கள் செய்த நூல்கள் முதலாயின சைவ நூல்களில் மிகவும் விரிவாய்க் காணக் கிடக்கின்றன.

இப்பலருள், களந்தை ஞானப்பிரகாச பண்டாரம் (முனிவர்) என்பவரும் ஒருவர். இவருடைய வரலாறு வெள்ளியம்பல வாணத் தம்பிரான் எழுதிய முத்தி நிச்சயப் பேருரையால் ஓரளவு தெரிகிறது. இவர் களந்தையில் தோன்றியவர் போலும். தத்துவ விளக்கம் செய்த சம்பந்த சரணாலயரிடத்து இளமையில் கல்வி கற்றார் என்று நாம் கருதலாம். இவருடைய மாணாக்கர் களந்தை - மறைஞான பண்டாரம் என்பவர்.

மறைஞான சம்பந்தர் என்பவர் **முத்தி நிலை** என்ற ஒரு சிறு நூல் எழுதி "ஆன்மானந்தவாதம்" என்ற கொள்கையை நிறுவ முயன்றார். இந்தக் கொள்கையை மறுக்க எழுந்தது குரு ஞான சம்பந்தர் பாடிய **முத்தி நிச்சயம்** என்ற சிறு நூலாகும். இம்மறைஞான சம்பந்தர் பலநூல்கள் செய்தவர். இவரே இங்குக் கூறிய களந்தை மறைஞான பண்டாராமாவார். சிவஞான சித்தி யாருக்கு உரை செய்த மறைஞான தேசிகர் இவரினும் வேறு ஆவர்; அவர் காழிப்பதியினர், இவருக்கு மாணாக்கர்.

மறைஞான சம்பந்தர், காளத்தி கண்ணப்ப பண்டாரம் என்பவரிடத்தில் உபதேசம் பெற்ற வரலாறு முத்தி நிச்சய உரை யில் வெள்ளி விரிவாகக் கூறுகிறார். இவர் தம்முடைய கண்ணைக் கட்டிக் கொண்டு வாழ்ந்தமையால் கண்கட்டி மறைஞான பண்டாரம் என இவருக்குப் பெயர் வழங்கிற்று. களந்தை மறைஞான பண்டாரமே பின்னர் காளத்திக் கண்ணப்ப பண்டாரத்தின் உபதேசம் பெற்று, சிதம்பரத்தில் கண்ணைக் கட்டிக் கொண்டு குகை மடத்தில் வாழ்ந்தமையால், சிதம்பரம் குகை மடம் கண்கட்டி மறைஞான பண்டாரம் என்றும் பிற்காலத்தில் சொல்லப் பெறுகிறார்.

இளமையில் இவர், தம் சொந்த ஊராகிய களந்தையில் ஞானவானாக விளங்கிய களந்தை ஞானப்பிரகாச பண்டாரத்

*தினிடம் கல்வி பயின்றார். இதை "உனது குரவரான களந்தை ஞானப்பிரகாச பண்டாரம் செய்த அகவல்" என்று குருஞான சம்பந்தர் கூற்றாக வெள்ளியம்பலவாணர் கூறுவதால் அறிகிறோம். மறைஞான சம்பந்தர் காலம் 16ஆம் நூற்றாண்டின் முற்பாதி. இவருடைய இளமையில் களந்தையில் வாழ்ந்தார் என்று கூறும்போது, அக்காலம் கி.பி. 1500-25 ஆக இருத்தல் கூடும். இவருடைய குருவாகிய களந்தை ஞானப்பிரகாச பண்டாரத்தின் காலம் 1475-1500 ஆதல் பொருந்தும்.*

*இந்த ஞானப்பிரகாசர், மெய்கண்ட சித்தாந்த சாத்திரங்கள் வந்த சந்தான வரலாற்றை, ஓர் அகவற்பாவால் பாடியிருக்கிறார். ஆனால் இதைக் குறிப்பிடுகிற வெள்ளியம்பலவாணர் தம் காலத்தில் (கி.பி. 1700) அனேக சாத்திர தோத்திர நூல்கள் வழங்காதிருந்தன என்று 26 சைவ நூல்களும், 4 கருவி நூல்களும், 5 பிரபந்தங்களும் குறிப்பிடுகிறார். இவற்றுள் ஒன்றாகச் சந்தான அகவலும் சொல்லப்பட்டுள்ளது. "சந்தான வரலாற்றில் காண்க" என்று வேறு ஈரிடங்களில் இவரே குறிப்பிடுவதும் கருதத்தக்கது. மறைஞான சம்பந்தர் வாய்மொழியாக, "எமது குரவர் கூறிய அகவல்" என்று களந்தை ஞானப்பிரகாசர் பாடிய பின்வரும் அகவல் எடுத்துத் தரப்பட்டுள்ளது.*

சிலர் உயி ரிடத்து நிலவிய சிவன்குணம்
சேரும் என்றுரைப்பர்; ஆர்வங் கூரச்
சங்கி ராந்தஞ் சடத்துக் கல்லது
பங்கமில் அறிவிற் பற்றாது ஆகலின்
அவருரை பழுதென்று அறிவா யாக.
சுத்த சைவத்து உத்தமம் கொண்ட
அந்தம் கேள்உன் அரும்பவம் அகலப்
பரசிவம் முதலாப் பகர்ந்திரு தருமமும்
பிர மென் பெயருயிர்க்கு உரிமை அனாதியின்
அக்குணம் முழுதும் அனாதி மலத்தான்
ஒக்க மறைப் புண்டு ஒதுங்கி யிருப்பக்
கலைமுத் தத்துவக் காட்சி யாலே
இலகுசிற் றுணர்வோ டிருந்த நானே
மம்மர் அளிக்கும் ஐம்மலர் அரன்றன்
செம்மலர்த் திருத்தாள் தீண்ட நீங்கி
அக்கணம் பிரமம் ஆனேன் நானெனல்
ஒக்கும்இப் பொருட்கு உதாரணஞ் செப்பில்

சருவஞ் ஞானோத் தரவிருத் தியினின்
அறுதி யிட்டனன் அகோர சிவாசான்;
'செம்பிரத குளிகையிற் செம்பொன்' ஆம்என
எம்பி ரான் அரு ணந்தி இயம்பினன்;
'இருள்நனி இரவிவந் திரித்தல்' என்பாட்டில்
பரவு புகழ் உமா பதியுங் கூறினன்;
'இல்லா தனபிறந்து' என்னும் பாட்டின்
நல்லசம் பந்தசர ணாலயன் உரைத்தனன்;
அந்நிலை உயிர்பெறும் அனுபவங் கேண்மதி.
என்றும் அனாதி முத்தன்ஐந் தொழிலும்
இன்றி யெலாந்தன் சத்தியின் விளங்கும்
முக்கா லத்தும் தொக்க பொருள்களும்
எக்கா லத்தும் இசைந்து
காணு மென்னும் மாணமர் உரையே.

*31 வரி கொண்ட இப்பகுதி, முழுப் பாடலின் முடிவுபோலும். இங்கு ஞானப்பிரகாசர் நான்கு ஆசிரியன்மாரைக் கூறுகிறார்; வடமொழியில் சர்வ ஞானோத்தர விருத்தி செய்த அகோர சிவாசாரியர், செம்பிரத குளிகையினால் களிம்பற்றுப் பொன் னாம் (319) என்று சிவஞான சித்தியாரைப் பாடிய அருணந்தி, 'இருள்நனி இரவிதான் வந்து இரித்தல்' (66) என்று சிவப் பிரகாசத்தில் பாடிய உமாபதி, 'இல்லாதன பிறந்து உள்ளன மாயும் என்று இம்மயக்கம்' (49) எனத் தத்துவ விளக்கத்தில் பாடிய சம்பந்த சரணாலயர் ஆகிய நால்வர். இங்கு அகோர சிவாசாரியர் சம்பந்த சரணாலயர் பற்றிய குறிப்புக்கள் பயன் உடையன. தத்துவ விளக்கம் பாடியவர் பெயர் சம்பந்த சரணா லயர் என்பது இதனால் வலியுறுகின்றது. அகோர சிவாசாரியர் காலம் இந்த ஞானப்பிரகாசருக்கு முந்தியது என்ற கருத்து சிறப்பானது.*

*இவருடைய ஞானாசாரியர் சத்திய ஞானி; அவருடைய குரு பரம்பரையில் முன்னவர் அம்பலநாதத் தம்பிரான். தம்பி ரானும் சம்பந்த சரணாலயரும் சம்பந்த முனிவரின் மாணாக்க ராய்ப் பயின்றவர்கள். எனவே, களந்தை ஞானப்பிரகாசர், சிறு பிள்ளையாக இருந்த காலத்தில் சம்பந்த சரணாலயரிடம் பழ கினார் என்பது பொருந்தக் கூடியதே.*

*களந்தை ஞானப்பிரகாசரின் ஊராகிய களந்தை என்பது, திருவிசைப்பாப் பதிகம் பெற்ற ஆதித் தேச்சுரம் என்ற கோயிலை*

யுடைய திருக்களந்தை என்ற தலமாகும். இது கோயில் களப்பாள் என்ற பெயர் பெற்று, திருத்தருப்பூண்டியருகேயுள்ளது. இங்கிருந்து சற்றுத் தொலைவிலுள்ள திருவாரூரில் வாழ்ந்த சத்திய ஞான பண்டாரத்துக்கு இவர் மாணாக்கராயிருந்தது இயல்பே.

களந்தை ஞானப்பிரகாச பண்டாரத்தையும் அவர் செய்த நூல்களையும் முத்தி நிச்சயப் பேருரையில் வெள்ளியம்பல வாணத் தம்பிரான் பல இடங்களில் குறிப்பிடுகிறார். அவர் செய்த நூல்களாக நான்கு ஓரிடத்தில் கூறுகிறார். அவையாவன: சந்தான அகவல் (சந்தான வரலாறு) தசகாரியம், சகலாகமசாரம், அளவை என்பன களந்தையார் மேலும் பல நூல்கள் செய் திருக்கக்கூடும்; அவை பற்றித் தெரியவில்லை; அட்டாங்க யோகக் குறள் மட்டும் தெரிகிறது. அவருடைய மாணாக்கரான மறை ஞான சம்பந்தர் ஆன்மானந்த வாதமாக முத்திநிலை என்ற ஒரு நூல் செய்யவே, இதைக் குருஞான சம்பந்தர் மறுத்து நிச்சயம் எழுதினார். குருஞான சம்பந்தருடைய சம்பிரதாயம் அவர் நிறுவிய தருமபுரம் மடத்தின் வழியே வலிமை பெறவே, மற்றது ஒடுங்கிப் போயிற்று. எனவே, அச்சம்பிரதாய நூல் களும் வழக்கு வீழ்ந்தன. இது களந்தையார் நூல்கள் இன்று கிடையாமைக்குக் காரணம். இவற்றுள் சந்தான அகவல் பற்றி முன்னமே கூறியாயிற்று.

**தசகாரியம்**

அடுத்தது தசகாரியம். இந்நூல் முழுமையும் இன்று கிடைக்கிறது. இரு பதிப்புக்கள் வந்துள்ளன. இது பாயிரம் 8 பாடல், இலக்கணப் பகுதி 35, குருபூசை ஞானதீக்கை 65, தத்துவ ரூபம் 54, தரிசனம் 50, சுத்தி 10, ஆன்ம ரூபம் 15, தரிசனம் 13, சுத்தி 7, சிவரூபம் 10, தரிசனம் 15, யோகம் 10, போகம் 10 என்ற முறையில் அமைந்தது. ஐந்தாம் பாடலில் இவர்தம் குருவாகிய சிவபுரம் சத்திய ஞானிக்கு வணக்கம் கூறியதை முன்னமே பார்த்தோம். இப்பாடல்கள் பல வெள்ளியம்பலவாணர் தம் முத்தி நிச்சய உரையில் எடுத்துக் காட்டிய போதிலும், மறை ஞானரின் குரவரான களந்தை ஞானப்பிரகாசர் எழுதிய தசகாரியத்தைத் தாம் ஒப்புக் கொள்ளவில்லை என்றே எழுதுகிறார்.

இனி "வட கலையின் பொருள் இதனின் மருவுகிறது" என்று களந்தையார் தம் அவையடக்கத்தில் கூறிப் பின்னும் நூல் செய்ததற்குக் காரணம் கூறுகிறார்:

திருவாருங் காமிகமே யாதி முன்னம்
 செப்புதச காரியத்தின் நுட்ப மெல்லாம்
குருவாலே உணர்ந்த வற்றைக் கோவை செய்து
 குவலயத்தில் ஆகமநூல் அதனை மாந்தர்
அருவான மாயைமுத லான எல்லாம்
 அகன்றுதம தறுகுணமாம்ஞானா னந்தப்
பெருவாழ்வு பெறத்தமிழின் செய்யு ளாக்கிப்
 பேசுதுங் கேள் ஆசகலப் பிறப்பற் றாயே.

பிள்ளைத் தமிழ்ப் பாட்டில், "ஆகமம் உணர்ந்து தமிழினிற் செய்தார்" என்ற கருத்தை இது அப்படியே உரைப்பது வெளிப்படை.

சத்திய ஞானி பிள்ளைத் தமிழிலிருந்து எடுத்துக் காட்டியது "கண்ணிற் சிறக்கும் ஆகமம் உணர்ந்து இனிய தசகாரியம் தமிழினிற் செய்த களந்தை வருஞானப் பிரகாசர்... பரவு ஞானப் பிரகாசன் பகரரிய இருவரும் தலைவணங்கக் கருணை பாலிக்கும் ஒரு குரவனே" என்றமையால் களந்தை ஞானப் பிரகாசர் தசகாரியம் செய்ததும், இவர் சத்திய ஞானியின் சீடர் என்பதும் தெளிவாகின்றன.

இந்தத் தசகாரியம் "காமிகமே யாதி முன்னம் செப்பு தச காரியத்தின் நுட்பமெல்லாம் குருவாலே உணர்ந்தவற்றைக் கோவை செய்து... பேசுவன்" என்று ஆசிரியர் சொல்வதனோடொப்ப, வெள்ளியும் "இது பல ஆகமங்களினாலும் இப் பொருள்பட வருவது நோக்கி வேண்டியபோதே ஓர் கோளாகக் கோத்துக் கற்பித்துக் கூறிக் கொளலாக......" என்று சொல்லுகிறார்.

தசகாரிய நூல்கள் பல இருந்தாலும், இதுவே அளவால் மிகவும் பெரியது; 302 பாடல்கள்; உண்மை நெறி விளக்கத்தை யடுத்த பழமையான நூல். வெள்ளியுரையில், "எமது குரவர் கூறிய தசகாரியத்துள்" என்று பல இடங்களில் கண்கட்டி மறைஞான சம்மந்தர் கூற்றாகக் கூறுகிறார். ஓரிடத்தில் மட்டும் மறைஞானர் நூல் என்று கூறியிருப்பது மறைஞானர் கொள்கின்ற பிரமாண நூல் என்ற கருத்தில் பொருத்தமாகும். இந்நூலில் தேசகால பாத்திர இலக்கணம், சற்குரு இலக்கணம், அசற்குரு இலக்கணம், தீக்ஷை என்பன கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

### பதிப்பு

சிவானந்தையர் பதிப்பு 1911. சோம சுந்தர தேசிகர் பதிப்பு: இது தம் மரபின் முன்னோரான திருவாரூர் சதாசிவ தேசிகர்

செய்தது என்று இவர் அச்சிட்டார்; இக் கருத்து பிழை; மேற் காட்டிய விளக்கத்தால், இது செய்தார் களந்தை ஞானப்பிரகாசர் என்பது தெளிவு.

## அட்டாங்க யோகக் குறள்

இந்நூல், ஆசிரியர் பெயர் இல்லாமல் 1923 இல் சேற்றூர் சுப்பிரமணிய கவிராயரால் 'வருத்தமற உய்யும் வழி' என்ற நூலுடன் சேர்த்து, மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்ப் பிரசுரமாக அச்சிடப்பட்டுள்ளது. பிந்திய நூல் 25 குறட்பாக்கள் உடையது; ஆசிரியர் பெயர் தெரியவில்லை என்று கவிராயர் வெளியிட்டிருப்பினும், மறைஞான சம்பந்தர் (16 நூ.) நூல் என்று திருவாடுதுறையாரால் பின்னர் அச்சிடப்பட்டுள்ளது. இப்போது அம்மறைஞான சம்பந்தரின் குருவான களந்தை ஞானப்பிரகாசர் இந்த அட்டாங்க யோகக் குறள் செய்தார் என்று யூகிப்பதற்குச் சில ஆதாரங்கள் கிடைத்துள்ளன. அட்டாங்க யோகமாவது எட்டு அங்கங்களையுடைய யோகம்; எட்டும் எட்டுப்படிகள் போல்வன. களந்தை ஞானப்பிரகாசரின் சீடர், பல சிறு நூல்கள் செய்த மறைஞான சம்பந்தர்; இவர் சீடர் சித்தியார் உரை எழுதிய மறைஞான தேசிகர் என முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம்.

களந்தை ஞானப்பிரகாசர் செய்த சகலாகமசாரமும், அளவை இலக்கண நூல்களும் இன்று கிடைக்கவில்லை; ஆனால் இவற்றில் சில பாடல்கள் தேசிகரது சித்தியார் உரையில் மேற்கோளாக வந்துள்ளன. இவை போலவே, தேசிகர், சித்தியார் 273 உரையில் அட்டாங்க யோகத்தைக் கூறுமிடத்து ஓர் உதாரண வெண்பாக் காட்டுகிறார்:

> இயமம் நியமம் இணங் காதனம் யாமம்
> அயர்வில்பிரத்தி யாகார மாகும் – முயங்குங்கால்
> தாரணையோடு தியானம் சமாதியு மென்று
> ஓரிரு நான்கு யோகு.

தேசிகர் களந்தை ஞானப்பிரகாசரின் நூல்கள் பலவற்றை எடுத்து உதகரிப்பதால், பொருள் நோக்கி இப்பாடலும் ஞானப்பிரகாசர் பாடலாயிருக்கலாம் என்று நாம் முடிவு செய்வது பிழையாகாது. அட்டாங்கயோகக் குறள் என்ற நூலில் 7-8 பாடல்கள் பின்வருவன:

> இயமம் நியமமிணங் காதனமா யாமம்
> அயர்வில் பிரத்தி யாகாரம். 7

தாரணையோடு தியானம் சமாதியு மென்று
ஓரிரு நான் கங்கமும் யோகுள். 8

ஆராயுமிடத்து, இவ்விரு குறட்பாக்களையும் நடுவில் "முயங் குங்கால்" என்ற தனிச்சொல் பெய்து இணைத்ததே முதலில் காட்டிய வெண்பா என்பது நன்கு விளங்கும். இவ்விணைப்பு தேசிகரே செய்துமிருக்கலாம், அல்லது ஏடெழுதினோரால் நிகழ்ந்து மிருக்கலாம். எனவே, வெண்பா களந்தை ஞானப் பிர காசர் செய்ததாயிருக்கலாம் என்று கூறினால், அதன் பொருள், அவரே இக்குறட்பாக்களின் ஆசிரியர்; அதாவது அட்டாங்க யோகக் குறள் என்ற நூலின் ஆசிரியர் என்று திட்டமாய் ஏற்படுகிறது. இக்கருத்து, பல வகையாலும் பொருந்துவதே. "ஆய்ந்து ஆகமத்து அறைவாம் அட்டாங்க யோக மதை" என்று பாயிரம் (6) கூறும்; களந்தையார் சகலாகம்சாரம் செய்தவ ரானமையால், இந்தக் குறள் நூலையும், ஆகமத்தை யொட்டிச் செய்தல் இயல்பே. இனி, சாரமும் குறட்பாக்களாலான நூல். மேலும், "'நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினை - என்றும் சிவன் தாளிணை" என்ற குறட்பா, மறைஞான சம்பந்தர் செய்த 'வருத்தமற உய்யும் வழி' என்ற நூலில் 24 ஆம் பாடலாயுள்ளது; இதுவே, அட்டாங்க யோகக் குறளில் 56 ஆம் பாடல். இதனால், மறைஞான சம்பந்தர்தம் குருவின் நூலிலிருந்து இப்பாடலை எடுத்துக் கொண்டார் என்றும் கருதலாம். அன்றியும், உய்யும் வழி 21ஆம் பாடலில் "நெற்றி நடுமன்றுள் நிருமலன் தாள் நாடு" என்றுள்ள தொடர், குறள் 53, "நாதனை நீ நெற்றி நடு நாடு" என்று காணப்படுகிறது.

எனவே, இவ்வாறு தெரியும் பல்வேறு ஒற்றுமைகளால், அட்டாங்க யோகக் குறளை மறைஞான சம்பந்தரின் குருவான களந்தை ஞானப்பிரகாசரே செய்தாரென்று முடிவு செய்கிறோம்.

இந்நூல் 65 குறட்பாக்கள் உடையது; பாயிரம் 6 பாடல். பின்னர் இயமம் நியமம், ஆசனம், பிராணாயமம், பிரத்தியா காரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டு உறுப்பும் முறையே கூறுகிறது.

**சகலாகம சாரம்**

"எமது குரவர் செய்த சகலாகம சாரத்துள்" என்று மறை ஞான சம்பந்தர் கூற்றாக வெள்ளி தம் உரையில் பல இடங் களில் எழுதுகிறார்; ஓரிடத்தில் களந்தையார் செய்த நூல் என்றே கூறுகிறார் இந்நூலும் குறட்பாவால் ஆனது சில மேற்கோட்

பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன; முழு நூலும் கிடைக்க வில்லை, இந்தக் களந்தை ஞானப்பிரகாசரது வரலாறு விளங் காமையால், பல குறட்பா நூல்கள் செய்த மறைஞான சம்பந்தரே இதையும் செய்தார் என்று சோமசுந்தர தேசிகர் போன்றார் எழுதியுள்ளனர். இது பொருந்தாத கருத்து.

சகலாமக சாரசங்கிரம் என்ற ஒரு நூல் வடமொழியில் அச்சிடப்பட்டுள்ளது. ஆகம சாரத்தைச் சிவபிரான் உமாதேவி யாருக்கு உபதேசித்தார் என்பது அந்நூலுக்கு அவதாரிகையான கதை; நூலின் உயர்வைக் கூறுவது என்ற மட்டும் கருதலாம். இத் தமிழ் நூல் ஒருகால் அதன் மொழிபெயர்ப்பாயிருக்கக்கூடும்.

## அளவை விளக்கம் – வெண்பா

அருணந்தி சிவாசாரியர் தமது சிவஞான சித்தியில் அளவை இலக்கணத்தை இருபது பாடல்களால் சொல்லி வைத்த பிறகு, பின்வந்த சாத்திர நூலாசிரியர் பலர் அளவை இலக்கணத்தைச் சுருக்கமாகக் கூறியிருக்கிறார்கள். தத்துவப் பிரகாசம் (14நூ.) சிவநெறிப் பிரகாசம் (16நூ.) சம்பிரதாய தீபம் (18நூ) முதலியன உதாரணங்களாம். அளவை கூறுவதற்கென்றே தனி நூல்களும் எழுந்தன என்று அறிகிறோம். இவ்வாறு செய்யப்பட்ட நூல் களில் அளவை விளக்கம் என்பதொன்று; வெண்பாவினால் இயன்றது. சிவஞான சித்தியார் உரை செய்த மறைஞான சம்பந்தர் அளவை விளக்கம் என்று பெயர் குறிப்பிட்டுப் பின் வரும் பாடலைக் காட்டுகிறார்;

> பண்ணிலாற் கில்லாத பாட்டிற் பயம்போன்றும்
> கண்ணிலாற் கில்லாக் கவின் போன்றும் – எண்ணிலா
> அஞ்சொல் அளவை அறியா தவற்கில்லை
> செஞ்சொல் அளவின் சிறப்பு.

இது அன்றி, பெயர் குறிப்பிடாமலே இவ்வுரையுள் இவ்விளக்கத் துக்கு உரியன என்று நாம் கருதத்தக்க வெண்பாக்கள் பல காணப்படுகின்றன. இவ்விளக்கம் என்ற நூலானது மறை ஞான சம்பந்தருக்கு ஒரு நூற்றாண்டுக்கு முற்பட்டிருக்கலாம் என்று கருத இடம் உண்டு. எனவே இது 15 ஆம் நூற்றாண்டுக்கு உரிய தென்று நாம் கருதுவோம். இந்நூல் இப்போது கிடைப்பதாகத் தெரியவில்லை. ஆசிரியர் பெயரை மறைஞான சம்பந்தர் குறிப் பிடவில்லை. எனினும், இவற்றைக் களந்தை ஞானப்பிரகாசர் செய்தாரென்று வெள்ளியம்பலவாணத் தம்பிரான் உரையால் அறிகிறோம்.

### அளவை விளக்கம் – கலித்துறை

மேற்குறித்து காலத்திலேயே அளவை இலக்கணம் கூறுகின்ற கட்டளைக் கலித்துறையால் அமைந்த நூல் ஒன்று இருந்ததென்று தெரிகிறது. அதன் பாடல்கள் நான்கு மறைஞானசம்பந்தர் எடுத்துக் காட்டுகிறார். இந்நூலும் இன்று தெரியவில்லை. இதுவுமன்றி, சிவாக்கிரயோகிகள் அளவையின் சிறப்பைக் கூறுகின்ற கலிவிருத்தப் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகிறார். அது இக்காலப் பகுதிக்குரிய பிறிதொரு நூல் போலும். அதுவும் இன்று கிடைக்கவில்லை.

டாக்டர் சாமிநாத ஐயரவர்கள் சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும் என்ற தமது நூலில் பின்வருமாறு எழுதியிருப்பதும் இங்கு அறியத்தக்கது: "அளவை நூல் என்று ஒன்று தமிழிலிருந்ததாகப் பழைய உரைகளால் தெரிய வருகின்றது. அதிலுள்ள பாடல்கள் கட்டளைக் கலித்துறையாக உள்ளன. அந்நூலில் காண்டல் முதல் சம்பவ மிறுதியாகவுள்ள பத்து அளவைகளின் இலக்கணங்கள் கூறப்பட்டிருத்தல் வேண்டுமென்று கிடைத்த பாடல்கள் தெரிவிக்கின்றன."

அளவை நூல் செய்தார் களந்தை-ஞானப்பிரகாசர் என்று வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முத்தி நிச்சயம் பேருரையில் எழுதுகிறார் (பக்கம் 253). இவருடைய மாணாக்கரே மறைஞானசம்பந்தராதலால், இவை அந்த ஞானப்பிரகாசர் நூல்களே.

## மதுரை - ஞானப்பிரகாசர்

ஞானப்பிரகாசர் என்ற பெயரில் அனேக சிவஞானிகளும் நூலாசிரியர்களும் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுள் இப்பெரியார் சிற்றம்பலநாடிகள் பரம்பரையில், காவை-அம்பலநாதத் தம்பிரான் வழியில் வந்த சத்தியஞான பண்டாரத்தின் மாணாக்கராவார். இவர் உமாபதி சிவாசாரியர் செய்த சிவப்பிரகாசத்துக்கு உரை எழுதியிருக்கிறார். இவருடைய மாணாக்கர் மதுரைச் சிவப்பிரகாசர் தாம் எழுதிய சிவப்பிரகாச விரிவுரையில் இதைக் குறிப்பிடுகிறார்: தம் உரை வரலாறு பின்வருமாறு எழுதுகிறார்:

"இந்த வியாக்கியானம் செய்தது மெய்கண்ட சந்ததியில் காவை-அம்பலநாதத் தம்பிரானார் திருவடி மரபில் ஆசாரியரில்,

மதுரையில் ஞானப்பிரகாசத் தம்பிரானார் திருவடியடியாரில் சிவப்பிரகாசர் செய்த வியாக்கியானம் என அறிக. இந்தச் சிவப் பிரகாசமாகிய நூலுக்கு முன்னோர்களும் வியாக்கியானம் செய்திருக்க, இப்பொழுது இந்த வியாக்கி செய்ய வேண்டும் காரணமே தென்னில், முன்னுள்ள தம்பிரான்கள் எழுதின வியாக்கியானங்களெல்லாம் பொழிப்புரையாக எழுத, அதனோடு சமயிகள் கருத்துக்களுங் காட்டி என் தம்பிரான் ஞானப்பிரகாசத் தம்பிரானார் எழுதின வியாக்கியின் வழியே தொந்தனையும் பாட்டும் சேர்த்து... வியாக்கி செய்ததென அறிக."

**தேனிலவும் தெய்வச் சிவப்பிரகா சக்கடலின்**
**பானிலவும் பல்சமயப் பன்மதமுங் – கோனுயிர்மா**
**னித்தியமுற் தோன்ற வுரை அளித்தான்மதுரைச்**
**சத்தியஞா னப்ரகாசன்.**

இதனால் ஞானப்பிரகாசர் ஒரு துறவி என்றும், அவருடைய அடியார் பலர் இருந்தனர் என்றும், அவர் சிவப்பிரகாசத்துக்கு உரை எழுதினார் என்றும் நன்கு விளங்குகிறது. இவர் மாணாக்க ரான சிவப்பிரகாசர், இவருடைய பொழிப்புரையை விரித்துப் பேருரையாக எழுதினார். இவர் சத்தியஞானியின் மாணாக்கர் என்பதை அவர் வரலாற்றில் குறிப்பிட்டோம். பிள்ளைத் தமிழ் இதைத் தெளிவாக்குகிறது.

மதுரை ஞானப்பிரகாசர் உரை இருக்கும் செய்தியே இது காறும் தெரியாமலிருந்தது. சூரியனார் கோயில் மடத்து ஏடு வேலம்பாளையம் தெய்வசிகாமணிக் கவுண்டரிடம் இருந்து கிடைத்திருக்கிறது. இவ்வேட்டில் ஆசிரியர் பெயர் காணப்பட வில்லை. ஆயினும், இவ்வுரைக்கும் சிவப்பிரகாசருரைக்குமுள்ள ஒற்றுமைகளையும், இவ்வுரையிலிருந்து சில தொடர்களைச் சிவப்பிரகாசர் அப்படியே எடுத்து ஆளுவதையும் கவனிக்கும் போது, இது சிவப்பிரகாசருக்கு மூலமானதோர் உரை என்றும், ஆகவே ஞானப்பிரகாசர் செய்தது என்றும் நாம் கருத முடியும். எனினும், சிவப்பிரகாசர், முழுமையும் இதனினும் வேறாகவே உரை செய்திருக்கிறார்.

நான்கு வகைச் சத்திநிபாதம், முத்தி பேதங்கள் கூறும் 'அரிவையர் இன்புறும் முத்தி' (50) என்ற பாடல் உரை போன்ற இடங்களில் இவர் உரை மிகவும் சிறப்பாக உள்ளது. பிந்திய

பாடல் உரையில் "இவற்றின் வரவைப் பரபக்கத்தின் வியாக்கி யிலேயே கண்டு கொள்க" என்று எழுதுகிறார். இதனால் இவர் சித்தியார் பரபக்கத்துக்கு உரை எழுதினார் என்றும் தெரிகிறது; இது கிடைக்கவில்லை.

இவரது சிவப்பிரகாசவுரை அச்சாகவில்லை; அச்சாக வேண்டியது அவசியம்.

## மதுரை - சிவப்பிரகாசர்

இலக்கிய வரலாற்று ஆராய்ச்சியில், உரை ஆசிரியர்களுக்குச் சிறப்பான பங்கு உண்டு. ஏனெனில், இவர்கள் தாங்கள் எழுதும் உரையில் அனேக இலக்கிய இலக்கணங்களும் மேற்கோளாக எடுத்துக்காட்டுகிறார்கள். ஓர் உரை ஆசிரியருடைய காலம் இன்னதென்று திட்டமாகத் தெரிந்தால் அவர் குறிப்பிடும் நூல் களின் காலம் இந்தக் காலத்துக்கு முந்தியது என்று திட்டமாக வரையறுத்துக் கொள்ள அவர் உரை உதவுகிறது.

அவ்வாறு காலம் திட்டமாகத் தெரிந்த உரை ஆசிரியர் களில், மதுரைச் சிவப்பிரகாசர் மிகவும் முக்கியமானவர். இவர் சிவப்பிரகாசம் என்ற சித்தாந்த சாத்திரத்துக்கு உரை எழுதி னார். எழுதிய காலம் கி.பி. 1488. ஆகவே இவர் குறிப்பிடும் பல்வேறு நூல்கள் இக்காலத்துக்கு முன் தோன்றின என்று நாம் முடிவு செய்கிறோம்.

சிவப்பிரகாசர் அனேகர் இருந்தமையால் இவரை வேறு பிரித்துக் காட்ட மதுரைச் சிவப்பிரகாசர் என்று இவரை முன்னோர் வழங்கினர் போலும். இவர் சிற்றம்பல நாடிகள் பரம்பரையில் காவை-அம்பலநாதத் தம்பிரானின் மாணாக்கர் வழி வந்த மதுரை - ஞானப்பிரகாச முனிவருடைய சீடர். இவர் முன்னோர் நூல்களையும் உரைகளையும் நன்கு ஆராய்ந்து, இருபாஇருபது, சிவப்பிரகாசம் என்ற இரண்டு சித்தாந்த சாத் திரங்களுக்கும் பேருரை எழுதினார். இவர் துறவி என்று அறி கிறோம். இவர் குருவாகிய மதுரை ஞானப்பிரகாசரே சிவப் பிரகாசத்துக்கு ஓர் உரை எழுதியிருந்தும், இவர் தம் கருத்தை எடுத்துக்காட்ட ஒரு பேருரை எழுதினார் என்று தெரிகிறது. சிவப்பிரகாசர் என்பது உரைச் சிறப்பால் அமைந்த காரணப் பெயரா அல்லது இயற்பெயரா என்பது விளங்கவில்லை.

## இருபா இருபதுரை

சிவப்பிரகாசர் முதலில் இவ்வுரையைச் செய்தார் என்று தெரிகிறது. இதனுள் சாத்திர மேற்கோள்கள் அதிகம் காணப் படவில்லை. உரையின் தொடக்கத்தில் நூலுக்கு வரலாறு எழுதியிருக்கிறார். இங்கு "பூரண கர்த்தாவாயிருக்கப்பட்ட சீகண்ட பரமேசுரன் அருளிச் செய்யப்பட்ட சிவாகமத்தில் ஞான காண்டமாயிருக்கப்பட்டதைச் சிறீநந்தி தேவ தம்பிரானார் சனற் குமார பகவானுக்குக் கடாட்சித் தருள, சனற் குமார பகவான் சத்திய ஞான தெரிசனிகளுக்குக் கடாட்சித் தருள, சத்திய ஞான தெரிசனிகள் பரஞ்சோதி மாமுனிக்குக் கடாட்சித் தருள, பரஞ்சோதி மாமுனிகள் திருவெண்ணெய் நல்லூரே திருப்படை வீடாக வுடைய மெய்கண்ட தேவ தம்பிரானாருக்குக் கடாட்சித்தருள, அந்த மெய்கண்ட தேவ தம்பிரானார் தமது திருவடியைப் பெற்ற அருணந்தி தேவ தம்பிரானுக்குக் கடாட்சித் தருள, அவர் அந்த உபதேசத்தின் பயனைச் சிவஞான சித்தி என்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி வழி நூலாகச் செய்தருளி, அதுவன்றியும் அந்த நூலில் அத்தங்கள் விளங்குகை நிமித்த மாக அந்த உபதேச சம்பிரதாயங்களையெல்லாம் ஆசாரியனை முன்னிலைக் கர்த்தாவாகக் காட்டி வினாவாக வெடுத்துக் கொண்டு பத்து வெண்பாவும் பத்தகவலும் இரண்டு பாவாகக் கொண்டு இருபாவிருபது என்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி இந்நூலருளிச் செய்ததென அறிக." இவ்வாறு நூல் வரலாறு கூறிப் பின்னர் உரை வரலாறு கூறுகிறார். "அந்நூலுக்கு வியாக்கி யைச் செய்ய வேண்டினது கொண்டு மெய்கண்ட சந்ததியில் காவை அம்பலநாதத் தம்பிரான் திருவடி மரபிலாரில் மதுரை ஞானப்பிரகாசத் தம்பிரானார் கடாட்சித்த உபதேச சம்பிர தாயத்தைச் சகாத்தம் ஆயிரத்து நானூற் றொருபதின்மேற் செல்லா நின்ற காலத்திலே வியாக்கியைச் செய்ததென அறிக" என்று கூறுகிறார். இதனால் உரை செய்த காலம் சகம் 1410, அதாவது கி.பி. 1488 என்று நாம் அறிகிறோம்.

மேலும், கி.பி. 1677இல் திருவாவடுதுறை நமசிவாயத் தம்பிரான் என்பவர் இதே நூல் வரலாற்றையும் சிவப்பிரகாச ருடைய உரையையும் அமைத்துக் கொண்டு அதிகமான பிரமாணப் பகுதிகளையும் சேர்த்துப் புதிய உரை அமைத்தார். இதனால் சிவப்பிரகாசர் உரையின் பெருமை விளங்குகிறது. தம்பிரான் உரை அச்சாகியிருக்கிறது; சிவப்பிரகாசர் உரை அச்சாகவில்லை.

*சிவப்பிரகாச உரை*

*சிவப்பிரகாசர் உரையானது சிறந்த ஒரு விருத்தியுரை அல்லது பாடியம். வடமொழியில் சிவஞான போதத்துக்குச் சிவாக்கிர யோகி செய்த சிவாக்கிர பாடியமும் சிவஞான சுவாமி கள் செய்த சிவஞான பாடியமும் காலத்தால் இப்பேருரைக்குப் பிந்தியவை. இதற்குரிய உரைச் சிறப்புப் பாயிரப் பாடல்கள் இரண்டு. அவை பின்வருவன:*

**தொந்தனையால் சூத்திரத்தால் சொற்பொருளாய் அம்பலவன்**
**தந்தகுறளால் தொகையால் தன்னருளால் – சிந்தையின் மெய்**
**காணச் சிவப்பிரகா சங்கரைகண் டான்மதுரைத்**
**தாணுச் சிவப்பிரகா சன்.**

**ஓதுபுகழ் சகாத்தம் ஆயிரத்து நானூற்று**
**ஒருபதின்மேற் செல்கின்ற காலந் தன்னின்**
**மாதுபயில் மதுரையில் வாழ்சிவப்பிர காசன்**
**வண்மையருள் நிகழ்ச்சியினால் உண்மை யாக**
**ஈதுமலம் ஈதுவினை ஈது மாயை**
**ஈதுயிர் பின் ஈதுசிவம் என்றே காட்டித்**
**தீதில் சிவப்பிரகாசச் செய்யுள் நூறும்**
**தேர்ந்துரை யிட்டே உலகிற் சிறப்பித் தானே.**

*இப்பாடல், உரையின் காலம் சகாப்தம் 1410 (கி.பி. 1488) என்று சொல்வதோடு, உரையின் சிறப்பையும் கூறுகிறது.*

*மதுரை - சிவப்பிரகாசர் உரையின் சிறப்பு, ஆராய்ச்சித் துறையில் அவர் கூறுகின்ற ஒவ்வொரு விளக்கக் கருத்துக்கும் உரிய ஆதாரத்தைப் பண்டைய நூல்களிலிருந்து எடுத்துக் காட்டுகிறார் என்பது. எந்தப் பாடலையும் நூலின் பெயரைக் குறிப்பிட்டு எழுதுகிறார்; தாம் கூறும் சமயக் கருத்துக்களுக்குத் திருமுறையையே இவர் மேற்கோள் எடுத்துக் காட்டுகிறார். திருக்கோவையாரைக் கோவைத் திருவாசகம் என்றும், நக்கீரர் அந்தாதியைக் காளத்தி அந்தாதி என்றும், கூறுகிறார். இவர் வடமொழியிலும் பயிற்சியுள்ளவர். அசிந்திதம் முதலான சிவாகமங்கள், சூத சங்கிதை, சதரத்தின சங்கிரகம் ஆகியவை இவர் கூறும் வடமொழி நூல்கள்.*

*சித்தாந்த சாத்திரம், கோயிற் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், ஞானபூசைத் திருவிருத்தங்கள் முதலியன இவர்*

குறிப்பிடும் பிரமாண நூல்கள். மற்றவற்றுள், ஞானாமிர்தம், தத்துவப் பிரகாசம், அவ்வைக்குறள், சிற்றம்பல நாடி நூல்கள் என்பன சைவரிடையே அதிகம் பயின்ற நூல்கள்; சிவானந்த மாலை, தத்துவ விளக்கம், பிராசாத அகவல், உருப சொரூப அகவல் என்ற நூல்கள் அதிகம் பயிலாதவை. புத்த நூலைக் குறிப்பிடுகிறார். இலக்கியங்களுள் நாலடி, திருக்குறள் என்பன இவர் குறிப்பிடுவார். திருக்குறளைத் திருவள்ளுவப் பயனென்றே எங்கும் கூறுவார். இலக்கணங்களில் தொல்காப்பியம், நன்னூல், நேமிநாதம், உரிச்சொல்நிகண்டு ஆகிய நூல்களைக் குறிப்பிடு கிறார். அவ்வைக்குறளை வீட்டுநெறிப் பால் என்பார். மெய்ஞ் ஞான விளக்கம், சிவார்ச்சனா போதம் என்பன இன்று கிடைக் காத பிற நூல்கள். இவரால் தெரியவந்த மற்றொரு சிறப்பு நூல் திருநெறி விளக்கம் என்பது. இது சிவப்பிரகாசத்தைப் பின் பற்றிய நூல் என்றும் இதன் விருத்தம் ஒவ்வொன்றும் சிவப் பிரகாசத்தை அடியொற்றி அமைந்தது என்றும் குறிப்பிட்டு, சிவப்பிரகாசத்தில் விளக்கம் வராத பொருளை இதன் பாட லைக் கொண்டு விளக்குவார். இதுகாறும் வெளி வராதிருந்த இவ்வருமையான நூல் வெளி வருவதற்குக் காரணமாயிருந்தது இச்சிவப்பிரகாச உரையே. (சைவசித்தாந்த மகாசமாஜ சிவப் பிரகாசத்தின் மதுரைச் சிவப்பிரகாச உரைப் பதிப்பு பக்கம் 348; சித்தாந்தம் 1960 - பக்கம் 315.) இவர் குறிப்பிடும் சிற்றம்பலநாடி ஞானப் பஃறொடை, சிற்றம்பல நாடி சாத்திரக் கொத்தில் காணப்படவில்லை. பாணராற்றுப்படை என்று இவர் கூறும் இலக்கியம் இன்னதென்று விளங்கவில்லை.

இங்ஙனமாக, இப்பெரியார் பல்வேறு நூல்களைப் பெயர் குறிப்பிடுவதனால் இவர் காலத்துக்கு முன்பிருந்த இலக்கிய நிலையை நாம் நன்கு தெரிந்து கொள்ள முடிகிறது. வேறு வகையில் விளக்கமுறாத அனேக ஆசிரியர்களின் காலங்கள் இங்கு விளக்கமுறுகின்றன. சைவ சமயம் செய்த புண்ணியத்தின் உரு என்று இவரைச் சொன்னால் பொருந்தும். இவரைப்போல் கால அறிவுக்கு உபகாரியாயிருந்தவர் வேறு இலர்.

சிற்றம்பல நாடிகள் வெண்பா சிவானந்தமாலை என்பவற்றை இவர் குறிப்பிடும்போது, "இவை திருவருளைப் பெற்று அனுபவித்த அடியார்கள் வாக்கு" என்று பாராட்டிக் கூறுகிறார்.

இவர் உரை செய்யத் தொடங்கும்போது நூல் வரலாற்றையும் உரை வரலாற்றையும் விரித்துரைத்து, பிறகு பாடல் ஒவ்வொன்றுக்கும் தொந்தனை எழுதுகிறார். திருவிருத்தத்தின் தோற்றுவாயை முதலில் அவதாரிகையாகத் தந்து, விருத்தத்தின் பின் காவை அம்பலநாதத் தம்பிரான் இயற்றிய கொளுவைக் கூறி, அதன் பிறகு மூலத்திலுள்ள சொற்களுக்கு விளக்கமாகப் பொருள் உரைக்கிறார். கடைசியில் நுட்பம் விசேடம் அல்லது விதப்பு என்ற தலைப்புக்களில் தாம் கூறிய உரை பொருந்தும் முறையை முதனூல் வழி நூல்களையும் திருமுறைகளையும் பிற சைவ சாத்திரங்களையும் மேற்கோள் காட்டித் தெளிவு படுத்துகிறார்.

இவ்வுரையாசிரியருடைய உரை மிகவும் கவர்ச்சிகரமானது. சொற்களின் நயத்தைப் பாராட்டித் தக்க முறையிலே எழுதுவார். **வளர்** விருத்தம் என்பதை, 'இந்நூலிற் சொற்சுருங்கி அத்தம் விரிந்திருக்கையினாலும் ஆராயுந்தோறும் அர்த்தம் மென்மேலும் விரிந்து வருகையினாலும்' என்று உரைப்பார். 'ஞானக் கடலுமுது என்றது, ஞானத்துக்குச் சமுத்திரத்தை உவமையாகக் கூறியதே தென்னில், சமுத்திரம் போல ஞானமும் அளவுபடாத படியாலும் தன்னிடத்திலே கூடின ஆன்மசாலங்களை அந்தச் சமுத்திரம் போல உள்ளடக்கி நிற்கையாலும், அந்தச் சமுத்திரம் போல அமுதம் விளைகையினாலும் அப்படிச் சொன்னதென அறிக.' 'தற்சிவம் என்பதற்கு உண்மையான சிவமென்றதே தென்னில், ஒரு விகற்பங்களுமின்றித் தற்சுபாவமாய் நின்ற சொரூபத்தைச் சொன்னதென அறிக.' 'எவையும் நன்றாகா என்றது கொண்டே பழைய நூல்களிற் குற்றங்குறையுமெனக் கொள்க; எவையும் தீதாகா என்றது கொண்டே புதிய நூல்களில் நன்மை குறையுமெனக் கொள்க.' 'தமக்கெனவொன்றிலரே என்றது, தத்தமக்கென ஓர் அறிவில்லாதவர்கள் என்றதேதென்னில், முன்சனனத்தில் தமக்கென ஒரு தவமில்லாதவர்கள் என்ற தென்னவுமாம் எனக் கொள்க.'

22ஆம் திருவிருத்தவுரையில், சித்தியார் 52 ஆம் பாடலுக்கு விரிவாக வுரை எழுதியுள்ளார்;-காரணம் முன்னுள்ளோர் இதற்குச் சரியான உரை காணவில்லை என்ற கருத்துப் போலும்.

இவருடைய சிவப்பிரகாச உரையானது சிறந்த ஒரு பாஷ்யம் என்பது மட்டுமின்றி, சித்தாந்த உண்மைகளைத் தெரிவிக்கும் அரிய கருவூலமாகவும் உள்ளது. இவர் பூரண சைவ

சித்தாந்த நூல்களை எடுத்துக் கூறுவாரேயன்றி, எனைய நூல்களைச் சாத்திரப் பிரமாணம் காட்டமாட்டார். உதாரணமாக, இவர் காலத்திற்கு முன் கண்ணுடைய வள்ளல் செய்த ஒழிவிலொடுக்கம் மிக்க சிறப்புப் பெற்றிருந்த போதிலும் கூட, வள்ளல் ஐக்கிய வாதசைவர் என்ற காரணத்தால், அவர் பாடல்களை இவர் தொடவும் மாட்டார்.

மதுரைச் சிவப்பிரகாசருக்குப் பின் அவருடைய உபதேச பரம்பரை தொடர்ந்து வந்தது என்று அறிகிறோம். கி.பி. 1709 இல் மதுரை மெய்ப்பாத புராணிகர் என்பவர் திருப்பைஞ்ஞீலிப் புராணம் 821 செய்யுட்களால் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினார். அவருடைய மாணாக்கரும், நம் சிவப்பிரகாசர் சந்ததியின் முதல்வருமாகிய ஆவுடையப்ப ரென்பவர் அப் புராணத்துக்கு உரைசெய்தார் இச்செய்திகள் அப்புராணத்துப் பாயிரம் 23ஆம் செய்யுளாலும் 24ஆம் படலத்தின் இறுதிச் செய்யுளாலும் தெரிய வருகின்றன.

தரணி புகழ் மதுரைச் சிவப்பிரகாசகுரு
சந்ததியின் முதல்வ னாய
அரவணிந்தார் ஆகம சாத்திரங்கள் வல்லோன்
ஆவுடையோன் அவனி எங்கும்
பரவுதிருப் பைஞ்ஞீலிப் புராணமதைப்
பார்த்தறிந்தாங் குரையே செய்தான்

என்றது காண்க.

## சிவானந்த போதம்

மெய்கண்ட பரம்பரையில் இப்பெயர் கொண்ட சிறு நூலொன்று எழுந்ததாகத் தெரிகிறது. இப்போது இதுபற்றி எதுவும் தெரியவில்லை. முப்பதவதாரம் கூறுவதாய் அகவற்பாவில் 16ஆம் நூற்றாண்டில் கமலை ஞானப்பிரகாசர் செய்ததாக வழங்கும் சிவானந்த போத சாரம் என்பது இதன் சாரமாகச் செய்யப்பெற்ற நூல் போலும். இப்பெயர் கொண்ட வேறு நூலொன்று அச்சிலுள்ளது. 18ஆம் நூற்றாண்டு. அது வீரசைவ நூல்.



அத்தியாயம் 7

# சைவ இலக்கிய ஆசிரியர் – 2

## வள்ளல் பரம்பரை

### முன்னுரை

சைவ சமய வரலாற்றில் விளக்கமுறாத பலவான செய்திகளுள், ஞான சந்தானங்கள் பற்றிய செய்தியும் ஒன்று. 12 ஆம் நூற்றாண்டுக்குரிய ஞானாமிருதமும் ஒரு சந்தானத்தில் வந்த நூலேயாகும். உந்தி களிறு இரண்டின் வழி தெரிகின்றதேயன்றி, செய்தார் மரபு நிலைகள் தெரியவில்லை. மெய்கண்டார் சந்தானமே நாம் முறையாக அறிகின்ற சைவ சந்தானம் மெய்கண்டார் தோன்றி ஒரு நூற்றாண்டின் பின். அதாவது 1350 முதல் 1425 வரை, கண்ணுடைய வள்ளல் என்பவர் சீகாழியில் வாழ்ந்தார். பிற்காலத்தில் இவருடைய மரபு, வள்ளல் சந்தானம் என வழங்கப்பெற்றது. இவர் மெய்கண்ட பரம்பரையில் உபதேசம் பெற்று, சம்பந்த சரணாலயர் என்ற பெயரோடு வாழ்ந்து நூல்கள் செய்திருந்த காலத்து. கண்ணுடைய வள்ளல் என்ற புதிய பரம்பரைக்கு மாறினார்; அதாவது வள்ளல் பரம்பரையைத் தாமே ஏற்படுத்தினார். இது ஐக்கிய வாத சைவம் என்று சைவசித்தாந்திகளால் ஒதுக்கப்பட்டது. இவருடைய பரம்பரையானது 20ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை சீகாழியில் திருமடமும் வழிபாடும் பிற விருதுகளும் பெற்றதாய்ச் சிறப்புடன் நிலவியிருந்து பின் அழிந்து போயிற்று. அழிந்து போனதற்குக் காரணம். இச் சந்தானத்தார் துறவிகளாய் இராமல், இல்லறத்தாராயிருந்தனர்; வெள்ளை வேட்டிக்காரர் என வழங்குவர். இல்லறம் என்ற முறையால் சந்தானம் ஒரு குடும்பத்துக்கே யுரியதாய்ப் பிற்காலத்தில் ஆகி க்ஷீணம் அடைந்தது. இதன் பெருமையை இலக்கிய வாயிலாய் உணர்ந்தவர்கள், இதன் க்ஷீணத்தைச் சீகாழியில் நேரில் கண்டவர்களிடம் கேட்டறியும் போது, மனம் வெதும்பாமலிருக்க முடியாது.

வள்ளல் சந்தானம் என்பது, கண்ணுடைய வள்ளல் தொடங்கியே நாம் அறியக் கிடைப்பது. இவர் ஐக்கிய வாத சைவராயினார். ஆனால் பின் வந்தோர் சைவ சித்தாந்திகளாயும் இருந்திருக்கிறார்கள். இவ்விவரங்களைப் பின்னர் முறையே நாம் காண்போம். வள்ளல் பரம்பரையில் நால்வர் வரலாறுகளே நமக்குத் திட்டமாய்த் தெரிவன. இந்நால்வரும் 15ஆம் நூற்றாண்டில் இருந்தவர்கள். இவர்கள் முறையே கண்ணுடைய வள்ளல், சுயம்பிரகாச வள்ளல், சிவஞான வள்ளல், சட்டைநாத வள்ளல் என்போர். இந் நால்வரும் ஒருவருக்குப் பின் ஒருவர் முறையே மாணாக்கராய் வந்தவர்களா, அல்லது இல்லறத் தருமத்தினாலே இன்றும் உள்ள சில வீர சைவ மடங்கள் போலப் புதல்வர் மரபாய் வந்தவர்களா என்பது விளங்கவில்லை.

இனி கச்சி, ஆளவந்த வள்ளலார் ஆதீனம் எனவொன்று இருந்ததென்று சொல்லக் கேட்டிருக்கிறோம். அன்றியும், திருஞான சம்பந்த சுவாமிகள் திருவடிக்கு அன்பு பூண்ட வள்ளலார் அறுபத்து நால்வர் என்ற ஒரு செய்தியும் சொல்வதுண்டு. கண்ணுடைய வள்ளல் முதலாக வந்த வள்ளலார் அனைவரும் திருஞான சம்பந்தரைக் குருவாகக் கொள்பவர்களே. இவர்கள் அறுபத்து நால்வர் என்பதற்கு விளக்கமில்லை; மிகைப்படுத்திச் சொல்லிய சொல்லாக நாம் கருதலாம்; அல்லது கண்ணுடைய வள்ளல் தொடங்கி 20ஆம் நூற்றாண்டின் கடைசியில் வாழ்ந்த முத்துச் சட்டை நாத வள்ளல்* வரை வாழ்ந்திருந்த வள்ளல் பரம்பரையினரை முறையாக எண்ணிச் சொல்வதாகவும் கொள்ளலாம். இங்ஙனமாயின், ஐந்து நூறு ஆண்டுகளில் அறுபத்து நான்கு தலைமுறைகளாகின்றன. சராசரி ஒரு தலைமுறைக்குரிய காலம் எட்டு ஆண்டாகிறது. இது பொருந்தாது என்பது வெளிப்படை. ஆகவே, இத்தொகை மிகைப்படுத்திச் சொல்லிய எண் என்றே நாம் கருதவேண்டியிருக்கிறது.

மேலும், காஞ்சிபுரம் ஆளவந்த வள்ளல் என்பவரைப் பற்றி எச்செய்தியும் தெரிந்திலது. காஞ்சி ஞானப்பிரகாசர் சிற்றம்பல நாடிகளின் மாணாக்கராதலாலும், கண்ணுடைய வள்ளல்

---

* இம்முத்துச் சட்டைநாத வள்ளல் கொஞ்சம் சமயக் கல்வியுடையவர். இவர் மகன் படிப்பில்லாதவன். கண்ணுடைய வள்ளல், வீடு, பூசித்த நடராசர், பிற சாமான்கள் யாவையும் விற்றுவிட்டு ஓட்டாண்டியாய்த் திரிந்தான்.

சிற்றம்பல நாடி மாணாக்கரான சம்பந்த முனிவரின் மாணாக்க ராயிருந்தவராதலாலும், காஞ்சி ஆளவந்த வள்ளலும் இதே மரபில் வந்தவராயிருக்க வேண்டும். வேறு இவரைப் பற்றி இப்போது ஒன்றும் தெரியவில்லை.

மற்றொரு குறிப்பும் இங்கு கருதத்தக்கது. வள்ளல் பரம் பரையினருக்குத் 'திருநெறிக் காவலர்' என்ற ஒரு பட்டப் பெயர் இருந்தது போலும் கண்ணுடைய வள்ளல், மாயாப் பிரலாபம்' சிறப்புப்பாயிரத்தில் திருநெறிக்கதிபர் என்று குறிப்பிடப் பெறு கிறார். அங்ஙனமே, இரண்டு தலைமுறை கழித்து வந்த சிவ ஞான வள்ளலும், சிருநெறிக் காவலர்* என்று குறிப்பிடப் பெறு கிறார் (சதாவசிவரூபம், சிறப்புப்பாயிரம்.) திருநெறி என்பது சைவ நெறி; திருநெறிய தமிழ் என்ற சம்பந்தர் தேவாரம் காண்க (1.1.11). கண்ணுடைய வள்ளல் சம்பந்த சரணாலயராக வாழ்ந் திருந்தபோது அவர் மாணாக்கரொருவர் பாடிய சிறு சாத்திர நூலுக்குத் திருநெறி விளக்கம் என்று பெயர் சூட்டியமையும் இங்கு கருதத்தக்கது.

“வாழி காழிநகர் வாழவந்த திருநெறி யாரதிபதி வள்ளல் தாள்!” என்று 'திருநெறி', 'வள்ளல்' என்ற தொடர்களுக்கு ஒரு மூலம், உமாபதி பாடிய திருத்தொண்டர் புராண வரலாறு, பாடல் 101இல் காணப்படுகிறது.

காழி மறைஞான தேசிகர் என ஒருவர் இருந்தார். இவர் பதிபசு பாசத் தொகை என்ற நூலுக்கு உரையிட்டார். (17 நூ.) இவர் பிராமண குலத்தவர் கண்ணுடைய வள்ளல்கள் அறுபத்து நால்வருள் இவர் ஆளவந்தார் பரம்பரையைச் சேர்ந்தவர் என்று ப. அ. முத்து தாண்டவராயப் பிள்ளை எழுதியிருக்கிறார். இதற்கு ஆதாரம் புலப்பட்டிலது.

---

* இங்கிலாந்தில் 1491 - 1547இல் ஆண்ட எட்டாம் ஹென்றி என்ற அரசனுக்கு ரோமாபுரியிலுள்ள போப் 'திருநெறிக் காவலர்' என்றே பட்டமளித்தமை இங்கு ஒப்புநோக்கத்தக்கது; பிற்காலத்தில் இவ்வரசன் தன் துன்மார்க்கங்களுக்குப் போப் உடன்படாமை யால், அவர் நெறியை விட்டுவிலகி, புராடெஸ்டண்டு பிரிவில் சேர்ந்து கொண்டான்; இருந்தும் இன்றுவரை, பிரிட்டிஷ் அரசர் திருநெறிக் காவலர் என்ற பட்டத்தைத் தாங்கள் விருதாவளியில் சேர்த்தே சொல்கிறார்கள்.

## காழி - கண்ணுடைய வள்ளல்

சம்பந்த சரணாலயர் வரலாற்றில் புதிதான ஓர் செய்தியை நாம் கண்டோம். அதாவது இவர் மெய்கண்டார் பரம்பரையில் வந்த சம்பந்த சரணாலயராக இருந்த சைவசித்தாந்த நெறியை விட்டுப் பிறழ்ந்த, சுத்த சைவ சித்தாந்த மில்லாத ஐக்கிய வாத சைவம் என்ற ஒரு புது மரபைத் தாமாக ஏற்படுத்திக் கொண்டு, வள்ளலார் மரபு என்ற ஓர் ஆசாரிய பீடமும் நிறுவி, அதில் தாம் முதல் ஆசாரியராக இருந்து மாணாக்கருக்கு உபதேசம் செய்து பல நூல்களையும் பாடினார் என்பது. இவருடைய பூர்வ நிலையாகிய சைவ சித்தாந்த மரபில் சம்பந்த சரணாலயர் என்ற தம் நிலையை அடியோடு கைவிட்டார். சம்பந்த முனிவ ரென்ற தமது குருவையும் மறந்தார். தாமாக ஓர் மரபைப் படைத்துக் கொண்டமையால் சீகாழி என்ற தலப்பெருமைக் கேற்ப, அருள்ஞானக் கண்ணுடைய திருஞான சம்பந்தப் பெரு மானையே குருவாகக் கருதிப் பாடி வந்தார்.

திருநாகேச்சுரப் பதிகத்தில் சம்பந்தர் 'நாகேச்சுரம் கண்ணி னாற் காண வல்லவராவர் கண்ணுடையார்களே (2759) என்று பாடுவது இங்கு அறியத்தக்கது.

சரணாலயர் என்ற பெயர் மறந்து போனமையால் அவ ருடைய பிறப்பு வளர்ப்பு ஊர் முதலிய செய்திகளும் மறைந்தன. கண்ணுடைய வள்ளல் புகழோடு விளங்கியமையால் இந்தப் பெயரில் அவருடைய பூர்வ சரித்திரம் விரிவாக அறியப் பெற லாயிற்று. இவர் செய்த நூல்களில் ஒன்றாகிய மாயாப் பிரலாபம் என்ற நூலின் சிறப்புப்பாயிரமானது கண்ணுடைய வள்ளலின் சரித்திரத்தை ஓர் அளவு தெரிவிக்கிறது:

> மாயா ப்ரலாப மெனவகுத் துரைத்தோன்
> கொடிலப் புனல் சூழ் அதிகைக் கதிபன்
> ஆழிமேல் மிதந்த காழிமூ தூரன்
> திசைமிக கீர்த்திக் குகமடத் தலைவன்
> கருநெறி கழிக்குந் திருநெறித் தேசிகன்
> அத்தனைக் காட்டி அழுது வாழ்வித்த
> வித்தகன் தனக்கு வேளைக் காரன்
> சிற்கணன் தன்னைச் சேர்ந்தவர்க் கருளும்
> நற்கண் ணுடைத்திரு ஞானசம் பந்தன்

இந்த வரிகளால் இவர் கெடிலப் புனல் சூழ்ந்த அதிகைக்கு அதிபராய் இருந்து காழியில் வந்து உபதேசம் பெற்று ஆதீனத் தலைவரானார். திருஞான சம்பந்தப் பெருமானுக்கு அகம்படித் தொண்டர் தம் குருவின் பெயரையே கண்ணுடைத் திருஞான சம்பந்தர் என்று தமக்கு அமைத்துக் கொண்டார். என்று அறி கிறோம். முத்துத் தாண்டவராயப் பிள்ளையவர்கள் புனைந் துரையாகப் பலவான செய்திகளை எழுதியிருக்கிறார். இவற் றிற்கு ஆதாரம், சீகாழியில் இவ்வள்ளலாரின் பின் வந்த முத்துச் சட்டைநாத வள்ளல் முதலிய சிலர் இவ்வாதீனத் தலைவர்களாய் இருந்தமையின், அவர்களோடு பிள்ளையவர்கள் கொண்டி ருந்த தொடர்பு, இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்த இந்த ஆதீனம் மிகவும் இழிந்த நிலையிலிருந்து வந்து, இன்று அடியோடு மறைந்து விட்டது என்று குறிப்பிட்டோம். இம் மடத்தின் தலைவனாய் இருந்த ஒரு இளம்பிள்ளை மடத்துக் குச் சொந்தமாயிருந்த நிலம் வீடு, மடம், பூசாத் திரவியங்கள், பூசைக்கான சிறப்புமிக்க நடராச மூர்த்தி முதலான மூர்த்தி வடிவங்கள், ஏட்டு வடிவிலுள்ள நூல்கள் முதலிய அனைத்தை யும் விற்றுப் பொருளைத் துர்வினியோகம் செய்து விட்டான் என்பர் பெரியோர். மிகச் சிறந்த பெரிய நடராச மூர்த்தி வடிவ மொன்று கண்ணுடைய வள்ளலே பூசித்தது சமீப காலத்தில் இவனால் விற்கப்பட்டது என்பர். இந்த மரபு இருந்த இடம் தெரியாமல் அழிந்துவிட்டது.

எனினும், சில செய்திகளை இங்குக் குறிப்பிடலாம். அதிகையிலிருந்து வந்த இவர் முன்னோர் ஆதியில் குணதர வீச்சரத்திற்கு கீழ்பாலிருந்த குக மடத்தை கி.பி. 1380இல் சீகாழி யில் ஆனந்தத் தீர்த்தத்தின் கீழ்பால் ஸ்தாபித்தார்கள். வைதிக சைவ சமயத்தை நிலைநாட்டும் பொருட்டு இம்மடம் ஏற் பட்டது. இவர்களுக்கு ஆதார நூல் குகபத்ததி. இந்த நிலை யில் இவர் 1380-1 ரெளத்திரி வருஷம் பங்குனி மாதம் இங்கு அவதாரம் செய்தார் என்பர். உரிய காலத்தில் முறையாகக் கல்வி பயின்று சம்பந்த முனிவரின் மாணாக்கராயிருந்து ஞானோப தேசம் பெற்று, சம்பந்தர் சீடர் சம்பந்த சரணாலயர் என்ற மர புப்படி* இப்பிள்ளை சம்பந்த சரணாலயராக வாழ்ந்து வந்தார். சம்பந்த முனிவர் முத்தியடைந்த பின், இவர் வள்ளலாதீனம் என்ற

---

* கண்ணுடையாள் (1166) கண்ணுடைய நாயகி (1384) என்ற திரு மந்திரம் காண்க.

பெயரில் தனி ஆதீனம் ஏற்படுத்தினார். இவர் சம்பந்தர் பிறந்த சீகாழிப் பதியில் தங்கி ஞானக் கண்ணுடைமையாலும் அருட் கண்ணுடைமையாலும் கண்ணுடையார் எனப் பெயர் பெற்றார்.

> பெண்ணொர்பா கம்மடை யச்சடை யிற்புனல்பேணிய
> வண்ணமா னபெரு மான்மரு வும்மிடம் மண்ணுளார்
> நண்ணிநா ளுந்தொழு தேத்தி நன்கெய்துநா கேச்சரம்
> கண்ணினாற் கானவல் லாரவர் கண்ணுடை யார்களே.
>
> (சம்பந்தர் தேவாரம் 2:119–2)

ஞானத்தின் மிக்க கொடையில்லை ஆதலால், அதனை வரையின்றி வழங்கியதனால் இவர் வள்ளல் என்னும் பெயருக் கும் உரியவரானார். இவர் சமய காலட்சேபங்களை விமரிசை யாகச் செய்து வந்தார். 96 தத்துவங்களுக்கேற்ப இவர் சோழ மண்டலத்தில் தமது காலத்தில் 96 சைவ மடங்களை ஏற்படுத்தி தாம் அவைகளுக்குத் தலைவராக விளங்கினார் என்றெல்லாம் இவரைப் பற்றிப் பெருமையாக மேற்கண்ட பிள்ளை கூறுவார். இவர் 96 திரு நட்சத்திரம் பூவுலகை அலங்கரித்துச் சைவம் வளரச் செய்து நள வருஷம் 1476 சித்திரைச் சித்திரையில் இறை வனுடன் கலந்தார். இதனுள் சிறிது உண்மை உளதாயினும் புனைந்துரையே மிகுதி.

சோழ மண்டல சதகம் 25 ஆம் பாடல் பின்வருவது:

> பள்ள மலியார் கலியுலகிற் பரமனுருவாய்ப் பணிந்தோருக்கு
> உள்ள படியி தெனவுணர்த்தி உலவா முத்தி யுறக்காட்டிக்
> கள்ள மதவல் லிருள் கடிந்த காணுங் காழிக் கண்ணுடைய
> வள்ளல் கருணை செயுஞ்சூழல் வளஞ்சேர்சோழமண்டலமே.

இது கண்ணுடைய வள்ளல் என்ற பெயர் வந்த காரணத்தைக் கூறி இவர் அவதாரத்தால் சோழ நாடு உயர்ந்தது என்று உரைக்கிறது.

இவரைப் பற்றி வழங்கும் கதைகள் பல. ஒன்று இவர் செல்வப்பிள்ளை என்று கூறும்; மற்றது இவர் ஏழைப்பிள்ளை என்று கூறும். இவர் தந்தை சண்பையர் தலைவன்; தாய் மங்கையர்க்கரசி; செல்வப் பிள்ளையாக வாழ்ந்த இவர் கலை ஞான விற்பத்தியுடையவராய்க் காழிப் பெருமானைத் தினந் தோறும் தரிசிப்பது வழக்கம். ஆளுடைய பிள்ளை யாரிடத்துப் பேரன்பு பூண்டு அவரையே தமக்கு ஆசாரியராகக் கொண்டு உபாசித்து வந்தார். தினமும். கோயிலுக்குப் போய்த் திரும்பி

வந்து துயின்றெழுந்த பின் ஒரு வெண்பாப் பாடுவது இவருக்கு வழக்கமாய் இருந்தது. கோயிலில் இவர் நெடுநேரம் போக்கித் திரும்பும் இயல்பினால் இவருக்கு வழித் துணையாகக் கந்தன் என்ற வேலையாள் இருட்டில் வழிகாட்டித் தீவர்த்தி பிடித்துக் கொண்டு உடன் செல்வது வழக்கம். 253ஆம் நாள் அன்று வெண்பாப் பாடவேண்டிய தினத்தில் நெடுநேரமாகியும் இவர் கோயிலிலிருந்து திரும்பவில்லை. இடியும் மழையும் மிகுந்திருந் தமையால் கந்தனும் அன்று உடன் செல்லாமல் தங்கி விட் டான் வழக்கம் போல் இவர் தரிசனம் முடிந்து, 'கந்தா' என்று அழைக்கவே, சுப்பிரமணிய சுவாமி கந்தன் உருவத்தில் வந்து தீவர்த்தி ஏந்தி வழிகாட்டிக் கொண்டு வந்தார். வீடு அடைந்ததும் பழைய கந்தன் முன்வந்து மழையினால் தான் வராமைக்கு மன்னிப்புக் கேட்டான். இவர் திரும்பிப் பார்க்க உடன் வந்த தெய்வக் கந்தன் மறைந்து விட்டான்.* இச் செயல் ஞானசம்பந்தப் பெருமானது அருள் விளையாட்டே என இவர் உணர்ந்தார். அன்றிரவு வழக்கம்போல் வெண்பாப் பாடி நூலை முடித்துத் தம் மாணாக்கரிடத்து நூலைக் கொடுத்தார். மறுநாள் தம் பெருஞ் செல்வம் அனைத்தையும் பட்டினத்துப் பிள்ளை போல் வாரி வழங்கி விட்டு அடுத்த கணத்தில் துறவு மேற்கொண்டார். இந்த வெண்பாக்களின் தொகுப்பே ஒழிவிலொடுக்கம்; 253ஆம் வெண்பா இதன் கடைசிப் பாடல்.

மற்றொரு வரலாறு இவர் ஏழைப் பிள்ளையாகப் பிறந்தார் என்பது. கல்வி பயில வழியின்றிக் குடிசைத் தொழில் செய்து பிழைத்தார். கூலி வேலை செய்பவன் வீட்டில் உதவியாளராக இருந்து வந்தார். ஒரு நாள் அவன் இவரைக் கடைக்கு அழைத்துச் சென்று சாமான்களை வாங்கி ஒரு கூடையில் நிரப்பி இவரைச் சுமக்கச் செய்து இல்லம் திரும்பினான். வழியில் ஒரு ஆலயத் துக்குள் நுழைந்து வழிபட்ட அச்செல்வன், ஒவ்வொரு சந்நிதி யிலும் கற்பூரம் ஏற்றி விட்டுத் திருஞான சம்பந்தர் சந்நிதியில் மட்டும் எஞ்சிய கற்பூரத்தை இரண்டாம் முறை ஏற்றி வைக்கச் செய்தான். அப்போது உடன் வந்த கூலியாள், இந்தச் சாமி இரண்டு முறை கற்பூரம் கொண்டமையால், இந்த சாமியே பெரியசாமி என்று தீர்மானம் பண்ணி, செல்வன் வீடு சென்று அவனிடம் சரக்குக்களை ஒப்புவித்து விட்டு அவன் கொடுத்த

* தீவட்டி சம்பந்தப்பட்ட இது போன்ற ஒரு செய்தியை வைணவத்தில் திருக்கச்சி நம்பி வரலாற்றில் காணலாம்.

கூலியையும் கூடையையும் தெருவில் எறிந்து விட்டு, நேரே கோவிலுக்கு வந்து, மூன்று நாள் இரவு பகல் இடைவிடாமல் அந்தப் 'பெரியசாமி' சந்நிதியில் வந்து நின்றார். அவருடைய பக்திக்கு மகிழ்ந்த கடவுள் அவர் முன் தோன்றி அவருக்குச் சகல ஞானத்தையும் உபதேசம் செய்து ஞானசாத்திரம் எழுதும்படி பணித்தார். இவ்வாறு உபதேசம் பெற்றுச் செய்த நூலே 'ஒழிவி லொடுக்கம்.'

இவ்வள்ளல் செல்வரென்பதே பொதுவாய் வழங்கும் வழக்கு. அதிகைக் கதிபன் என்ற தொடரும் இதை வலியுறுத் தும். இவர் கூலி வேலை செய்தார் என்பது பொருந்தாது.

இவர் பற்றிய மற்றொரு வரலாறு சிற்றம்பலநாடிகள் சரித்திரத்தில் கூறப்பட்டது. பின்னுமொரு வரலாறும் உண்டு. அதன்படி இவர் சைவ சித்தாந்த முதலாசிரியராகிய மெய்கண்ட தேவருடைய புதல்வர். இவர் மேலான ஞான நெறி ஒன்றிலே மனம் பற்றி சரியை கிரியா யோகங்களைப் பழித்தார். இதற்காக ஒரு நூல் செய்து, அதனுள் தற்போது ஒடுக்கமே வேண்டுவது என்று வலியுறுத்தி, அதனைத் தவிர, வேறொன்றும் கூறாத தற்கு அறிகுறியாக தற்போது 'ஒழிவில் ஒடுக்கம்' என்றே அந் நூலுக்குப் பெயரிட்டு, அந்த நூலைக் கொண்டு போய்ப் பூசை வேளையில் தந்தையாரிடத்துக் காட்டினார். பார்த்த மெய் கண்ட தேவர் ஞானம் மட்டுமின்றி, மற்ற மூன்றும் வெவ்வேறு பக்குவ நிலை உடையானுக்குத் தேவை என்று கருதியிருந்தவ ராதலால், இந்நூலைக் கண்டு வருந்திக் கோபமடைந்து, தம் திருமேனியில் இட்டிருந்த விபூதி திரிபுண்டரக் குறிகளை அழித்து, "சைவ சமயத்துக்கும் அச்சமயத்தின் சின்னங்களாகிய விபூதி ருத்திராக்கங்களுக்கும் இவனால் கேடு வந்ததே!" என்று இரங்கினராம். வள்ளலாதீனத்தில் உள்ளார் விபூதியிட்டு அழிக் கும் வழக்கத்துக்கு இதுவே காரணமென்பர்.

சோழபுரம் செட்டியாருள் எண்மர் திருவாவடுதுறை யாதீனத்தில் உபதேசம் பெற்று ஞானமுடையார்களாய் அங்கு இருந்து வந்தார்கள். தங்கள் அறிவினாலும் செல்வத்தாலும் பிற தகுதியாலும் தனிச்சலுகை, தனி விடுதிகள், பூசையிடங்கள் முதலியன ஒரே வரிசையாக எட்டுச் செய்திருந்தனர். பொறாமை கொண்டார் சந்நிதானத்திடம் சொல்லி இவர்களைத் தென் னாட்டு யாத்திரைக்கு அனுப்புவித்தார்கள். இவர்கள் அப்படியே

போக, வருவதற்குள் அவர்கள் இவர்கள் இருக்கைகள், பூசை யிடங்கள் முதலியவற்றை இடித்து நாசம் செய்துவிட்டார்கள். திரும்பிவந்த இவர்கள் நடந்தது கண்டு கோபமடைந்து, நாச்சி யார் கோவில் அடைந்து தனிமடம் நிறுவினார்கள். அவர்கள் விபூதியைத் தோள்பட்டையில் மட்டும் பூசிக் கீழே பட்டை யிடாமல் பூசும் வழக்கம் மேற்கொண்டார்கள்.

மேற்கூறிய பல்வேறு கதைகளையும் உண்மையல்ல வென்று ஒதுக்கி விடலாம்; எனினும், இவர் பல்வேறு சைவ சமய பேதங்களின் கருத்தை ஆராய்ந்து அவற்றின் ஏற்றத் தாழ்வு களை மறந்து, அவற்றை ஒற்றுமைப்படுத்தும் நோக்கத்தோடு நூல்கள் செய்தார் என்பது மட்டும் தெளிவு.

இதுகாறும் கூறிய கருத்துக்களனைத்தையும் இங்கு ஒருவாறு சுருக்கிக் கூறுவோம். சம்பந்த சரணாலயர் சம்பந்த முனிவரின் மாணாக்கர். இவர் தத்துவ விளக்கம் செய்தார். இது இவருடைய மாணாக்கராகிய திருநெறி விளக்கம் பாடினோர் கூறும் குரு வணக்கத்தாலும் களந்தை ஞானப்பிரகாசர் அகவ லாலும் திட்டமாய் ஏற்படுகிறது. இவரே பின்னர் கருத்து வேறு பாடு கொண்டு கண்ணுடைச் சம்பந்தன் என்று ஞானசம்பந் தரையே தம் ஆசிரியராகப் பாவித்து, தாமாக ஒரு புதுச் சமரச நெறி தோற்றுவித்துக் கொண்டார்; இவ்வாறு தோற்றுவித்த நெறி வள்ளல் நெறி; இதன் பிரதான நூல் ஒழிவிலொடுக்கம். இந்நெறியை ஏற்காத ஒரு மாணாக்கர், இவரினின்றும் பிரிந்து சிவாலய முனிவரைத் தம் ஆசாரியராகக் கொண்டார். கண் ணுடைய வள்ளல் இந்நூலுள் பாடும் 'என்னாணை' என்ற பாடலால் இவர் சிவானந்த மாலை பாடிய சம்பந்த முனிவரின் மாணாக்கர் என்று தெளிவாய்த் தெரிகிறது. பின் வந்தோரில் பெரும்பான்மையோர், சம்பந்த சரணாலயர் நூலுக்கும் வள்ளல் நூலுக்கும் வேற்றுமையுணராது யாவும் வள்ளல் நூலே என்று எண்ணினார்கள். மதுரைச் சிவப்பிரகாசர் மட்டுமே சரணாலயர் நூலை ஏற்றுக்கொண்டு வள்ளல் நூலைத் தள்ளிவிட்டார்; ஞானசாரம், சிவஞான போதக் கருத்துரை விருத்தம் என்பன சிறந்த நூல்களாயினும், வள்ளல் செய்தார் என்ற காரணத்தால், சிவப்பிரகாசர் இவற்றை ஒதுக்கி விட்டார் போலும். காழித் தாண்டவராயர் போன்றார் யாவுமே வள்ளல் நூல்கள் என்ற கருத்துடையவர்கள்; மதுரைச் சிவப்பிரகாசர் கொண்டது போன்ற கருத்து நாட்டம் பிறரிடம் காணவியலாது.

இவ்வாறு பரம்பரை மாறிய செய்தி பிற்கால அடியவர் ஒருவரால் இழித்துக் குறிப்பிடப்பட்டிருப்பதும் இங்கு அறிதற்குரியது. கிருஷ்ண தேவராயர் சபையில் வித்துவானாயிருந்த தத்துவப்பிரகாசர் என்பவர் கி.பி. 1475-1550இல் வாழ்ந்திருக்கக் கூடும் என்று தெரிகிறது.* திருத்தோணியப்பர் என்பவர் இவரை மிகவும் பழித்தார்; தோணியப்பர் ஒருகால் வள்ளல் பரம்பரையில் வந்தவர் போலும். அவருக்கு மறுமொழி கூறும் முகமாய், இவர் பாடிய பாடலில் பின்வரும் தொடர் வருகிறது. "இனிமை தரு குலத்துக் குருக்களை மறந்து எட்டிடத்தில் தீட்சை போகோம்." இது கண்ணுடைய வள்ளல் பற்றி நாம் கூறியுள்ள கருத்தையே ஏற்றுப் பேசுகிறது என்பது வெளிப்படை; ஓரிடத்தினும் மிக்கதை எட்டிடம் என்று கூறுவது உலகியல் வழக்கு.

அடியவராயிருந்த சம்பந்த சரணாலயர் வரலாறு நமக்கு அறிய வியலாமற் போயினும், அவர் வள்ளலாக மாறிய பின், அவருடைய பூர்வ வரலாறுகள் நன்கு ஆராய்ந்து பாடலுள் சொல்லப்பட்டுள்ளன; இதுவும் இயல்பேயாகும். ஏனெனில், தலைவர் வரலாற்றுக்குச் சிறப்புண்டேயன்றி, தொண்டர் வரலாற்றை உலகம் சிறப்பாகக் கருதுவது இல்லையல்லவா? கண்ணுடைய வள்ளல் வள்ளலாதீனத் தலைவரானார்: ஆனால் சம்பந்த சரணாலயராயிருந்து நூல் செய்தபோது, வெறும் அடியவரே. பூர்வநிலையில் அவர் வரலாற்றை யாரும் தேடவில்லை; தலைவர் நிலையில் தேடித் தொகுத்துச் சொல்கிறார்கள்.

இனி, கண்ணுடைய வள்ளல் செய்த நூல்களை ஆராய்வோம்.

## ஒழிவிலொடுக்கம்

இது 253 வெண்பாக்களுடைய ஒரு விரிந்த நூல். உந்தி, களிறு, துகளறு போதம் ஆகியவற்றுக்குத் துணை போவதாயும், அவற்றிலுள்ள பொருள்களை உவமைகளால் தெளிவுபடுத்தி விரித்துரைப்பதாயும் உள்ள நூல் ஒழிவில் ஒடுக்கம். இது ஐக்கிய வாத நூல் என்று சைவ சித்தாந்திகள் இதை ஒதுக்கிய போதிலும்கூட, ஐக்கியவாதத்திற்குக் கூறப்படும் இலக்கணங்கள் இந்நூலகத்தில் இல்லை என்பது அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் கருத்து.

---

* தத்துவப் பிரகாசம், எமது பதிப்பு, முன்னுரை பக்கம் 21-24 பார்க்க.

இந்நூல் சுகாதீதநிலையை விரைவில் அடைவிக்கும்; தற்போது ஒழிவு ஒன்றைப் பற்றி மட்டுமே உரைக்கும். இதைச் சிரத்தையோடு ஓதி உணர்பவர் உலக வாழ்வில் அசிரத்தை கொள்ளுதல் திண்ணம். அசிரத்தை வெறுப்பினால் வருவதன்று; தற்போதம் ஒழிந்து சிவானந்தப் பேற்றை அடையும் நெறியில் நிற்பவருக்கு அந்த அசிரத்தை தானே உண்டாகும். தற்போதம் அழிவதால் தம் உலக வாழ்விற்குக் கேடு வரும் என்று அஞ்சி, உலகோர் இந்நூலைப் பயிலாது விட்டனர்; இதுவே உண்மை யாகும்.

சாந்தலிங்க தேவர் வைராக்கிய சதகத்தை அரங்கேற்றிய போது, அதனைக் கேட்ட செல்வர் பலர் அக்கணமே துறவு பூண்டனர் என்ற கதையும் இங்கு நினைவுகூரத்தக்கது.

இதன் பாடல்கள் வழக்குச் சொற்கள், வழக்கிலுள்ள உவமைகள், பல்வகைத் தொழிற் பெயர் முதலியன பயின்றிருத்தலால், ஆசிரியர் ஓரளவு பாமர மக்களுக்கும் உணர்த்த வேண்டியே இந்த நூல் செய்தார் என்று நாம் கருதக்கூடும்.

குமார தேவர் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளைத் தம் குருவாகிய சாந்தலிங்க தேவரிடத்து அழைத்துச் சென்று ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார். சுவாமிகளுடைய புலமையை நன்கு கண்ட சாந்தலிங்க தேவர் அவரிடத்தில் ஒழிவில் ஒடுக்கம் முதலான சில சாத்திர நூல்களைக் கொடுத்து உரை எழுதுமாறு பணித்தார். அவரும் அவ்வாறே எழுதினார். ஞான சாத்திர உரை எழுதுவதில் சுவாமிகள் மிக்க சிறப்பான ஆற்றலுடையவர். அவர் உரையின்றி இந்நூலின் பொருள் தெளிவாக விளங்கல் மிக அரிது.

1851இல் இந்த நூலை இவ்வுரையோடு வடலூர் இராமலிங்க சுவாமிகள் முதல்முதல் அச்சிட்டுப் பரவச் செய்தார். இதன் சிறப்புப் பாயிரமாகிய 'வள்ளல் குருராயன்' என்ற வெண்பாவுக்கு விரிவான ஒரு விருத்தியுரையும் அவரே எழுதினார். 1906இல் சிறப்பான முன்னுரையோடு அனவரத விநாயகம் பிள்ளை பதிப்பு வெளிவந்தது. மூலமும் உரையும் 'குஜிலிப்' பதிப்புக்கள் பல வெளிவந்துள்ளன. பாடல்கள் 12, 13 நூற் பெயரைக் குறிப்பிடும்.

இந்நூல் பொதுவிலபதேசம், சத்தி நிபாதத்துத்தமரொழிவு, யோகக் கழற்றி, கிரியைக் கழற்றி, சரியைக் கழற்றி, விரத்தி

விளக்கம், துறவு, அவத்தைத் தன்மை, வாதனை மாண்டார் தன்மை, நிலையியல்பு என்னும் பத்து அதிகாரங்கள் கொண்டது. பொதுவிலுபதேசம், ஆசாரியர் அனாசாரியர் இலக்கணம் முதலியவற்றையும், நூலுட் கூறிய கருத்தெல்லாவற்றையும் தொகுத்துப் பொதுவான உபதேசமாகக் கூறிற்று.

சத்தாதி தத்துவம்போய்த் தானுமெதி ருங்கழன்றால்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலை – முத்தி
அநிர்வசனம் இன்ப அதீ தமெனில் ஆங்கே
பினமிடுதல் கன்மம் பிளாய். 52

என்ற வெண்பாவில், ஆசிரியர் சித்தாந்தம் வேதாந்த மென்று பேதம் பாராட்டுவதெல்லாம் கீழ்ப்பட்ட நிலையில்தான் என்று விளக்கினார். சத்தி நிபாதத்து உத்தமர் ஒழிவு, நால்வகைச் சத்திநிபாதத்து உத்தமர்களது பிரபஞ்சப்பற்றொழிவை முறையே கூறிற்று. யோகக் கழற்றி, கிரியைக் கழற்றி முதலிய மூன்றும், ஞானத்திற்குப் பக்குவராய் வந்தவர்கட்குத் தற்போதத்தை யொழித்து ஞானம் வருவித்தற் பொருட்டு அத் தற்போதத்தாற் செய்யும் சரியாதிகளைப் போதனைகளால் நீக்குமாற்றைக் கூறின. விரத்தி விளக்கம் உள்துறவின் இலக்கணம் அறிவித்தது. (விரத்தி-துறவி) துறவு, புறத்துறவின் இலக்கணத்தை யுரைத்தது. அவத்தைத்தன்மை, ஆறாறு தத்துவத்தைக் கடந்து, ஆணவ இருளையும் கடந்து, ஆன்ம தரிசனம் முதலிய சுத்தாவத்தையில் நிற்போரது தன்மை கூறிற்று. வாதனை மாண்டார் தன்மை, குடும்பத்தோடு கூடியிருந்தும் ஞானம் பெற்று அக்குடும்ப வாதனை மாண்டு நின்றார் தன்மை யுரைத்தது. நிலையியல்பு உண்மை நிலை தவறினும், மீட்டும் அதனைச் சென்று அடைதற் குபாயம் கூறியது.

இந்நூலில் உள்ள 151ஆம் பாடல்,

என்னாணை என்னாணை என்னாணை ஏகமிரண்டு
என்னாமற் சும்மா இரு என்று – சொன்னான்
திருஞான சம்பந்தன் சீகாழி நாடன்
அருளாளன் ஞானவினோ தன்.

என்பது. இதைத் "தாணுவினோடு" என்ற சிவானந்தமாலை 276ஆம் பாடலோடு ஒப்பு நோக்குங்காலத்து, சிவானந்த

மாலையுடையார் குருவென்றும், ஒழிவில் ஒடுக்கமுடையார் சீடரென்றும் எளிதில் விளங்கும்.

> தாணுவினோடு அத்துவிதம் சாதிக்கும் மாண! உனை
> ஆணவத்தோடு அத்துவிதம் ஆக்கினரார் – கோணறவே
> என்னாணை என்னாணை என்னாணை ஏகமிரண்டு
> என்னாமற் சும்மா இரு.

என்பது அப்பாடல். இதனாலும், இவ்விரு நூலாசிரியர்கள் பற்றி இதுகாறும் கூறிய குறிப்புக்கள் வலிமை பெறும். ஐக்கிய வாத மதம் பற்றிய இவரைச் சித்தாந்த சமயம் பற்றிய சந்தான பரம்பரையின் ஆசாரியராயிருந்த சம்பந்த முனிவர், மாணாக்க ராய்க் கொள்ளார் ஆதலினால், இவர் முன்னமே சம்பந்த சர ணாலயராய் அவரிடம் மாணாக்கராயிருந்து, அவர் காலத்துக் குப் பின் ஐக்கியவாத சைவராக மாறிவிட்டார் என்ற கருத்தும் வலி பெறுகிறது. தம் முந்தைய குரு உபதேசத்தைக் கொண்டா ராயினும், அத்தொடர்பை முழுமையும் அறுத்துக்கொண்டமை யால், உபதேசத்தைத் திருஞான சம்பந்தர் மீது ஏற்றிச் சொன்னார்.

புதுச் சொற்பிரயோகங்கள் அளவிறந்தன இந்நூலுள் உள்ளன. வேதாகமப் பவுரி, களாச நிலை, பகடி, அரிப்பன், வயிரி, கின்னரிப்பாட்டு, கிஙர் (அறிவீர்), திமிர்ப்பு, விப்பிரட்டம், மந்திரட்டம், சன்னை (சைகை), கிஞ்சு (சிறிது), வடத்தினம் (மிடி), கழற்றி, கப்பல், கவுசனை, பகடியாட்டம், வெறுமன் (வெறுமன்-கிராமியச் சொல் என்பர் உரைகாரர்). இங்ஙனமே இந்நூல் கூறும் உவமைகளும் எண்ணில் அடங்கா; யாவையும் புதியனவாயிருக்கும். இச்சிறு நூலில் காணும் அதிகமான புதுமை யுள்ள சொற்களும் தொடர்களும் பழமொழிகளும் போல வேறெந்த நூலிலும் இல்லை.

வள்ளல் நூல்களில் பெரிதும்பயிலப்படும் நூல் இதுவே. நமசிவாயத் தம்பிரான் (17 நூ.) முதலியோர் இதன் பாடல்களை ஆளுகிறார்கள்; ஆனால் மதுரைச் சிவப்பிரகாசர் இதைத் தொடவில்லை.என்று குறிப்பிட்டோம்.

**பஞ்சாக்கர மாலை**

60 வெண்பாக்களாலான சிறு நூல். பழைய சிறப்பான உரையுண்டு. நூல் நல்ல எளிய நடையுடையது. பின்வருவது விநாயக வணக்கம்:

> கல்லேன் பிறநூல்கள் காழியர்கோன் பாடலல்லால்
> சொல்லேன் சுரரைத் தொழநினையேன் – நல்லசிறு
> செஞ்ச தங்கை கொஞ்சு தண்டைச் சிற்றடிக்கன் பாகஎழுத்
> தஞ்ச தங்கை ஆமலக மாம்.

*தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், சீவன் முத்தர் பூசைக் கிரமம் என்ற மூன்று பிரிவுகளையுடையது. உரை முடிவில் உள்ள பாடல், உரையாசிரியர் வள்ளலைத் துதிப்பதாயுள்ளது.*

> காழிநகர் வாழி கவுணியர்கோன் தாள்வாழி
> வாழிஅருட் கண்ணுடைய வள்ளல்தாள் – ஏழிசையின்
> தெய்வத் தமிழ்ப்பாடல் வாழி திருநெறியாம்
> சைவத் தவர்வாழி தான்.

*இந்நூல் மிகவும் செம்மையான முறையில் கிரியாபூர்வமான பஞ்சாக்கர சாத்திரத்தைக் கூறுகிறது. ஒழிவில் ஒடுக்கம் செய்தார் இதைச் செய்தார் என்பது ஒவ்வாத கூற்றாயுள்ளது. ஒரு வேளை இதை இளமைப் பருவத்தில் அவர் செய்திருக்கக் கூடும்; அங்ஙனமாயின், அவர் சம்பந்த சரணாலயராக இருந்தபோது இதைப் பாடியிருக்கலாம். 'திரு நெறியாம் சைவத்தவர்' என்ற தொடரோடு இம்மரபினருக்கு வழங்கும் ஒரு பட்டமாகிய 'திருநெறிக் காவலர்' என்பதை ஒப்பு நோக்குக.*

### பதிப்பு

*உரையுடன், சோம சுந்தர தேசிகர், சித்தாந்தம் இதழ், 1932, பக்கம் 47-64.*

### நியதிப் பயன்

*வடமொழியில் உள்ள குகபத்ததியின் சாரமாக ஆசிரியர் ஞான சம்பந்தரை முன்னிலைப் படுத்திப் பாடியது. வினாவும் விடையுமாக 103 கட்டளைக் கலித்துறைகள் கொண்டது. நித்திய கரும நியதிகள் ஒவ்வொன்றையும் குறிப்பிட்டு, ஏன் இவ்வாறு செய்ய வேண்டும் என்று முதல் 23 பாடல்களில் ஆசிரியர் திருஞான சம்பந்தரை "காழிக் கண்ணுடைச் சம்பந்தனே" என்று விளித்து வினாவுகிறார். மற்ற 74 பாடல்களில் அவற்றுக்கு விடையைக் குருவின் கூற்றாக உரைக்கிறார். நியதிகளுக்கு இந்நூல் வினாவும் விடையுமாய் அமைந்தமை போல வேறு இரு நூல்கள் அமைந்துள்ளன. ஒன்று சதமணிக்கோவை,*

காலத்தால் முந்தியது. மற்றது குருமொழி வினாவிடை; பூசைக் கிரியைகளை வினாவு வது; பிற்காலத்தது.

### ஞான சாரம்

118 கட்டளைக் கலித்துறைகளையுடையது. பாயிரப் பகுதியில் விநாயகர் காப்பும் நடராசர் அம்பிகை நால்வர் தொண்டர் ஆகியோருக்குத் தோத்திரமும் கூறுகிறது. நூல் முழுமையும் சிவப்பிரகாச நூல் அமைதியை ஒட்டிச் சித்தாந்த நூற்பொருளை முறையாக உரைக்கிறது. பின்வரும் பாயிரப் பாடல்கள் நூற் பொருளை உணர்த்தும்:

> மிக்கவே தாந்த சைவ மெய்ப்பொருட் பயனாய் மூவர்
> தொக்கசெந் தமிழ்சேர் வாய்மைச் சுருக்கமாய் வாதவூர –
> ருக்குநின்றோதும் உண்மைக் குரியதாய் இந்த நூற்குத்
> தக்கபேர் உரைக்கின் ஞான சாரமாம் பெயர தாமே.
>
> பொய்வகைச் சாரு வாகன் புகழ்சிவாத் துவிதி ஈறாய்
> உய்பொருள் இதுவென் றெண்ணி இன்றள வுணர வொண்ணா
> மெய்தரு பொருளாய் இன்ப வீட்டில் வேதாந்த மான
> சைவ அத் துவிதம் தன்னைத் தமிழினாற் சாற்ற லுற்றாம்.

மாணாக்கன் வினவுதலும், ஆசிரியன் அறிவுறுத்தலுமாக நூல் பெரும்பகுதி இயன்றுள்ளது.

ஞானசாரம் என்ற பெயரில் பல நூல்கள் உள்ளன: வேதாந்தம், வைணவம், வீரசைவம் என. ஆசிரிய மரபினர் தத்தம் சமயநூல் இதே பெயரில் செய்திருக்கின்றனர். கண்ணுடைய வள்ளல் செய்த ஞானசாரத்தையும், திருநெறி விளக்கமுடையார் நூலையும், ஒருங்கு வைத்து ஆராயும்போது, இரு நூல்களுக்கு மிடையே ஒரு போட்டி இருந்ததோ என்று எண்ணும்படியுள்ளது. சரணாலயர் மாணாக்கரான ஒருவர் திருநெறி விளக்கம் செய்தார்; சரணாலயரே பின் வள்ளலாகி ஞானசாரம் செய்தார். நூலின் அமைப்பு, பாடல் தொகை, பொருள் முதலியன இவ்வாறு எண்ண இடங்கொடுக்கின்றன. வள்ளல் முதலில் ஞானசாரம் செய்திருக்க வேண்டும். அவரிடம் கொள்கையில் வேற்றுமை கொண்டு விலகிய திருநெறி விளக்கமுடையாரான மாணாக்கர், ஞானசாரம் என்ற பெயரை அங்கீகரிக்க மனமில்லாமலும், வள்ளல் படைத்துக்கொண்ட திருநெறிக் காவலன் என்ற பட்டத்தை அங்கீகரிக்க மனமில்லாமலும், தம்

மறுப்பைத் திருநெறி விளக்கம் என்ற பெயருடைய நூலாக எழுதிக் காட்டினார் என்று கருத நியாயமுண்டு. சிவப்பிர கா சத்தின் விளக்கமே திருநெறி விளக்கம் எனும் முறையில் அவர் நூல் செய்தமை இக்கருத்தை வலியுறுத்தும்; சிவப்பிரகாசத்தில் யாரும் பிழைகாண முடியாதல்லவா? மேலும், அக்காலம் சமய வாதம் மலிந்த காலமென்பதும் நன்கு சிந்திக்கத் தக்கது.

### மாயாப் பிரலாபம்

84 வெண்பாக்களால் ஆன நூல். பல முறை பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதன் சிறப்புப் பாயிரப் பகுதி தொடக்கத்தில் காட்டப் பெற்றுள்ளது. மாயையாகிய பெண், போதனை யிழந்து புலம்புதல் என்பதே நூல் கூறும் பொருள். நூல் திருஞான சம்பந்தரைப் போற்றுகிறது.

### பஞ்சமலக் கழற்றி

பஞ்ச மலங்களும் கழல்வதைச் சம்பந்தப் பெருமானை முன்னிலைப்படுத்திக் கூறுவது. ஐந்து வெண்பாக்களை யுடையது. ஒழிவிலொடுக்கம் 250ஆம் பாடலில் ‘பஞ்சமலக் கொத்தறும்’ என்று இவர் கூறியிருப்பது கருதத்தக்கது.

### சிவஞான போத விருத்தம்

“ஸ்ரீமது வள்ளலார் அருளிய திருவிருத்தம்” என்ற தலைப் போடு, காழித் தாண்டவராயர் தாம் செய்த திருவாசக உரையில் சிவஞான போதச் சூத்திரம் பன்னிரண்டையும் எழுதி, ஒவ்வொன் றிற்கும் நேராக, பன்னிரு விருத்தங்களைக் குறிப்பிட்டுள்ளார். இவர் கண்ணுடைய வள்ளல் என்ற பெயரை இந்த இடத்தில் குறிப்பிடாத போதிலும் கூட வேறிடத்தில் குறிப்பிட்டிருக்கிறார். “இந்தத் தேவாரத்திற்கு (திருவெழு கூற்றிருக்கை) திருஞான சம்பந்தக் கண்ணுடைய வள்ளலாரான பரம குருநாதன் எழுதிய உரை” என்று கூறுகிறார். கண்ணுடைய வள்ளல் நூலாகிய ஒழிவிலொடுக்கத்தில் ஒரு பாடலை இவர் மேற்கோள் காட்டுவ தாலும், வேறு வள்ளல் மரபினர் எவரையும் குறிப்பிடாமை யாலும், இவர் கருத்து, இந்நூல் கண்ணுடைய வள்ளல் செய்த தாகும் என்றே தெரிகிறது; இவருக்கு, வள்ளல் என்றாலே கண்ணுடைய வள்ளல்தான். பின்வருவது முதற் சூத்திரத்துக் குரிய விருத்தமாகும்:

பதிபசு பாசமெனத் தெரித்த மூன்றிற்
பதியாவ தொருபடிப்பட் டுள்ளசகத் திற்கு
முதுமறைநூ லவனவ ளதுவென் றோதும்
மூவகையுஞ் செய்யவொரு முதலுண் டாகும்
அதுபதியாஞ் சுகந்தன்னை யழித்துக் காத்திட்டு
ஆக்குதலால் அவனரனே யாவன் மற்று
விதிதனையும் அரிதனையுங் காட்டி யெல்லாம்
விளைந்தழியக் கண்டுநிற்பன் விமலன் தானே.

இப்பாடலின் கருத்து "கோயிலும் வேடமும் குருவும் மெய்ப் பொருளொன்றாய் அனுபவராக்கையிற் கதியினும் பேரருட் கதியினும் பிரிவறக் கண்டே ஆருருட் சிவமாய் அழிவரென்று உரைத்தது" என்று எழுதப்பட்டுள்ளது. இதை எழுதினார் காழித் தாண்டவராயரேயாவார்.

இச்சிவஞான போத விருத்தத்தைப் பார்க்கும்போது, இது கண்ணுடைய வள்ளல் ஐக்கிய வாத சைவத்தைத் தழுவு முன் செய்யப் பெற்றிருத்தல் கூடுமென்று கருதத் தோன்றுகிறது.

**தேவார உரை**

கண்ணுடைய வள்ளல் சில உரைகளும் உரைநடை நூல் களும் செய்தார். அவற்றை இனிப் பார்ப்போம்.

கண்ணுடைய வள்ளல் சம்பந்தர் தேவாரத்துள் சித்திரக் கவிகளாயுள்ளவற்றுக்கு உரை எழுதியிருக்கிறார் என்று தெரி கிறது. திருவெழு கூற்றிருக்கையின் உரையைக் காழித் தாண்டவ ராயர் முழுதும் எடுத்துக் கொடுக்கிறார்.

"இத்தேவாரத்துக்குத் திருஞான சம்பந்தக் கண்ணுடைய வள்ளலாரான பரமகுருநாதன் எழுதிய உரையை எமது குரவர் அடியேற்கு உபதேசித்தபடி அவ்வனுபூதிகம் மிகுந்து சிவரகசிய கதையாயிருப்பதால் இந்தத் திருவாசக உரை பொழிப்பனுபூதி அனுக்கிரகம் செய்யும்போது முன் அருளிய தேவாரங்களுடன் இவைக்கும் அருளிய அனுபூதிப்படி ஒன்றே பெரிய நல் அடை யாளமென எடுத்துக்காட்டலாக எழுதியது."

அப்படியே மற்றோர் இடத்தில் வள்ளலார் ஏகபாதத் தேவாரத்திற்கு உரை எழுதியிருப்பதைக் குறிப்பிடுகிறார். இவ் விரண்டு குறிப்புக்களாலும், கண்ணுடைய வள்ளல், தேவாரத் துள் சில பகுதிகளுக்கு உரை எழுதினார் என்பது தெளிவாகத்

தெரிகிறது. இது இயல்பேயாகும். தாம் வழிபடும் கடவுளாகக் கொண்ட திருஞான சம்பந்தர் பாடல்களுக்கு இவர் உரை எழுதியதில் வியப்பில்லை. இவர், எளிதில் பொருள் விளங்காத சித்திரக் கவிகளுக்கே உரை எழுதினார். ஆனால் இவ்வுரை இன்று கிடைப்பதாகத் தெரியவில்லை. சென்ற நூற்றாண்டில் சுயம்பிரகாச யோகியார் என்பவர் ‘வேதாந்த சித்தாந்த சமரச நூல்’ என்ற பெயரோடு ஒரு நூல் எழுதி 1887இல் வெளியிட்டார். இதில் இறுதிப் பகுதி திருஞான சம்பந்தர் தேவாரத்தில் உள்ள சித்திரக் கவிகளின் உரையாகும். இது வள்ளலாரின் உரையாய் இருத்தல் வேண்டும்; அல்லது யோகியார் அதைத் தழுவி எழுதியிருத்தல் வேண்டும். அவ்வளவே இப்போது சொல்லக் கூடியது.

## திருக்களிற்றுப்படியார் அனுபூதி உரை

கண்ணுடைய வள்ளல் திருக்களிற்றுப்படியாருக்குச் சிறப்பானதோர் அனுபூதியுரை எழுதியிருக்கிறார். இது 1962இல் அச்சாயிற்று. இவ்வுரையில் உரையாசிரியர் பெயர் எங்கும் சொல்லப்படவில்லை. ஆயினும் இதனுள் வரும் ஒழிவு, கழற்றி என்ற சொல்லாட்சிகளைக் கொண்டு, இவ்வுரைகாரர் கண்ணுடைய வள்ளலே என முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. உரையாசிரியர் ஆசிரியரைப் பின்வருமாறு போற்றுகிறார்:

> பொருளும் மனையும் அறமறந்து போக மறந்து புலன்மறந்து
> கருவி கரண மவைமறந்து காலம் மறந்து கலைமறந்து
> தருமம் மறந்து தவமறந்து தம்மை மறந்து தற்பரத்தோடு
> உருகி யுருகி ஒருநீர்மை யாயே விட்டார் உய்யவந்தார்.

## பதிப்பு

1952, மு. அருணாசலம். விரிவான முன்னுரை பார்க்க.

## பேரானந்த சித்தியார்

இந்த நூல் 108 விருத்தப்பாக்கள் கொண்டது. திருநெல்வேலி திருநாவுக்கரசு சுவாமிகள் மடத்து இராமலிங்க சுவாமிகளால் 1908இல் அச்சிடப்பட்டது. “சிவானுபூதிச் செல்வர் செய்தது” என்று அப்பதிப்பில் சொல்லப்பட்டுள்ளது; காப்பு வெண்பாச் செய்யுள் ‘முத்தராம் வித்தியானந்தார் விளம்பிய பேரானந்த சித்தியார்’ என்று சொல்லுகின்றது. நூல் திருப்புன்முறுவல், மௌன முத்திரை, பிடித்த முத்திரை, கன்மக் கழற்றி, மாயைக் கழற்றி, ஆணவக் கழற்றி, போதக் கழற்றி, அருட்கழற்றி, பொருட்

*கழற்றி, முத்திநிலை வினாமொழி என்ற பத்துத் தலைப்புக் களையுடையது. பின்வரும் பாட்டு நூலின் இப்பாகுபாட்டைக் கூறுகிறது:*

திருப் புன் முறுவல் மவுனமலர்ச்
  செங்கை பிடித்த முத்திரையாற்
கருப்புக் கழியா தெனை முமலக்
  கன்ம முதற்போ தமுங் கழற்றி
அருப்புக் குவித்திட்டு அவ்வருளும்
  அழிவில் பொருளுங் கழற்றிமுத்தி
விருப்புற் றளித்தோன் நூற் றெண்பா
  விரை மாலிகைத் தாள் வாழியவே.

*நூற்பாடல்களைப் பார்க்கும்பொழுது இது கண்ணுடைய வள்ளல் (அல்லது அவருடைய மாணாக்கர் ஒருவர்) செய்திருக் கிறார் என்று கருதத் தோன்றுகிறது. இக்கருத்துக்களும், சொற் களும், பொருளும் இதற்குத் துணை செய்கின்றன.*

*இதன் முதற்பகுதி, திருப்புன்முறுவல்; சிற்றம்பல நாடிகள் சாத்திரக் கொத்தில் உள்ளது.*

*பின்வரும் ஒற்றுமைகளைக் காண்க: பாடல் 16, "எல்லா மலங்களும் போய் உய்ந்தவாறு" - வள்ளல் பாடிய நூல் பஞ்சமலக் கழற்றி என்பது. 34ஆம் பாடல் "ஒழிவில்லாது என்னதெனதாய் இரு" - வள்ளல் பாடியது ஒழிவில் ஒடுக்கம். இங்கு ஆறு அதி காரங்களின் தலைப்பு கழற்றி; ஒழிவில் ஒடுக்கத்திலும் பல அதி காரங்கள் கழற்றி என்ற தலைப்புடையன. 35ஆம் பாடல் "தர்க் கம் இறந்து சதுர் இறந்து சார்வும் இறந்து" என்பது முதலான தொடர்கள்: வள்ளல் எழுதிய திருக்களிற்றுப்படியின் உரையின் இறுதியில் காணும் "பொருளும் மனையும் அறமறந்து போக மறந்து புலன்மறந்து" என்ற பாடலை நினைவூட்டுகின்றன. ஒரு சொல்லை மூன்று முறை தொடர்ந்து சொல்லும் வழக்கத்தை இவருடைய ஒழிவில் ஒடுக்க நூலில் காண்கிறோம். இச்சித்தியார் 40ஆம் பாடலில் "உன் நட்பெல்லாம் காக்கை உறவோ போ போ போ கண்டால் நகைப்பேன் காமியமே" என்றவிடத்து, போ என்ற சொல் இவ்வாறு மும்முறை வரக் காண்கிறோம். இவற்றாலும் இவை போன்ற பிற ஒற்றுமைகளாலும் இந்நூல் கண்ணுடைய வள்ளல் பாடினார் என்பது பிழையாகாது. எனினும், இது மேலும் ஆராயத்தகுந்தது.*

### அதிகாரப் பிள்ளை அட்டவணை

தம்மிடம் பணிவிடை செய்து வந்த ஒரு சைவருக்கு எளிய நடையில் உரைநடையாகக் கட்டளை போலச் சமய உண்மை களைத் தொகுத்தெழுதிய சிறுநூல் என்று கூறுவர். இது, சிவ ஞான வள்ளல் இதே பெயரில் செய்த நூலினும் வேறு போலும்.

சிவானந்த மாலை, தத்துவ விளக்கம், திருநெறி விளக்கம் முதலான பல நூல்களை இவரே செய்தார் என்று சிலர் கருது கிறார்கள். அது பிழை; இதன் விளக்கம் ஆங்காங்கு 14ஆம் நூற்றாண்டு வரலாற்றிலும் இங்கு வேறிடத்திலும், சொல்லப் பட்டுள்ளது. மேலும், பின் வந்த ஆசிரியர் சிலர், வள்ளல் என்ற பெயரால் வழங்கின யாவும் கண்ணுடைய வள்ளல் செய்தனவே என்று எழுதியிருக்கிறார்கள். உதாரணம்: நிட்டானுபூதி யுரை யாசிரியரான முத்துக்கிருஷ்ண பிரமம், வேதாந்த சித்தாந்த சமரச நூலாசிரியரான சுயம்பிரகாச சுவாமி முதலானோர்; இக்கருத்து பிழை என்பது தெளிவு.

## பிராசாத தீபம்

பிராசாத அகவல் பற்றிக் கூறிய இடத்தில் பிராசாதம் என்ற சொல்லின் பொருளை அறிந்தோம்; சிவஞான கதியாகிய முத்தியைக் கொடுப்பது பிராசாதம்; இது ஒரு யோக நெறி. சித்தியாரில் குறிப்பாகவும் தத்துவப்பிரகாசத்தில் விளக்கமாக வும் இது சொல்லப்பட்டுள்ளது; அங்கு கூறிய அகவல் இந்த யோக நெறியை நன்கு விளக்கும். இவ்வாறு விளக்கம் உரைக்கும் நூல்களில் சிறப்பானது, இவ்வகவலையடுத்துத் தோன்றிய பிராசாத தீபம். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆயினும், நூற்பாயிரப் பாடல்கள், ஆசிரியரும் அவர் காலமும் குறித்த சில செய்திகளை நமக்குத் தெரிவிக்கின்றன.

முதலாவது, காப்புச் செய்யுள், விநாயகர் வணக்கம்:

> வையமிசை மன்னுயிர்கள் முத்திபெற அரனருளால்
> வகுத்த நூலில்
> எய்துபிரா சாதம்உரைத் தற்குஇறைவன் இமவரையின்
> இறைவி என்ற
> செய்யநிறத்து ஒரு கோட்டு மும்மதத்து நால்வாய்ஐங்
> கரம் சேர் காழிக்
> கைவரையின் இருபதாம்எம் கண்ணிணை சேர்த்து
> இதயமதில் கருதல் செய்வாம்.

இங்கு ஆசிரியர் சீகாழியிலுள்ள விநாயகருக்கு வணக்கம் கூறு கிறார். எனவே இவர் சீகாழிப் பதியினர் என்று நாம் கருதலாம். இனி இரண்டாவதாக, குருவணக்கம் கூறும் செய்யுளையும் பார்க்கலாம்:

> விம்சதியும் சோடசமும் துவாதசமும் தசமும்நவம்
> மேவும் எண்ணாறு
> ஐங் கலையின் நாமத்தால் எண்வகையாய் ஆகமங்கள்
> அறைந்த வாற்றால்
> வெங்குருமா நகர் வள்ளல் பதம்பரவி எண்ணிரண்டு
> கலையின் மேன்மை
> துங்கம் உறப் பிராசாத தீபம் எனத் தமிழினால்
> சொல்லல் உற்றாம்.

இங்கு "வெங்குருமா நகர் வள்ளல் பதம்பரவி" என்ற தொடர் கவனிக்கத் தக்கது. வெங்குரு என்பது சீகாழி. வள்ளல் என்பது, நூலின் பொருளையும், காலத்தையும் பார்க்கும்போது, சீகாழி யில் சிறந்த சைவ ஆசாரியராய்ப் புகழ் பெற்றிருந்த காழிக் கண்ணுடைய வள்ளலைக் குறிப்பதாகும். இங்ஙனமாயின் பிராசாத தீபம் பாடிய ஆசிரியர் கண்ணுடைய வள்ளலின் சீடராவார். வள்ளலுக்குச் சீடர் பலர் இருந்தனர். அவர்களுள் இவரும் ஒருவராகிறார். நூலின் சொல்லமைதி பொருளமைதி களை ஆராயும்போது இது கண்ணுடைய வள்ளலே செய்த தெனச் சொல்வதற்கில்லை; சுயம்பிரகாசர் செய்திருக்கலாம்.

பிராசாத தீபம் என்ற இந்த நூல் தமிழிலே மிகவும் விரிவான பிராசாத சாத்திரம். கமலை ஞானப்பிரகாசர் பாடிய பிராசாத மாலைக்கும், குருஞான சம்பந்தர் பாடிய பிராசாத விருத்தத் துக்கும் இது காலத்தால் முந்தியது. வள்ளல் காலத்தை யொட்டிப் பார்க்கும்போது, இந்நூலாசிரியர் காலம் 1425 - 1450 ஆகிறது. இவர் பெயரோ வரலாறோ தெரியவில்லை. இந்நூலில் 37 எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் உள்ளன. இவை மிகவும் சிறப் பான முறையில் பிராசாதம் பற்றிய எல்லாச் செய்திகளையும் நன்கு உரைக்கின்றன.

### பதிப்பு

சோமசுந்தர தேசிகர் பதிப்பு, மூலம் மட்டும் செந்தமிழ் 29-10. யாழ்ப்பாணப் பதிப்பு, அச்சுவேலி ச. குமார சுவாமிக் குருக்கள் உரை; சிறப்பான வடமொழி தென்மொழி மேற்கோள் உடையது, 1933.

## சுயம்பிரகாச வள்ளல்

இவர் காழிக் கண்ணுடைய வள்ளலின் மாணாக்கருள் ஒருவர். அவர் ஏற்படுத்திய வள்ளலாதீனத்தில் அவருக்குப் பின் தலைவராயிருந்தவர். இவருடைய மாணாக்கர் சிவஞான வள்ளல்; அவர் தம் குருவைப் பல இடங்களில் துதிக்கிறார்:

> பாச மைந்தையும் தனித்தனிப் பரிந்திட நீக்கி
> நேசமாகிய அறிவுரு நீ எனக் காட்டிப்
> பேசும் ஏழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
> தூசு நீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம்.

என்பது ஒரு பாட்டு. மேலும், "வாழி சுயம்பிரகாசப் பெயரோன் மாணாக்கர்" என்று இவர் பாடுவதால் சுயம்பிரகாசர் மடத்துத் தலைவராய்ப் பல மாணாக்கருக்குக் குருவாய் இருந்தார் என்று நாம் யூகிக்கலாம். சிவப்பேறு, ஐக்கியவியல் என்ற நூல்களும், சிவானந்த மாலையில் 6 செய்யுளும் இவர் செய்தார் என்று முத்துத் தாண்டவராய பிள்ளை எழுதியிருக்கிறார்: இக்கூற்றுக்கு ஆதாரம் எங்கும் காணப்பட்டிலது. சிவப்பேறு கிடைக்காமை யால் அதுபற்றி எதுவும் சொல்வதற்கில்லை. ஐக்கியவியல் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மறைஞான சம்பந்தர் பாடியது. சிவானந்த மாலை முழுமையும் சம்பந்த முனிவரே பாடியது; பிறர் பாடி னார் என்ற வரலாறே இல்லை.

கண்ணுடைய வள்ளலின் மாணாக்கராகிய இவர் 1425-50 ஆகிய காலத்தில் இருந்திருக்கக் கூடும். இவர் நூல் செய்ததாகத் தெரியவில்லை. ஒருகால் இவரே பிராசாத தீபம் பாடியிருக்கலாம்.

## சிவஞான வள்ளல்

இருபது சிறு சாத்திர நூல்கள் கொண்ட தொகுப்பு வள்ள லார் சாத்திரம் என்ற பெயரோடு வழங்குகிறது. இது ஓரளவு நன்கு பிரசாரம் உடைய நூல். இது வேதாந்த நூல் என்பதே பொதுவான கருத்து. இதைச் செய்தார் சிவஞான வள்ளல். தொகுப் பின் இறுதியிலுள்ள பின்வரும் வரிகள் இதை உணர்த்தும்:

> தினகரன் உதய மென்னத் திருவுளம் மகிழ்ந்து ரைத்தான்
> புனலிடை ஆழாக் காழிப் புரிவரு போத வள்ளல்.

(போதம் - சிவஞானம்.)

இருபதிவ் வுண்மை நூலும் இயல்பிய ஞானவள்ளல்.

*இவ்வரிகளால் இவர் சிவஞான வள்ளல், சீகாழிப்பதியினர் என்று அறிகிறோம். காழிக் கண்ணுடைய வள்ளலின் சீடா சுயம்பிர காச வள்ளல்; சுயம்பிரகாசருடைய சீடர் சிவஞான வள்ளல். இவர் சுயம்பிரகாசரைப் பல இடத்தும் துதிப்பதோடு, குருவா கவே குருவணக்கப் பாடலும் பாடுகிறார்.*

அப்பிர மேய போற்றி ஆருயிர்த் துணைவா போற்றி
ஒப்பிலா ஒருவ போற்றி உணர்பவர்க் கணியா போற்றி
நட்பய லில்லோய் போற்றி நாதாந்த நாதா போற்றி
சுப்பிர மணியா போற்றி சுயம்பிர காசா போற்றி.

*இதனோடு கண்ணுடைய வள்ளலையும் போற்றுகிறார்:*

புண்ணுடலை நீப்பேனோ பொன்றாத மெய்ஞ்ஞானக்
கண்ணுடைய வள்ளல்பதங் காண்பேனோ – எண்ணுடைய
அஞ்செழுத்தின் உண்மை அறிவேனோ ஆங்கதனுட்
பிஞ்செழுத்தைப் பின்னிடுவே னோ.

*சீகாழியில் வாழ்ந்த சமயாசாரியர் அனைவரும் ஞான சம்பந்தரைப் பெரிதும் போற்றுவார்கள். அந்த மரபுக் கேற்ப இவரும் மிகப் பலவான இடங்களில் சம்பந்தரையும் அவர் பாடல் களையும் பொதுவாகவும் தலைப்பைச் சுட்டியும் குறிப்பிடு கிறார். (சிந்தனை வெண்பா 32.)*

பவனமாய்ச் சோடையாய் என்றபத்துப் பாட்டும்
சிவன்தாள் அடைவோர்க்குத் தெப்பம் – கவலை
உருவழியச் சொன்ன உபதேசம் அன்றோ
சொருபத் திருப்பா சுரம்.

*'பவனமாய்ச் சோடையாய்' என்பது சம்பந்தர் தேவாரம்.*

*இங்ஙனமே இவர், அப்பர், சுந்தரர், அம்மையார், மாணிக்க வாசகர், திருமூலர், சேரமான், நக்கீரர், பட்டினத்தார் பாடல் களையும் தொடர்களையும் சொற்களையும் ஏராளமாக எடுத் துரைக்கிறார். சித்தாந்த சாத்திரங்களில் சிவஞான போதம், சித்தியார், உமாபதியார் நூல்கள் ஆகியவை அதிகமாய்ப் பயில் கின்றன. திருக்குறளைப் பலமுறை உபயோகிக்கிறார். சிற்றம்பல நாடி நூல்களையும் அவர் பெயரையும் குறிப்பிடுகிறார். இவர் எடுத்தாளும் நூல்கள் சிவவாக்கியர் பாடல், திருப்புகழ், கந்த*

ரனுபூதி, திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம், விநாயகர் அகவல், தேவிகாலோத்தரம், சர்வ ஞானோத்தரம் என்பன.

கண்ணுடைய வள்ளல் காலம் 1400-25 என்று நாம் முடிவு செய்வதால், அவர் மாணாக்கரின் மாணாக்கராகிய சிவஞான வள்ளல் வாழ்ந்தது 1450-75 என்று கருதுதல் பொருந்தும். இவர் குறிப்பிடும் நூல்களும் ஆசிரியர்களும் இக்காலப் பகுதிக்கு முன்பேயிருந்தனர் என்று ஆங்காங்கு செய்து வந்த முடிவு பெரிதும் ஒப்பக் கூடியது. சிவவாக்கியர் முதல் தேவிகாலோத்தர ஆசிரியர் வரை அனைவரும் 14-15 நூற்றாண்டுகளில் வாழ்ந்தன ரென்ற கருத்துக்குச் சிவஞான வள்ளல் ஆதரவு தருகிறார்.

சிவஞான வள்ளல் தம்முடைய நூல்களில் மிகச் சிறப் பான சைவ சித்தாந்தம் கூறுகின்றார். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நாற்பாதங்கள், பதி பசு பாச இலக்கணங்கள், பாசமோசனம், துறவு இலக்கணம், கொல்லாமை முதலான கருத்துக்கள், இவரைச் சிறந்த சைவ சித்தாந்த ஆசிரியரென்றே தெரிவிக்கும். சந்தான குரவரையும் திருமுறை ஆசிரியர்களையும் இவர் போற்றும் முறையானது இந்நிலைக்குச் சான்று.

சிவஞான போதத்தாற் சென்மவிடாய் தீர்ந்து
சிவஞான சித்தியால் தேறிச் – சிவஞான
போதத்தை மெய்கண்டான் போதித்தான் சித்தியினைச்
சாதித்தான் தான் அருணந் தி.

மற்றிரண்டும் ஆய்ந்து மருவில் உமாபதியார்
சொற்ற சிவப்பிரகா சத்தொன்னூல் – அற்றநிலை
ஆங்கதுவே சீவன்முத்த னாக்குவிக்கும் அந்நூலே
ஓங்குக நீ டுழியும் பின் னும்.

அம்மைதிரு அந்தாதி நக்கீரர் அந்தாதி
பொய்ம்மையிலாப் பொன்வண்ணத் தந்தாதி – செம்மைத்
திருமூலர் மாலையிவை சித்தாந்த மாகும்
வருமூவர் வாக்கியமு மாம்.

சித்தாந்த மென்னுந் திருவிளக்கைக் கொண்டறிந்தேன்
முத்தாந்த ஆவி முதற்பொருளைச் – சித்தாந்தத்
தேனை பருகிச் செனன மரணமெனும்
கானைக் கடந்தொழிந்தேன் காண்.

கண்ணுடைய வள்ளல் ஐக்கியவாத சைவத்தைத் தழுவிய போதிலும் கூட, அவர் பின் வந்துள்ளோரிடம் சைவ சித்தாந் தமே ஓங்கியிருப்பதற்கு, சிவஞான வள்ளல் சான்றாவார். இவர் நூல்கள் முழுமையிலும் திருமுறை மணமும் சித்தாந்த சாத்திர மணமும் கமழும். திருமந்திரப் பாடல்களை அப்படி அப்படியே எடுத்து வைத்திருக்கிறார். கொல்லாமை பற்றி இவர் பாடிய பின்வரும் பாடல் எல்லோரும் நன்கு அறிந்தது:

**அம்மா என அலற ஆருயிரைக் கொன்றருந்தி**
**இம்மா னிடரெல்லாம் இன்புற் றிருக்கின்றார்**
**அம்மா எனுஞ் சத்தம் கேட்டகன்ற மாதவர்க்கும்**
**பொய்ம்மா நிரைய மென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே.**

இவர் நூலில் பழமொழிகள் நிரம்பப் பயில்கின்றன. நூலுள் காழியன்றிக் குறிப்பிடப்பட்டுள்ள வேறு தலங்கள், அவிநாசி, மயிலை, மறைக்காடு, மழபாடி; இவையன்றி "ஈசனிருக்குமிட மெல்லாம் சென்று இறைஞ்சிப் பாசம் அறுக்க வேண்டும்" என்று சொல்லுகின்ற இடத்தில் வேறு பத்தொன்பது தலங் களைக் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு சைவ சித்தாந்தத்தையே பற்றியிருந்த இவ்வள் ளல், வேதாந்தத்தையும் வைணவத்தையும் பின்பற்றி அறநெறியில் உபதேசம் செய்கின்றார். கீதையையும் நம்மாழ்வாரையும் குறிப்பிடுவதோடு, திருவாய்மொழிப் பாடல்களையும் மேற் கோளாகச் சொல்கிறார். அன்றியும், நம்மாழ்வாரை முதன்முதல் மதுரகவி ஆழ்வார் சென்று தரிசித்தபோது கேட்ட கேள்விக்கு விடையாக நம்மாழ்வார் கூறிய "அத்தைத் தின்று அங்கே கிடைக்கும்" என்ற சொற்களைப் பழமொழி என்றே இவர் குறிப்பிடுகிறார். மேலும் சிற்றம்பல நாடி வெண்பாவினால் நாடிகளுக்கு மழபாடி மாணாக்கர் ஒருவர் இருந்தார் என்றும், அவருக்குப் பக்குவம் குறைவாய் இருந்தமையால் ஆசிரியர் பின்னும் ஒருமுறை உபதேசம் செய்ய வேண்டியிருந்தது என்ப தையும் நாம் அறிந்தோம். அவர் காலத்திற்குப் பின் மழபாடி மாணாக்கன் அல்லது மழபாடிப் பண்டாரம் என்ற தொடர் ஏளனத்துக்கான தொடராக மாறிவிட்டதென்றும் இவர் பாட லால் அறிகிறோம்:

அறிவு திருவிதத்துக் கப்பால் அறியும்
அறிவு சிவமதுவே நீ யாம் – அறிவொன்றிக்
கண்டாருங் காணாக் கதியை மழபாடிப்
பண்டாரங் காணும் படி.

வள்ளல் சாத்திரம் என்ற பெயரே இந்நூல் தொகுப்பி னிடத்துப் பின்வந்தோர் கொண்டிருந்த ஈடுபாட்டைக் காட்டும். இந்நூல் எளிய நடையில் சாத்திர உண்மைகளை நன்கு உப தேசிக்கிறது. நல்ல தமிழ். பிற வேதாந்த நூல்களில் காணு கின்றது போல, மொழியானது இங்கு வளமில்லாத மொழி அன்று: இது வளமிக்க செம்பாகமான சிறப்புடைய நடை. இருப்பினும், ஆசிரியர் வேதாந்தமும் சைவ சித்தாந்தமும் கலந்து சமரசமாகச் சொல்வதால், சைவர்கள் இதைப் பெரிதும் போற்ற வில்லை என எண்ணுகிறோம். எனினும், இது சைவத்திற்கே பெரிதும் அரண் செய்யவல்ல நூல் என்பது நன்கு புலனாகின்றது.

இதனுள் அடங்கிய இருபது பகுதிகளும் பின்வருவன.

**சத்திய ஞான போதம்**

சத்திய ஞான போதத் தமிழ் என்று பாயிரம் கூறும். நூற்பா வினால் 115 பாடல்கள் உடையது. பாயிரம், பதி, பசு, பாசம், உபதேசம், அணைந்தோர் தன்மை என்ற இயல்கள் கொண்டது. பதி, பசு, பாசம் கூறிற்றாயினும், ஆசிரியர் கொள்கை வேதாந்தமே.

பிரம கீதையைப் பேசினவன், மறலியை முனிந்தவன், நான்முகத்திலிருந்து நான்மறை உரைத்தவன், உபநிடதத்தில் ஒலித்தவன், யானைக்கு அருள் செய்தவன், பிரகலாதனுக்கு வெளிப்பட்டவன், துருபதன் மகளுக்குத் துகில் ஈந்தவன், அருச் சுனனுக்கு அமரிடை ஞானமீந்தவன், கல்லாலின் கீழ் ஞானம் புரிந்தவன், புரமெரித்தவன்-அவனே பிரமம் என்று கூறுகின்றார்.

கேவல ஞானக் கிழவன் ஆளுடைப்
பிள்ளை நாவரசு பேரா ரூரன்
அரதன வாக்கியன் அருந்தமிழ் மூலன்
சீவன் முத்தர் திருவாய் மலர்ந்த
நூல்பவ நோய்க்கு நுண்ணிய மருந்தே –

என்று சைவ சமயாசாரியர் நூல்கள் முதலியவற்றையும் குறிப் பிடுகின்றார்.

### பதி பசு பாச விளக்கம்

இது 257 விருத்தங்களுடைய சிறப்பு மிகுந்த நூல். சுயம் பிரகாசருக்குக் குருவணக்கம் கூறுகிறார். திருமூலரையும் வியாசரையும் வணங்குகிறார். முன்கூறிய கொல்லாமை குறித்த 'அம்மா என அலற' என்ற பாட்டு இதில் வருகிறது. மூன்றே பாடலில் தசகாரியம் கூறப்பட்டுள்ளது. சந்நியாசம், அதி வருணாச்சிரமி இலக்கணம் கூறுகிறார். (பிற்காலத்தில் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவாக்கிரயோகி மட்டுமே அதிவருணாச்சிரமி என்று பெயர் பெற்றிருந்தார்.) ஒரு பாடலில் "கொல்லா விரதமே விரதம்... தேவி காலோத்தரத் தேற்றமே தேற்றம்" என்றும் கூறுகிறார். தேவி காலோத்தரத்தின் காலமும் இதனால் வரையறுக்கப் பெறுகிறது.

### சித்தாந்த தரிசனம்

பாயிரம், பதி, பசு, பாசம், பாசமோசனம், சிவ யோகம் என்று ஐந்தியல்களையும் 379 குறட்பாக்களையும் உடையது சைவ நூல் கள் பலவற்றின் கருத்துக்களை ஒரு சேரத்தொகுத்துக் கூறுவது.

> எங்கணனைக் குட்டிய குட்டெங்கேனும் பட்டதோ
> மங்கையர் மேலடித்த மத்தடிபோய் – எங்கேனும்
> பட்டதோ எங்கள்பசுபதிமேற் பட்டவடி
> பட்டதே எவ்வுயிர்க்கும் பார்.

திருக்களிற்றுப்படி, கந்தரலங்காரத் தொடர்களும் இதனுள் காணப்படும்.

### உபதேச மாலை

நூறு வெண்பாக்கள் உடையது. இது பத்துப் பாடல்களில் தசகாரியம் கூறுகின்றது. கொல்லா விரதம் இங்கு கூறப்பட் டுள்ளது. பற்றற்று முத்தி பெற்றவர்களைக் கூறும்போது, சுகன், வாமதேவன், துருவாசன், காதி மகன், விதுரன், வெண்காடன், மாறன், பத்திரகிரி ஆகியோரைக் குறிப்பிடுகிறார். ஆசரிக்கும் தன்மையினால் ஆசாரியன் என்னும் பெயர் ஆசாரியர்க்கு அம ரும் என்றும் கூறுகிறார். சைவபரமான தசகாரியம் சொல்லப் பட்டுள்ளது.

### சிவஞானப் பிரகாச வெண்பா

நூறு வெண்பா உடையது. ஆகமச் சிறப்புக் கூறும்போது தேவி காலோத்தரத்தைக் குறிப்பிடுகிறார். இந்நூல் அப்பர்,

*மெய்கண்டார், அருணந்தி, உமாபதி, கண்ணுடைய வள்ளல், காரைக்காலம்மை, நக்கீரர், திருமூலர், சம்பந்தர் ஆகியோ ரைக் குறிப்பிடுகிறது. சம்பந்தர் திருவள்ளுவர் ஆகியோரையும் பாடல்களையும் அற்புதங்களையும் குறிப்பிடுகிறார். மீண்டும் மீண்டும், 'முத்தியிலும் மும்முதலும் உரைப்பது சத்தியமோ' என்று கேட்கிறார் (17, 93). இவர் கருத்தைப் பின்வரும் பாடல் விளக்கும்:*

சைவம் சிவத்தோடு சம்பந்த மானமையாற்
சைவமே அத்துவிதம் சாதிக்கும் – சைவத்தை
வேறென்று கொள்ளற்க வேறற்ற வேதாந்தக்
கூறென்று கொள்ளுதலே கோள்.

### ஞான விளக்கம்

*101 வெண்பாக்களையுடைய நூல். பின்வரும் பாடல் ஆசி ரியருடைய கருத்தைக் காட்டுகிறது:*

சம்பந்தர் பேரறிவும் வாகீசர் தம்துறவும்
நம்பியா ரூரர்தம் நட்பினையும் – அன்புருவாம்
திண்ணனார் பேரன்பும் சிறுத்தொண்டர் பத்தியையும்
அண்ணலே எற்கீந் தருள்.

*சிறப்பான சித்தாந்தக் கருத்துக்களையும் வேதாந்தக் கருத்தை யும் சேர்த்து உரைக்கிறார்.*

### அத்துவிதக் கலிவெண்பா

*30 கண்ணிகள், குரு உபதேசச் சிறப்பைக் கூறும். உமாபதி யார் வாக்கு எங்கும் பயில்கிறது.*

### அதிரகசியம்

*ஆன்மா குருவைத் தேடிக் கண்டு உபதேசம் பெறுவதைக் கூறுகிறது. துறவு இலக்கணம் சுவைபடச் சொல்லப்பட்டுள்ளது. 66 விருத்தங்கள்.*

### சிவாகமக் கச்சிமாலை

*'கச்சி ஏகம்பனே' என்ற முடிபுடைய 100 கட்டளைக் கலித்துறைப் பாடல்கள்.*

### கருணாமிர்தம்

பெரும்பாலும் 'திருப்புலிவனத்துளானே' என்ற முடிபை யுடைய 64 விருத்தங்கள். இங்கு (39) சீவாக்கர் என்று சிவ வாக்கியர் குறிப்பிடப்பட்டுள்ளார். மதுரைத் திருவிளையாடல் சிலவும் கூறப்பட்டுள்ளன. புலிவனம் என்பது புலி பூசித்த தலம்; செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது போலும். ஒரு பாடல் (53) ஐந்து அடிகள் கொண்டது. பின்வரும் பாடல் கருதத்தக்கது.

சைவ சித் தாந்த மெல்லாம் தானவ னாகிநிற்றல்
மையறு வேத சித்தம் மற்றது நானே என்னல்
உய்வகை இரண்டும்ஒன்றென் றோதிஎன் னுயிர்கிலாபம்
செய்த சற் குரவன் நீயே திருப்புலி வனத்து ளானே.

### சுருதிசார விளக்கம்

மகா வாக்கியங்கள் நான்கின் பொருளை விளக்குகின்ற 91 விருத்தப் பாடல்களையுடையது. திருமூலர், சடகோபர், சீவாக்கர், வெண்காடர், சுயம்பிரகாசர் ஆகியோரை ஆசிரியர் இங்கு துதிக்கிறார். பிரமனையும் சனகனையும் சுகமுனிவன் வினாவுவதாக நூல் அமைந்துள்ளது.

### சிந்தனை வெண்பா

35 வெண்பா, திருஞான சம்பந்தரைத் துதிப்பது. மெய் கண்டார், வெண்காடர், எம்குரு, சிற்றம்பலவர், சுகர் ஆகிய ஐவர் பூரணர்கள் என்கிறார். சம்பந்தர் பாடல்கள் பல சொல்லப் பட்டுள்ளன.

### நிராமய அந்தாதி

10 வெண்பா, சம்பந்தர் தோத்திரம். துரைக் காழிச் சம்பந்தர் என்கிறார். துரை - தோன்றல் அல்லது தலைவன். இச் சொல்லை இரட்டையரும் பின்னர் அருணகிரிநாதரும் உபயோகிக்கின்றனர். 14ஆம் நூற்றாண்டில் புதிதாக ஆட்சிக்கு வரும் சொற்களில் வரும் இதுவும் ஒன்று. வள்ளலும் இதைக் கூறுவதால் இவர் காலமும் அதையொட்டிய அடுத்த காலம் என்று செய்துள்ள முடிவு பொருந்துவதே.

அறுபத்து நாலு சங்கை, தசவழக்குச் சிந்தனை, குரு மரபு சிந்தனை, அனுபவ சந்திரிகை, அதிகாரப் பிள்ளை அட்டவணை,

மரபு அட்டவணை என்ற இவ்வாறும் வசனநூல்கள் இடையே ஏராளமான மேற்கோள் பாடல்கள் உள்ளன. இங்கு ஆசிரியர் வடமொழி வாதம், தேவிகாலோத்தரம், சர்வ ஞானோத்தரம் முதலான நூல்களைக் குறிப்பிடக் காண்கிறோம். தமிழ்த் தேவி காலோத்தரத்தையும் சர்வஞானோத்தரத்தையும் எடுத்துச் சொல்லுகிறார். திருப்புகழ், கந்தரனுபூதி, தத்துவராயர் பாடிய பிள்ளைத் திருநாமம், சிவவாக்கியர் பாடல் முதலிய நூல்கள் குறிப்பிடத்தக்கன. கபிலர் அகவலும் இங்கு வருகிறது. இங்கு தெய்வத்துக்குரிய இடம் கூறும்போது, பொன்னெயில் வட்டத்தையும் குறிப்பிடுகிறார். குளவி கீடத்தைக் கொட்டிக் கொட்டிக் குளவியாக்குகிறது என்ற கருத்தோடு சேர்த்து இவர் சொல்லும் கருத்துக்கள் சில புதிதாயிருக்கின்றன: "ஒரு குளவி யாற் கீடத்துக்குக் கீடத்துவம் போய்க் குளவி சிந்தனை முற்ற முற்றக் குளவியான தன்மையும். ஒரு பாடாணஞ் சிறப்பினால் வேதாங்கப்படி செய்யத் தெய்வமான தன்மையும், ஒரு விழல் ஆறு அமாவாசிப் பிடுங்கிப் பிடுங்கி நட விலாமிச்சியான தன் மையும் போல" என்ற பகுதி காண்க.

### திருமுகப் பாசுரம்

இப்பகுதியில் ஏழு பாடல்கள் உரையோடு கூட உள்ளன. இங்கு சந்திரசேகர சுவாமிகள் திரியம்பகருக்கு மத்தியார்ச் சுனத்தில் உபநிடத வாக்கியத்தை அறிவுறுத்திய செய்தி கூறப் பட்டுள்ளது.

இவ்வாறு அமைந்துள்ள இந்த வள்ளலார் சாத்திரக் குறிப்பினால், முன் கூறிய செய்திகள் யாவும் வலியுறுகின்றன. சிவஞான வள்ளல், சிற்றம்பலநாடிகள், கண்ணுடைய வள்ளல் பரம்பரையில் வந்தவர். சுயம்பிரகாச வள்ளலின் மாணாக்கர். அருணகிரிநாதரும், சிவவாக்கியரும் தத்துவராயரும் இவருக்குக் காலத்தால் சற்று முன்னே வாழ்ந்தார்கள். பதி பசு பாச விளக்கம் 111ஆம் பாடலில் 'பரமாத்த தரிசியான மகிபர்' என்ற தொடர் வருகிறது. இத்தொடரானது பரமார்த்த தரிசனம் என்ற கீதை யின் மொழிபெயர்ப்பான தமிழ் நூலைச் சுட்டுவது வெளிப் படை. இந்நூல் செய்தார் பட்டர்; இவர் காலம் 13ஆம் நூற் றாண்டு என்பர். எங்ஙனமாயினும், இவர் சிவஞான வள்ளலுக்கு முந்தியவர் என்பதும் இதனால் தெரிகிறது.

## சட்டை நாத வள்ளல்

காழிக் கண்ணுடைய வள்ளல் பரம்பரையில் சிவஞான வள்ளலுக்கு அடுத்த தலைவர் சட்டை நாத வள்ளல். இவர் செய்த நூல் சதாசிவ ரூபம் என்பது நெடுங்காலமாக இது சைவ மக்கள் பயில்கின்ற ஒரு பிரமாண நூல். வெள்ளியம்பல வாணத்தம்பிரான் இந்நூலை விரிவாக எடுத்து மேற்கோள் காட்டுகிறார். இந்நூல் அகவற்பாவில் அமைந்த 152 பாடல்களை (615 வரிகள்) உடையது. இதற்குச் சிறப்புப் பாயிரமொன்றும், அரியதோர் விளக்கவுரையும் உள்ளன.

காழிக் கவுணியன் மலர்க்கழல் வணங்கி, இவ்வாசிரியர் நூல் செய்கின்றார். வாதுளம், காமிகம் என்ற இரு ஆகமங் களையும் ஆராய்ந்து அங்கு சதாசிவமூர்த்தி, பஞ்ச சத்திகள், இவர் அனைவருக்கும் ஆதாரமாக இவர்பால் சிவன் வியாபிக் கும் முறைமை, இவரை அருச்சிக்கும் முறைமை ஆகியவற்றைத் தொகுத்துக் கூறுகின்றார் என்பது சிறப்புப் பாயிரத்தால் விளங்குகின்றது.

> தண்டமிழ்த் தொடையல் சதாசிவரூபம் என்று
> ஒண்திறற் பனுவல் உளங்கனிந் துரைத்தோன்
> ஞானக் குழவியும் நாவினுக் கிறைவனும்
> ஊனமில் ஊரனும் ஒருவடிவு ஆகிச்
> சிரபுரத் துதித்தோன் திருநெறிக் காவலன்
> தருசிவ ஞான சதுர பாடிகன்
> அஞ்சுக போதம் அருள்புரி வள்ளல்
> கஞ்சுக நாதன் கலைத் தமிழ்க் கடலே.

என்ற வரிகளால், தேவாரம் பாடிய மூவரும் ஒரு வடிவாகிச் சீகாழியில் வந்து உதித்தார் எனத் தக்கவரும், திருநெறிக் காவலரும் சிவஞான வள்ளல் போதம் அருள் புரியப் பெற்ற வள்ளலுமான கஞ்சுகநாதர் (சட்டை நாதர், கஞ்சுகம் - சட்டை) இந்நூல் செய்தார் என அறிகிறோம். சிவஞான வள்ளலுக்கு அடுத்த ஆசாரியர் சட்டை நாதர் என்ற மரபு வரலாற்றுக்கும் இக்கருத்துப் பொருத்தமாயுள்ளது. சிவஞான வள்ளலின் காலம் 15ஆம் நூற்றாண்டின் பிற்பாதி என்று முன்பே கண்டோம். ஆதலால் சட்டை நாத வள்ளலின் காலம் அந்நூற்றாண்டின் இறுதி, கி.பி. 1475-1500 எனக் கருதுவது பொருந்தும்.

மற்ற வள்ளல் நூல்களைப் போலன்றி, சதாசிவ ரூபம் சைவ சித்தாந்த பரமானது. எனினும், கடலெனப் பரந்த கல்வி ஞான முடையவரான மதுரைச் சிவப்பிரகாசர் தம் சிவப்பிரகாசப் பேருரையில் இதை மேற்கோள் காட்டவில்லை. இதற்குக் காரணம் இரு வகையாக இருத்தல் கூடும். சிவப்பிரகாசரது முதுமையில் அவர் பேருரை செய்தார் (கி.பி. 1488). அவரினும் பார்க்கச் சட்டை நாதர் இளைஞர். ஆகவே இளைஞர் செய்யும் நூலுக்கு முதியவரிடம் அதிக மதிப்புப் பெறுதல் இயலாது. அன்றியும், இந்நூலுக்கு வழக்காறும் ஆட்சியும் அன்று உடனே ஏற்பட்டு இரா. ஆதலால், சிவப்பிரகாசர் இந்நூலை அறிந்து குறிப்பிட்டிருக்க நியாயமில்லை. ஒருகால், இது சிவப்பிரகாசர் உரை செய்த கி.பி. 1488இன் பின் செய்யப் பெற்றிருத்தலும் கூடும் (1488-1500).

மற்றொரு காரணம் இவ்வள்ளல் ஐக்கியவாத மரபில் வந்தார் என்பது. கண்ணுடைய வள்ளல் சைவ சித்தாந்தியன்று, ஐக்கியவாத சைவர். சுயம்பிரகாசரும் சிவஞான வள்ளலும் வேதாந்திகள். எனவே, இம்மரபினரின் நூலைச் சிவப்பிரகாசர் கருதிப் பார்க்க மாட்டார். ஆகவே, இம்மரபில் வந்த சட்டை நாதரின் நூல் சித்தாந்த பரமாயிருப்பினும், அதைச் சிவப்பிர காசர் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை என்று நாம் கருதலாம்.

சதாசிவ ரூபவுரை பழமையானது. வேறு வகையில் தமிழில் விளக்கமுறாத சாத்திரக் கருத்துக்களை இந்நூல் நன்கு கூறும். இந்த நூலுக்கு இவ்வுரை சிறந்த விளக்கம் தருகின்றது. உரை காரர் சட்டைநாத வள்ளலின் மாணாக்கராகவே இருந்திருப்பார்.

## பதிப்பு

ரிப்பன் பிரஸ், மூலமும் உரையும் 1917. திருவாவடுதுறை ஆதீனம், மூலமும் உரையும் 1954.

## குறிப்பு

காஞ்சிக்குக் கச்சி கச்சாலை அகழங்கர் என்பவர் 1722 பாடல் கொண்ட ஒரு புராணம் பாடியிருக்கிறார் இவர் ஆளவந்த வள்ளல் ஆதீனம் என்று சொல்லப் பெறுகிறார். காஞ்சியில் வள்ளல் பரம்பரை என ஒன்று சொல்லப்படுகிறது. சிவாகம கச்சிமாலை என்ற ஒரு சாத்திர நூலையும் காஞ்சிக்கு அருகிலுள்ள திருப்புலிவனத்தையும் சிவஞான வள்ளல் பாடி

இருக்கிறார். பிரசித்தி இல்லாத திருப்புலிவனத்தை இவர் பாடியிருப்பதால் இவர் இப்பகுதியில் வாழ்ந்தார் என்று நாம் கருதலாம். அச்சமயத்தில் இவரிடம் உபதேசம் பெற்று ஒருவர் ஆளவந்தார் என்ற பெயரோடு இங்கு வாழ்ந்திருக்கலாம். இவர் தங்கிய மடம் ஆளவந்தார் ஆதீனம் என்று பெயர் பெற்றது. இந்த வழியில் சுமார் 17ஆம் நூற்றாண்டு இங்கு வாழ்ந்தார் கச்சி கச்சாலை ஐயர் என்பவர். கச்சியேசுவரம் என்பது இங்குள்ள ஒரு சிவத்தலம் என்பதும் நினைவு கூறத்தக்கது. இவர் பாடிய புராணத்தை ஐயரவர்கள் பழைய காஞ்சிப் புராணம் என்று கூறுவதால், இந்த நூல் 18ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் சிவ ஞான சுவாமிகள் பாடிய பிரசித்தமான காஞ்சிப் புராணத்தைக் காலத்தால் முற்பட்டது என்று கருதலாம். ஆகவே 17ஆம் நூற்றாண்டாகலாம். இந்த நூலிலுள்ள பின்வரும் பாடலால் இவ்வாசிரியர் ஒரு பாரதமும் காஞ்சிக்கு ஒரு கோவையும் பாடினார் என்று கருத இடமுண்டு. ஆனால் அந்த நூல்கள் கிடைக்கவில்லை.

பாரதமும் கச்சிக் கோவையும்
  பாடப் பரிந்து தித்தாய்
நாரதன் பாடுமி சைக்கே
  யுருகிய நம்ப ரிபே
ரூரார் தம் பாடலெனவேயுன்
  பாட்டுமுவந்து கொள்ளப்
பூரண லட்சணக் கச்சாலை
  யென்னும்நற் போதத்தனே.



*அத்தியாயம் 8*

# வேதாந்த இலக்கியம்

## *முன்னுரை*

*வேதாந்தம் என்பது தமிழ்ச் சமய மரபில் சங்கரருடைய அத்துவைத நெறியைக் குறிக்க வழங்கும் சொல்; இதையே சைவ சித்தாந்திகள் மாயாவாதம் என்று பெயர் கொடுத்துக் கண்டனம் செய்தார்கள். 13ஆம் நூற்றாண்டில் ஸ்ரீ பட்டர் வடமொழிப் பகவத்கீதையைத் தமிழ் விருத்த யாப்பில் பரமார்த்த தரிசனம் என்ற பெயரில் மொழிபெயர்த்தார். வேதாந்திகள் அதை நன்கு பயின்ற போதிலும்கூட, மூல நூலுக்குத் தமிழ்நாடு மட்டுமின்றி இந்திய நாடெங்கும் இருந்த வழக்காறும் பெருமையும் காரணமாக, வடமொழி அறியாதவர்களும் செவியாறலாக அதையே பயின்றார்கள்; தமிழ் நூலைப் பயின்றவர் குறைவு. சற்றுப் பிற்காலத்தில் கைவல்லிய நவநீதம் என்ற தமிழ் முதல் நூல் எழுந்தது. வேதாந்த மார்க்கத்தில் இதற்குரிய பெருமை வேறெந்த நூலுக்கும் இல்லை என்ற அளவுக்கு இந்நூல் மிகக் குறைந்த காலத்தில் மக்கள் மனத்தைக் கவர்ந்து கொண்டது. இதன் சொல்நயமும் எளிமையும் விளக்கமும் இதற்கு இத்தகைய ஆட்சியையும் பிரசாரத்தையும் தந்தன.*

*ஆக, இவ்விரு நூல்களுக்கும் - பரமார்த்த தரிசனத்துக்கும் கைவல்லிய நவநீதத்துக்கும் - இடைப்பட்ட காலப் பகுதியாகும், நாம் இங்கு கருதும் 15 நூற்றாண்டு காலப் பகுதி; இப்பகுதிக்குரிய வேதாந்த நூல்களின் வரலாற்றை இங்கு நாம் காண்போம். வேதாந்த இலக்கிய மரபு ஏற்படக் காரணராயிருந்தவர் கண்ணுடைய வள்ளல் என்று சொல்வது ஓரளவு பொருந்தும்; சிறந்த சைவ சித்தாந்தம் கூறிய போதிலும், வேதாந்தத்தைக் கலந்தே அவர் நூல் செய்தார்; ஏறக்குறைய அவருக்குச் சீம காலத்தில், அல்லது ஒரு தலைமுறை பிற்பட்டு வாழ்ந்தவர்*

தத்துவராய சுவாமிகள். இவர் சைவ சித்தாந்த குருவினிடம் உபதேசம் பெற்ற போதிலும், தமக்கென ஒரு புதுச் சமயநெறி தமிழில் வகுத்துக் கொண்டார்; வைணவத்தையும் இவர் தழுவிக் கொண்டார். இவரை முதலாகக் கொண்டே வேதாந்த நெறி தமிழ் மொழியில் கால் கொண்டது. இந்த அத்தியாயம் முழுமையும் இவருடைய வரலாறாகவே அமையும்.

## தத்துவராய சுவாமிகள்

தத்துவராய சுவாமிகள் தமிழ் நாட்டு இலக்கிய சரித்திரத்திலும் சமய சாத்திரங்களின் சரித்திரத்திலும் மிகச் சிறப்பான இடம் பெறுவர். இவர் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தார் என்பது எல்லோரும் நன்கு ஒப்புக்கொண்ட செய்தி. தமிழ்நாட்டில் வடமொழியில் மட்டும் தொடர்பு கொண்டிருந்த வேதாந்த மார்க்கத்தைத் தமிழ்மொழி இலக்கியத்தில் கொணர்ந்து, இவர் அதற்கு ஆட்சியும் பிரசாரமும் ஏற்படுத்தியது, இன்று நினைத்துப் பார்த்தாலும் வியப்பாயிருக்கிறது. இவர் இந்தத் துறையில் எல்லையற்ற ஆற்றல் படைத்தவர். தம் பாடல்களில் அந்த ஆற்றல் முழுமையும் நன்கு பயன்படுத்தியிருக்கிறார். தமிழ்மொழியில் வேதாந்த மார்க்கத்துக்கு மூல கர்த்தர் இவரே என்று சொல்லலாம். இவரளவு அந்த மார்க்கத்தைப் பரப்பியவர்கள் முன்னரும் இருந்ததில்லை, பின்னரும் இருந்ததில்லை. பின்னே வரும் இவரது நூல் ஆராய்ச்சியால் இது நன்கு விளங்கும்.

இவருடைய வரலாறு பழைய ஏட்டுப் பிரதிகளில் ஒரே விதமாய் எழுதப்பட்டுள்ளது. அதை ஆதாரமாகக் கொண்டே இவர் நூல்களை அச்சிட்டோர் எழுதியிருக்கிறார்கள். பின்வரும் சரித்திரமும் அதை ஒட்டியதே.

சோழ நாட்டில் அம்மான் - மருமகன் என்ற முறைமையோடு வைதிக சைவப் பிராமணர் குலத்தில் இருவர் பிறந்தார்கள். இருவருள், அம்மான் பெயர் சொரூபானந்தர்; இவர் சேந்தமங்கலத்தில் பிறந்தார். மருமகன் பெயர் தத்துவராயர்;* இவர் வீரைமா நகரில் பிறந்தார். இருவரும் கல்வி அறிவு ஒழுக்கங்

---

* தத்துவராயர் வேம்பத்தூர்ச் சோழிய வகுப்புப் பிராமணர் என்பது ஐயரவர்கள் குறிப்பு. நம்பி திருவிளையாடல் பதிப்பு 2 முன்னுரை பக்கம்.16.

களில் மேம்பட்டுப் பிரமசரிய முறையால் சிறந்து விளங்கி வந்த போது, தத்துவ உபதேசம் பெற்று வீடு பேற்றுக்கான மார்க்கம் தேடவேண்டும் என்ற உணர்ச்சியடைந்தார்கள். இருவரும் சிவ வேதியர்களாதலால், சிவபெருமான் குருநாதனாக வந்து அருள் செய்வான் என்ற உணர்ச்சி அவர்களுக்கு மிகுந்திருந்தது. இரு வரும் பலநாள் தேடியும் தகுந்த ஆசாரியர் அகப்படாமையால், வடதிசையில் தத்துவராயர் சென்று ஆசாரியனைத் தேடுவது என்றும், தென்திசையில் சொரூபானந்தர் தேடுவது என்றும், இருவருள் முதலில் யாருக்கு ஆசாரியர் கிடைக்கின்றாரோ அவருக்கு மற்றவர் சீடர் ஆதல் வேண்டும் என்றும் கலந்து உறுதி செய்து கொண்டு புறப்பட்டார்கள்.

அவ்வாறு தெற்கு நோக்கிச் சென்ற சொரூபானந்தர் காவேரிக்கரையில் திருவரங்கம் திருவானைக்கா கடந்து, திருப் பைஞ்ஞீலி திருவெள்ளறை என்ற சிவவிஷ்ணு ஸ்தலங்களுக்குப் பக்கமாய் உள்ள கோவர்த்தம் என்னும் ஊரை அடைந்தார். அப்போது அவருக்குச் சில நல்ல மெய்ப்பாடுகள் உண்டாயின:

> வேர்க்குங் கண்ணீர் ததும்பும் கம்பிக்கும் மெய்ந்நடுங்கும்
> வார்த்தை நழுவும் மனம்பதறும் – கார்க்கதமாய்க்
> காந்தும் உரோமாஞ் சலியாகும் காதலித்தார்க்கு ஏய்ந்தகுணங்
> காணிவை யெட்டும். (ஒழிவில் ஒடுக்கம்)

தமக்கேற்பட்ட இம் மெய்ப்பாடுகளால் அவர் அங்கு ஒரு பெரியார் இருக்கிறார் என்பதை உணர்ந்தார். ஊரார், “இவ்வூர்ப் புறத்தில் நாணற் புதர் ஒன்று இருக்கிறது. அங்கு சிவப்பிரகாச சுவாமி என்ற ஒரு பெரியார் இருந்தார். அவர் எப்போதேனும் மாலைக் காலத்தில் வெளியே வரும்போது தரிசிக்கலாம்” என்று கூறியிருந்தார்கள். அவ்வாறு ஒரு நாள் அவர் வெளிவரக் கண்டு, அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கி, “அடியேனுக்கு ஞான உபதேசம் செய்து பிறவிப் பெருங்கடலினின்றும் கரையேற்ற வேண்டும்” என்று சொரூபானந்தர் வேண்டினார்.

சுவாமிகள், “அப்பா, உனக்காகவே யாம் இதுகாறும் இங்கு காத்திருந்தோம்” என்று கூறி, அவருடைய தீவிரதர பக்குவத்தை உணர்ந்து ஞான உபதேசம் செய்தார். இந்தச் சிவப்பிரகாச சுவாமி பூர்வாசிரமத்தில் திருவாரூரினர்; சைவ சித்தாந்த மரபினர்.

அங்கு உபதேசம் பெற்று, சொரூபானந்தர் சகச நிட்டையில் இருந்த காலத்தில், வடக்கே சென்ற தத்துவராயர் தக்க குருவை எங்கும் எதிர்ப்படாமல் திரும்பி வந்து, இவ்விடத்தை அடைந்து, சொரூபானந்தரைக் கண்டார். கண்டு, அவர் தக்க குரு கிடைத்து அவரிடம் உபதேசம் கேட்டு, இப்போது அடைந்திருக்கிற பக்குவத்தையும் ஆசாரியத் தன்மையையும் உணர்ந்து, சொரூபானந்தரை வணங்கி, அவரிடமே உபதேசம் பெற்று நிட்டை கூடியிருந்தார். தத்துவராயர் தமிழில் புலமை மிக்கவர் என்பதைத் தெரிந்திருந்த சொரூபானந்தர், இவரைக் கொண்டு சாத்திரங்கள் செய்விக்க வேண்டும் என்று எண்ணிய போது, இவர் நிட்டையில் தோய்ந்து, லோகோபகாரமாகச் சாத்திரம் செய்யும் எண்ணமே இல்லாதிருந்தார். அப்போது, தம் நோக்கத்தை வேறு வகையில் இவருக்குணர்த்த எண்ணிய சொரூபானந்தர், ஒருநாள் அமாவாசையன்று எண்ணெய் இட்டுக் கொள்ள எண்ணெய் கொண்டு வருமாறு தம் ஏவலாளிடம் கூறினார். அருகில் இருந்த தத்துவராயர், "இன்று அமாவாசையாயிற்றே" என நினைத்து அதைச் சொல்லத் தொடங்கி, "அம்" என்ற ஒலியோடு நிறுத்தி விட்டார். கேட்ட சொரூபானந்தர் கடுகடுத்த பாவனையில், "விதியைக் கடந்த நமக்கா நீ விதி கற்பிக்க வருகின்றாய்! எதிரிலே நில்லாது ஓடிப்போ" என்று அதட்டினார். அஞ்சிய தத்துவராயர், குருவின் சந்நிதியில் பின்னோக்கிச் சென்று கொண்டே குருவின் பிரிவாற்றாது அவர் மீது அனேகப் பிரபந்தங்கள் பாடினார். இப்படிப் பாடிய பிரபந்தங்கள் சிவப்பிரகாச வெண்பா, தத்துவாமிர்தம் இவ்விரண்டும், தாலாட்டு முதல் அமிர்தசார வெண்பா வரையுள்ள 18 நூல்கள் அடங்கிய அடங்கன் முறை என்று இப்போது வழங்கும் தொகுதியும் ஆகும். மற்ற மாணாக்கர் உடனுக்குடன் இப்பாடல்களை எழுதிச் சொரூபானந்தர் முன் கொண்டு போய் வைத்தார்கள். சொரூபானந்தர் கண்டு, தம் எண்ணம் நிறைவேறியது என்பதை அறிந்த போதிலும், தம் மகிழ்ச்சியை வெளியே காட்டாமல், "கூந்தல் உடையவள் வாரி முடிப்பதைப் போல, வாய் உடையவன் பாடி அனுப்புகிறான்" என்று அசட்டையாகச் சொல்லி விட்டார்.

கடலில் வீழ்ந்து இறக்க முடிவு செய்து சென்ற தத்துவராயர், பாடுதுறை என்ற நூல் பாடத் தொடங்கி, திருவடி மாலை என்ற பகுதியைப் பாடி முடித்துக் கடலை நெருங்கினார். அன்பர்கள் இவர் நோக்கத்தைச் சொரூபானந்தருக்கு அறிவிக்கவே, அவர் "அந்தக் குருவுக்கு வீங்கியை இங்கே வரச்

சொல்லுங்கள்” என்று கட்டளையிட்டார். இக்கட்டளை தம்மிடம் தெரிவிக்கப்பட்ட உடனே தத்துவராயர், “என் பிழையையும் பொறுத்துச் சுவாமிகள் என்னையும் அழைத்து வரக் கட்டளை இட்டார்களா?” என்று நாத் தழுதழுக்கக் கூறிக் கொண்டு, கூப்பிய கையினராய், பாடுதுறை முழுமையும் பாடி முடித்துக் குருவை அடைந்து வணங்கி நின்றார். பின்னர் அவர் “அன்பனே, இந்நூல்கள் உனக்கே உபயோகமாகும். உலகத்திற்கு உபயோகமாகா” என்று கூறி, தம் ஏவலாளர் இருவரை அழைத்து உணவு கொண்டு வருமாறு பணித்தார். அவர்கள் அமுது கொண்டு வருவதற்குள், தத்துவராயர் குருவின் குறிப்பை உணர்ந்து, தாம் முன்னமே பாடிய **மோகவதைப் பரணி** என்ற நூலின் நடுப்பாகமாக **சசிவர்ண போதம்** என்ற வேதாந்த சாத்திரத்தைப் புதிதாகப் பாடிக் குருவின் திருவடியில் வைத்து வணங்கி நின்றார். இவ்வளவு விரைவாகத் தத்துவராயர் சாத்திரம் பாடியதைக் கேட்டு அப்பாடல்களையும் ஆராய்ந்து, சொரூபானந்தர் மகிழ்ந்தார்.

இவ்வாறு தத்துவராயர் பின்னும் சில காலம் வேதாந்த சாத்திரங்கள் செய்து கொண்டு அங்கு நிர்விகல்ப சமாதியில் இருந்து வரும் நாளில், யாத்திரை செல்கின்றவராகிய சில ஆராத்தியர்களும், சில வித்துவான்களும் சொரூபானந்தர் சந் நிதியில் வீற்றிருக்கும் தத்துவராயர் முன்னே வந்து, “ஐயா! ‘போர் முகத்து ஆயிரம் களிற்றினை வென்ற-மானவனுக்கு வகுப்பது பரணி’ என்பது இலக்கணம் அங்ஙனம் இருக்க, நீர், வீரம் என்பதைக் கனவிலும் கேட்டறியாத உம்குருவின் மீது பரணிப் பிரபந்தத்தை எப்படிப் பாடினீர்?” என்று கேட்டார்கள். அதற்குத் தத்துவராயர், “எம்முடைய குருநாதர் சீடர்களுடைய அகங்காரமாகிய யானைகளைக் கொல்லுதலாற் பரணி பாடி னோம்” என்றார். அவர்கள் இவ்விளக்கத்தை ஏற்கவில்லை. “நீர் சொல்லும் அகங்கார யானை ஒன்றைக் கொல்லுவதற்கே அனேக நாள் செல்லுமே! அங்ஙனமிருக்க, பல அகங்கார யானைகளை ஏக காலத்தில் ஆயிரம் சீடர்களிடத்தில் இவர் கெடுத்த தெப்படி?” என்று கேட்டார்கள். தத்துவராயரோ, இது அனுபவத்தில் விளங்க வேண்டும் என்று கருதி, வேறு ஒன்றும் கூறாமல் மூன்று நாள் சமாதியில் இருந்தார். வந்த பண்டிதர்கள் சொரூபானந்த சுவாமிகளின் சந்நிதானம் பட்டமையால், இராப் பகல் உணர்வேயின்றி, மூன்று தினமளவும் பரிபூரண சமாதி தசையில் இருந்தார்கள். நான்காம் நாள் தத்துவராயர்

சமாதி கலைந்து கண் விழிக்கவும், அப்பண்டிதர்களும் உணர்வு வந்து, நிகழ்ந்தமை உணர்ந்து, தத்துவராயரை, வணங்கி யெழுந்து, "அஞ்ஞானத்தால் நாங்கள் இவ்வாறு ஆட்சேபிக்க நேர்ந்தது. தங்கள் சந்நிதானம் ஏக காலத்தில் ஆயிரம் அல்ல, பதினாயிரம் சீடர்களையும் பரிபக்குவப்படுத்த வல்லது" என்று கூறி, அவர்கள் அனைவரும் தத்துவராயரை வழிபட்டு அவருக்கு மாணாக்கராகித் தங்கள் இடம் சென்றார்கள்.

பின்னர் தத்துவராயர் அங்கிருந்து கொண்டே லோகோபகாரமாக வேதாந்த சாத்திரத்திற்குள்ளே சுவானுபூதிக்கு இசைந்த சாரமான செய்யுட்களை எல்லாம் திரட்டி, **பெருந்திரட்டு, குறுந்திரட்டு** என்னும் இரு நூல்களாகத் தொகுத்தார்.

இப்பால் சொரூபானந்தர் தாம் பரம்பொருளில் கலக்கும் காலம் நெருங்கி விட்டதை உணர்ந்தார். ஒரு நாள் தத்துவ ராயரை விட்டுப் பிரிந்து புறப்பட்டுக் கால் சென்ற வழியே செல்லலானார். அப்போது அதுகாறும் அவரைவிட்டு இணை பிரியாமலே இருந்த தத்துவராயர், அவர் பிரிவுக்கு அஞ்சி அவரைப் பின் தொடர்ந்து விரைந்து சென்றார். சொரூபானந்தர் காடு, நாடு, மலை முதலிய வேறுபாடு எதுவுமின்றி எல்லா இடங்களிலும் சுற்றித் திரிந்து முடிவில் கடற்கரைக்கு வந்தார். தத்துவராயரும் உடன் வந்தார். சொரூபானந்தர் கடல்மேல் நடக்கத் தொடங்க, கடல் நீர் அவருக்கு விலகி வழி கொடுத்தது. தத்துவராயர் அவ்வாறு செய்ய முற்பட்டபோது இடம் கொடுக்கவில்லை. தம் குருவை எண்ணி, தத்துவராயர் தாய் பிரிந்த கன்று போலப் பல இடங்களிலும் தேடிக் கதறியபோது, திருவண்ணாமலைக்கும், விருத்தாசலத்திற்கும் இடையில் உள்ள ஓர் இடத்தில் தமக்குச் சொரூபானந்தர் தரிசனம் கொடுக்கக் கண்டார். அங்கு அவர் முத்தி எய்தி விடவே, தத்துவராயர் அவருக்குச் செய்ய வேண்டிய உத்தர கிரியைகளை முறைப் படிச் செய்தார். அடுத்த சில நாளில் இவரும் சிதம்பரத்துக்கும் விருத்தாசலத்துக்கும் இடையில் சென்றபோது குருவைப் பிரிந்த துயரம் ஆற்றாது தாமும் உயிர் துறந்தார். மூல குருவாகிய சிவப்பிரகாசர் திருவாரூர் அருகிலும், சொரூபானந்தரும் தத்துவராயரும் மேற்குறித்த இடங்களிலும் சமாதியடைந்தனர் என்பது வரலாறு. திருவலஞ்சுழியும் இவர்களுக்கு வாசஸ்தலம் என்று சொல்லப்பட்டுள்ளது.

இவ்வரலாறு "சுவாமிகளுடைய பரம்பரை மாணாக்கர் அனுப்பிய குறிப்பின்படி பதிக்கப்பட்டது" என்பது 1841இல் கொன்றைமா நகரம் அருணாசல முதலியார் பதிப்பித்த சிவப் பிரகாச வெண்பா - தத்துவாமிர்தப் பதிப்பிலும் 1917இல் வெளி வந்த பாடுதுறை மனோன்மணி விலாச அச்சுக்கூடப் பதிப்பிலும் காணப்படுகின்றது. இவ்வரலாற்றில், உள்ள தெய்வச் செயல் நிகழ்ச்சிகளை விலக்கி விட்டால், ஏனையவை இவ்விதமே நிகழ்ந் தன என்று நாம் கருதுவது பிழையாகாது.

இவர்கள் வரலாறு இவ்வாறிருக்க, பாடுதுறை, கோவிலூர் மடத்துப் பதிப்பு (1953) குருபரம்பரையைப் பின்வருமாறு கூறு கிறது. கைலாயத்தில் எழுந்தருளிய உமாமகேசர் முதலாசாரியர் பின்னர் நந்திகேசர், சனற்குமாரர், வியாசர், சூத்ரிஷி, கடவுள்நாதர், கருவூர்ச்சித்தர், அருள்முனிவர், கீழூர்முனிவர், பரமுனிவர், திருப் பனந்தாளர், மதுரைப் புஞ்சை முனிவர், வடமுனிவர், திருநட ராசர், சிவப்பிரகாசர், சொரூபானந்தர், தத்துவராயர் என்ற பெயர்கள் ஒருவர் பின் ஒருவராக கச்சியப்ப பரம்பரையில் வருவன. வியாசர், சூதர் எல்லாம் புராணகாரர். பிற்காலத்தில் கடவுள்நாதர், மாணிக்கவாசகர் புராணம் பாடிய கடவுள் மாமுனிவர் அல்லர். அப்படியே கருவூர் சித்தரும் திருவிசைப் பாப் பாடிய சித்தர் அல்லர். இறுதி மூவரும் தத்துவராய மரபில் சொல்லப்பட்ட பெயர்களே. இதை நன்கு சிந்தித்துப் பார்க்கும் போது கடைசியில் சொல்லப்பட்ட நால்வர் நீங்கலாக மற்றப் பெயர்கள் எல்லாம் கற்பனையோ என்று எண்ணத் தோன்று கிறது. சைவ சித்தாந்த மரபில் ஆசாரியர்களை முறையான குரு பரம்பரை என்று கைலாயத்தில் தொடங்குவதைக் கண்டு இந்த மரபிலும் இப்படிக் கைலாயத்தில் தொடங்க ஒரு மரபு படைத்துக் கொண்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். இவர்களுடைய பெரிய பக்தியும், மரபு உணர்ச்சியும் பெரிதும் போற்றத்தக்கது. ஆனால் இந்த வரலாறு உண்மை அன்று.

தத்துவராயர் வேதாந்த மார்க்கத்துக்குத் தமிழ் மொழியில் இலக்கியம் ஏற்படுத்திய மூலகாரணர் என்று முன்னமே குறிப் பிட்டோம். பின்னால் இவர் நூல்களை ஆராயும்போது இக் கருத்து விளக்கப்பெறும். இவர் நூல்களுக்கு வேதாந்திகளி டையே மிகுந்த பிரசாரமுண்டு. இவருடைய நூல்கள் நீங்கலாக ஏனைய பிற்கால வேதாந்த நூல்கள் திருத்தமான தமிழ் நடை யில் எழுதப் பெறவில்லை. ஆதலால், இவர் நூல்களுக்கு, இலக் கியச் சிறப்பு என்றும் இருந்து கொண்டிருக்கும்.

மதுரை தமிழ்ச் சங்கத்துப் பெருந்திரட்டு ஏட்டின் இறுதி யில் உள்ள குறிப்புக்களால் சில செய்திகள் விளங்க வருகின் றன. (செந்தமிழ்ப் பத்திரிகை 1903, தொகுதி 34, பக்கம் 322-27) சொரூபானந்தர் சமாதி கொண்ட இடம் திருநெல்வேலிக்கு வடக்கு ஆற்றங்கரையோரம் திருச்சிற்றம்பலம் உடையார் என் னும் பூசை கொண்டருளும் கோயில், வைகாசி வியாழக்கிழமை கேட்டையும் ஏகாதசியும் கூடிய நாள். தத்துவராயர் (தத்துவ தேசிக நாயனார்) சமாதி சிதம்பரத்துக்கும் விருத்தாசலத்துக்கும் இடையே உள்ள எறும்பூரில், நாள் ஆடி சனிக்கிழமை சதய நட்சத்திரம் பிரதமை திதி. மேலும், இம்மரபில் பின்வந்தோர் சிலர் வீர சைவ மரபினராயினர் என்றும் அறிகிறோம்.

சசி வன்னபோத உரை ஏடு: தத்துவராயரென்னும் மகரிஷி என்று கூறுகிறது.

> தத்துவராயர் தமதடி இறைஞ்ச
> மெத்திய பிறவியின் வேரற்றிடுமே
> சொரூபானந்தர் துணையடி இறைஞ்ச
> கருவாம் பிறவிக் கட்டற் றிடுமே.

பாடல்களை வெள்ளியம்பலவாணத் தம்பிரான் காட்டு கிறார். தத்துவராயர் வேதாந்தி என்பதைவிட சிவசமவாதி என்பது பொருத்தம்.

இனி, தத்துவராயர் செய்தனவாக இன்று அறிந்த நூல் களைக் குறித்துச் சுருக்கமாகக் கூறலாம்.

### சிவப்பிரகாச வெண்பா

தத்துவராயர் முதலாவதாகப் பாடிய சிறுநூல். 43 வெண்பாக்கள். தம் குருவான சொரூபானந்தரின் ஞானாசாரிய ரான சிவப்பிரகாச சுவாமிகளைத் துதிக்கிறார்.

### தத்துவாமிர்தம்

அதிகார பத்ததி, வாக்கிய பத்ததி, சிவரண பத்ததி, மனன பத்ததி நிதித்தியாச பத்ததி என்ற ஐந்து தலைப்புக்களில் 137 விருத்தப் பாடல்களுடையது. இதன் முதற் பகுதியான அதிகார பத்ததியில், ஒரு தலைமகன் தத்துவம் உணரும் பொருட்டு, குருவைப் பல இடங்களிலும் தேடிப் பைஞ்ஞீலி வெள்ளறை யருகுள்ள கோவத்தை என்ற இடத்தில் குகையிலிருந்த குருவைக்

கண்டு பணிந்து 'பவமறுக்கும் போதம் புகல்க' என வேண்டிய செய்தியைக் கூறுமுகத்தால், தத்துவராயர், தம் குருவான சொரூபானந்தரின் வரலாற்றையே குறிப்பிடுகிறார்.

இந்நூற் கருத்தை விளக்குவதாக, **வேதாந்தத் தத்துவாமிர்தக் கட்டளை** என்ற ஒரு வசன நூலும் பிற்காலத்தில் செய்யப் பெற்றுள்ளது.

### அடங்கன் முறை

தத்துவராயர் அடங்கன் முறை என்ற பெயரால் 18 சிறு நூல்கள் அடங்கிய பிரபந்தத் தொகுதியொன்று ரத்தாட்சி வருடத்தில் (1924) சிதம்பரம் பொன்னம்பலத்து மடத்துத் தலைவரால் வெளியிடப் பெற்றது. 18ஐயும் தத்துவராயர் பாடினார் என்றே அச்சிடப் பெற்றுள்ளது ஆனால், பெருந்திரட்டு - குறுந்திரட்டு ஏட்டுப் பிரதியொன்றிலே, தத்துவ தேசிகர் (ராயர்) சந்தான விளக்கம் கூற்றப்பட்டுள்ளது. இது எழுதிய காலம், தேசிகர் சந்தானத்தில் பின்வந்த சுயம்பிரகாச யோகியோர் காலம், சகம் 1601 (கி.பி. 1679). இதன்படி இச்சந்தானம் கைலாச மூர்த்தியோடு தொடங்குகிறது. பட்டம் 14 உய்யவந்த நாயனார், 15 நடராசர், 16 சொரூபானந்தர் I, 17 சிவப்பிரகாசர் I, 18 சொரூபானந்தர் II, 19 தத்துவ தேசிகர் I, 20 ஜோதிப் பிரகாசர், 21 அறிவானந்தர்..... 35 சுயம்பிரகாசர் என்பது வரலாறு. இவர்களுள் சொரூபானந்தர் பெருந்திரட்டுத் தொகுத்தார். தத்துவப் பிரகாசர் குறுந்திரட்டுத் தொகுத்தார். பரணிப் பிரபந்தம் செய்தார்; பின் வந்த சுயம்பிரகாசர் சங்கர நாராயணத் திரட்டுச் செய்தார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எனினும், இது இம் மரபுக்குப் பெருமை தரும் பொருட்டுப் புனைந்துரைத்த கதையே; தத்துவராயர் ஒருவரே பெரியவர், சரித்திர புருஷராக விளங்கினார் என்று நாம் கொள்ள வேண்டும்.

### திருத்தாலாட்டு

51 கண்ணிகள் உடையது. இந்நூலின் மறுபெயர் தத்துவப் பிரகாசம். சொரூபானந்தரைப் புகழ்வது. (தத்துவராயர் நூல்கள் ஒவ்வொன்றுக்கும் மறுபெயர் அமைக்கப்பட்டுள்ளது.)

### பிள்ளைத் திருநாமம் (பிள்ளைத் தமிழ்):

மறுபெயர் தத்துவநிலையம். 66பாடல்கள் சிவப்பிரகாச சுவாமி மீது பாடப்பட்டது. 61ஆம் பாட்டில் இவர் குருவை

"திருவாதவூர் முனிவ திருவாசகாபரண, சிறு தேர் உருட்டியருளே" என்று போற்றுகிறார்.

இதனுள் வரும் பின்வரும் சிற்றிற் பருவப் பாடல் கருதத் தக்கது:

மாதினை வழங்கிநில நீதிகெட வாழேம்
　மடைப்பளியின் மைந்தனை அறுத்திடவும் மாட்டோம்
தாதை நல வேதிய னவன்தனை வெகுண்டே
　தாளையடி வெட்டுகிலம் மாளுவது நீ இந்
நீதியுடை யார் சிலரை யென்றுனையும் நின்றுள்
　நெக்கு அடியார்தமையும் மிக்கபிழை தேடித்
தீதுமொழி யேம்எமது சிற்றில்சிதை யேலே
　சேவடிக ளால் எமது சிற்றில் சிதை யேலே.

என்று பாடுகிறார். இங்கு சைவ நாயன்மார் சிலர் செய்த மனித இயல்பைக் கடந்த செயல்களைக் குறிப்பிட்டுள்ளார்.

### வெண்பா அந்தாதி

சொரூபானந்தரைத் துதிக்கின்ற 100 வெண்பாக்களை யுடையது. மறுபெயர் தத்துவ விளக்கம்.

### கலித்துறை அந்தாதி

இதன் மறுபெயர் தத்துவசாரம். சிவப்பிரகாசரையும் சொரூபானந்தரையும் துதிப்பது 100 பாடல்கள்.

### சின்னப்பூ வெண்பா

சொரூபானந்தருக்குரிய தசாங்கங்களைக் கூறுவது. இதன் மறுபெயர் தத்துவசரிதை. பத்து அங்கங்களாகிய பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, மா, கொடி, முரசு, படை, தார் ஆகிய ஒவ் வொன்றுக்கும் பத்துப்பாடல்கள் கூறுவது. பாட்டியல் கூறும் இலக்கண நூல்களுள், சின்னப்பூ வெண்பாவும் சொல்லப் பட்டிருக்கும். ஆனால் தமிழ் இலக்கியப் பரப்பினுள் இந்நூல் தவிர வேறு சின்னப்பூ இலக்கியம் இன்று காணப்படவில்லை. முன் இருந்ததாகவும் தெரியவில்லை. இதன் பாடல்கள் 100.

### தசாங்கம்

மறுபெயர் தத்துவபோதம். இதன் பாடல்கள் பத்து, சொரூபானந்தர் துதி.

**இரட்டை மணிமாலை**

மறுபெயர் தத்துவ தீபம். பாடல்கள் இருபது. சொரூ பானந்தர் துதி.

**மும்மணிக்கோவை**

மறுபெயர் தத்துவ ரூபம். சொரூபானந்தர் துதி, முப்பது பாட்டு.

**நான்மணிமாலை**

தத்துவ அனுபவம், பாடல்கள் 40. சொரூபானந்தர் துதி.

**கலிப்பா**

தத்துவ சித்தி. சிவப்பிரகாசர் துதி. ஒரு கலிப்பாவும் (63 அடிகள்) ஒரு வெண்பாவும் ஒரு கலித்துறையும் கொண்டது.

**ஞான விநோதன் கலம்பகம்**

தத்துவஞானம். 101 பாடல்கள், சொரூபானந்தர் துதி.

**உலா**

தத்துவ காமியம், 392 கண்ணிகளும் இரண்டு வெண்பாக் களும் கொண்டது. சொரூபானந்தர் துதி.

**சிலேடையுலா**

தத்துவ வாக்கியம், 403 கண்ணிகளும் ஒரு வெண்பாவும் உடையது. சிலேடையுலா என்று இதற்குப் பெயர் அமைந் திருந்த போதிலும், இந்நூலில் மற்றதினும் சிறப்பாகச் சிலேடை மிகுந்து காணப்படவில்லை.

இவ்விரு உலாக்களிலும் தத்துவராயர் தொடக்கத்தில் தலைவன் சிறப்பைக் கூறும் பகுதிக்குக் குழகன் என்று பெயர் வைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

**நெஞ்சுவிடு தூது**

தத்துவ நிச்சயம். 182 கண்ணிகள், ஒரு வெண்பா. சொரூ பானந்தர் துதி. இது முழுமையும் உமாபதி சிவாசாரியர் பாடிய நெஞ்சுவிடு தூது போன்ற பொருளமைப்பு உடையது. தென் பாண்டி நாட்டைச் சிவலோக மாக்கினார் என்பது போன்ற திருவாசகத் தொடர்கள் பயில்கின்றன. சொரூபானந்தர் வரலாறும் ஆங்காங்கு சொல்லப்படுகின்றது. சொல் நயமும் தொடை நயமும் சிறக்க உள்ளது.

### கலி மடல்

தத்துவத்துணிவு. 232 கண்ணிகள். ஒரு வெண்பா. சொரூபானந்தர் மீது காதல் கொண்டு மடல் ஏறுவதாக அமைந்துள்ளது. இதுமட்டும் தனி நூலாக அச்சிட்டும் வழங்குகிறது.

### அஞ்ஞவதைப் பரணி

ஞானபரணி எனவும் வழங்கும். மறுபெயர் தத்துவக்காட்சி. 493 தாழிசைகள் உடையது. பரணிக்குரிய இலக்கணங்களெல்லாம் சிறப்பாக அமையப்பெற்றது. தம்மிடம் இருந்த அஞ்ஞானத்தைத் தலைவராகிய சொரூபானந்தர் வதைத்தார் எனப்பாடிய நூல். இது சிறந்த சாத்திர நூலாகவும் தனியே அச்சிட்டு வழங்குகிறது. "சும்மேலோ சும்முலக்காய்" என்று முடிகிற ஒரு வள்ளைப் பாட்டுப் பகுதி இதில் உள்ள புது அங்கம். அஞ்ஞானத்தை அஞ்ஞன் என்பவனாக உருவகப்படுத்திக் காட்டுகிறார்.

இதன் சிறப்புப்பாயிரம் பின்வருவது:

> தரணிபுகழ் தத்துவனார் தாமுரைத்த ஞானப்
> பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்க்கிற – கரணமுடன்
> சேர்ந்து மணவாத சிவமணமே பூரித்த
> சாந்த மண நாறுமேதான்.

இந்நூலைச் சித்தியாருரையில் மறைஞான தேசிகர் (16.நூ) எடுத்துக் காட்டுகிறார்.

### மோகவதைப் பரணி

இதன் மறுபெயர் பிரதிகளில் விடுபட்டுள்ளது. மோகன் என்பவனைச் சொரூபானந்தர் வதைத்த செய்தியைப் பரணிப் பிரபந்த மரபில் கூறுவது. 850 கண்ணிகள் உடையது. பொதுவாக ஆசிரியர் நால்வர் தமிழும் நம்மாழ்வார் தமிழும் வேறுபாடின்றிப் போற்றுவதை இங்கு காணலாம். திருமுடி அடைவு என்ற பகுதியில் இவர் தக்ஷிணாமூர்த்தி, கீதை உபதேசித்த கண்ணன், நம்மாழ்வார், காழிச் சிறுபாலகன், நாவின் அரசன், சுந்தரன், வாதவூரன் என்பவர்களைக் கூறி, பின்னர் பதினொரு குருமாரைப் பாடுகிறார். இவருள் கடைசியானவர் கோவத்தை - சிவப்பிரகாசரும் சொரூபானந்தரும். இது சொரூபானந்தப் பொருளைக் கூறுவது. இறுதிப்பாடல் "சொரூபானந்தர் கலைமுனை தத்துவப் பிரகாச மாமுனி வாழியே" என்று முடிகிறது. இவ்வாறு தத்துவராயரைக் குறிப்பிடும் இப்பாடல் மட்டும்

பின்வந்த அடியவர்களால் செய்யப்பட்டது என்றும், நூல் முழுமையும் தத்துவராயரே செய்தார் என்றும் நாம் கருதுவது பொருத்தமாகும். (அல்லது இத்தத்துவப் பிரகாசர் பிறிதொரு சந்தான ஆசாரியருமாகலாம்).

## அமிர்தசாரம்

தத்துவதரிசனம். 280 வெண்பா உடையது. சொரூபானந்தர் புகழ் கூறுவது. வேதச்சிறப்பு முதலியன, ஞானி இலக்கணம், உலகம், உடல் இயல்பு, நிலையாமை முதலியன, புத்தர் சமணர் முதலிய பரசமய கண்டனங்கள் என்பன சொல்லப்பட்டுள்ளன. 20 மதங்களைக் குறிப்பிடுகின்றார். ஒவ்வொன்றுக்கும் இரண்டு வெண்பா. ஒன்றில் அம்மதச் சித்தாந்தம். மற்றதில் கண்டனம். ஒரு பாடல் ஐந்தடி வெண்பாவாகவும் உள்ளது. இவற்றைக் கூறி முடித்த பின்னர், சங்கற்பங்கள், அட்டாங்கயோகம் கூறுகிறார். ஆசனங்கள் பத்துக் கூறுகிறார். சித்தாந்த முறைப்படி மும் மலங்கள், தத்துவம் 36 முதலியன கூறுகிறார். ஆயினும், வேறு பாடின்றி, சிவ பஞ்சாக்ஷரமும் விஷ்ணு அட்டாக்ஷரமும் கூறுகிறார்.

இந்நூல்கள் அனைத்தையும் ஒரு தொகுப்பாகப் பார்க்கும் போது இரண்டு சிறப்புக்கள் புலப்படுகின்றன. ஒன்று, சைவ வைணவ பேதம் பாராட்டாது இரண்டையும் உள்ளடக்கிப் புதியதாகிய ஒரு மார்க்கத்தை வடமொழியில் உள்ள வேதாந்த மார்க்கத்தையொட்டித் தமிழ்மொழியில் நிறுவுவதற்குத் தத்துவராயர் அரும்பாடு படுகின்றார் என்பது. இரண்டாவது, பிற்காலத்தில் வேதாந்த நூல் செய்வாருடைய திருத்தமில்லாத தமிழ் நடைபோலன்றி, தத்துவராயருடைய தமிழ் மிகவும் சிறப் பான இலக்கிய நயம் பொருந்திய செந்தமிழ் நடை என்பதாகும்.

## பாடுதுறை

தத்துவராய சுவாமிகள் தம் குருவைப் பிரிந்து சென்ற போதும் மீண்டும் அவர் திருவடிகளில் வந்து வீழ்ந்து வணங்கிய போதும் பாடிய பாடல்களின் தொகுப்பே பாடுதுறை என்று வழங்குவது. இதனுள் 138 தலைப்புக்களில் 1140 பாடல்கள் உள்ளன. இவை யாவும் பாமரமக்கள் பாரமார்த்திக உண்மை களை உணருவதற்கென்றே பாடப்பட்டன என்று வரலாற்றால் அறிகிறோம். இதற்கேற்ப, பிற எந்த நூல்களிலும் காணப் பெறாத பாடலமைதிகள் இதனுள் காணப்படுகின்றன. தொடக் கத்திலுள்ள சில நூல்கள் கலிவெண்பாவில் அமைந்த தோத்திர

நூல்கள். சிவசிவ சங்குர்த்தனம், துவாதசநாம சங்கீர்த்தனம் என்ற இரண்டும் முறையே சைவ வைணவ பஜனைப் பாடல்கள். அபயம், வரதம், சரணம், அடைக்கலம் முதலியன சிலவகைத் தலைப்புக்கள். பண்டைய முறையில் காணப்படுவன அம்மானை, அன்னைப்பத்து, பள்ளியெழுச்சி (5) பல்லாண்டு, எம்பாவை (2) போன்றன. சாதிகள் பற்றியும் தொழில்கள் பற்றியும் தலைப் பமைத்துப் பாடிய பாடல்கள் அம்பட்டன், ஊசல், கழல், காளம், குணலை, குறத்தி, கூடல், செட்டியார், தச்சாண்டி, தச்சன், தட்டான், நெய்யாண்டி, பகடி, பகவதி, பந்து, பாம்பாட்டி, பார்ப்பான், பறைச்சி, பிடாரன், வண்ணான் போன்றன. பிராணி களைப் பற்றிய தலைப்புடைய பாடல்கள் கிளி, குயில், கோழி, பல்லி, பாம்பு, வாரணம், முதலியன. உறவு பற்றி வந்தவை அக் கைச்சி, அப்பா, அன்னை, ஆண்டார், தாய் போன்ற தலைப் புடையன.

இந்நூலில் உள்ளமை போலப் புதிய பிரபந்த முறை களையும் பாடல் அமைப்புகளையும் வேறு யாரும் செய்த தில்லை. எல்லாப் பாடல்களும் நல்ல செந்தமிழ் நடையில்* உள்ளன. சமீப காலம் வரையில் இவை மக்களிடையே பிரசாரம் எய்தியிருந்தன.

இப்பாடல்கள் யாவும் சொரூபானந்தரைத் துதிப்பன. அதனோடுகூட அவருக்கு முந்திய குருமாராகிய நடராசரை யும், சிவப்பிரகாசரையும் வேறு தத்துவப் பிரகாசர் பரிபூரணப் பிரகாசர் என்பவரையும் துதிக்கின்றார். ஆனால் பிந்திய இரு வரும் இவருடைய குரு பரம்பரையில் காணப்படவில்லை. குரு பரம்பரை பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. கைலாயத் தில் உமாமகேசுவரர், நந்தி, சனற்குமாரர், வியாசர், சூதர், கடவுள் முனிவர், பரமுனிவர் திருப்பனந்தாளார், மதுரைப் புஞ்சை முனிவர், வடமுனிவர், உலகுய்ய வந்தார், திருநடராசர், சிவப்பிரகாசர், சொரூபானந்தர், தத்துவராயர். இவர்களில் கடவுள் முனிவர் முதல் உலகுய்ய வந்தார் வரையுள்ள பெயர்கள் சைவ மரபைக் கண்டு செய்து கொண்ட கற்பனையோ என்று கருதத் தோன்றுகிறது.

---

* தத்துவராயர் அடங்கன் முறை - செந்தமிழ்; பாடுதுறை - சாமானியத் தமிழ். இரண்டும் வேறு என்ற பொருள்பட தெ.பொ.மீ. எழுதி யிருக்கிறார். இது பொருத்தமன்று.

வரலாற்றுக் குறிப்புக்கள் சிலவும் பாடல்களுள் காணப் பெறுகின்றன. சொரூபானந்தர் வீரைமா நகரில் பிறந்தார். கோவத்த நகரிலிருந்த சிவப்பிரகாசரிடம் அருள் பெற்றனர்; திருவலஞ் சுழியிலும் இவர்கள் வாழ்ந்தார்கள் என்பன கூறப் பட்டுள்ளன. மேலும், இவர் சைவ வைணவ பேதமின்றிப் பாடு வதல்லாமல், திருவாசகப் பாடல்கள் அமைப்பு அனைத்தையும் தம் நூல்களுள் அமைத்துப் பாடியிருக்கிறார். முன்னமே கூறி யுள்ள தலைப்புக்களால் பல பகுதிகள் இவ்வாறு இருப்பது விளங்கும். அருள் நெறி விளக்கம் என்ற பகுதி, திருவாசகத் திருப்படையாட்சியைப் பின்பற்றியது. சாழல் என்பது திருச் சாழல். காரணற் காணாக் கரணத்து இகழ்ச்சி என்பது சிலப்பதி காரம் ஆய்ச்சியர் குரவையைத் தழுவிய பாடல். திருவாசகத் தைத் தழுவிய பகுதிகள்- அச்சோ, அடைக்கலம், அம்மானை, அன்னை, உந்தி, எம்பாவை, குயில், சாழல், படையாட்சி, பள்ளியெழுச்சி முதலியன.

இந்நூலுள் 29 ஆவது பகுதியாகிய “நெஞ்சிற்கு அமைவுரை” என்பது 22 வெண்பாக்கள் உடையது. இவை **சிவானந்த மாலை** நூல் இறுதியில் 394 - 414 பாடல்களாக உள்ளன. சிவானந்த மாலை 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய நூல்; இது சிறந்த சைவ சித்தாந்தப் பிரமாண நூல். தத்துவராயருடைய பாடுதுறையின் இடையிலேயே இப்பாடல்கள் கோக்கப்பட் டுள்ளன. இதனால், இவர் முந்தையோர் நூல்களுள் எவ்வளவு ஈடுபாடுடையவர் என்பது புலனாகும்; இதனால் இவர் காலமும் வரையறை பெறுகிறது.

**ஈசுர கீதை ***

வடமொழியிலுள்ள ஈசுரகீதையைச் சிவாக்கிர யோகிகள் பல இடங்களில் எடுத்து ஆளுகிறார். இது கூர்மபுராணம் உத்தர காண்டத்து முதல் 112 அத்தியாயமாகும். தமிழில் ஈசுரகீதை என்ற ஒரு நூலைத் தத்துவராயர் பாடியிருக்கிறார். இது பாயிரம் உள் பட 338 பாடல்கள் உடையது. சொரூபானந்தரை வணங்கி நூல் தொடங்குகிறார். “இது சிவன் திரு உருக்கொண்டு முன்பு அரு ளிச் செய்ததோர் புராணம். சிவனை அளித்த பரன் திருநாமம்

---

* ஈசுவர கீதை - சிவம் - தத்துவராயர்
பிரமகீதை - பிரமா - தத்துவராயர்
பகவத் கீதை - வைணவம் -

*சிவப்பிரகாசம் (சொரூபானந்தருடைய குருவாகிய சிவப்பிரகாச சுவாமிகள்) இந்த நூல் சிவந்த செந்தமிழால் யார்க்கும் சிவந் தனைத் திகழ்த்திடும். சிவன் தனக்குரியது ஆதலால் இதற்குச் சிவப்பிரகாசம் என்று பெயர் வைக்கிறேன்" என்று கூறுகிறார். இது 11 அத்தியாயம் உடையது. சனற் குமாரர் முதலிய எல்லா முனிவர்களும் திரண்டு திருமாலை முன்னிட்டுக் கொண்டு பரமேசுவரனை அடைந்து, உலக காரணம், உலகை அளிப்பவன், ஆன்மா, வீடு, பிறப்பவன், பிறப்பிப்பவன் ஆகிய பொருள்களை விளக்க வேண்டுமென்று வினவுகிறார்கள். இதுவே இந்நூலின் பொருள். 1. இருடிகள் வினவல், 2. சாங்கிய யோக வர்ணனம், 3. சம்பிரதாய வர்ணனம், 4. பத்திமை வர்ணனம், 5. விசுவரூப வர்ணனம், 6. சிவ சத்தியின் செயலுரைத்தல், 7. தத்துவ நிசம் விபூதியுரைத்தல், 8. பிரபஞ்ச வர்ணனம், 9. மாயா விகார முரைத்தல், 10. தத்துவ தரிசனம், 11. யோக முரைத்தல் என்பன இதன் அத்தியாயங்கள்.*

*நூல் நல்ல முறையில் இயன்றுள்ளது. இது வேதாந்த நூல். ஆயினும், சிவபெருமானையே பரம்பொருள் என்று கூறுகிறது. இடையே சந்தப் பாடல்களும் பயில்கின்றன. தத்துவராயர் தாம் வேதாந்த நூல் செய்வதற்கு வழக்கில் உள்ள சகல சொற்களையும், மரபுகளையும், கருத்துக்களையும் பயன்படுத்திக் கொள்கிறார். வெல்க என்ற சொல் இக்காலத்தார் செய்கின்ற ஜே என்ற கோஷம் போன்றது. இது திருவாசகம் சிவபுராணத்துள் பயில் கின்றது. ஆசிரியர் இந்த கோஷத்தை இந்த நூலில் பயன் படுத்துவது நயமாக உள்ளது. "ஜெய ஜெய தேவர் போற்றும் தேவ மாதேவ போற்றி" என்று செய செய போற்றி என்ற வட மொழி முடிவுகளைப் பாடிய தத்துவராயர், அடுத்த பாட்டில் வெல்க என்ற தமிழ் முடிவை வைத்துப் பாடுவதும் மிக்க நய மாக உள்ளது.*

**வெல்க பூதபதி வெல்க சீவபதி**
**வெல்க யோகபதி வெல்கவே.**

**பதிப்பு**

*சிவப்பிரகாசம் என்னும் ஈசுரகீதை; பொன்னம்பல சுவாமி பதிப்பிற்கிணங்க முள்ளங்குடி நாராயண சுவாமி பதிப்பித்தது. ரிப்பன் அச்சு யந்திர சாலை, 1912.*

## பிரம கீதை

இந்த நூலையும் தத்துவராயர், சிவப்பிரகாசர், சொரூபானந்தர் ஆகிய இருவரையும் துதித்தே தொடங்குகிறார். முந்திய நூலுக்குச் சிவப்பிரகாசர் பெயரை அமைத்தது போல இந்த நூலுக்குச் சொரூபானந்த சித்தி என்று தம் குருவின் பெயரை வைத்திருக்கிறார். வானவர்களெல்லாம் பிரம்மாவை வணங்கி வேதத்தின் அர்த்தத்தைக் கூறு என்று கேட்க, பிரமன் உபநிடதங்களைச் சுருக்கிச் சாரமாக அவர்களுக்கு உபதேசித்தான் என்பது இந்நூலின் பொருள்.

வடமொழிப் பிரம கீதை, சூதசங்கிதை யக்ஞ வைபவ காண்டம் உபரிபாகத்தில் 12 அத்தியாயமாய், 12 உபநிடதப் பொருளைக் கூறுவது. இந்தத் தமிழ்நூல், 547 பாடல்களையும் 12 அத்தியாயங்களையும் உடையது. 1. தேவர்கள் பிரமனைக் கேட்டல்; 2-3 ஐதரேயம்-தைத்திரியம் பொருள்; 4. கேனம்; 5-6 சாந்தோக்கியம்; 7. முண்டகம்; 8. கைவல்யம்; 9-10 பிருக தாரண் யகம்; 11. கடம்-சுவேதாசுவதரம் பொருள்; 12. தொகுப் புரை என்பன இந்நூலின் அத்தியாயங்கள். இங்கு, தசோப நிஷத்துக்களில் ஈசாவாஸ்யம், மாண்டூக்யம், பிரசினம் ஆகிய மூன்றும் காணப்பெறவில்லை.

வழக்கம் போல் சந்தப் பாடல்களையும் இங்கு ஆசிரியர் அமைத்திருக்கிறார். நடை சிறப்பான நடை.

## பதிப்பு

வித்தியாரண்ய சுவாமிகள் செய்த வடமொழி வியாக்கியானத்துக்கியையக் கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் செய்த உரை, 1871, வடமொழி. தமிழ்நூல், பொன்னம்பல சுவாமி செய்த குறிப்புரையோடு முள்ளங்குடி நாராயண சுவாமி பதிப்பித்தது, ரிப்பன் அச்சு யந்திர சாலைப் பதிப்பு, 1912.

## சசிவன்ன போதம்

முன்னமே கூறப்பட்ட மோகவதைப் பரணி என்ற நூலில், பேய்களுக்குத் தேவி கூறியதாக உள்ள 110 பாடல்கள் இப்பெயரோடு பிரசித்தமான தனி வேதாந்த நூலாகவும் வழங்குகின்றது. தமிழில் வேதாந்தம் கற்க விரும்புவோர் முதன் முதலில் பயில்வது இச்சிறு நூலேயாகும். சூத சங்கிதை முத்திக் கண்டத்தில் கூறும் பொருளை இது தன்னகத்தே கொண்டது. அங்கு ஏழாம்

*அத்தியாயத்தில் சசிவர்ணன் என்பவனுடைய கதை பரமேசு வரனால் திருமாலுக்குச் சொல்லப்பட்டது.*

*இக்கதையின் பொருள், குருசேவையின் மகிமை. சசிவர்ணன் என்பவன் பாகளக்கியன் என்ற அந்தணன் புதல்வன். வெண்ணிற முடையவன். எல்லாவிதமான தீய கருமங்களையும் செய்து, கொடு நோயுற்று உழன்ற காலை, தந்தையின் நன்முயற்சியால் அவன் சற்குருவை யடைந்து அவருடைய உபதேசத்தால் போதம் பெற்ற வரலாற்றை இங்கு தேவி கூறுகிறாள். "செந்தாமரைக் கண் முதல்வருக்கு எம்மண்ணல் யன்றி திருவாய் மலர்ந்த திது" என்பது தேவி கூற்று.*

*தாழிசைகள் பரணி மரபையொட்டிச் சந்தத்திலேயே அமைக்கப் பெற்றுள்ளன. இந்நூல் பலரால் பலமுறை பதிப் பிக்கப் பெற்றுள்ளது. விரிவான உரைகளும் உள்ளன. இவை யன்றி அச்சிடாத உரையும் ஏட்டில் உள்ளது.*

*சசிவன்னன் கதை, 17ஆம் நூற்றாண்டில் எழுந்த விருத் தாசல புராணம் கடைசிச் சருக்கமாகிய சசிவன்னச் சருக்கத்தில் கூறப் பெற்றுள்ளமையும் (30 பாடல்) இங்கு அறியத்தக்கது.*

### *பெருந் திரட்டு*

*தத்துவராயர் திரட்டிய வேதாந்தப் பாடல் தொகுப்புக்கள் இரண்டு. இவை முறையே பெருந்திரட்டு, குறுந்திரட்டு எனப் பெயர் பெறும். பெருந்திரட்டு என்பது பாயிரமாக 12 பாடல் களையும் நூலாக 2821 பாடல்களையும் கொண்டது. 1912இல் இதை கோ. வடிவேல் செட்டியாரும் மங்கலம் சண்முக முதலி யாரும் பரிசோதித்து அச்சிட்டார்கள். தத்துவராயர், தம் குருவின் குருவாகிய சிவப்பிரகாசர் பெயரால் இதைத் தொகுத்த காரணத் தால், இது சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்றும் வழங்கப் பெற்றது. நூற்பெயர் கூறும் 53ஆம் செய்யுள் இத்திரட்டின் பெயர் சிவப்பிரகாசமென்றே கூறுகிறது:*

அருமறை யாகமங்கள் ஆத்தவாய் மொழிகள் தம்மின்
மருவுதாற் பரிய மெல்லாம் வகைபட உணர்த்தி இன்பம்
தெரிவரும் சிவத்தையுந்தான் திகழ்த்தலால் திரட்டின் நாமம்
பொருவில்நற் சிவப்பிர காசம் என்னவே பொலியு மன்றே.

*இது உலகாயதம் முதல் வேதாந்தம் ஈறாக உள்ள மதங்களின் சொரூபத்தையும், கண்டனம் முதலியவற்றையும், ஞான சாதனங்*

களின் சொரூபத்தையும், யோக லட்சணங்களையும், குருவின் அருமை பெருமைகளையும் உணர்த்துவது. இதைச் சொரூபானந்தர் திரட்டினார் என்று சொல்வர். அது பொருந்தாது. சொரூபானந்தர் ஆஞ்ஞையின்படி தத்துவராயரே இரண்டு திரட்டுக்களையும் தொகுத்தார் என்பதே முறை.

ஓர் ஏட்டின் இறுதியில் இந்நூல் பற்றியும் தத்துவராயர் பரம்பரை பற்றியும் பின்வரும் குறிப்புகள் காணப்பெறுகின்றன. "ஆகக் கலைக்கட்டளை அநுபவக் கட்டளை கவடு 2க்குப் பணை 28க்குக் கொம்பு 218க்குச் சிவக்கனியாகிய திருப்பாட்டு 2813. காப்பு 2 பொழிப்புரை 9, ஆக 11 ஆகப்பாட்டு 2824க்குப் பொழிப்புரை காப்பு 11 போக, அதிகாரம் 218க்குத் திரட்டின் பாட்டு 2800. சொரூபானந்த சுவாமி திரட்டின பிறகு, தத்துவ தேசிக நாயனார், தத்துவ தேசிகமென்று ஒரு சாஸ்திரம் பண்ணிக் குறுந்திரட்டு திரட்டின பிறகு, பெருந் திரட்டிலேயும் அதிகாரம் கண்டு சேர்த்த பாட்டு 13. ஆக அதிகாரம் 218க்குப் பாட்டு 2813. பாயிரங்காப்பு 11. ஆகப் பாட்டு 2824. சிவப்பிரகாசப் பெருந்திரட்டு முடிந்தது முற்றும்."

"சகாத்தம் 1601இல் (கி.பி. 1679) செல்லா நின்ற கொல்லம் 854ஆம் ஆண்டாகிய காளயுத்தி வருடம் புரட்டாசி மாதம் 13ஆம் தேதி சனி வாரமும் சரசுவதி பூசையாகிய சுப நவமியும் பெற்ற முகூர்த்தத்திலே சொரூபானந்தர், தத்துவ தேசிகர் சந்தானத்தில் சங்கரானந்த சுவாமி திருவடி பெற்ற சுயம்பிரகாச யோகி எழுதி முடித்த திரட்டுப் பார்த்து எழுதினது. துன்மதி வருடம் புரட்டாசி மாதம் 18ஆம் தேதி பூர நட்சத்திரத்தில் எழுதி முடித்தது வினைதீர்த்த வாத்தியார் புத்திரன் வினைதீர்த்தார். சொரூபானந்தர் செய்தது சிவப்பிரகாசப் பெருந்திரட்டு, தத்துவ தேசிகர் பண்ணினது குறுந்திரட்டு 1400. தத்துவ தேசிகர் சந்தானத்திலே 35ஆம் சந்தானமாகிய சுயம்பிரகாசயோகி தேவாரம் திருவாய் மொழிகளை அடுத்து ஆயிரத் திரட்டாக அதிகாரம் 52க்குப் பாட்டு 1100 சங்கர நாராயணத் திரட்டு என்று திரட்டின திரட்டு ஒன்று சங்கர நாராயணர் கோயிலிலே இருக்கும். புத்தியுள்ளோர் விசாரித்து எழுதிக் கொள்ளவும்."

"சொரூபானந்தர் திருநெல்வேலிக்கு வடக்கு ஆற்றங்கரையோரம் சேந்தமங்கலத்திலே பரிபூரணமாகித் திருக்கோயிலும் உண்டாகித் திருச்சிற்றம்பலம் உடையார் என்று பூசை கொண்டு அருளுகிறார். சகாத்தம் 1597இல் (கி.பி. 1675 சுயம்பிரகாசர்

காலம்) திரட்டு என்று அறிக. அடைந்த தினம் வைகாசி மாதம் வியாழக்கிழமையும் கேட்டை நட்சத்திரமும் ஏகாதசியும் என்று சேந்தமங்கலத்துக் கோயிலிலே குருபூசை நடத்தி வருகிறோம். தத்துவ தேசிக நாயனார் சிதம்பரத்திற்கும் விருத்தாசலத்திற்கும் நடுவே இருக்கிற எறும்பூரிலே பரிபூரணமானார். பரிபூரண மான தினம் ஆடி மாதம் சனிக்கிழமையும் சதய நட்சத்திரமும் பிரதமையும். இந்தத் தினத்திலே தத்துவ தேசிக நாயனாருக்கு எறும்பூரிலே திருக்கோயிலும் முகிச்சுக் கபில பீடமாக நித்திய பூசையும் குரு பூசையும் நடந்து வருகிறது. எறும்பூருக்கு வட மேற்கு 10 நாழிகை வழியிலே விளாங்குளத்திலே இருக்கிற சந் தானக்காரர் எறும்பூர் சமாதிக் கோயிலுக்கு நித்தியபடி பூசை நடத்தி வருகிறார்கள். திருச்சிற்றம்பலம்."

இதன்பின், "கைலாச சந்தான பாரம்பரியம்" என்று தொடங்கி " 1 கைலாச மூர்த்தி பரமேசுரர்... 54 சங்கரானந்தரின் திருவடி பெற்ற சிவப்பிரகாசர்" என்ற பரம்பரை அட்டவணை காணப்படுகின்றது. இவர்களுள், 14. உய்ய வந்த நாயனார், 15. நடராஜர், 16. சொரூபானந்தர், 17. சிவப்பிரகாசர், 18. சொரூ பானந்தர், 19. தத்துவ தேசிகர், 20. சோதிப் பிரகாசர், 21. அறிவா னந்தர் என்று காணப்படும் பெயர்களை நாம் நினைவில் வைக்க வேண்டும். இவர்களுள், 18. சொரூபானந்தரும் 19. தத்துவ தேசிகருமே தத்துவராயர் வரலாற்றில் குறிப்பிட்ட இருவர் ஆவர். பரம்பரையின் தொடர்ந்த குறிப்புப் பின்வருவது:

ஆகச் சந்தானக் குரவர் 54. சகாப்தம் 1601ல் சுயம்பிரகாச யோகியார் எழுதின திருமுறை பார்த்து எழுதியது.

"18ஆம் சந்தானம் சொரூபானந்தர் திரட்டினது பெருந் திரட்டு. 19ஆம் சந்தானம் தத்துவ தேசிகர் திரட்டினது குறுந் திரட்டு, பரணிப் பிரபந்தம் முழுவதும் செய்தது. 20ஆம் சந்தானம் சோதிப் பிரகாசர், 21ஆம் சந்தானம் அறிவானந்தர். அறிவானந் தருக்குப் பிறகு விளாங்குளத்துச் சந்தானம் ஒரு விதமும் சங்க ரானந்த சம்பிரதாயமும் (என) இரண்டு வகையாயிருக்கும். மற்ற உளுந்தூர், மணலூர் முதலான சந்தானகாரரும் வீரசைவ மாய்ப் போனார்கள். சிவஞானம் வேண்டிய பேர் தேடிக் கொள்ளவும். இந்தத் திரட்டு எழுதுகிற பேரெல்லாம் இந்தப் படி வக்கணை விடாமல் எழுதவும். கலைக்கட்டளை முழுதும் அறிவித்த பிறகு, சம்பிரதாயக் கட்டளை, "ஊன் உயிர் வேறு செய்தல்" முதல் குரு தரிசன உபசாந்த மட்டும் உள்ள தசகாரிய

சம்பிரதாயங்களைச் சமாதியிலே இருத்தி அறிவிக்கில் சிவயோகி யார் யார் உண்டோ, அவனே தத்துவ தேசிகனார் திருவடி சம்பிரதாயம் உடையவன் என்று அறியவும். தான் துறவி இல்லாமல் இந்நூலைப் போதிக்கிறேன் (என்றாலும்) கிரியைக் குள்ள பீடார்ச்சனையவாது, சாயுச்சலிங்கமாவது பண்ணிக் கொண்டு திரட்டுச் சந்தானம் என்று சொன்னாலும், அல்ல என்று தள்ளி விடுகிறதே அல்லாமல், கைக்கொள்ளக் கடவ தல்ல. திரட்டுச் சந்தானகாரன் அடையாளம் ஏதென்றால் புறத்துவக்குத் துறந்து அகத்துறவும் வந்து, திரட்டிலே தள்ளி யிருக்கிற சமய சங்கற்பம் பிராந்தி அஷ்டாங்க யோகம் இவை களிலே சாராதனவாய்த் திரட்டிலே சொன்னபடிக்கு..... ஞான சாரமும் பிட்சையும் ஞான பூசையுமே செய்யும் அனுஷ்டான மும் தசகாரியப்படி சிவயோகமும் உடையவன். ஆனால் அவனே உயிருக்கு உயிராய் இருக்கிற பொருள் என்றும், சொரூபா னந்தர், தத்துவ தேசிகரென்றும், எம்மையும் ஆண்ட சங்க ரானந்தயோகி என்றும் கைக்கொண்டு, திரட்டிலே உள்ள அனுபவம் கேட்டால் சிவஞானத்தைக் கொடுப்பான், பேரின்பம் பெறலாம். மற்றவன் திரட்டை எடுத்தாலும் அவன் செய்யும் கிரியைக் குற்றம் சொல்லுகையாலே அவனைக் கொண்டு பெறும் காரியம் இல்லை என்று அறியவும். இதையெல்லாம் சிவஞான சாதகருக்காகச் சிவஞானம் பெறுவோர் எல்லாம் நம் மடத்துச் சந்தானம் ஆகையாலே, சகல விவேகிகளும் பார்த்துக் கொண்டு இந்தத் திரட்டு எழுதுகிற பேர் எல்லாம் ஓர் அச்சரம் விடாமல் எழுதிப் பரசுகம் பெறவும். 20 திருச்சிற்றம் பலமுடையார் திருவடி வாழ்க. சொரூபானந்த சுவாமி திருவடி வாழ்க. சிவசுந்தர ஜோதி திருவடி வாழ்க."

பெருந்திரட்டின் பாயிரத்திலும் நூலிறுதியிலும் குடந்தை அறிவானந்த தேசிகரைக் குறிப்பிடும் பாடல்கள் காணப்படு கின்றன. இவை பின்வந்தோர் சேர்த்தவை. அச்சிட்ட பாயிரப் பகுதியில் 8ஆம் பாடல் 190 வரிகள் உடைய ஓர் ஆசிரியப்பா. இது பரமேசுவரன் தொடங்கி சிவப்பிரகாசர் வரையிலுள்ள ஆசாரியர்களை முறையாகக் கூறுகிறது. பின்னர் நூலின் பிரிவு களை எடுத்துரைக்கின்றது. பின்னால் 1917ல் பாடுதுறைப் பகுதிக்குச் சிறப்புப் பாயிரம் அளித்த காஞ்சிபுரம் வித்வான் சபாபதி முதலியார் இவ்வாசிரியப் பாவிலுள்ள முதல் 46 வரி களைத் தம் சிறப்புப் பாயிரத்துக்குத் தொடக்கமாக அமைத்துக் கொண்டு பாடியிருக்கிறார்.

## பெருந்திரட்டின்* மேற்கோள் நூல்கள்

பெருந்திரட்டில் தொகுத்துள்ள நூல் பெயர்களின் அட்டவணையில் 147 நூற் பெயர்கள் காணப்படுகின்றன. இவற்றுள் இன்று தெரிந்து ஆட்சியிலுள்ள நூல்கள் சிலவே; இவை முறையே சைவத் திருமுறைகள், ஞானாமிர்தம், சிவானந்த மாலை, தத்துவரத்னாகரம், தத்துவ விளக்கம், திருவாய்மொழி, பெரிய திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, பரமாத்த தரிசனம் திருக்களிற்றுப்படியார், சைனத்திரு நூற்றந்தாதி என்பன; தம்முடைய பிற நூற்பாடல்கள் பலவற்றைத் தத்துவ ராயர் இத்தொகுப்பினுள் சேர்த்திருக்கிறார். இவை யாவும் கூடி 20 நூல்களே. இவற்றை நீக்க, எஞ்சியுள்ள நூல்கள் 127. இந்தப் பேரெண்ணைப் பார்க்கும் போது, இத்தனை நூற் பெருக்கம் தமிழில் அன்று இருந்ததா என்ற வியப்புத் தோன்றக் கூடும். ஆனால் உண்மை இதுவன்று.

தத்துவராயர் பெருங்கல்வியாளர். நிரம்பிய இலக்கியப் புலமை உடையவர். சிறப்பான வேதாந்த மரபில் தோன்றி உலகத்தையும் பிரமமாகக் காணும் பக்குவம் பெற்றவர். குரு வினால் கட்டளையிடப்பட்டு ஏராளமான பாடல்களை இவர் பாடினார். அக்காலத்தில் வேதாந்த மதம் தமிழில் பிரசாரம் எய்தவில்லை. ஆகவே முதன்முதலாக மதத்தைப் பரப்பும் வேலையைத் தத்துவராயர் மேற்கொண்டார். அதன் பொருட்டே இவர் நூல்கள் இயற்றினார். இயற்றியபோது அக்காலத்தில் தமிழ்நாட்டில் பெருவழக்காய் வழங்கி மிக்க வியாபகம் பெற் றிருந்த சைவ சிந்தாந்த மதத்தையும் இவர் நன்கு கண்டார். கண்ட போது, சைவசித்தாந்த நூற்பரப்புக்கேற்ப வேதாந்தத்திலும் நூற்பரப்பு உண்டாக்க முனைந்தார். இவருக்கு முன் தமிழில் இருந்த வேதாந்த நூல் பரமார்த்த தரிசனம் என்ற பெயரால் பட்டர் மொழிபெயர்த்திருந்த பகவத்கீதை ஒன்றேயாகும். கைவல்லிய நவநீதம், ஞானவாசிட்டம் போன்ற வேதாந்த நூல்கள் மிகவும் பிற்காலத்தில் தோன்றியவை. ஆகவே, சிறந்த புத்திமானாயும், புலவராயும் மார்க்க தரிசியாகவும் இருந்த

---

* சாமிநாதையர் நூல் நிலையத்தில் பெருந்திரட்டுச் சங்கிரகம் என ஒரு தொகுப்பு உண்டு. பாடல் 32.1. உலக முதற் பொருளை, 32. ஆதியாம் சரனே (அருணெறி விளக்கம்).

வெள்ளியம்பலவாணர் ஞான தீபிகை ஒன்று காட்டும் இரு பாடல்கள் இங்கு முறையே மெய்ஞ்ஞான சரிதை, சிவஞான நிலையம் என்ற பெயரில் உள்ளன. இதனாலும் இப்பாடல்கள் போலி என்பது தெளிவு.

தத்துவராயர், கற்றறிந்த மக்கள் பழகியிருந்த நூற்பெயர்களையே தம் பாடல்களுக்கு அமைத்தால் தம் வேதாந்த மார்க்கம் பிரசாரம் பெறும் என்று கருதினார். (சென்ற நூற்றாண்டில் கிறித்துவமதப் பிரசாரம் செய்தவர்கள் தங்கள் நூல்களுக்கு வேதம் என்றும் ஆகமம் என்றும் இந்து மதநூற் பெயர்களையே வைத்தார்கள் என்று நாம் அறிவோம்.) சைவ சித்தாந்த நூற் பெயர்களான தத்துவப் பிரகாசம், தத்துவ சரிதை, தத்துவ விளக்கம், சிவப்பிரசாகம், வேதாந்த தீபிகை, ஞானசாரம், ஞான சித்தி, மெய்ஞ்ஞான விளக்கம் போன்ற பெயர்களை இவர் தம் பாடல்களில் அமைத்திருப்பதைப் பார்த்தால் இந்தப் பிரசார நோக்கம் உண்டென்று கருதத் தோன்றுகிறது. மேலும், சங்கற்ப நிராகரணம், சிவப்பிரகாசம், சிவவாக்கியம், ஞானசாரம், தத்துவப் பிரகாசம், திருவாசகம், மெய்ஞ்ஞான விளக்கம் முத லான பெயர்களுடைய சைவநூல்கள் இருப்பது ஆராய்ச்சி யாளருக்கு நன்கு தெரியும். இப்பெயர்களைத் தலைப்பாகக் கொண்டு பெருந்திரட்டில் பல பாடல்கள் உள்ளன. இவை யாவும் பிரசித்தமாய்த் தெரிந்த அவ்வந்நூல்களில் காணப்பெற வில்லை. உதாரணமான, திருவாசகம் என்று தலைப்பிட்ட பின்வரும் இரண்டு பாடல்களைச் சொல்லலாம்.

அன்னையும் ஆயமும் கேண்மின்களோ, எனது
ஆர்உயிர் ஆய சிவபெருமான்,
என்னது, யான், என்னும் இவ்விரண்டும்,
என் உளன் ஆய் இருந்தே, கவர்ந்தான்;
முன்னை உறவும், பிறவும் காணேன்;
மூ உலகும் பரந்து, எங்கும் தான் ஆய்,
இன்னது அளவு என்று இயம்ப ஒண்ணா
இன்ப வெள்ளத்து, எனை இட்டனனே.

வானும், நிலனும் அடையக் கேண்மோ;
வள்ளல், பெருந்துறை மேய பெம்மான்
தானும், தன் தையலும், ஆகி; என்தன்
சதுரை அழித்து மால் தந்த போதே,
ஊனும், உயிரும், உணர்வும், ஒன்றாய்,
உரோமம் எல்லாம் சிலிர்பித்தது என்னே!
யானும் எனை அறியாத வண்ணம்,
இன்ப வெள்ளத்து, எனை இட்டனனே.

இவை மாணிக்கவாசகர் பாடிய திருவாசகத்துள் காணப் பெறவில்லை. இவற்றைத் திருவாசக மிகைப் பாடல்கள் எனக் கருதவும் இடமில்லை; எந்த ஏட்டிலும் கண்டதில்லை.

பண்டை நூல்களில் தம் கருத்துக்கு ஏற்ற பாடல்களைத் தத்துவராயர் தொகுத்துத் தம் கருத்துக்குப் பொருத்தமாகவும், பண்டை நூல்களில் தக்க மேற்கோள் கிடைக்காதபோது, பல புதிய பாடல்களைப் பாடி, பண்டைய பெயர்களைப் புதிய பாடல்களுக்குச் சூட்டியும், திரட்டைப் பெருந்திரட்டு ஆக்கினார். இச்செய்தியைத் "திருவாசகப்" பாடல்கள் நமக்கு நன்கு விளக்குகின்றன.

இப் பெயர்களைத் தத்துவராயரே அமைத்திருக்கலாம். அல்லது, ஒருகால் அவருக்குப் பின்வந்த சீடர்கள் அமைத்திருத்தலும் கூடும்.

மற்றொரு வகையாலும் தத்துவராயரே புதுப்பெயர் அமைத்தார் என்பதை நாம் உணரமுடிகிறது. பல அதிகாரப் பிரிவுகளில் முதல்பாட்டு ஒரு வினாவாக உள்ளது. சில அதிகாரங்களில் இது வினா விளக்கம் என்ற பெயரில் காணப்படுகிறது. மற்றவற்றில் வேறு பல நூற்பெயராக உள்ளது. ஆனால் யாவும் வினாவெழுப்பும் பாடல்கள். பின்னர் விடையாக உள்ள பகுதியில் தெரிந்த நூற்பெயர்களமைந்த பாடல்கள் சிலவும் தெரியாத நூற்பெயர்களமைந்த பாடல்கள் பலவும் காணப்படுகின்றன. இவை யாவும் ஒரே கருத்தைத் தொடர்பாக விளக்குகின்றன. வெவ்வேறான பல நூற்பாடல்கள், கேட்ட கேள்விக்கு விடையான ஒரு கருத்தைத் தொடர்பாக விளக்கும் முறையில் அமைந்திருப்பது அருமை. ஆதலால் பாடல்கள் தொடர்பாகப் புதிதாய்ச் செய்யப்பட்டுப் பெயர்களும் புதிதாய் வைக்கப்பட்டன என்று நாம் கருதுவது பொருந்தக்கூடியதே.

இக்கருத்துக்களுக்குப் பெருந்திரட்டு முழுமையிலும் எடுத்துக்காட்டைக் காணலாம். உதாரணமாக 515ஆம் பக்கம் 'இறை திருக்குறிப்பாட்சி' என்ற தலைப்பில் முதல் பாட்டு வினா. இதற்கு விடையாக வருகின்ற பாடல்களில் சில குறிப்பிடத் தக்கன: 1. போதரத்னாகரம் 'அருட் சொரூபா உன் பெருந்திருவுளக் குறிப்பு ஆட்சி ஒன்றுமே அல்லது ஒன்றும் வேண்டேனே'; 2. அதிக்கிருதாமிர்தம், என்பிரான் குறிப்பாட்சி செய்தருளே'; 'எனைத் திருவுளத் தடைத்துன் செய்ய நற்குறிப்பாட்சி செய்

தருளே'; 3. அருணெறி விளக்கம்; 'எம்பிரான் திண்ணமாகுந் திருக்குறிப்பாட்சியே'; 'விமல நீ தெரிய ஆளும் திருக்குறிப் பாட்சியே.'

மற்றும் ஒரு குறிப்பு: அகரவர்க்கத்திலுள்ள நூற்பட்டியலை மட்டும் பார்க்கலாம். அஞ்ஞான நிவர்த்தி, அஞ்ஞான நிவத்தி நாடகம், அதிக்கிருதாமிருதம், அருகர் சாஸ்திரம், அருணெறி விளக்கம் (இதுவேறு) அருளியற்சதகம், அசிரோதபோதம், அனந்தபோதம், அனந்தானந்த நிலையம், அனந்தானந்த மாலை அனுபவசாரம். அனுபவசித்தி, அனுபவ சூரியன், அனுபவா மிருதம், அனுபவ தீபிகை, அனுபூதி நிலைமை, அனுபூதி நிலையம், அனுபூதி விளக்கம்; அன்பா; அகரவரிசையில் மட்டும் இத்தனை பெயர்கள். இவற்றுள் அருணெறி விளக்கம் என்பது பாடு துறையிலுள்ள ஒரு பகுதி. அது ஒன்று நீங்க, ஏனைய நூல் எதன் பெயரும் தமிழ்நாட்டில் இன்று கேள்விப்பட்டதில்லை. ஆதலால் இப்பெயர்களைத் தத்துவராயரே அமைத்துக் கொண்டார் என்று நாம் கருதலாம். ஒருவேளை அவர் பிற்காலத்தில் இத் தலைப்புக்கள் உடைய நூல்களைப் பாடி முடிக்கவும் எண்ணி யிருக்கலாம்; பாடியதாக நமக்குக் கிடைக்கவில்லை.

பெருந்திரட்டில் தொகுக்கப் பெற்ற நூல்களில் நடராச சரிதை முதலான பல நூற்பெயர்கள் வருகின்றன. தொகுத்துள்ள பாடல்களை ஒப்பு நோக்கி ஆராயின் ஒருண்மை புலனாகின்றது. நடராச சரிதை என்பது சொரூபானந்தருக்கு முந்திய குரு மரபில் வரும் ஒரு நடராசரைப் புகழ்ந்து கூறும் நூல்; சிவப் பிரகாச தரிசனம் என்பது, சொரூபானந்தருக்கு முந்திய குரு வாகிய சிவப்பிரகாச சுவாமிகளைப் புகழ்வது, போதரத்னாகரம், போதாமிர்தம் என்ற இரண்டும் சொரூபானந்தரைப் புகழ்கின்ற நூல்கள். இவற்றைத் தத்துவராயரே பாடிச் சேர்த்தார் என்று தெரிகிறது. இப்பெயருடைய நூல்கள் உள்ளனவா என்பது சந்தேகம்: துணிந்து இல்லை என்றே சொல்லலாம். திரட்டுக்கு வேண்டிய அளவு மட்டும் பாடல்களைப் பாடிவிட்டு, பின்னால் முழுநூலைப் பாடிவிடலாம் என்று தத்துவராயர் நினைத்தார் போலும். எத்தனையோ நூல்களும் பாடல்களும் இவர் பாடி யன இன்று கிடைத்திருக்க, முற்காட்டிய பெயர் கொண்ட நூல்கள் கிடைக்கவில்லை. ஆகவே அவர் இப்பெயரில் நூல் எதுவும் பாடவில்லை என்றே கருதவேண்டியிருக்கிறது.

மற்றோருண்மையும் இப்பாடல்களால் புலனாகின்றது. வேறு வகையால் விளங்காத பல நூல்களின் பெயர்கள் பெருந் திரட்டில் குறிப்பிடப்பட்டிருந்த போதிலும் கூட, இப்பாடல் கள் பலவற்றைத் தத்துவராயரே பாடினார் என்பதற்குச் சான்று அப்பாடல்களிலேயே காணப்படுகின்றது. பல பாடல்கள் சொரூபானந்தர், சிவப்பிரசாகர், திருநடர் என்று பெயர் சுட்டிக் குறிப்பிடுகின்றன. இப்பெயர்கள் தத்துவராயருக்கு முன் வந்த ஆசாரியர்களின் பெயர்கள். ஆகவே இப்பெயர்கள் பயிலும் பாடலுடைய நூல்களைத் தத்துவராயரே பாடினார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ்வாறு கருதத்தக்க நூல்கள் அனுபவ சாரம், ஆனந்த சித்தி, ஆனாந்தாமிர்தம், சுவானுபவ சித்தி தத்துவசாரம், தத்துவ சூளாமணி, தத்துவமாலை, திருவந்தாதி, போதாமிர்தம், போதரத்தினாகரம், மூலசித்தி, மெய்ந்நெறி, வாசுதேவசதகம் என்பன போன்ற பல. (சிவப்பிரகாச தரிசனம், சொரூபானந்த சித்தி, நடராச சரிதை, என்பன போன்றன. தம் பெயராலேயே தத்துவராயர் செய்தவை என்று உணர்த்துகின்றன.) இவற்றை நன்கு ஆராய்ந்தால், தெளிவாகத் தெரிந்த நூலாகிய நக்கீரர் பாடல், களிற்றுப்படி, திருவாசகம், தேவாரம், பரமார்த்த தரிசனம், க்ஷேத்திரத்திருவெண்பா, ஞானாமிர்தம், ஆழ்வார் பாடல்கள், திருநூற்றந்தாதி, திருமந்திரம், பொன் வண்ணத்தந்தாதி, மெய்ம்மொழி ஆகிய நூல்கள் தவிர ஏனைய **யாவுமே** தத்துவராயரே பாடியவை என்று சொல்வதுதான் பொருத்தமாயிருக்கும்.

இனி, இவர் கூறியவற்றில் தெரிந்த நூல்களை நாம் கவனிக்க லாம். திருமுறைகளில் மூவர் தேவாரத்தையும் முறையே திருக் கடைக்காப்பு, தேவாரம், திருப்பாட்டு என்று வழங்குகின்றார். பதினொராந் திருமுறையில் பொன் வண்ணத்தந்தாதி, அம்மை யாரின் அற்புதத் திருவந்தாதி, க்ஷேத்திரத் திருவெண்பா, நக்கீரர் பாடிய கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி, பட்டினத்தார் பாடிய திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, கோயில் நான்மணி மாலை ஆகியவை தொகுக்கப்பட்டுள்ளன. திருமுறை களை அடுத்துத் தோன்றிய வாகீச முனிவருடைய ஞானாமிர் தத்தில் 30 பாடல்களும் அவற்றின் உரையும் விரிவாகக் காணப் படுகின்றன. இத்திரட்டில் காணப்படும் உரை இது ஒன்றுதான். திருவாசகப் பாடல்கள் மிகப்பல. வைணவ நூல்களில்

திருமங்கையாழ்வார் பாசுரங்கள், நம்மாழ்வாரின் திருவாய் மொழி, திருமழிசையாரின் சந்த விருத்தம், தொண்டரடிப் பொடியாரின் திருமாலை ஆகிய நூற் பாடல்களை இங்குக் காண்கிறோம். தமிழ் பகவத் கீதையையும், வாசுதேவ சதகம், நாராயண மனனம், முகுந்தப் பிரகாசம் என்ற பெயர்களையும் இங்கு காணலாம். பாடுதுறையுள் எடுத்து அமைத்துக் கொண்ட சிவானந்த மாலைப் பாடல்கள் பலவற்றை இங்கு தொகுத்திருக்கிறார்.

தத்துவராயர் வேதாந்தி ஆனமையால், சிவ வழிபாடும் திருமால் வழிபாடும் பேதமின்றித் திரட்டில் எங்கும் காணப் படுகின்றன.

பிற்காலத்தில் தருமபுரம் வெள்ளியம்பலவாணத் தம்பி ரானும் திருப்போரூர் சிதம்பர சுவாமிகளும் பெருந்திரட்டுப் பாடல்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார்கள். சிதம்பர சுவாமிகள் பெருந்திரட்டு என்று சொல்லாமல் அதிற் கண்ட நூற்பெயரையே எடுத்துக் கூறுகிறார். இருவரும் பெருந்திரட்டி லிருந்தே பாடல்களை எடுத்தவர்கள்.

## குறுந்திரட்டு

தத்துவராயர் பெருந்திரட்டில் தொகுத்த பாடல்கள் சில வற்றைச் சங்கிரகமாகத் திரட்டி இடை இடையே தாம் வகுத்த வகுப்புக்கு ஏற்ற வண்ணம் 424 செய்யுட்களைச் சேர்த்துக் குறுந்திரட்டு என்ற நூலைத் திரட்டியருளினார். இதன் செய்யுள் தொகை 1340. இத்திரட்டில் மிகைப் பாடல்களும் பல உள்ளன. அன்றியும், திருவாசகப் பாடல்களும் இதனுள் காணப்படுகின் றன. (வடிவேல் செட்டியார் பதிப்பு - குறுந்திரட்டு 397, 398 பாடல்கள் காண்க) குறுந்திரட்டுப் பாடல்களும், சில தேவாரம் போலவே செய்யப்பெற்ற பாடல்கள். உதாரணமாகப் பின் வரும் பாடல்கள் காண்க. தேவாரம், அப்பர் திருக்குறுந்தொகை, திருவீழிமிழலை 3:

**ஞாலமே விசும்பே நலந்தீமையே**
**காலமே கருத்தே கருத்தால் தொழும்**
**சீலமே திரு வீழி மிழலையுட்**
**கோலமே யடியேனைக் குறிக்கொளே.**

*குறுந்திரட்டு 421:*

**காவியேர் கண்ணியர் வலையிற் கடும்**
**பாவியே னகப் பாடறப் பத்தருட்**
**கூவியே யெனை யாண்ட குரவஎன்**
**ஆவியேஅடி யேனைக் குறிக்கொளே.**

*கோயிலூர் அ. ராமசாமி 1888ல் குறுந்திரட்டைப் பதிப்பித்தார். 1390 பாடல் மிமோரியல் அச்சுக்கூடம். பின்னர் 1912இல் கோ. வடிவேல் செட்டியார் பெருந்திரட்டோடு சேர்த்துக் குறுந் திரட்டை அச்சிட்டார். பெருந்திரட்டு குறுந்திரட்டு என்று சேர்த்து வழங்குவது பெருவழக்காயுள்ளது.*

*இத்திரட்டுக்களைப் பயின்று வந்த அடியவர்கள் திரட்டுச் சந்தானத்தர் என்று பெயர் பெற்றார்கள். இந்தப் பரம்பரையில் 25ஆவது சந்தானமாக இருந்தவர் சுயம்பிரகாச யோகியார். இவர் தேவாரம் திருவாய்மொழிகளில் 1100 பாடல்களைத் தேர்ந்தெடுத்து 52 அதிகாரமாகப் பகுத்து ஆயிரத் திரட்டாகத் தொகுத்தார். சிவனையும் பெருமாளையும் குறித்துத் தொகுக்கப் பட்டமையால், இது* **சங்கர நாராயணத் திரட்டு** *என்று பெயர் பெற்றது. இந்நூல் அச்சானதாகத் தெரியவில்லை. பார்வை யிடுவதற்கு ஏட்டுப் பிரதியும் கிடைக்கவில்லை. காலம் 16ஆம் நூற்றாண்டு போலும்.*

*மேலே காட்டிய ஏட்டுக் குறிப்புக்களிலிருந்து 19ஆவது சந்தானம் தத்துவப்பிரகாசர் (காலம் 1475) 54ஆவது சுயம் பிரகாச யோகி காலம் 1678 என்று அறிகிறோம். ஆகவே 35ஆவது சந்தானம் சுயம்பிரகாசர் காலம் 1565ஆக இருத்தல் கூடும்.*

*திரட்டுச் சந்தானம் என்று ஒரு மரபு தனியாக வழக்கில் இல்லை; ஏடு எழுதினவர் குறிப்பிட்டார் என்ற அவ்வளவே. திருப்புகழ் வல்லவரைத் திருப்புகழ் மணி என்றும், திருப்புகழ்ச் சுவாமி என்றும் கூறுவது போலவே, திரட்டுச் சாத்திரம் வல்ல வரான தத்துவராய சந்தானத்தார் திரட்டுச் சந்தானம் என்று பெயர் பெற்றிருந்தார் என்று நாம் கருதலாம்.*

*ஒரு குறிப்போடு தத்துவராயர் வரலாற்றை முடிப்போம். நாமரூபம் கடந்த பிரமத்தையே பாடுவேன் என்று அத்துவைத வேதாந்தம் பாடவந்த தத்துவராயர், தாம் சைவ சித்தாந்தியான*

சிவப்பிரகாசரிடம் உபசேதம் பெற்ற சொரூபானந்தர் மாணாக்க ரானமையால், தம்மை மறந்து எங்கும் சிவமே பேசுகிறார்; பிரமத்தை அச் சிவபரம் பொருளாகவே காண்கிறார்

## தத்துவராயர் காலம்

தொகை நூல்கள் பற்றி எழுதிய வையாபுரிப்பிள்ளை தத்துவராயர் பெருந்திரட்டைத் தொகுத்த காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதியாக இருக்கக் கூடுமென்று குறிப்பிட்டார். இக்குறிப்பன்றி தத்துவராயர் காலத்தை வேறு யாரும் திட்டமாக வரையறை செய்யவில்லை, குறிப்பிடவுமில்லை.

இவர் காலம் அறிய இரண்டு குறிப்புக்கள் நமக்குக் கிடைத்துள்ளன. ஒன்று முன்னமே "நெஞ்சிற்கு அமைவுரை" என்ற சிவானந்தமாலைப் பகுதி பற்றிக் கூறிய செய்தி. சிவானந்த மாலையின் காலம் 1350-1375 என்று வரையறை செய்தோம். ஆகவே, இந்நூற் பாடல்களை எடுத்துச் சொல்லும் தத்துவராயர் காலம் இதற்குப் பிற்பட்டது என்பது தெளிவு.

தத்துவராயர் செய்த அஞ்ஞவதைப் பரணியானது தனி நூலாக வழக்காறு பெற்றிருந்தது என்பதையும் முன்னமே குறிப்பிட்டோம். இதன் பாடல்களில் ஒன்றைச் சிவஞான சித்தியார் சுபக்கத்துக்கு உரை செய்த மறைஞான தேசிகர் "சிவனையவன் திருவடி ஞானத்தால் என்ற 294ஆம் பாடல் உரையில் செயல் வாக்குச் சிந்தையெல்லாம் அவனை அணுகா" என்ற கூற்றுக்கு மேற்கோளாகக் காட்டுகிறார்:

> சொல்லும் மனனும்* அறியா ஒன்றைச்
> சொல்லாலே தோற்றுவிக்கத் துணியும் சொல்லும்
> புல்லாலே எரி சுடுதல் போலும் போலும்
> போலாதேல் புகையிலெழு கனலே போலும். 74

மறைஞான தேசிகர் காலம் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று தெரிவதால், அஞ்ஞவதைப் பரணி செய்த தத்துவராயர் இவருக்கு முற்பட்டவர் ஆகிறார்.

இவற்றால் பெறுவது, தத்துவராயர் காலம் சிவானந்த மாலையின் காலமாகிய 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் மறைஞான தேசிகர் காலமாகிய 16ஆம் நூற்றாண்டின் இடைப்

* சொல்லாளும் மறைநூல் என்ற பாடமும் உண்டு

பகுதிக்கும் நடுவில் உள்ள காலம் என்று தெரிகிறது. ஆகவே இக்காலம் ஏறக்குறைய 1450-1475 என்று முடிவு செய்தல் பொருந்தும். வேதாந்த பரமான நூல்கள் 15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் தமிழில் முதல் முதலாக ஆக்கப் பெற்றன. சிவஞான வள்ளல் என்பவர் வேதாந்த சாத்திரங்கள் செய்ததும் இதே காலம் என்றும் வரையறை செய்திருக்கின்றோம். ஆகவே எல்லா வகையாலும் தத்துவராயர் காலம் 15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்ற கருத்து வலி பெறுகிறது.

## நவலிங்க லீலை

இந்நூல் வீர சைவ சமயச் சார்பாகத் தமிழில் தோன்றிய பழைய நூலென்று தோன்னுகிறது. பசவண்ணர் (1125-1165) கன்னட நாட்டில் பிராமண குலத்தில் பிறந்து இலிங்காயத சமயப் பிரிவைப் பரவச் செய்தார். இரண்டு நூற்றாண்டுகள் கழித்து, வீர சைவ மதம் என்று கூறுகின்ற இந்த மதம் தமிழ்நாட்டில் பரவத் தொடங்கிற்று. பிற்காலத்தில் துறைமங்கலம்-சிவப்பிர காச சுவாமிகள் ஒருவர் செய்த நூல்களாலேயே இந்தச் சமயம் இன்று தமிழ் இலக்கிய உலகில் நிலவுகிறது. வீர சைவ மதத்தைப் பின்பற்றுவோர் பலர் இருப்பினும், அவர்களுக்கு வேறு சிறப் பான நூல்கள் இல்லை; வசவபுராணம் காலத்தால் பிற்பட்டது. 14-15 நூற்றாண்டுகளில் லிங்கதாரணம் அகச் சமயத்துத் தந்திர பேதமான மாவிரதி முதலியோருக்குக் கூறப்பட்டது (இக் காலத்தில் வீரசைவம் தனிச் சமயப் பிரிவினராக அமையவில்லை போலும்.) அவர்களுக்கு மாவிரதி போல, லிங்க தாரணம் உண்டென்றும், இவர்கள் சுத்த சைவத்தின் பிரிவினர் என்றும், வெள்ளியம்பல வாணர் கூறுவதால் அறிகிறோம்.

நவலிங்க லீலை என்ற இந்த நூலின் 72 பாடல்களையும் அவ்வெள்ளியம்பலவாணரே வீரசைவ மதம் மறுக்குமிடத்தில் ஞானாவரண விளக்கவுரையில் எடுத்துத் தருகிறார். "தக்கிண மத சித்தாந்தம் மேற்கொண்டு ஒழுகுபவர் இக்காலத்து வீர சைவராம். அவர் இயற்றிய நவலிங்க லீலையில் இவ்வாறு வரும் தசாவத்தாதிகளைத் தம் பொருளில் ஏற்றிக் கூறிக் கோடலின்" என்றெழுதி, 72 பாடல்களையும் தந்து, பின்னர், 'நவலிங்க லீலை முடிந்தது. இவ்வாறு வீர சைவர் கூறும் பிறநூலின் ஒரு லிங்கமே இட்டப்பிராண பாவபேதத்தான் மூன்று லிங்கமாய்,

அந்த மூன்று ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கம லிங்கம், பிரசாதலிங்கம், மகாலிங்கம் என ஆறாய், அந்த ஆறும் தத்துவப் பேதங்களால் முப்பத்தாறாய் அவற்றின் அவாந்தர பேதத்தால் இருநூற்றறுபத்தாறாய் வரும் இலிங்க பேதமாம் என வரும்' என்று முடிக்கிறார்.

லீலை ஆசிரியர், முதல் பாடலில் "பரமன் உமைக்கு அருளியதைப் பிரபு தேவன் வசவேசற்குக் கரு நடத்தால் இயம்பினதைச் செந்தமிழால் அறைகுவன்" என்று கூறுகிறார் பாடல்கள் பெரும்பான்மை அறுசீர் விருத்தங்களாகவும், சில பாடல்கள் சந்தக் கலிவிருத்தமாகவும் அமைந்துள்ளன. சொற்களும் நடையும் செம்மையாக உள்ளன. இந்நூலின் ஆசிரியர் இன்னாரென்பது தெரியவில்லை. வெள்ளியம்பலவாணர் பல நூல்களை முழுமையாகத் தம் உரையில் எடுத்துத் தருகிறார். உதாரணம்-உருப சொரூப அகவல், சத்தி நிபாத அகவல்; இவை இரண்டும் காவை அம்பலநாதத் தம்பிரான் செய்தவை. காலம் 14ஆம் நூற்றாண்டு; நிராமயதேவர் நூல் பரிபூரண சித்தி என்று வேறு இருநூல்கள் இவ்வாறு அவரால் சொல்லப்படுபவை. சொல்லுகின்ற மற்றொன்று நவலிங்க லீலை. முன்பின் தொடர்பு களாலும், நூல் நடையாலும் இச்சிறு நூல் 15ஆம் நூற்றாண்டு என்று கருத இடம் கொடுக்கின்றது.



*அத்தியாயம் 9*

# வைணவ இலக்கிய ஆசிரியர்

## *முன்னுரை*

*வைணவ சமயத்தில் திவ்வியப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள் காலத்தின் பின், அப்பிரபந்தங்கள் மக்களிடையே சிறிது காலம் விளக்கம் பெறாமல் இருந்து நாதமுனிகள் வாயிலாக விளக்கம் ஏற்பட்டது. இது ஓரளவு தேவாரப் பாடல்களுக்கு நம்பியாண்டார் நம்பியால் ஏற்பட்ட விளக்கத்தை ஒக்கும். நாத முனிகள் ஆளவந்தார் என்ற பரம்பரையில் வந்த இராமானுசரால் வைணவ சமயம் தமிழ்நாட்டில் நன்கு நிலை பெறுவதாயிற்று. அவர் பிரஸ்தானத்திரயங்களுக்குத் தம் மதமாகிய விசிஷ்டாத்வைத மதம் பற்றிப் புதுப்பேருரைகள் எழுதிப் புதுச்சமயமே கண்டார் என்று கூறுவது மிகையாகாது. கோயில்களில் வழிபாட்டு முறையையும் தினசரி நிர்வாக முறையையும் ஒழுங்குபடுத்தினார். வைணவருடைய வாழ்க்கையையும் நெறிப்படுத்தினார். வைணவம் அனைத்துக்குமே ஒருமேல் வரிச்சட்டம் செய்தார். இதுவன்றி, தம்மிடம் உபதேசம் பெற்ற ஆசாரியர்களைக் கொண்டு தமிழ் நாடெங்கும் தம் சமயம் ஆக்கம் பெறுதற்கு ஆவன யாவும் செய்தார்.*

*கி.பி. 1137இல் அவர் பரமபதம் அடையவே, அவருக்குப் பின்வந்த சீடர் பரம்பரையினர் சமய கிரந்தங்கள் பல எழுதலாயினர். யாவும் மணிப்பிரவாள நடையிலேயே; தமிழ் நூலாக அமைந்தவை மிகச் சிலவே. இராமானுச நூற்றந்தாதியும் சடகோபரந்தாதியும் 12ஆம் நூற்றாண்டுக்கு உரிய சிறப்புமிக்க நூல்கள். இவ்வளவு சிறப்புமிக்க நூல்கள் வைணவத்தில் அடுத்த நூற்றாண்டுகளில் எழவில்லை.*

13ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றி நூறு வருஷத்துக்கு மேலும் வாழ்ந்த வேதாந்த தேசிகரால் வைணவ சமயத்தில் வடகலை என்ற ஒரு பகுதி தோன்றிப் பிரிந்தது. அவரைப் பின்பற்றினோர் வடகலையார். எனவே, ஏனையோர் தென்கலையினராயினர். ஓரளவு இவர்கள் வரலாறுகளை 14ஆம் நூற்றாண்டு வரலாற்றில் விளங்கக் காணலாம்.

15ஆம் நூற்றாண்டில் சிறப்பாகக் கருதற்குரியார் மணவாள மாமுனிகள். தென்கலைச் சம்பிரதாயத்தில் இவரே மிகச் சிறந்த ஆசாரியர். இவர், தேசிகர்போல, தமிழிலும் சில நூல்கள் செய்தார். இவர் மாணாக்கர் சிலர் சில தமிழ்ப் பாடல்களும் பாடியிருக்கிறார்கள். 15ஆம் நூற்றாண்டின் வைணவ இலக்கிய வரலாறு, இவர்கள் வரலாறாகவே அமையும்.

## மணவாள மாமுனிகள்

மணவாள மாமுனிகள் கலி 4472இல் (கி.பி. 1370) ஆழ்வார் திருநகரியில் திருநாவீறு உடையபிரான் தாசர்ண்ணர் என்பவரின் புதல்வராகப் பிறந்தார். தாசரண்ணர் 74 சிம்மாசனாதிபதிகளில் கோமடத் தாழ்வார் வமிசம். கொல்லி காவலதாசரது குமாரியை மணந்து சிக்கலில் அவர் வீட்டில் இருந்தார். அவர் காலமான பின், தம் மனைவியோடு திருநகரி சென்று வாழ்ந்தார். மணவாள மாமுனியின் பிள்ளைத் திருநாமம் அழகிய மணவாளன் என்பது. பிறவியிலேயே கலைஞானம் கைவரப் பெற்றவராய் இவர் வளர்ந்து, உரிய காலத்தில் திருமணம் செய்யப் பெற்றார். பின் திருவாய் மொழிப்பிள்ளை என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்த திருமலையாழ்வாரின் திருவடிகளில் ஆசிரயித்து அவரிடம் திவ்வியப் பிரபந்தங்களின் இரகசியப் பொருள்களையும் வைணவ சம்பிரதாயப் பொருள்களையும் கேட்டறிந்தார். திருவாய்மொழிப்பிள்ளை உடையவர் திருவடிகளிலேயே வழிபாடு செய்திருந்ததைக் கண்டு, இவரும் அத்திருவடிகளில் அத்தியந்தப் பிரேமை உடையவரானார். உடையவர் மீது **யதிராஜ விம்சதி** என்ற தோத்திரத்தை அருளிச் செய்தார். இதனால் யதீந்திரப் பிரவணர் என்று பெயர் பெற்றார். இதைக் கேட்டுத் திருவாய் மொழிப்பிள்ளை மிகவும் மகிழ்ந்து தாம் ஆராதித்து வந்த உடையவர் விக்கிரகத்தை இவரிடமே ஆராதிக்க அளித்துவிட்டார். இவரும் உடையவர் ஆராதனையே நிஷ்டையாகக் கொண்டு வாழ்ந்தார்.

பிறர் இவரிடம் அசூயை கொண்டபொழுது, திருவாய் மொழிப்பிள்ளை இவர் அனந்தாழ்வார் அவதாரம் என்பதைப் புலப்படுத்தினார். அக்காலத்தில் பிறந்த இவருடைய புதல் வனுக்கும் இராமானுஜன் என்றே பெயர் வைக்கச்செய்தார். உரியகாலத்தில் திருவாய் மொழிப்பிள்ளை திரு நாட்டுக்கு எழுந் தருளும் சமயம் நெருங்கியபோது, அவர் இவரைப் பார்த்து, "சமஸ்கிருத சாத்திரத்தில் பலகால் கண் வையாதீர். ஸ்ரீ பாஷ் யத்தை உணர்ந்து அதைப் பிரவசனம்செய்து கொண்டு திரு வரங்கத்திலே நித்திய வாசம் பண்ணும்" என்று நியமித்து, மற்றச் சீடர்களை எல்லாம் இவர் கையில் ஒப்புவித்துப் பரமபதம் அடைந்தார்.

பின்னர் இவர் குரு ஆக்ஞைப்படி திருவரங்கம் அடைந்து அங்கேயே வாழ்ந்தார். எங்கும் நாலாயிரப் பிரபந்தம் பிரவசனம் செய்வதை நியமமாகக் கொண்டார். அங்கு கோயிலில் நடை பெற்ற அனேகம் குறைபாடுகளை எல்லாம் திருத்தம் செய்தார். பிறகு திருக்குருகூர் சென்று வழிபட்டு, அங்கிருந்து ஸ்ரீபெரும் பூதூர் சென்று,

> இதுவோ பெரும்பூதூ ரிங்கே பிறந்தோ
> எதிராச ரெம்மிடரைத் தீர்த்தார் – இதுவோதான்
> தேங்கும் பொருநற் றிருநகரிக் கொப்பான
> ஓங்கும் புகழ் படைத்த வூர்.
>
> எந்தை யெதிராச ரெம்மை யெடுத் தளிக்க
> வந்த பெரும் பூதூர்க்கு வந்தோமோ – சிந்தை
> மருளோ தெருளோ மகிழ்மாலை மார்ப
> னருளோவிப் பேற்றுக் கடி.
>
> இவ்வுலகந் தன்னி லெதிராசர் கொண்டருளும்
> எவ்வுருவும் யான்சென் றிறைஞ்சியக்கால் – அவ்வுருவ
> மெல்லா மினிதேனு மிங்ஙனிருப்புப் போல்
> நில்லா தென் னெஞ்சு ணிறைந்து.

என்ற பாசுரங்களை அருளிச்செய்து இராமானுஜரை வழிபட்டு, ஸ்ரீ பாஷ்ய சிரவணம் செய்து கொண்டிருந்து, உபய வேதாந் தாசாரியர் என்று புகழப் பெற்றார்.

ஸ்ரீவசன பூஷண வியாக்கியானம் அருளிக் கூறிய பாசுரம்.

சீர்வசன பூடணமாந் தெய்வக் குளிகை பெற்றோம்
பார்தன்னைப் பொன்னுலகாப் பார்க்கவல்லோம் – தேரினமக்
கொப்பா ரினியா ருலகா சிரியனருள்
தப்பாம லெய்தியபின் றான்.

திருவரங்கத் தைத்திருநாளை நினைந்து,

தேவியருந் தாமுந் திருத்தேரின் மேலரங்கர்
மேவிவர விக்கிரமன் வீதிகளிற் – சேவைதரும்
அந்தத் துறக்க மனுபவிக்கப் பெற்றிலமே
இந்தத் திருநாளில் யாம்.

என்ற பாசுரம் அருளினார். பின்னர் திருவரங்கம் திரும்பித் துறவு பூண்டார். இவரை எல்லோரும் உடையவரின் அவதாரம் எனவே கருதினார்கள். கோவிந்ததாசரப்பன், பின்னர் பட்டர்பிரான் ஜீயர் என்ற பெயர் பெற்றார். கோயில் கந்தாடை அண்ணன் முதலியோர் இவர் திருவடிகளில் ஆசிரயித்து வாழ்ந்தார்கள். கோயில் கந்தாடை அண்ணன் புதல்வர் கோயில் கந்தாடை நாயன் பெரிய திருமுடியடைவு செய்தார். ஆசார்ய ஹ்ருதய வியாக்கியான இறுதி,

தந்தருள வேணுந் தவத்தோர் தமப்பனாய்
வந்தமுடும்பை மணவாளா – சிந்தையினால்
நீயுரைத்த மாறன் நினைவின் பொருளனைத்தென்
வாயுரைத்து வாழும் வகை.

காஞ்சியில் இருந்த பிரதிவாதி பயங்கரம் மண்ணன் என்பவரை வரவழைத்து அவரைத் தம் சீடராக்கி அவரைக் கொண்டு பிற மத கண்டனம் செய்து வந்தார்.

பின்னர் இவர் மீண்டும் திருக்குருகூர் சென்று அங்கு திவ்வியப் பிரபந்தம் பிரசங்கம் செய்தபோது ஆசாரிய ஹிருத யத்தில் ஒரு வாக்கியத்தின் பொருள் விளங்காமையால் அதில் வல்லவரான திரு நாராயண புரத்து ஆயி என்பவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ள எண்ணி அவ்வூர் நோக்கிச் சென்றார். இவ ருடைய பெருமையை அறிந்து அவர் இவரைத் தரிசிக்க எண்ணி எதிர் நோக்கி வந்து கொண்டிருந்தார். இவரும் அவரைச் சந்தித்து மிகவும் மகிழ்ந்து அளவளாவி அந்நூலின் ரகசியங் களை எல்லாம் முறையே கேட்டறிந்தார்.

திருக்குருகூரில் இவரிடம் பொறாமை கொண்ட சிலர் இவருடைய ஓலைக்கூரை உள்ள மடத்திற்குத் தீ வைக்கவே, இவர் அங்கிருந்து ஆதிசேஷன் வடிவோடு வெளிப்பட்டார். இவர் பெருமையை உணர்ந்த அந்நாட்டு அரசன் தீயோரைத் தண்டிக்க முற்பட்டபோது, இவர் அவர்களை மன்னித்து ஆட்கொண்டார்.

பின்னர் இவர் பல வைணவத் தலங்களில் நடந்த வழிபாடுகளில் திருத்தம் உண்டாக்கினார். மீண்டும் திருவரங்கத்தில் வாழ்ந்தபோது ஒரு சமயம் எறும்பியப்பாவை மடத்தில் அமுது செய்யச் சொன்னார். அவர் யதிகளின் அன்னத்தை உண்ணக் கூடாது என மறுத்து விட்டார். அவர் கனவில் சக்கரவர்த்தித் திருமகனார் தோன்றி நல்லறிவு புகட்டினார்.

ஒருநாள் திருவரங்கத்தில் இவர் உத்தம நம்பியின் கண்ணுக்கும், மற்றொரு சமயம் சடகோபக் கொற்றி என்ற அம்மையின் கண்ணுக்கும், அனந்தாழ்வானாகவே காட்சி அளித்தார்.

இவர் பிள்ளை லோகாசாரியருடைய ரகசியக் கிரந்தங்களுக்கெல்லாம் வியாக்கியானம் செய்துள்ளார். ஈட்டுக்குப் பிரமாணத்திரட்டு செய்தார். கீதைக்குத் தாத்பர்ய தீபம் எழுதினார். தமிழில் மூன்று நூல்கள் செய்தார். மீண்டும் பல தலங்கள் தரிசனம் செய்தார். பின்னர் எறும்பியப்பா செய்த தினசரியையைப் பார்த்து மகிழ்ச்சி தெரிவித்தார். உடல் தளர்ந்த நிலையில் கூட, படுத்தபடியே ஆசாரிய ஹிருதய வியாக்கியானம் எழுதினார். இவர் எழுபத்து மூன்று திரு நட்சத்திரம் உயிர் வாழ்ந்திருந்து பின் திருநாட்டை அலங்கரித்தார்.

இவர் கல்விச் சிறப்புக் காரணமாக மாமுனிகள் என்ற பெரும் சிறப்பைப் பெற்றார். தென்கலை வைணவ ஆசாரியர்களில் முக்கியமானவர் நம்மாழ்வார், இராமானுசர், மணவாள மாமுனிகள் என்னும் மூவர். மூவரும் பிரணவத்துக்கு ஒப்பாவார் என்பதும் முறையே பிரணவத்தில் அடங்கிய அகார உகார மகாரங்களுக்கு ஒப்பாவார் என்பதும் வைணவ சம்பிரதாயம். இவருக்கு அனேக விருதுகள் உள்ளன. பெரிய ஜீயர் என்றாலும், ஜீயர் என்று மட்டும் தனியே சொன்னாலும், இவரையே குறிக்கும். வைணவ சமயத்திற்குப் புத்துயிர் கொடுத்தவர் மணவாள மாமுனிகள். வைணவர் நித்தியானு சந்தானம்

*செய்யும் போது, ஆழ்வார் திருவடிகளே சரணம், ஜீயர் திரு வடிகளே சரணம் என்று சொல்லுகின்ற மரபு, இவருடைய பெருமையை உணர்த்தும்.*

*இவர் வியாக்கியானம் செய்வதில் மிகுந்த திறமை வாய்ந் தவர். வீணாகத் தூஷணம் செய்யமாட்டார். எவ்விடத்தும் சாஸ்திரார்த்தமே விளங்க எழுதுவார்.*

*இவர் பிறந்த தினமாகிய ஐப்பசி மூலத்தைக் குறிப்பிடும் பாடல் மிகவும் அழகான பாடல் (அப்பிள்ளை பாடிய ஓராண் வழி ஆசாரியர்கள் வாழித்திருநாமம், 26):*

செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து
சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருல காரியர் செய்தருள் நற்கலை
தேசு புரிந்திடுநாள்
மந்த மதிப்புவி மானிடர் தங்களை
வானில் உயர்த்திடு நாள்
மாசறு ஞானியர் சேர்எதி ராசர்தம்
வாழ்வு முளைத்திடு நாள்
கந்த மலர்ப் பொழில் சூழ் குருகாதிபன்
கலைகள் விளங்கிடு நாள்
காரமர் மேனி அரங்க நகர்க்கிறை
கண்கள் களித்திடுநாள்
அந்த மில் சீர் மணவாள முனிப்பரன்
அவதாரம் செய்திடுநாள்
அழகு திகழ்ந்திடும் ஐப்பசியில் திரு
மூலமது எனும் நாளே.

*மணவாள மாமுனிகள் வைணவத்துக்குச் செய்த பெருஞ் சேவையைப் பாராட்டிப் பிற்காலத்தார்,*

அடியார்கள் வாழ, அரங்க நகர் வாழ,
சடகோபன் தண்தமிழ்நூல் வாழக் – கடல்சூழ்ந்த
மண்ணுலகம் வாழ மணவாள மாமுனியே
இன்னமொரு நூற்றாண் டிரும்.

*என்ற அரிய பாடலால் இவரைப் போற்றியிருக்கிறார்கள். இவ் அடியார்கள் வாழ என்ற வாழிப்பாட்டு முதல் முதலாகத்*

தோன்றியதென்று தெரிகிறது. தேசிகர் மீது பாடியது இதைப் பார்த்துச் செய்தது போலும். பின்னர் வைணவ ஆசார்யர்கள் இன்னமொரு நூற்றாண்டிரும் என்று பாடிய பல பாடல்கள் அன்று முதல் இன்று வரை உள்ளன. உதாரணமாகக் கந்தாடை மன்னன் பரம்பரை 20ஆம் நூற்றாண்டு 1993 வரை பாடிய பாடல்கள் அனேகம் அச்சிடப்பட்டுள்ளன. மணவாள மாமுனிக்கு வரவரமுனி, ராமானுசன் பொன்னடி, அழகிய மணவாள ஜீயர் என்ற பின்னும் பல பெயர்கள் வழங்கும்.

> ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
> யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜா மாதரம்முநிம்

என்பது இவருக்குரிய வடமொழித் தனியன். இவருடைய சீடர்கள் பல பாடல்களால் இவரைத் துதித்திருக்கிறார்கள்.

வைணவ ஆசாரியர்கள் பலரும் வடமொழி நூல்களே செய்தவர்கள். வடகலையில் வேதாந்த தேசிகரும், தென் கலையில் இவரும் தமிழில் பிரபந்தங்கள் செய்தது சிறப்பு. தேசிகர் வடகலைக்கு மூலபுருஷர் என்பதுபோல இவர் தென்கலைக்குப் பிரதானர். இவர் செய்த நூல்கள் பின்வருவன:

### உபதேச ரத்தின மாலை

இது 71 வெண்பாக்கள் கொண்ட நூல். திருவாய்மொழிப் பிள்ளையிடம் தாம் கற்ற உபதேச மார்க்கத்தைப் பின் வந்தோர் கற்க இங்கு சொல்லுகிறார். ஆழ்வார்கள், அவர்கள் தோன்றிய மாதம் நாள் ஊர் ஆகியவற்றையும், நாதமுனி முதலான ஆசாரியர்களையும் அவர்கள் செய்த வியாக்கியானங்கள் ஆகியவற்றையும், இங்கு இவர் பலவகையாலும் புகழ்ந்து பாடுகின்றார். இதன் பாடல்கள் ஒவ்வொன்றும் முனிகளுடைய பக்திச் சிறப்பை மிக நன்றாக எடுத்துக்காட்டும். இந்நூலால் ஆசாரிய பரம்பரையும் நன்கு விளங்கும். பிள்ளை லோகாசாரியர் செய்த ஸ்ரீ வசன பூஷணத்தை இதனுள் மிகப் பலவான செய்யுட்களில் போற்றி யுரைக்கிறார். சிஷ்யன் என்ற சொல்லைச் சிச்சன் என்று இவர் தமிழ்ப்படுத்தி இருப்பது புதுமையாயுள்ளது:

> ஆசாரியன் சிச்சன் ஆருயிரைப் பேணுமவன்
> தேசாரும் சிச்சன் சீர்வடிவை – ஆசையுடன்
> நோக்குமவ னென்றும் நுண்ணறிவைக் கேட்டுவைத்தும்
> ஆர்க்கு மந்தோர் நிற்கையரி தாம். 65

### திருவாய்மொழி நூற்றந்தாதி

*இங்கு ஆசிரியர் நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழியின் பதிகங்கள் நூறையும் எடுத்து, ஒரு பதிகத்துக்கு ஒரு வெண்பா வீதம் நூறு வெண்பாப் பாடியிருக்கிறார். ஒவ்வொரு பதிகத்தின் முதற்பாட்டின் முதற் சொல்லையும் கடைசிப்பாட்டின் கடைசிச் சொல்லையும் தாம் பாடிய ஒவ்வொரு வெண்பாவுக்கும் முதலும் முடிவுமாக வைத்து நூறு வெண்பாவையும் பாடியுள்ளார். இதனால் திருவாய்மொழி முழுமையும் அந்தாதியாகி அமைந்தது போல இந்த வெண்பாக்களும் அந்தாதியாக அமைந்துள்ளன. இவை திருவாய்மொழி ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் ஒவ்வொரு பாடலாக அச்சிடப்பட்டிருப்பதைக் காணலாம்.*

### ஆர்த்திப் பிரபந்தம்

*இது 60 பாடல்கள் கொண்ட சிறு நூல். பெரும் பகுதி வெண்பாக்களும் சிறுபகுதி விருத்தம் கலித்தாழிசை கலிப்பாக் களையும் கொண்டது. இப்பாடல்கள் முழுமையும் எதிராசரைப் புகழ்வன. சில பாடல்களில் தம் ஆசாரியரான திருவாய் மொழிப் பிள்ளையையும் போற்றியிருக்கிறார். பின்வரும் பாடல்களைக் காண்க:*

**தேசம் திகழும் திருவாய் மொழிப்பிள்ளை**
**மாசில் திருமலையாழ் வார் என்னை – நேசத்தால்**
**எப்படியே எண்ணியுன்பால் சேர்த்தார் எதிராசா**
**அப்படியே நீ செய் தருள். 12**

**திருமலை யாழ்வார் திருவாய் மொழிப்பிள்ளை சீரருளால்**
**தருமதி கொண்டவர் தம்மையுத் தாரக ராக எண்ணி**
**இருமன மே அவர்க் காகஎதி ராசர் எமைக்கடுகப்**
**பரம பதந்தனில் ஏற்றுவர் என்ன பயம்நமக்கே. 21**

*'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்ற தொடரை இந்நூல் 15 ஆம் பாடல் முதல் அடியாக வைத்துள்ளார். மண வாளமாமுனி பாடல்கள் செம்பாகமான தெளிந்த நடை உடையவை.*

*இந்த மூன்று நூல்களுக்கும் எடுத்துக்காட்டாகப் பின்வரும் மூன்று பாடல்களையும் காணலாம்.*

மங்களா சாசனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப் – பொங்கும்
பரிவாலே வில்லி புத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வார் என்னும் பெயர்.

சொன்னாவில் வாழ்புலவீர் சோறுகூ றைக்காக
மன்னாத மானிடரை வாழ்த்துதலால் – என்னாகும்
என்னுடனே மாதவனை ஏத்து மெனும்குருகூர்
மன்னருளால் மாறும்சன் மம்.

நந்தா நரகத் தழுந்தாமை வேண்டிடில் நானிலத்தீர்
எந்தாதை யான எதிராசனை நண்ணும் என்றுமவன்
அந்தாதி தன்னை அனுசந்தி யும்அவன் தொண்ட ருடன்
சிந்தாகு லம்கெடச் சேர்ந்திரும் முத்திபின் சித்திக்குமே.

*கால உணர்ச்சி இல்லாத காரணத்தால், மணவாள மாமுனியும் சிவாக்கிர யோகியும் சமகாலத்தவரென்றும் இருவரும் சரபோஜி மகாராஜாவின் சமூகத்தில் தம் மதமே மதம் என்று பதினேழு நாள் வாதம் செய்தனர் என்றும் சொல்லுவதுண்டு. இது பொருந் தாத கூற்று. மணவாள மாமுனி காலம் குருபரம்பரையை யொட்டி மேலே சொல்லப்பட்டது. 1370-1443; சிவாக்கிர யோகிகள் காலம் கி.பி. 1564; சரபோஜிகாலம் 1798 - 1833; பொருந்தாமை வெளிப்படை.*

இப்புவியி லரங்கேசர்க் கீடளித்தான் வாழியே
  எழில் திருவாய் மொழிப்பிள்ளை யிணையடியோன் வாழியே
ஐப்பசியில் திருமூலத் தவதரித்தான் வாழியே
  அரவரசப் பெருஞ்சோதி அனந்தனென்றும் வாழியே
எப்புவியும் ஸ்ரீசைல மேத்தவந்தோன் வாழியே
  ஏராரும் எதிராச ரெனவுதித்தான் வாழியே
முப்புரிநூல் மணிவடமுக் கோல்தரித்தான் வாழியே
  மூதரிய மணவாள மாமுனிவன் வாழியே.



## மணவாள மாமுனி சீடர்கள்

மணவாள மாமுனிகளுடைய சீடர் எண்மர் அட்டதிக் கஜங்கள் எனப் பெறுவர். அவர்கள் எறும்பியப்பா, கந்தாடை யண்ணன், பிரதிவாதிபயங்கர மண்ணன், பரவஸ்து பட்டர் பிரான்ஜீயர், வானமாமலைஜீயர், திருவேங்கடஜீயர், அப்பிள்ளை, அப்புள்ளார்; இவர்களுள் சிலர் மணவாள மாமுனிகளைப் போற்றிப் பிரபந்தம் செய்திருக்கின்றார்கள். இவர்களையன்றி, மணவாள மாமுனி திருவடியில் ஆசிரயித்த மற்றும் ஒன்பது பேர் நவரத்னங்கள் எனப்படுவர். அவர்களாவார்: சேனை முத லியாண்டான் நாயனார், சடகோபதாசரான நாலூர் சிற்றாத் தான், கந்தாடை போரேற்றி நாயன், ஏட்டூர் சிங்கராசாரியர், கந்தாடை அண்ணப்பன், கந்தாடை திருக்கோபுரத்து நாயனார், கந்தாடை நாராணப்பை, கந்தாடை தோழப் பரப்பை, கந்தாடை அமைத்து வாழ்வித்த பெருமாள் ஆகியோர்.

### எறும்பியப்பா

இவர் மணவாள மாமுனி சீடர்களில் ஒருவர். பிறந்த ஊர் எறும்பி. தந்தையார் பெரிய சரண்யாசாரியர். இவர் அட்டதிக் கஜங்களில் ஒருவர். தம் குருவினுடைய சரித்திரத்தை **வரவர முனிசரிதம்** என்ற நூலாகப் பாடினார். வேறு இவர் செய்த நூல்கள் தினசர்யைகள், சுப்ரபாதம், வேறு ஆர்த்திப் பிரபந்தம் முதலானவை. அப்பா என்றும் தேவராசர் என்றும் இவருக்குப் பெயர்கள் வழங்கும். இவர் மணவாள மாமுனி காலட்சேபம் கேட்டு நமஸ்காரம் செய்யாமல் போவாராம். இப்படி ஒருநாள் போனவரது வீட்டில் பூசை செய்யும் மூர்த்தி அறை திறக்க முடியவில்லை. நீ மாமுனிக்கு வணங்காமையால் இப்படி என்றொரு குரல் எழுந்தது. பின்னர் வந்து வணங்கி மாமுனி யைக் குருவாகக் கொண்டார்.

### கோயில் கந்தாடையண்ணன்

இவர் மணவாள மாமுனிகள் மீது கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற ஒரு சிறு நூல் பாடினார். இது அந்தாதியாக 13 கட்டளைக் கலித்துறைகள் கொண்டது. அவர் பூமியில் அவதரித்துச் செய்த சமயத் தொண்டுகளைக் கூறி, அவர் தாளைப் பற்றிப் பிறப்பறுத்தேன் என்று பாடுகிறார்.

எக்குணத்தோர் எக்குலத்தோர் எவ் வியல்போ ரேனுமவர்
அக்கணத்தே நம்மிறைவர் ஆவரே – மிக்க புகழ்க்
காரார் புகழ்க்கோயிற் கந்தாடை யண்ணனெனும்
பேராளனை அடைந்த பேர்.

என்பது இவரைப் புகழ்கின்ற ஒரு தனியன். பரமபதநாதன் தொடங்கி மணவாள மாமுனி வரையுள்ள ஆசாரிய பரம்பரையைப் பெரிய திருமுடியடைவு என்ற பெயரால் ஓர் உரை நூலாக இவர் எழுதி வைத்தார். பல வரலாற்றுச் செய்திகளுக்கு இது ஆதார நூலாக உள்ளது.

### பிரதிவாதி பயங்கர மண்ணன்

இவர் நயினாராசாரியரிடம் ஸ்ரீ பாஷ்யம் சேவித்தவர். காஞ்சியில் புகழோடு விளங்கினார். மணவாள மாமுனிகள் இவருக்கு முப்பத்தீராயிரப்படி அருளிச் செய்து பஞ்ச சம்ஸ்காரமும் செய்தார். அட்டதிக்கஜங்களில் ஒருவர். இவர் பத்துக் கட்டளைக் கலித் துறைகளில் மணவாள மாமுனிகள் துதியாக **அமலனாதி பிரான்** என்னும் பாதாதி கேசமாலை பாடினார்.

போதச் சிவந்து பரிமளம் வீசிப் புதுக் கணித்து
சீதக் கமலத்தை நீரற வோட்டிச் சிறந்தடியேன்
ஏதத்தை மாற்றும் மணவாள யோகி இனிமைதரும்
பாதக் கமலங்கள் கண்டேன் எனக்குப் பயமில்லையே.

என்ற முதற் பாடல் பாதத்தின் புகழ் கூறுகிறது.

### அப்புள்ளார்

இவர் மணவாள மாமுனியைப் புகழ்ந்து **சம்பிரதாய சந்திரிகை** என்ற பதினொரு பாடல் பாடினார். இதில் முதல் ஒன்பது பாடல்களும் எண்சீர் விருத்தம். மற்ற இரண்டு வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும். இப்பாடல்களில் இவர் மணவாள மாமுனி அரங்கநாதன் உத்தரவுப்படி பூவுலகில் பிறந்தது முதல் பரமபதம் சென்றது வரையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் இன்ன ஆண்டு மாதம் தேதி நாள் நிகழ்ந்தது என்று குறிப்பிட்டுப் பாடுகிறார்.

சேற்றுக் கமல வயல்சூழ் அரங்கர்தம் சீர்தழைப்பப்
போற்றித் தொழும் நல்ல அந்தணர் வாழஇப் பூதலத்தே
மாற்றற்ற செம்பொன் மணவாள மாமுனி வந்திலனேல்
ஆற்றிற் கரைத்த புளியல்ல வோதமிழா ரணமே.

என்பது நூலின் இறுதிப் பாடல்.

### அப்பிள்ளை

*அட்டதிக்கஜங்களில் ஒருவர். இவர் ஆழ்வார் ஆசாரியர் வாழித் திருநாமமும் திருஅந்தாதிகள் உரையும் எழுதியவர். இவற்றுள் ஆழ்வார் வாழித் திருநாமம் பன்னிரு ஆழ்வாருக்கும் பன்னிரு பாடலும் பொதுவான வாழிப்பாடல் ஒன்றும் பயன் இரு பாடல்களும் உடையது. வாழிப்பாடலில் ஆழ்வார் திரு நட்சத்திரம், ஊர், பாடல்கள் முதலியவற்றை விளக்கமாகக் கூறியிருக்கிறார். ஓராண்வழி ஆசாரியர் திருநாமம் என்பது 26 பாடல்கள் உடையது. பெரிய பெருமாள் தொடங்கித் தம் ஆசாரியரான மணவாள மாமுனி வரையில் 25 பாட்டு; இறுதிப் பாட்டு திருநாள் பாட்டு (செந்தமிழ் வேதியர் என்று முன்னமே குறிப்பிட்ட பாட்டு). பெருமாள் பிராட்டி சேனை முதலிகள் நம்மாழ்வார் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனி வரையில் சொல்வது மரபு. இவர் எம்பெருமானாருக்கும் நம்பிள்ளைக்கும் இவ்விரண்டு பாடல் வீதம் பாடியிருக்கிறார். வாழித்திருநாமங்கள் சிலவற்றை முன்னமே பார்த்தோம். இவர் இராமானுச நூற்றந்தாதிக்கு உரை செய்திருக்கிறார். அவ்வுரை பிள்ளைலோகஞ்சீயர் செய்த விரிவான வியாக்கியானத்தோடு 1899இல் அச்சிடப்பட்டது.*

### பரவாதி கேசரியார்

*இவர் ஸ்ரீ சைல வைபவம் என்ற பெயரால் 16 பாடல்களில் மணவாள மாமுனி புகழைப் பாடியிருக்கிறார். இவற்றுள் 11 பாடல்கள் கொச்சகக் கலிப்பா, 4 வெண்பா, ஒன்று கட்டளைக் கலித்துறை.*

தென் கலையாந் தமிழ் வேதச்சீர் சைலத் தனியனெனும்
நன்கலையை யுள் கசிந்து நவிற்று பெருந்தகைமாந்தர்
மின்கலையும் புரிநூலு மே னோக்கு புண்டரமும்
தென்கலையும் வடகலையுந் திகழ்நாவ ராகுவரே.

### பட்டர்பிர்ரான் ஜீயர்

*மணவாள மாமுனிகளுடைய சீடர். திருமலைத் திருப்பதி யில் பிறந்தவர். கோவிந்தராசப்பன் என்பது இவருடைய இயற் பெயர். இவருக்குப் பரவஸ்து அழகிய மணவாள ஜீயர் முதலான மாணாக்கர் பலர் இருந்தனர். இவர் மரபில் வந்து பல நூல் செய்தவரே பிள்ளைலோகஞ்சீயர். இவர் தனியன் உரை எழுதி யவர். நெஞ்சுக்கிருள்கடி தீபம் என்ற தனியன் உரையில் பஞ்ச*

லட்சணம், நன்னூல் என்பது ஒரு சாஸ்திரம் என்றும் குறிப் பிடுகிறார். இவரே இராமானுசார்ய திவ்ய சரிதையும் யதீந்திரப் பிரணவ ப்ரபாவமும் எழுதியவர்; 1525-50. அழகிய மணவாளர் இவருடைய பிள்ளையுமாம். இவர் அட்டதிக் கஜங்களில் ஒருவர். இவர் செய்த நூல் அந்திமோபாய நிட்டை.

### வானமாமலை ஜீயர்

இவர் நூல் எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. இவர் மணவாள மாமுனிகளிடத்துப் பிரியாது ஆட்செய்திருந்தவர். வானமாமலையின் முதல் பட்டம் வகித்தவர். இவர் சீடர் ஆத் தான் இராமானுசம் பிள்ளை.

### திருநாராயணபுரத்து ஆயி

திருத்தாழ்வரை தாசர் முதலான பல பெயர்கள் இவருக்கு உள்ளன. மணவாள மாமுனிகள் காலத்தவர். கிடாம்பிதிருமலை ஐயங்காரின் சீடர். ஐயங்கார் வேதாந்த தேசிகரின் சீடரான பிரம்ம ஸ்வதந்திர ஜீயரிர் சீடராவார். ஸ்ரீ வசன புஷணம், ஆசா ரிய ஷ்றுதயம், திருப்பாவை, திருமாலை முதலியவற்றிற்கு வியாக்கியானம் செய்தார். இவர் மணவாள மாமுனிக்கு ஆசாரிய ஷ்றுதயத்திலுள்ள சந்தேகங்களைப் போக்கிய செய்தி முன்னமே கூறப்பட்டது. இவர் மணவாள மாமுனி மீது பாடிய பாடல்:

> பூதூரில் வந்துதித்த புண்ணியனோ பூக்கமழும்
> தாதார் மகிழ்மார்பின் தானிவனோ – தூதூர
> வந்தநெடு மாலோ மணவாள மாமுனிவன்
> எந்தையவர் மூவரினும் யார்.

### ஏட்டூர் சிங்கராசாரியர்

திருமலை நம்பி வம்சம். குமார தாதாசாரியர் முதலான பெயர்கள் இவருக்கு உள்ளன. இவர் ஜீயர் சந்நிதியில் ரகசிய கிரந்தங்கள் உபதேசம் பெற்றார். மணவாள மாமுனி உத்தரவுப் படி இவர் இராமானுச நூற்றந்தாதிக்கு வியாக்கியானம் செய் தருளினார் என்று சொல்லுவார்.

இவர்கள் அனைவரும் மணவாள மாமுனியின் சம காலத் தவர். எனவே பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இடைப் பகுதியிலும் வாழ்ந்தோராவர்

## ஆதிவண் சடகோபர்

சடகோபாசாரியர் என்னவும் பெறுவர். அகோபிலமடத்து ஜீயர் கேசவாசாரியர் என்பவர் இவருக்கு ஆசாரியர். இவர் திருநகரிலே நம்மாழ்வார் சந்நிதியில் கனவில் அனுமான் முத் திரையைப் பெற்று அங்குத் திருப்பணிகள் செய்தார். பின் திரு நாராயணபுரம் வந்து மணவாள மாமுனிகளுக்குத் தனிக் கோயில் முதலியன கட்டி வைத்து அப்பால் அகோபிலம் சென்றார். அங்கு ஒரு நரசிம்ம விக்கிரகத்தை ஆராதனமாகப் பெற்றார். சிறந்த போதகாசாரியர். இவர் துறவி. இம்மடத்தார் பெரிய வாச்சான் பிள்ளையின் சீடர் என்பது சம்பிரதாயம்.

## தோழப்பர்

15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு வடகலை வைணவர். மணற்பாக்கம் வேங்கடாசாரியர் என்ற இயற்பெயர். அகோபில மடத்து ஆதிவண் சடகோப சுவாமிகளின் மாணாக்கர். வட மொழியில் பல நூல் செய்தார்.



## அத்தியாயம் 10

# சைன இலக்கிய ஆசிரியர்

### முன்னுரை

நூற்றாண்டுகள் தோறும் தமிழ் இலக்கியம் செய்த ஆசிரியர் வரிசையில் சிறப்புடைய சைன சமயத்தார் பலர் பெயரும் காணப்படுகிறது. சங்க காலத்தின் பின் இவர்கள் சிறப்பான இலக்கணம், நீதிநூல், பெருங்காப்பியம் என்பனவாகப் பல நூல்கள் செய்து வந்திருக்கிறார்கள். இந்த நெறியில் பார்க்கும்போது, 14 ஆம் நூற்றாண்டிலும் இச்சமயத்தார் செய்த பெருநூல்களும் சமய நூல்களும் பல காண்கிறோம்.

பதினைந்தாம் நூற்றாண்டுக்கு வரும்போது, சிறப்புடைய நூல்கள் குறைந்து போயிருப்பதையும் காண்கிறோம். வரவர, சைனசமயம் ஒடுங்கும் நிலைக்கு வந்துவிட்டது. சைவமும் வைணவமும் தலையெடுத்து ஓங்க ஆரம்பித்தவுடன் சைன சமயம் ஒடுங்க நேர்ந்தது என்று தெரிகிறது. சம்பந்தரும் அப்பரும் ஏழாம் நூற்றாண்டில், தங்கள் அருள் வலிமையாலும், கனிவு மிக்க திருப்பாடல்களாலும், தமிழ் நாடெங்குமுள்ள சிவ தலங்கள் தோறும் சென்று அருட்பாசுரம் பாடிய பக்திப்பெருக்கினாலும், சைவசமயத்தில் பேரெழுச்சியைத் தோற்றுவித்தார்கள். பாண்டிய பல்லவ அரசுகளைச் சைவமாக்கினார்கள். அடுத்துத் தலையெடுத்த சோழர் பேரரசானது, ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி, முழுமையும் சைவமாக இருந்தது. அவ்வரசு ஓங்கியிருந்த நானூறு ஆண்டுகளில் எல்லாத் துறைகளிலும் சைவம் ஓங்கியிருந்தது; ஆலயங்கள் பெருகின, இலக்கியங்கள் பெருகின. காலக்கிரமத்தில் சைனம் வீழ்ச்சியடைந்ததற்கு இதுவே முக்கிய காரணமாகும்.

நாம் கருதுகின்ற இந்த நூற்றாண்டில் எழுந்த முக்கியமான சைனநூல் ஸ்ரீ புராணமாகும். இது சைனர்களுக்கு மிகப் புனிதமான ஒரு சமயநூல் ஆகும். இது மணிப்பிரவாள நடையில்

எழுதப்பட்டிருக்கிறது. இதே காலத்தில் வைணவ ஆசாரியர்கள் மிகப் பலவான சமய நூல்கள் மணிப்பிரவாள நடையில் எழுதி இருக்கிறார்கள்; இந்த நிலையில் சைனர்கள் இந்த நடையைப் பின்பற்றிச் சமய நூல்கள் பல எழுதியிருக்கிறார்கள்.

அடுத்து, உதயணன் கதையைக் கூறுகின்ற உதயண குமார காவியம் குறிப்பிடத்தகுந்தது. சைன சமயத்தில் துறவு பூண்டிருந்த பெண்மணிகள் கந்தியார் எனப்படுவர். இவர்களில் அனேகர் நிரம்பிய இலக்கிய அறிவு படைத்தவர்கள். பொழுது போக்கிற் காக இவர்கள் நூல்கள் பாடல்கள் பல செய்ததுண்டு. இவற்றுள் ஒன்றாகிய இக்காவியத்தைத்தான் நாம் இப்பொழுது அறிகி றோம். பின்னும் பல இருந்திருக்கக்கூடும்.

இந்த நூற்றாண்டில் திருக்கலம்பகமும் ஆதிநாதர் பிள்ளைத் தமிழும் பிரபந்த வகையில் எழுந்தன. திருக்கலம்பகமானது சிறப்பான உரைகளும் கொண்டிருக்கிறது.

இந்த நூற்றாண்டோடு சைன இலக்கிய முயற்சிகள் ஓரளவு முடிவடைகின்றன. 16ம் நூற்றாண்டில் சூடாமணி நிகண்டு எழுந்தது. அதனோடு சைனத் தமிழ் இலக்கியங்கள் முடிவடைந்து விட்டன.

## உதயண குமார காவியம்

ஐயரவர்களுடைய அரிய நூல் வெளியீடுகளில் இப்பெயர் கொண்ட சிறு நூலும் ஒன்று. இதன் பெயர் கொண்டே இது பெருங்கதை என்ற சிறப்பான பெருநூலின் கதாநாயகனான உதயணன் வரலாற்றைக் கூறுவதென்று கருதலாம். 369 விருத்தப் பாக்களுடையது. பெருங்கதை போலவே உஞ்சை, இலாவாணம், மகதம், வத்தவம், நரவாகனம், துறவு என்ற ஆறு காண்டப் பாகுபாடு உடையது. பெருங்கதையின் முற்பகுதியும் பிற்பகுதியும் கிடைக்காமையால் உதயண சரித்திரத்தை அறிவதற்கு இச்சிறு நூல் பேருதவியாயிருந்ததென்று ஐயரவர்கள் குறித்திருக்கிறார்கள். இச்சிறு நூலைப்பற்றி வேறெவ்விடத்திலும் எக்குறிப்பும் இலது.

இந்நூல் சிறப்பான நூல் அன்று. வழுக்கள் மிகுந்து உள்ளன. சொல் நயம் தொடை நயம் பொருள் நயம் சிறிதும் காணப்பட வில்லை. எனினும், தமிழ்நாட்டின் இலக்கியப் போக்கை உணர்வதற்கு இன்று இதுவும் ஒரு கருவியாயிருக்கிற தென்பது உண்மை. எவ்வாறு என்பதை இனிக் காண்போம்.

இந் நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. எனினும், ஐயரவர்கள் சிறந்த சைன சமயப் பண்டிதராயிருந்த வீடூர் அப்பாசாமி சாஸ்திரியாருடன் ஆராய்ந்து இது ஒரு கந்தியார் நூலாயிருக்கலாமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பண்டைய நூல்கள் பலவற்றில் இடைச் செருகல்கள் உள்ளன. தேவாரத்திலும் பெரியபுராணத்திலும் வெள்ளி பாடல் என்ற இடைச்செருகற் பாடல் இருப்பது சைவர்களுக்குத் தெரியும். கம்பராமயாணத்தில் இடைச்செருகல் செய்தோர் பெயர் தெரியாது. சைன நூலாகிய சீவகசிந்தாமணியில் கந்தியார் பாடல்கள் பாடி இடைச் செருகலாய்ச் சேர்த்தார் என்பது இலக்கிய வழக்கு. கந்தியார் என்போர் சைன சமயத்தில் துறவு பூண்ட பெண்மணிகள். இவர்கள் துறவு பூண்டு கல்வி கேள்வி களிலும், சமய நூலறிவிலும் வல்லவர்கள். சென்ற தலைமுறை யில் நம்மிடையே அந்தணர் மரபில் இளமையில் கணவனை இழந்த பெண்கள், கைம்மைக் கோலம் பூண்டு வடமொழி, தென்மொழிகளில் வல்லவர்களாகி, இறை வழிபாட்டிலும் பாடல்படுவதிலும் பொழுதுபோக்கி வந்திருக்கிறார்கள். கீர்த்தனை நாமாவளி பக்தர் சரித்திரம் முதலியனவாக இவர்கள் பாமரர் மொழியில் பாடிய நூல்கள் அளவில்லாதன. இவர் களைப் போலவே பழங்காலத்தில் சைன சமயத்தில் வாழ்ந்த கந்தியார் என்போரும் ஒருகால் இவ்வாறு கைம்மைக் கோல முடையார் போலும். கந்தியென்பது ஒருவர் பெயரன்று. துறவு நிலையில் நின்று பெண்டிரைக் குறிக்கும் பொதுச்சொல்.

சிந்தாமணி இடைச் செருகற் பாட்டுக்கள் **கந்தி பாட்டு** என்றே வழங்கும். பரிபாடலில் கந்தியார் ஒருவர் பல பாடல் களை இடை மடுத்தார் என்றும், அப்பிழைகளை எல்லாம் நீக்கிப் பரிமேலழகர் உரை எழுதினார் என்றும், பரிபாடல் உரைச் சிறப்புப்பாயிரம் கூறும்:

**மிகை படு பொருளை நகைபடு புன்சொலில்**
**தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்.**

என்பது காண்க. எனவே, கந்தி பாடல் புன்சொல், மிகையான பொருள், அது பிழைப்புடையது என்பது முந்தையோர் கருத் தாகிறது.

இத்தகைய கந்தியார் காலந்தோறும் இருந்திருக்கிறார்கள். பல நூல்கள் அவர்கள் செய்திருக்கக் கூடும். உதயண குமார

காவியம் அத்தகையதொரு நூலென்று நாம் கருதலாம் மிகவும் விரிவான பெருங்கதையை இவர் சுருக்கிச் சிறு நூலாகப் பாடி யிருக்கிறார். பாடியதன் நோக்கம், தன்மையொத்தோர், கதையை நினைவில் வைத்திருக்க உதவுவதொன்றே.

பெருங்கதை காலத்தால் மிகவும் முற்பட்டது. அதைச் சுருக்கி இக்கந்தியார் 15ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இச் சிறு நூலை இயற்றினார் என்று நாம் கருதலாம். 15ஆம் நூற் றாண்டின் பின் சைன இலக்கியங்கள் தோன்றவில்லை. 14 ஆம் நூற்றாண்டில்தான் புராணம் பிரபந்தம் இலக்கணம் உரை என்ற பகுதிகளில் சைன இலக்கியங்கள் பலவாக எழுந்துள்ளன. உதயணகுமார காவியமும் இக்காலத்தை அடுத்துத் தோன்றிய தெனக் கொள்ளுதல் பொருந்துவதே.

பெயர்தான் இதற்குக் காவியமேயன்றி, காவிய இயல்புகள் ஒரு சிறிதும் இதனிடத்து இல்லை. ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்று என்னத் தகுந்த நூல் இது அன்று.

இலக்கியத் துறையில் மற்றோரியல்பையும் இச்சிறு நூல் நமக்கு உணர்த்துகிறது. பெரு நூல்களின் கதைப்போக்கை மனத்தில் இருத்துவதற்கும் விரைந்து படித்து முடிப்பதற்கும் சுருக்க நூல்கள் அக்காலத்தே எழலாயின. (நூற் சுருக்கங்கள் 20ஆம் நூற்றாண்டில் தான் புதிதாய் எழுகின்றன என்பதில்லை). ஏறக்குறைய இதே காலத்தில் சீவக சிந்தாமணிக்கு ஒரு சுருக் கத்தைப் பகழிக் கூத்தர் பாடினார். மூவாயிரத்துக்கு மேற் பட்ட பாடல் கொண்ட மூல நூலை இது 318 பாடல்களால் சுருக் கியுரைக்கிறது. கந்தியார் நூலும் பெருங்கதைக்கு 369 பாடல் களால் ஆன சுருக்கம். பதினாறாம் நூற்றாண்டில் சம்பந்த சர ணாலய முனிவர் என்பவர் பத்தாயிரம் பாடல் கொண்ட கந்த புராணத்தை ஓராயிரம் பாடலில் சுருக்கிப் பாடினார். பத்திலொரு பங்காகப் பெருநூலைச் சுருக்குவது ஒரு மரபு போலும்.

கந்தியார் பலர் பலவேறு காலத்தில் இது போன்ற சிறு நூல்கள் செய்திருத்தலும் கூடும். இது பற்றி நமக்கு விளக்கம் எதுவும் கிடைக்கவில்லை.

உதயண குமார காவியமானது பெருங்கதையை அடி யொற்றியே கதை சொல்கிறது. முடிவில் சைன சம்பிரதாயப் படி கதாபாத்திரங்கள் துறவு பூண்டு இருவினை எரித்து சித்திகள் பெற்றுச் சிவகதியடைந்தனர் என்று முடிக்கிறது.

## ஸ்ரீ புராணம்

இடைக் காலத்தில் எழுந்த சைன நூல்கள் பலவற்றுள்ளும் ஸ்ரீ புராணம் மிகவும் சிறப்பானது. இந்நூற் பெயர் புராணம் என்றும், ஸ்ரீ என்பது மரியாதையைக் குறிக்க திரு என்பது போல, முன்னால் சேர்க்கப்பட்ட ஓர் அடை என்றும் சொல்வதுண்டு. இந்நூலை திரு வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் மிக்க அழகான முறையில் சைன சமயத் தத்துவங்கள் யாவும் விளங்கத் தெரிவிக்கும்படியாக சென்னை சர்வகலாசாலை வெளியீடாக 1943 இல் பதிப்பித்தார்.

கிறிஸ்து அப்தத்தின் ஆரம்ப காலத்தில் தமிழர் வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் இலக்கியத்தையும் சைன சமயம் பெரிதும் பாதித்து ஒழுங்கு படுத்தியிருக்கிறது என்பது பலரும் ஒப்பும் கொள்ளும் உண்மை. இன்றும் கூட, தமிழ் நூலாராய்ச்சி செய்வோர் சைன சமயக் கருத்துக்களைப் பயின்றிருப்பது மிக்க பயனுடையது.

சைனருடைய வேதம் பரமாகமம் என்பது நான்கு பிரிவுகளையுடையது. முதல் பிரிவு பிரதமானுயோகம். இது 250 ஆயிரங்கோடி சுலோகங்களையுடைய தென்பர். இதுவே மகா புராணம். கவி பரமேசுவரர் என்பவரும் அவர் சீடர் குணபத்திரர் என்பவரும் மகாபுராண சங்கிரகம் பாடி முடித்தார்கள். இது விருஷபதேவர் சரித்திரமும் கூறுவது. மகாபுராணத்தில் சொல்லப்பட்ட நாயகர் அறுபத்து மூவர் என்று சொல்வதும் உண்டு. இந்தச் சங்கிரகம் இரண்டு பிரிவாக உள்ளது. முதல் பிரிவு பூர்வ புராணம்: விருஷபர் பரத சக்கரவர்த்தி சரிதம் கொண்டது. இரண்டாம் பிரிவு உத்தரபுராணம்: இது ஏனைய அறுபத்தொருவர் சரித்திரமும் கொண்டது. இது செய்த காலம் 9ஆம் நூற்றாண்டு என்பர்.

நாம் இங்கு கருதும் ஸ்ரீபுராணமானது, மகா புராண சங்கிரகத்தின் மொழிபெயர்ப்பாகும். இதைச் செய்த ஆசிரியர் பெயர் எங்கும் காணப்படவில்லை. வேறு வகையால் தெரியவுமில்லை. எனினும், இவர் தென்னார்க்காடு ஜில்லாவிலுள்ள பெருமண்டூரினர் என்றும், கல்வியில் விருப்பங் கொண்டு மைசூர்

ஜில்லாவிலுள்ள சிரவண பெள்குளம் (சமணரது வெள்ளைக் குளம்) சென்று அங்கிருந்த பேராசிரியரொருவரைக் கண்டு குறையிரந்தபோது, அவர் ஊரார் அனைவரும் நீரெடுக்கும் ஒரு குளக்கரைச் சுவரில் எழுத்துக்களை எழுதி அவற்றை எழுதிப் படிக்கும்படி இவருக்குப் பணிக்க, ஊரார் ஏளனத்தைக் கருதாமல் இவர் கருமமே கண்ணாயிருந்து ஆர்வத்தோடு இதைக் கற்றதை ஆசிரியர் கண்ணுற்று மகிழ்ந்து, இவருக்கு நூல்களைக் கற்பித்தார் என்றும் வரலாறு உண்டு; இம்மாணாக்கரே ஸ்ரீ புராண ஆசிரியர் என்பர்.

ஸ்ரீ புராண ஆசிரியர் வடமொழிப் புலமை மிக்கவர்; நன்கு கவிபாடுகிறார். புராணத்தில் துதிரூபமாக அவர் செய்துள்ள செய்யுட்கள் இதை நன்கு விளக்கும். இதனோடு அவர் தமிழ்ப் புலமையும் நிரம்ப உடையவர்.

ஸ்ரீ புராணமானது, மகாபுராண சங்கிரகத்தின் நேரான தமிழ்மொழி பெயர்ப்பாயினும் கூட, அதில் கூறப்பட்டுள்ள வருணனைகள் முழுமையும் இதில் விடப்பட்டுள்ளன. இவ்வாசிரியர் உரைநடை நூலாகச் செய்துள்ளமையால், கவிதைக்கு மட்டுமே பொருந்தக்கூடிய வருணனைகள் இங்கு பொருந்துவனவல்ல என்று விலக்கினார் போலும். அன்றியும், சைன தருமக் கதைகள் மட்டும் சொல்லுகின்ற இடத்திலே வருணனைகள் மிகை என்றும் விலக்கினார் போலும்.

ஸ்ரீ புராணம் மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டுள்ளது. மணிப் பிரவாளமானது, முத்தும் பவளமும் கலந்து கோத்தாற் போல, வடமொழிச் சொற்களும் தென்மொழிச் சொற்களும் விரவி வேறுபாடு தோன்றாது அமைந்த நடை. இவ்வாறு வடசொல் விரவிவரலாம் என்பதற்கு வீரசோழிய இலக்கணமே ஆதாரமாகும். இவ்வகையான புதுநடை தமிழில் 13-16 நூற்றாண்டுகளுக்கிடையே பெரிதும் வழக்கத்தில் இருந்தது. சமய நூல்களே இந்த நடையில் எழுதப் பெற்றிருந்தன. அவற்றுள்ளும், சைன சமய நூல்களும் வைணவ சமய நூல்களுமே மிகுதி. சைவத்தில் சிவாக்கிரயோகி ஒருவர் மட்டுமே (16ஆம் நூற்றாண்டு) மணிப்பிரவாளத்தில் உரை எழுதினார்.

இப்புராணமானது மூலம் போலவே பூர்வம் உத்தரம் என்ற இருபகுதிகளையுடையது. பூர்வ புராணம் என்ற பகுதி

ஆதிநாதர் புராணம். பிற்பகுதியாகிய உத்தர புராணம் என்பது, அஜித சுவாமி தொடங்கி ஸ்ரீ வர்த்தமானர் வரையிலுள்ள 23 தீர்த் தங்கரர்களுடைய வரலாற்றைக் கூறுவது. இங்கு, இராமாயண பாரத பாகவதக் கதைகள் பல்வேறு பாடுகளுடன் சொல்லப் பட்டுள்ளன. புராணக் கதைகளில் சிபி, பரசுராமன், மகாபலி முதலியோர் வரலாறுகள் உள்ளன. மல்லிநாதர் புராணத்திலும் முனிசுவ்ரதர் புராணத்திலும் காட்டப்பட்டுள்ள பாடல்கள் சில இவரே செய்தனவாயும் நாம் கருதக் கூடும்.

சைன நூல்களில் அளவில் பெரிய மணிப்பிரவாள நூல் ஸ்ரீ புராணமே என்பது முன்னம் குறிப்பிட்டோம். இதனுள் காணப்படும் கதைகளையே சிந்தாமணி, சூளாமணி ஆகிய பண்டைக் காப்பியங்களும், இந் நூலுக்குச் சில ஆண்டுகளே முந்தியது என்று கருதத் தக்க மேருமந்தர புராணமும் விரித்துக் கூறுகின்றன. மேலும், இன்று புறத்திரட்டால் மட்டும் அறியப் படுவதாய் இறந்து போயிற்றென்றே கருத வேண்டியுள்ள சாந்தி புராணமும், இந்நூல் கூறுகிற 16 ஆவது தீர்த்தங்கர ராகிய சாந்தி நாத சுவாமி புராணத்தின் விரிவென்றே நாம் கருதக்கூடும். மேலும், சைன சமயத்தார் செய்த ஏலாதி அறநெறிச்சாரம் போன்ற பண்டைய நூல்கள் பலவற்றுக்கு இந்நூலே தெளிவாக உரை காண உதவுகின்றது. பின்னும் சைன சமயத்தாருக்கு இந்நூல் ஒரு கற்பகம் போல வேண்டிய தருமங்களையெல்லாம் புகட்டி உதவுகின்றது. இது பெரிய நூலாதலின், நன்மை தீமைகளுக்கு இந்நூல் ஏட்டில் கயிறு சாத்திப் பார்க்கும் வழக்கமும் சைனர்களிடையே இன்றும் உண்டு.

16ஆம் நூற்றாண்டில் மண்டல புருடர் நிகண்டு சூடாமணி செய்தார். இவரே,

> திருந்திய கமலவூர்தி திருப்புகழ்ப் புராணம் செய்தோன்
> பரந்தசீர்க் குணபத் ரன்தாள் பணிந்த மண்டலவன்தானே.

என்று நிகண்டில் சிறப்புப் பாயிரத்துள் குறிப்பிடப்பட்டுள்ளார். இத் திருப்புகழ்ப் புராணமே 'ஸ்ரீ புராணம்' என்பது சில ஆராய்ச்சியாளர் கருத்து. இது பொருந்தாது. இதை விளக்கப் புராணப் பதிப்பாசிரியர் பல காரணங்களை நன்கு கூறியிருப் பதை யாரும் ஒப்புக்கொள்ளவேண்டும். மண்டல புருடர்

நிகண்டின் தொகுதிதோறும் தொடக்கத்தில் தம் ஆசிரியராகிய குணபத்திரரைக் குறிப்பிடுகிறார். புராண ஆசிரியர் எங்குமே தம் குருவைக் குறிப்பிடவில்லை. ஆசிரியர் வணக்கம், நிகண்டை விடப் புராணத்திலேயே பொருத்தம் அதிகம். இனி ஸ்ரீபுராணத்தில் ஆசிரியர் ஏழு நகரங்களையும் ரத்னப் பிரபை முதலாகக் கூறுகிறார். இம்முறையே சைன சமய நூல்களுக்குரியது. ஆனால் நிகண்டாசிரியர் தமிழ்ச் சொல்லால் இவற்றைக் கூறுமிடத்து அவற்றின் வட்டம் என்று பங்க-ப்ரபையை முதலாவதாக வைத்துக் கூறுகிறார். பிற ஆறும் இப்படியே. ஆதலால் இரண்டு நூல்களின் ஆசிரியரும் ஒருவரேயாயின் இம்முறை பிறழ்வு ஏற்பட்டிராது. அடுத்து, நிகண்டில் "சாகம் சாகினி வெள்ளாடு" என்ற இடம் வருகிறது. வடமொழியில் **சரகம்** என்பதே ஆடு. தமிழில் மண்டல புருடர் சாகம் என்று எதுகையில் இச்சொல்லை வைத்தார்; இது பிழை; வடமொழிப் புலமை மிகுந்தவர் ஸ்ரீ புராணக்காரர். இவர் இப்பிழை செய்வார் என்று யாரும் நினைக்கமுடியாது. எனவே, இரண்டு நூல் செய்தோரும் வெவ் வேறானவரே என்பது தெளிவு.

ஸ்ரீ புராணமானது மகாபுராண சங்கிரகத்தின் மொழி பெயர்ப்பு. இந்தச் சங்கிரகம் கி.பி. 898இல் பூர்த்தி செய்யப் பட்டது எனத் தெரிகிறது. ஆகவே இதற்கான மொழிபெயர்ப்பு ஏற்படக் குறைந்தது, ஒரு நூற்றாண்டேனும் இடையில் சென் றிருக்கும் என்று கொண்டாலும் கூட, ஸ்ரீ புராணம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதாகவேண்டும்.

மணிப்பிரவாள நடையிலுள்ள நூல்கள் கி.பி. 17 ஆம் நூற் றாண்டுக்குப் பிறகு எழுதப் பெறவில்லை. 16-17 நூற்றாண்டு களில் ஏற்பட்ட மணிப்பிரவாள நூல்கள் யாவும் வைணவ சமய நூல்களே. சைன நூல்கள் கி.பி. 16 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு எவையும் ஏற்படவில்லை. இவற்றால் ஸ்ரீ புராணமானது கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்குப் பின்னும் 16 ஆம் நூற்றாண்டுக்கு முன் னும் தோன்றியதாகலாம். மண்டல புருடர் பற்றிப் பிரஸ்தாபித்த விவரங்களால் இந்நூல் அவருக்கும் முற்பட்டது என்றும் கருத இடமுண்டு. இந்நூல் செய்யப்பெற்ற காலம் 15 ஆம் நூற் றாண்டு என்று ரெட்டியார் அவர்களும் வையாபுரிப்பிள்ளை யவர்களும் கூறியிருப்பது ஒப்புக்கொள்ளத் தக்கதாகும்.

## உதீசித் தேவர்

சைன நூலாகிய திருக்கலம்பகம் என்ற பிரபந்தத்தின் ஆசிரியர். இவர் தொண்டை நாட்டுப் பையூர்க்கோட்டத்து ஆரணி நெடுந்துறையைச் சார்ந்த ஆர்ப்பகை என்னும் ஊரினர். தம் மதக் கிரந்தங்களை நன்கு கற்றவர். இவர் பெயரை 'உத்தர திசை முதல் வைத்த தேவப் பெயர் பெற்ற நல்லறிவோன்' என்று உரைச் சிறப்புப் பாயிரம் கூறும் (உதீசி - வடக்குத்திசை). கலம்பகத்தின் சிறப்புப் பாயிரமானது 'வடபால் மொழிதலை மணந்த தேவன்' என்று இவரைக் கூறும். தேவர் என்றமையால் இவர் சைன சமயத்துறவி என்கிறோம். (தேவர் - சைன சமயத் துறவியைக் குறிக்கும் சொல். திருத்தக்க தேவர், தோலாமொழித் தேவர் என்ற பெயர்கள் காண்க.) இவர் பௌத்தத்தை எதிர்த்து அழிக்க முயன்றார் என்றும், அதனால் சாக்கிய குத்தானன் என்று பெயர் பெற்றாரென்றும் அறிகிறோம்.

இவர் பாடிய நூல் அருகன் தோத்திரமாகிய திருக்கலம் பகம் என்பது. இது கலம்பக இலக்கணங்கள் பொருந்திய 110 பாடல்கள் உடையது. பாடல்கள் மரபை யொட்டி அந்தாதியாய் மண்டலித்து வருவன. இந்நூலுக்கு, உதீசித் தேவர் ஊரான ஆர்ப்பாகையில் பிறந்த சந்திரநாதர் புதல்வரான அனந்தத்தேவர் பொழிப்புரையும் பதவுரையும் செய்திருக்கிறார். உரையின் சிறப்புப் பாயிரம் இச்செய்திகளை நன்கு விளக்குகிறது.

இத்திருக் கலம்பகமானது ஒருதலம் குறித்துப் பாடப் பெறாமல் பொதுவாய் அருகனைத் துதிக்கின்றபடியால், தலத்தைச் சார்த்தி வழங்காமல் **திருகலம்பகம்** என்றே பெயர் பெற்றது. **திருநூற்றந்தாதி** என்ற மற்றொரு சைனப் பிரபந்தம் இதற்குமுன் மாதிரியாக அமைந்திருக்கிறது. சம்பிரதாயத்துக்கு மாறாக இதில் 110 பாடல்கள் உள்ளன. தெய்வத்தின் மேல் 100 பாடல்கள் பாடலாம் என்பது விதி. இதற்குக் காலத்தால் முன் வந்த கலம்பகம் இரண்டு. ஒன்று நந்திக் கலம்பகம்; 90 பாடல் இருத்தற்குறியது; 88 பாடல்களே கிடைக்கின்றன. மற்றது நம்பியாண்டார் நம்பி பாடிய ஆளுடைய பிள்ளையார் திருக் கலம்பகம் (பதினொராந் திருமுறை) பாடல் 100 இருத்தற்குரியது; 49 பாடல்களே கிடைக்கின்றன.

கலம்பக இலக்கணம் கூறப்பட்டது சிறப்பாக வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப்பாட்டியலில் இங்கு கலம்பக உறுப்புக்கள் 18 என்று முறையாகச் சொல்லப்பட்டுள்ளன.

இவ்விலக்கணமே பிற்காலத்தில் கலம்பகம் செய்தோருக்கு வரம்பாய் அமைந்தது.

> வைக்கும் புயந்தவம் வண்டம்மனை பாண்மதங்கு
> கைக்கிளை சித்தூசல் களிமடக் கூர் – மிக்கமறம்
> காலம் தழை இரங்கல் சம்பிரதம் கார்தூது
> கோலும் கலம்பகத்தின் கூறு.

ஆனால் வச்சணந்தி மாலைக்கு முந்திய நூல்களான மேற் குறித்த இரண்டிலும், முறையே 8 உறுப்புக்களும் 6 உறுப்புக் களுமே காணப்படுகின்றன; அவை பாடப்பெற்ற காலத்தில் உறுப்புக்கள் இன்னவை என்ற வரையறை ஏற்படவில்லை போலும்.

ஆனால், திருக்கலம்பகத்துள் பாண் தழை நீங்கலாக, ஏனைய 16 உறுப்புக்களும் பாடப்பட்டுள்ளன; மேலும், குறம் என்ற பிற்கால உறுப்பும் இங்கு அதிகமாகக் காண்கிறோம். எனவே, இது வச்சணந்தி மாலையின் காலமாகிய 12-ஆம் நூற் றாண்டிற்கு அதிக காலம் பிற்பட்டுத் தோன்றி இருத்தல் கூடும்.

இந்நூலைத் திருநூற்றந்தாதியோடு உடன் வைத்து ஆராயும் காலத்து, அதனினும் இது சிறிது காலம் பிற்பட்டுச் செய்யப்பெற்ற நூலாகுமென்று தெரிகிறது. திருநூற்றந்தாதி யின் காலம் 14ஆம் நூற்றாண்டு. இந்நூல் 15ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்றிருத்தல் கூடும். இதனுள் உதீசித்தேவர் அருகக் கடவுளை "மயிலாபுரி நின்றவர்" என்று இரு பாடல்களில் (73,74) கூறுகிறார். உரையாசிரியர் "மயிலாபுரியில் நிலைபெற்று வாழ்பவர்" என்று உரை கூறுகிறார். எனவே, மயிலாபுரியில் (மயிலாப்பூர்) இருந்த நேமிநாதர் ஆலயம் கடல்கோளால் அழியுமுன்னமே இந்நூல் பாடப்பெற்றது என்று கருதலாம். மயிலாபுரி நேமிநாதர் கோயிலைக் கடல் கொண்டது கி.பி. 1600ஐ ஒட்டியிருக்கலாம். இக்காலத்துக்கு முன்னமேயே இந்நூலும் உரையும்தோன்றி விட்டன என்று இக் குறிப்புகளால் யூகிக்க இடமிருக்கிறது. திருநூற்றந்தாதியின் காலம் 1375 என முன்னமே கூறினோம். எனவே திருக்கலம்பகத்தின் காலம் 1450 - 75 ஆக நாம் கொள்வது பொருந்துவதாகலாம்.

*இனி, நூலைக் குறித்துச் சில கருத்துக்கள் இங்கு கூற முடியும். ஆசிரியர் சிறந்த துறவி. கலம்பகத்தின் வரவேண்டிய சில அகத்துறை உறுப்புக்களில்கூட இவர் அகப்பொருளே தலை காட்டாதபடி பாடுவது வியக்கத்தக்கதாயிருக்கிறது காலம் என்ற உறுப்பில் "எம்மனமும் காமன் அம்புக்கு இடர் உழவாக்காலம்" (17) என்று பாடுகிறார். ஒரு தலைக்காமம் என்றே இலக்கியத்தில் வழக்குப் பெற்ற கைக்கிளை என்ற துறையில் இவர் முற்றும் முரணாகவே பாடுகிறார்:*

கோமான் குளிர்முக் குடையான்பொற் கோகனக
வாமான்தேர் மேலொருகால் வாரான்கொல் – ஏமாண்
சிலைக்கரும்பு நாணொலிக்கும் தேங்கோதை நல்லார்
முலைக்கரும்பு நோயுடையேன் முன். 65

இம்மான் நிலனாகித் தீயாய்க் காலாய்
இருசுடராய் எறிபுனலாய் வானாய் மற்றும்
எம்மான் ஏவ் வுயிர்களுமாய் நின்றான் என்றே
இயம்புவார் துணிவென்னே இருந்தவாறே.

*என்று (27) இவர் சுட்டிப் பாடுவது,*

இரு நிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமானனாய் எரியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தி யாகிப்
பெரு நலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமே யாகி
நெருநலையாய் இன்றாகி நாளை யாகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.

*என்ற அப்பர் திருத்தாண்டகத்தைக் (6 - 94 - 1) குறிப்பிடுகிறாரோ என்று கருதுமாறு உள்ளது.*

*மயிலாபுரி (73,74), தீபங்குடி (74), சும்பை (74) உச்சந்தமலை (52) ஆகிய இடங்களைக் குறிப்பிடுகிறார்.*

*மற்றும் ஒரு குறிப்பு மட்டும் இந்நூலாசிரியர் சம்பந்தமாக இங்கு கருதற்குரியது. இவர் காலத்தில் தமிழ்நாட்டில் சைவ சித்தாந்த சமயம் நன்கு நிறுவப்பட்டு, நாடெங்கும் சிறப்பான பெருங்கற்றளிகள் எடுக்கப்பட்டிருந்த ஓர் உன்னதமான காலம். ஒருபுறம் அன்னியர் படையெடுப்பு இருந்தபோதிலுங்கூட, தமிழ் நாட்டில் சமய வளர்ச்சி தங்கு தடையின்றிப் பெருகியிருந்தது.*

வைணவ ஆசிரியர்களான வேதாந்த தேசிகரும் மணவாள மாமுனியும் தோன்றி, இருகலைகளையும் போட்டியிட்டு வளர்த்தார்கள். கந்தபுராணமும் திருப்புகழும் தோன்றி, முருகபக்தி நாட்டில் பிரவாகமாகப் பெருக்கெடுத்தோடச் செய்தன. இந்த நிலையில் தோன்றியவர் - நல்லுணர்வு மிகுந்தவரும், பற்றற்ற மெய்த் துறவியும் உண்மைச் சைன பக்தருமான உதீசித் தேவர்; இக்காலத்தில் இவர் செய்யத்தக்கது என்ன?

எல்லாம் அருகனே என்று இவர் பாடி விட்டார். நீயே சிவ பிரான்; நீயே திருமால்; நீயே பிரமன்; நீயே முருகன்; உனது சக்தியே அம்பிகை என்று இவர் விரிவாகப் பாடிவிட்டார். யார் இவரைக் குறை கூறமுடியும்? இவ்வாறு இவர் பாடியிருக்கும் பாடல்கள் மிக்க சுவையுடையன. கமலத்து வந்த உலகேழையும் தந்தவரே, கலைமகள் காந்தர் கண்டிர் (6), உலகாளுந் தேவாதிபனே திருமாலே (21), உலகளந்த நெடுமால் என்பது உமையன்றே (30), பாற்கடற்கண் வளர்ந்த பரந்தாமன் நெடுவிசும்பின் முகடுருவி நிமிர்ந்தமாலை...... ஆழி வலங் கொண்டேத்தும் சிகரமாமணி நீலவண்ண வெற்பைத் தேறாதார் தாந்தம்மைத் தேறாதாரே (31), அச்சுதானந்தனை... மலர் மகள் காந்தனை (32), அரணங் கொடிய மதில் மூன்றும் அழியக்கனன்றீர் (36), கண் மூன்று தோன்றி இகல் காமனுடல் பொடியாகக் கனன்றாய் (37), ஓங் காரம் (41), கோதில் புகழ்ச் சத்தியோசாதன் வாமன் அகோரன் ஈசானன் தற்புருடன் என்று இட்ட திருநாமம் (49), மூவிலை யொரு நெடுவேலின் மேவாத வினையவுணர் குன்றுபட நூழில் ஆட்டி வென்றட்ட விறல் வெகுளியை (109) என்பன காண்க. நூல் இறுதியிலுள்ள ஒரு பாடல் முழுமையும் அம்பிகை தோத்திரமாகவே உள்ளது:

அறிவன் காதற் பெருங்கிழத்தி<br>
  அகிலம் ஈன்ற தாயென்றும்<br>
அழியாக் கன்னி அறம்வளர்ந்த<br>
  அன்னை ஆறு சமயத்தின்<br>
பிறவு தன்பாற் றோன்றியவள்<br>
  பிறங்கு புவனத் தனிவிளக்குப்<br>
பிறழா மூர்த்தி நாயகி நம்<br>
  பிறவிப் பகைத்தி உயிர்க்கெல்லாம்<br>
செறியும் கருணை சார்ந்தளிக்கும்<br>
  தெய்வச் செவிலி கற்புடைய<br>
செஞ்சொற் பாவை ஆனந்த<br>
  வல்லி ஞானச் செழுங்கொழுந்து

பொறியைம் புலத்தின் வேட்கை நோய்
    தீர்க்கும் மருந்தென்றருந்தவர்கள்
போற்றும் பதத்தார் செய்யபதம்
    போற்றார் உணர்வு பொங்காதே.

## அனந்த கவி

இந்நூலின் உரைகாரர் அனந்தகவி. இவரும் ஆசிரியர் ஊரான ஆர்ப்பாகையினர். இவர் பொழிப்புரையும் பதவுரையும் ஆக இரு வேறுரைகள் எழுதினார் என்று தெரிகிறது. பொழிப்புரையின் முடிவில் பாடற் கருத்தைச் சுருக்கமாகக் கூறுகிறார். பல பாடல்களுக்கு எழுவாய், பயனிலை கூறுகிறார். பாடலில் சொல்லை அடியொற்றிப் பொருள் எழுதுகிறார். பல இடங்களில் இவர் உரையினாலேயே அனேக சைன சமயப் பொருள்கள் விளக்கமாகின்றன. முற்கூறியவாறு இவர் ஆசிரியர் காலத்தை ஒட்டியே வாழ்ந்தவர் ஆதலால், அவருடைய மாணாக்கர் என்று கூறுவதும் பொருத்தமாகும்.

### பதிப்பு

பாகுபலி நயினார் பதிப்பு, மூலம் மட்டும், சுபானு ஆனி, 1883. மதுரை தமிழ்ச் சங்கம், மு. ராகவையங்கார் பதிப்பு, பழைய பொழிப்புரையுடன் 1907, 1951; சம்பத்ராவ் நயினார் பதிப்பு, அனந்த கவி பதவுரையுடன், 1935.

## ஆதிநாதர் பிள்ளைத் தமிழ்

சைன சமய நூல்கள் நூற்றாண்டுகள் தோறும் செய்யப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் பேரிலக்கியங்களான சீவக சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி போன்றவையும், பல இலக்கண நூல்களும், கீழ்க்கணக்கு நூல்கள் பலவும் பிரசித்தமாய்த் தெரிந்தவை. சைனர்கள் பெரும்பான்மையும், வாழ்க்கைக்கும் இலக்கியத்துக்கும் சட்டமியற்றி வந்தார்கள். அதாவது ஒழுக்கத்துக் கான விதிகளை நீதி நூல்களாகப் பாடினார்கள். இலக்கியத்துக் கான விதிகளை இலக்கணங்களாக எழுதினார்கள். தோத்திர நூல்களான பிரபந்தங்களாக அவர்கள் எழுதியவை மிகவும் குறைவு. இவ்வாறு எழுதப்பட்ட இரு நூல்கள் இந்த இரு நூற்றாண்டுகளுக்குரியனவான திருநூற்றந்தாதியும் திருக்கலம் பகமும்.

இவ்வாறு செய்யப்பெற்ற மற்றொரு பிரபந்தம் ஆதி நாதர் பிள்ளைத்தமிழ். ஆதிநாதராவார், விருஷபதேவர். இவர் அயோத்தி யில் அரசாண்டார். அயோத்தி இந்நூலில் வினதாபுரி என்றும் சிறப்பிக்கப்பெறும் இந்நூலில் பிள்ளைத் தமிழுக்குரிய இலக் கணப்படி, பத்துப் பருவங்களையும் நூறு பாடல்களையும் கொண்டது. நூலகத்து, ஆசிரியர் பற்றிய குறிப்போ இதன் காலம் பற்றிய குறிப்போ எங்கும் காணப்படவில்லை. அச்சிட்ட பதிப்பின் பாடல்கள் பெரிதும் திருத்தமடைதற்குரியன. காப்புப் பருவத்தில் 1, 3, 4, 6, பாடல்கள், ஆடி, சீர் வரையறை பொருத்தமாயில்லை, ஏடுகள் வைத்து ஒப்புநோக்கித் திருத்தம் செய்வதற்குரியன.

ஆதிநாதரைத் துதிக்கின்ற இந்த நூல் சம்பிரதாயமான முறையில் அமைந்துள்ளது. எனினும், காப்புப் பருவப் பாடல்கள், காப்பு என்றே கூறுகின்றன. முதல் பாட்டு "பிள்ளைத் திருநாமம் தனைப்பாட.... சரசுவதி முன் நடக்க சித்தர் காப்பு" எனக் கூறு கிறது. பதினெண் மொழிகளுக்கொரு மொழி அருகன் மொழி என்பது ஒரு செய்தி. தாலப் பருவத்தில் ஐந்து பாடல்களில் அருகனைத் தற்புருட பெருமான் என்கிறார் ஆசிரியர். வருகைப் பருவம் நாலாம் பாடலில், சிவபெருமானுக்கு உரிய சத்தியோ சாதன் முதலான ஐந்து திருப்பெயர்களும் தேவேந்திரனால் பஞ்ச கலியாணச் சிறப்பையொட்டி ஆதிநாதனுக்கு இடப் பட்டன என்கிறார்.

சொர்க்கா வதரண கலியாணம்
சொரிந்து மூன்றரைக் கோடி தனம்
சோர்வில் சத்யோ காதனெனச்
சுரர்கள் இயற்றித் திருநாமம்
திக்கோர் புகழ்சென் மாபிடேகத்
தேவர் இயற்றி வாமனெனத்
தீட்சா கலியா ணத்தமரர்
செயமாம் அகோர னெனப் போற்றிப்
பற்றா பியலுங் கேவலத்தின்
பணிந்தீ சானன் எனப் போற்றிப்
பரிநிரு வாண பதவிதனில்
பாரோர் புகழ்தற் புருடனென
உற்றுப் பஞ்ச கலியாணம்
உடைய பெருமாள் வருகவே
உலகப் பெருமாள் மறைப் பெருமாள்
உகாதிப் பெருமாள் வருகவே. 55

இவ்வாறே இவர் நூல் முழுமையும் ஆதிநாதரைப் பிரமன், விஷ்ணு, சிவன் என்றே வேற்றுமையில்லாது எங்கும் பாடுகிறார். இது சைனப் பிரபந்தங்களுக்குரிய பொது இயல்பு.

சந்தப் பாடல்களும், சந்தத்தைப் பருவந்தோறும் மாற்றி யமைத்த பாடல்களும் பிள்ளைத்தமிழ் இலக்கணத்துக்குப் பொருந்தவே காணப்படுகின்றன. அம்புலிப்பருவம் நான்காம் பாடலில் ஒன்று முதல் பத்து வரை எண்ணலங்காரம் தோன்றப் பாடுகிறார். இது தேர்ப்பருவத்து 5ஆம் பாடலில் தருமங்கள் பலவற்றையும் தேரின் பாகங்களாக உருவகித்திருப்பது சுவை யாக உள்ளது. 10ஆம் பாடலில் சைனர் தலங்களை மிக விரிவாக அட்டவணைப்படுத்தித் தருகிறார்.

"மிகத் தொன்மை வாய்ந்த சைனத் திருப்பதிகளான ஆர்ப்பாகை, தஞ்சை, வாழைப்பந்தல், திருமலை, திருமயிலை, பறம்பாபுரி, திருக்கோயில் ஆகியவற்றைப் பற்றி தமது பாக்களில் குறிப்பிடுவதால், மயிலாப்பூரில் விளங்கிய மிகப் பழமை வாய்ந்த நேமிநாதர் கோயிலைக் கடல் கொள்ளும் முன்னர் இந்நூல் இயற்றப்பட்டிருக்க வேண்டும். எனவே இந்நூலாசிரியர் காலம் கி.பி. 14 அல்லது 15ஆம் நூற்றாண்டாகக் கருதலாம்" என்று பிள்ளைத் தமிழின் பதிப்பாளர் குறிப்பிட்டிருக்கிறார். நூலின் 9, 10, 31 முதலான பாடல்களில் சைன சமயக் கோயில்கள் குறிப் பிடப்பட்டுள்ளன. இவற்றுள் 10ஆம் பாடலில் மயிலை குறிப் பிடப்பட்டுள்ளது. மயிலையில் இருந்த சினகரத்தைக் கடல் கொண்ட செய்தி, அவிரோதி நாதர் வரலாற்றிலும் குறிப்பிடப் பட்டுள்ளது. இவ் வரலாற்றுண்மையையும் வேறு செய்திகளை யும் ஆதாரமாகக் கொண்டு, அவர் காலம் சுமார் கி.பி. 1400 என வரையறை செய்யப்பட்டது. இந்த முறையில் கருதும்போது தொடர்பாக இப்பிள்ளைத் தமிழ் ஆசிரியரும் கடல் கொண்ட காலமாகிய 1600க்கு நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தார் என்று வரையறை செய்வது பொருத்தமாகும். ஆகவே இவர் காலம் கி.பி. 1500 எனலாம்.

எனினும், இந்தக் குறிப்பு அல்லாமல், இதை ஏற்பதற்கோ, மறுப்பதற்கோ எக்குறிப்பும் நூலகத்துக் கிடைக்கவில்லை.

**பதிப்பு**

ஆதிநாதர் பிள்ளைத் தமிழ், ஆதிநாதர் பதிப்பகம், 1956.

*அத்தியாயம் 11*

# பிரபந்த இலக்கியம்

## *முன்னுரை*

*தமிழ் இலக்கியப் பரப்பில் காலந்தோறும் சிறப்பான சிற்றிலக்கியங்கள் தோன்றி இருக்கின்றன. பெரும் காப்பியப் புலவராகும் தகுதி இல்லாத சாமானியப் புலவர்கள் அதிகமாகப் பிரபந்தம் பாடியிருக்கிறார்கள். மற்றும் பெரும் காப்பியம் எழுதுவதற்கு ஏற்ற சூழ்நிலை அமையாதபொழுது, பெரும் புலவர்கள் கூடப் பிரபந்தம் பாடி வந்திருக்கிறார்கள் தமிழில் பண்டைய நூல்கள் என்று சொல்லும் சங்க இலக்கிய காலத் திலேயே பிரபந்தங்கள் தோன்றியிருந்தன. பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படை போன்ற ஐந்து ஆற்றுப்படைகள் பிரபந்தங்களே. நாயன்மார் ஆழ்வார் கூற்றிருக்கை, திரு அங்கமாலை, திருமடல், பள்ளி எழுச்சி, அந்தாதி, தசாங்கம் முதலிய பிரபந்த வகைகள் அக்காலத்துப் பாடப்பெற்றன. பன் னிரண்டாம் நூற்றாண்டு வரையில் உலா, தூது, கலம்பகம், மும்மணிக்கோவை, நான்மணிமாலை, கோவை ஆகிய பிரபந்த வகைகள் எழுந்தன. இவற்றை ஒட்டிப் பாட்டியல் இலக்கண நூல்களும் பலவாகத் தோன்றின.*

*இந்த நெறியில் பார்க்கும்பொழுது, இந்த நூற்றாண்டிலும் பெரும்பான்மையான பிரபந்த வகைகள் தோன்றி இருப்பது தெரிகிறது. இவற்றுள் பல முந்திய அத்தியாயங்களில் ஆராய்ந் திருக்கிறோம். காளமேகம் செய்த திருவானைக்கா உலா சிறப் பானது. தத்துவராயர் பல உலாக்கள் பாடியிருக்கிறார் அன்றியும் பின்னும் பல பிரபந்த வகைகளும், பல புதிய பிரபந்த அமைப்புக் களும், அவர் செய்திருக்கிறார். சின்னப்பூ என்று ஒரு பிரபந்தத் திற்குப் பாட்டியல் நூல் இலக்கணம் கூறிய போதும் கூட, தனி*

நூலாகக் கிடைப்பது இவர் பாடிய சின்னப்பூ ஒன்றே. சிவஞான வள்ளல் சில பிரபந்தங்களை அமைத்திருக்கிறார். பிள்ளைத் தமிழாக, சத்தி ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழும் ஆதிநாதர் பிள்ளைத் தமிழும் தோன்றின. உதீசித் தேவரது திருக்கலம்பகம் சைன நெறி பற்றியது. கயாதரர் என்ற நிகண்டு ஆசிரியர் செய்த பிரபந்தங்கள் கோவையும் அந்தாதியும் இன்று கிடைக்கவில்லை.

இவை போக, இந்த அத்தியாயத்தில் மூன்று பிரபந்தங் களைப் பார்க்கிறோம். மூன்றும் தத்தம் நெறியில் மிக்க சிறப் புடையவை. இவை திருவேங்கட உலாவும் வருணகுலாதித்தன் மடலும் திருச்செந்தூர் பிள்ளைத் தமிழும் ஆகும். இப்பிள்ளைத் தமிழ் பாடியவர் பகழிக் கூத்தர். இதுவேயன்றி அவர் சீவக சிந் தாமணிக்கு ஒரு சுருக்கமும் பாடினார். அந்நூல் இன்னும் அச் சாகவில்லை. இக் காலத்தில் சீர்திருத்தவாதியாகிய ஒரு கபிலர் வாழ்ந்தார். இவர் பாடிய கபிலர் அகவல் மிகவும் பிரசித்த மானது. இவரைப் போலவே வடமொழியிலும் ஒரு கபிலர் வாழ்ந்து சமூக சீர்திருத்தம் செய்ய முற்பட்டார் என்று ஓர் வரலாறு உண்டு.

இச்சிறு பிரபந்தங்களை மட்டும் இங்கு ஆராய்வோம்.

## திருவேங்கட உலா

தமிழில் தோன்றிய பழமையான உலாப் பிரபந்தங்களில் இதுவும் ஒன்று. திருவேங்கட நாதர் உலா என்றும் பெயர் வழங்கும். இந்த உலாப் பிரபந்தம் திருவேங்கட மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிற திருமால் மீது பாடப் பெற்றது. காப்பு அவையடக்கம் இரு வெண்பாக்களும் 607 கண்ணிகளும் இறுதி வெண்பாவொன்றும் உடையது. அளவால் இது மிகவும் நீண்ட நூலாகும். சிறப்பான பல உலாப் பிரபந்தங் கள் இவ்வளவு நீண்டவையல்ல. சென்ற நூற்றாண்டில் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாடிய திருவிடை மருதூர் உலா இதனினும் நீண்டது; 721 கண்ணியுடையது. பழமை யான உலாக்களில் இதுவுமொன்று என்ற சிறப்பு அல்லாமல், இது சிறந்த இலக்கிய நயமுமுடையது. மரபையொட்டி, தலச் சிறப்பு, வேங்கடவாணன் பவனி வருதல், குழாங்களின் கூற்று; செயல், பின் ஏழு பருவ மகளிரின் நிலை என்ற முறையில் நூலை

அமைத்திருக்கிறார். ஆசிரியர் திருவேங்கடத்தில் பலகாலும் இருந்தமையால், மூர்த்தியிடம் பெரிதும் ஈடுபட்டுத் தமிழிலும் நன்கு தோய்ந்து நூலை இயற்றியிருக்கிறார். வேங்கடமலைக் குரிய ஏழு பெயர்கள் (10-13) சிங்கமலை, நாராயணமலை, நாக மலை, காஞ்சனமலை, கருடமலை, வேங்கடமலை, இடபமலை, இங்கு வழிபட்டுப் பேறு பெற்றோர் 35 பேர் (14-18) பெயர்களை அடையின்றியே சுருக்கிக் கூறுகிறார். பின் இங்குள்ள தீர்த்தங்கள் (21-29). மலை குனிய நின்றான் என்ற பெயரில் இவருக்கு ஈடுபாடு அதிகம், அதை அதிகமான தடவைகளில் சொல்கிறார்.

பின் தொனியால் பல பெயர்களை அழகாகப் புலப்படுத்து கிறார்; அச்சுவதி முதல் ரேவதி வரையுள்ள 27 நட்சத்திரங்கள் 46-66; மேடம் முதல் ரேவதி வரையுள்ள 12 ராசிகள் 56-67; ஞாயிறுமுதல் சனிவரை வாரப் பெயர் 68-69; மாதப் பெயர் சித்திரை முதல் பங்குனி வரை 70-81. பின் பல்வகை மடக்குக்கள் 84-95 திருமலைப் படிகளில் ஒன்று உயரமாயும் செங்குத்தாயும் இருத்தல் பற்றி, முழங்கால் முறிப்பான் (முடிச்சு) என்றும் பெற் றுள்ள பெயரைச் சொல்லுகிறார். 101 பெருமான் பவனிக்கு அலங்கரித்துக் கொள்ளுதலை விரிவாகப் பேசுகிறார். ஆழ்வார் பன்னிருவர் 177-171. இங்கு வைகானச பூசை என்கிறார் 186. உடய மாதவர், கொங்கு இருபத்து நால்வர், 75 சிம்மாசனாதி பதிகள், நாதமுனி கோத்திரத்துத் தெய்வீக விண்ணப்பம் செய்வார், திருப்புல்லாணிதாசர், திருமஞ்சனத் தொண்டு நடத்தி வந்த இராமானுசன் ஆகிய கந்தாடை இராமானுசையங்கார், எழுத்தாணி எழுதுவார், வாசல் காக்கும் கைக்கோளர், பாடல் பாடும் எம்பெருமானடியார் முதலான தொண்டர்களைக் கூறுகிறார். இவர்களுள் திருமஞ்சனத் தொண்டு செய்யும் இராமானுசனே இந்நூலாசிரியர்.

பேதையைக் குறிஞ்சியியல்பு பொருந்த வருணித்திருப்பது நயமுடையது. பேதை வாய்முத்தம் ஈவதற்குக் கைக் கூலிகேட்கும் கருவூலம். பெதும்பைப் பருவத்தில் கழலாடல் 296-306; ஒன்று முதல் ஏழு வரை எண்களைச் சொல்கிறார். கழல் என்னென்ன செய்ததென்று விரிவாய் உரைக்கிறார்.

– காரிகையே,

**சேய்முத்தம் நீ கேட்டால் செங்கனிவாய் எம்பெருமான்**
**வாய்முத்தம் தாவென்று வந்தாலோ? –**

என்கிறார். பிற்காலத்தில் நெய்வேலி வடிவம்மையைத் துதிக்கும் 'ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீது' என்ற பாடல் இங்கு சிந்திக்கத்தக்கது. மங்கைப் பருவத்தில் கள்வர் திருடர் சோரர் தற்கரர் கன்னக்காரர் என்று அடுக்கிக் கூறுகிறார். அடுத்து கண்ணனின் தேவிமார் எண்மரையும் பிறரையும் பெயர் சொல்லி உரைக்கிறார். மடந்தைப் பருவத்தில் 375-385 வரை கேசாதி பாத வருணனை மிகவும் சிறப்புடையது. அரிவைப் பருவத்தில் தசா வதாரம் மீனம் முதல் குதிரைவரை 447-456 தெரிவைப் பரு வத்தில் 35 தலப் பெயர்கள் 649-516. ஆண்டாள் பாடிய பாவை அந்தாதி என்று சொல்லுகிறார்: நூல் அப்படியில்லை; இவர் கருத்து விளங்கவில்லை. பேரிளம் பெண் பருவத்தில், ஞானச் சுடர் இரங்கி 'நாளைவா' என்ற நம்பி என்கிறார் (இராமன் போர்க்களத்தில் இராவணனைக் கூறியது).

– தே மறைக்குள்
வாழ்வான நற்பொருளை வாக்கினால் வாரி வடித்து
ஆழ்வார் திரட்டும் அமுதத்தை. 551

என்கிறார். இவ்வாறெல்லாம் பல வகையால் ஆய்ந்து அனுபவிக் கத்தக்க இலக்கியச் சுவை பொதிந்ததாக ஆசிரியர் இப்பிர பந்தத்தைச் செய்திருக்கிறார்.

## ஆசிரியரும் காலமும்

'சகாப்தம் ஆயிரத்து நானூற்று ஒருபத்து எட்டின் மேல் செல்லாநின்ற நளசம்வத்சரத்து தனுநாயிற்று அபரபட்சத்து த்விதியையும் புதவாரமும் பெற்ற பூசத்து நாள் திருமலையில் ஸ்தானத்தாரோம் திருமலையில் திருப்பதியில் கந்தாடை அப்பச்சியார் அண்ணாவுக்கு சிலாசாசனம் பண்ணிக் கொடுத்த படி திருவேங்கடமுடையான் பதினைஞ்சு நாளைக்கொருக்கால் வெள்ளிக்கிழமை நாள் புழுகு காப்பு முறைதோறும் புழுகு காப்பு சாத்தி அருளுகிற வேளையிலே கந்தாடை இராமானுச அய்யங்கார் பேரில் உலாவும் கேட்டருளி' என்பது கல்வெட்டு வாசகம்; இது முதல் இரண்டு வரிகள். பின் ஏழாம் வரியில் 'இராமானுச அய்யங்கார் உலாக் கேட்டருளி' என்று உள்ளது. இது திருமலைக் கோயில் இரண்டாம் பிரகார வடக்குச் சுவரில் உள்ளது. தொடக்கத்தில் அய்யங்கார் பேரில் என்றிருந்தபோதிலும், அய்யங்கார் செய்த என்றே பொருளாகும். அய்யங்கார் பேரில்

உலா இல்லை. அய்யங்கார் செய்ததே இந்த உலா. காலம் சகம் கி.பி. 1418-1496 (15ஆம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகள்). இவ் வாண்டுக்குச் சில காலம் முன்னதாக இந்நூல் செய்யப் பெற் றிருக்கலாம்; அல்லது செய்த சிறப்புக்காகச் சாசனம் எழுந்த தெனக் கொள்ளின், உடன் காலமுமாகலாம். இவ்விராமானுச ஐயங்கார் சாளுவ நரசிம்மன் காலத்தில் அவன் போற்றுதலைப் பெற்று இராமானுச கூடத்தில் தலைவராக இருந்திருக்கிறார்; மணவாள மாமுனிகள் திருவடி சம்பந்தி; இவர் திருமஞ்சனத் துக்கு சந்தனம் மஞ்சள்காப்பு நெல்லிக் காப்பு கத்தூரிக் காப்பு முதலியன நியமித்து நடத்தி வந்தவர்; காலம் சகம் 1387 முதல் (1464 கி.பி.) என்று தெரிகிறது.

## பதிப்பு

ரிப்பன் பிரஸ் பதிப்பு 1890, பின் திருமலை கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகம் பதிப்பு 1950, வித்துவான் தி.பொ. பழனியப்பப் பிள்ளை ஆராய்ந்து ஆழகாகப் பதிப்பித்தது.

# அத்தியூர்க் கோவை

இலக்கண விளக்கம் பாடிய வைத்தியநாத தேசிகர் (17 நூ.) அந்நூல் பொருளதிகாரம் 90ஆம் சூத்திர உரையில் அத்தியூர்க் கோவை என்று ஒரு பாடலை மேற்கோள் காட்டுகிறார்:

> அடங்கா அசுரர் குலமறுத் தோர்அத்தி யூரர்வென்றி
> மடங்காத நேமி வரதர்நன் னாட்டிற்றன் மைந்தனுடன்
> முடங்காமல் அந்த மனைவியும் போய்முயன் றூரனுடன்
> தடங்காவும் யாறும் குளனும் சென் றாடவும் தக்கதுவே.

இது தலைவி புனலாடற்கு மேற்கோள். இப்பாடல் அத்தியூர் வரதர் திருமாலைப் போற்றுவது. திருமாலைத் துதிக்கும் கோவை நூல்கள் மிகவும் குறைவு. இத்தேசிகர் தம் உரையில் மேற்கோள் காட்டும் நூல்களின் வரிசையாலும் பழமையாலும் தகுதியாலும், இந்நூல் 15 ஆம் நூற்றாண்டுக்குரிய நூலாகும் என்று கருதுகிறோம். நூல் கிடைக்கவில்லை; இது பற்றிய செய்தி களும் தெரியவில்லை.



## வருண குலாதித்தன் மடல்

பிற்காலத்தில் தமிழ்ப் பிரபந்தங்கள் 96 என்று வழங்குகின்ற வரிசையில் மடல் என்ற பெயரால் இரண்டுவகைப் பிரபந்தங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஒன்று உலா மடல்: கனவில் ஒரு பெண்ணைக் கண்டு கலவியின்பம் நுகர்ந்தோன், விழித்த பின் அவள் பொருட்டு மடலூர்வேன் என்பதைக் கலி வெண்பாவால் முற்றுவிப்பது. மற்றது வளமடல்: அறம் பொருள் இன்பமாகிய அம்முக் கூறுபாட்டின் பயனை எள்ளி மங்கையர் திறத்துறும் காம இன்பத்தினையே பயனெனக் கொண்டு, பாட்டுடைத் தலைமகள் இயற்பெயருக்குத் தக்கதை எதுகையாக நாட்டியுரைத்து அவ்வெதுகை படத் தனிச்சொல் இன்றி இன்னிசைக் கலி வெண்பாவால் தலைமகள் இரந்து குறைபெறாது மடலேறுவதாய் ஈறடி எதுகை வரப்பாடுவது.

இவ்விரண்டுள், வருணகுலாதித்தன் மடல் என்பது உலா மடலாகும். மடல் என்பது பனையின் மடல். மடல் ஏறுதல் என்பது தமிழ் அகப்பொருள் இலக்கியங்களுள் காணப்படுகின்ற ஒரு துறை. மடல் ஊர்தல் என்றும் சொல்லப்படும். இரண்டு தொடர்களும் திருக்குறளில் பயில்கின்றன. இத்துறையின் பொருளாவது, தலைவன் தான் காதலித்த தலைவியைப் பெறாத இடத்து அவளை அடைய வேண்டிப் பனங்கருக்கால் குதிரைபோல் ஓர் ஊர்திசெய்து அதை ஊர்தல் ஆகும். (மடல் ஊர்வேனென்று ஒரு பெண்பாற் புலவர் பாடியது அபூர்வம்.)

இந்த மடலானது நாகைப் பட்டினத்தில் வாழ்ந்த பெருஞ் செல்வனும் வள்ளலுமாகிய வருணகுல ஆதித்தன் காத்தான் என்பவன் மீது காளிமுத்து என்ற ஒரு தாசி பாடினாள் என்பது வரலாறு. இந்த மடலில் இவன் பெயர் காத்தான் வருண குலாதித்தன் அச்சுதராயன் என்று சொல்லப்பட்டுள்ளது. இவன் தந்தை கோனேரி ராஜ வருணகுலாதித்தன். இவன் தம்பி பெயரும் காத்தான். திருமலைராய வருணகுலாதித்தன் என்றும் இவனுக்கு ஒரு பெயருண்டு. இவனது குலம் வருணகுலமாகிய செம்படவர் குலம். இவன் முத்தமிழும் நன்றாய்க் கற்றவன். புலவருக்கு அளவின்றி ஈயும் கொடை வள்ளல்.

இம்மடல் உலாமடல் என்பது காப்புச் செய்யுளில் சொல்லப்பட்டுள்ளது:

மாதுபுணர் காத்தான் வருணகுலா தித்தனைச்சென்று
ஓது தமிழாம் உலாமடற்கு.

இது பாயிரமாக விநாயகர் வணக்கம் முருகன் வணக்கம் பாட்டுடைத் தலைவன் சிறப்பு என மூன்று வெண்பாக்களையும், நூலாக 147 கலிவெண்பாக் கண்ணிகளையும் கொண்டது. பாதாதி கேசமாகச் சிறப்பித்து வருணிக்கப் படுகின்ற ஒரு பெண் நாயகம் பசுங்காவில் உலாவுகிறாள். அவளைத் தலைவன் ஒருவன் அங்கு சென்று காண்கிறான். இவ்விடத்துக் காத்தானுடைய தசாங்கம் விரிவாகச் சொல்லப்படுகிறது. இவ்வளவு சிறப்புடைய காத்தானது சோலையில் தலைவன் அவளைக் கண்டு பேசிய போது, அவள் மறைந்து போகிறாள். பின்னர் அவன் அவளையே எண்ணிக் கனவு கண்டு கனிவிற் கலந்து, பின் கண்விழித்துக் காணாமல் பலவாறு புலம்பி மடல் ஊர முற்படுகிறான். இதுவே பாட்டின் பொருள். இந்நூலுள் பெண்ணின் வருணனையும் காத்தான் பெருமையும் மிக்க சிறப்பாய்ச் சொல்லப்பட்டுள்ளன.

இம்மடல் தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகுந்த சிறப் புடையது. "வருணகுலாதித்தன் மடலைப் போல ஒரு மடலும், முக்கூடற் பள்ளுக்கிணையான ஒரு பள்ளும், குற்றாலக் குற வஞ்சியை ஒத்த ஒரு குறவஞ்சியும் தமிழில் இல்லை" என்பது ஒரு பழமொழி. இந்த உலா மடலின் சிறப்பை இது நன்கு விளக்கும். சொல் நயம் அடுக்கு எதுகைமோனை தொடை நயம் முரண் தொடை மடக்கு முதலிய எல்லாவிதமான செய்யுள் நலன் களையும் இதில் நன்கு காணலாம். இவ்வாசிரியரிடத்து வரு ணனையின் பொருட்டும் சந்த ஓசையின் பொருட்டும் தமிழ் மொழி இன்ன விதம் தான் ஏவல் செய்கிறது என்பதைச் சொல்லுதல் அரிது. சிறப்பான இலக்கிய நடையும் சில சமயம் பேச்சு நடையும் இழைந்து வருகின்றன. தசாங்கத்தை 58 கண் ணிகளால் சிறப்பித்துப் பாடுகிறார். இதில் வரும் மடக்குச் சொல் நயத்துக்குப் பின்வரும் வரிகள் எடுத்துக்காட்டாகும்:

தாதளவும் செய்ய இதழ்த் தாமரைக் கண்ணாரைக்
காதளவும் தாவடிபோம் கண்ணாரை – சீத முலைச்
சூதாரை எல்லையற்ற சூதாரை வள்ளை எனும்
காதாரைச் சற்றும்இரங் காதாரைப் – போதகம்
செய்யாரை மிக்கமறம் செய்தாரைக் காந்தளெனும்
கையாரை என்னளவிற் கைத்தாரை – வெய்யமயல்

> தந்தாரைப் பூங்குழலின் தாராரை மாலளிக்க
> வந்தாரைக் கொங்கையின்மேல் வாராரை – சிந்தைவெறும்
> கல்லாரை மன்மத நூல் கற்றாரை மைப்புருவ
> வில்லாரை ஏழுலகும் விற்பாரை–

இங்கு முரணும் சிலேடையும் கலந்து ஒன்றாகியிருப்பதை நன்கு காணலாம். இந்த நூலில் ஆசிரியர், திருவரங்கம், குடந்தை, இடைமருது, ஆரூர், தில்லை ஆகிய தலங்களைக் குறிப்பிடு கிறார். கும்பமுனி, தொல்காப்பியர், சங்கப் புலவர் முதலிய 49 பேர் குறிப்பிடப்பட்டுள்ளனர். "உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு," "காமம் உழந்து கலங்கி வருந்தினார்க்கு ஏமம் மடவல்லது இல்லை வலி" என்ற திருக் குறட் பாக்கள் சொல்லப்பட்டுள்ளன. காட்டுக் கெறித்த நிலா, இடையன் எறிந்த மரம் என்ற பழமொழித் தொடர்கள் பயில் கின்றன. வள்ளல் இருபத்தொருவர் என்ற குறிப்பு உள்ளது.

காத்தான் நாகையில் அன்ன சாத்திரம் வைத்திருந்தான் என்பதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இவ்வன்ன சத்திரம் காளமேகப் புலவரால் இகழ்ந்தும் புகழ்ந்தும் பாடப்பெற்றது என்பதை நாம் அறிவோம்.

இந்நூல் பாடிய காளிமுத்து என்ற அம்மையைப் பற்றி எந்த விவரமும் தெரிந்திலது. காளமேகப் புலவர் காலத்தில் அவருக்கு நண்பராகவும் அல்லாதவராகவும் அனேகப் புலவர்கள் நாகை எல்லையில் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களுள் இவரும் ஒருவர் என்று கருதலாம்.

சென்ற தலைமுறை வரையில், தமிழ் கற்கத் தொடங்கி னோருள் ஆரம்ப நிலையில் இந்நூலைக் கல்லாதோர் யாரும் இருந்திருக்க மாட்டார்கள். இதில் காமச்சுவை மிகுந்திருந்த போதிலும்கூட, கவிதைச் சுவை அதனினும் அதிகமாக அமைந் திருக்கிறது. இதை எண்ணினால், 1838ஆம் ஆண்டில் சிறந்த சைவப் பண்டிதரும் வீர சைவருமாயிருந்த திருத்தணிகை - சரவணப் பெருமாளையர் இதை பரிசோதித்து அச்சிட்டிருப்பதில் வியப் பில்லை. இப்புத்தகத்துக்கு அக்காலத்தில் தோற் கட்டிடமும் செய்து விற்பனை செய்தார்கள். (முதன் முதலில் சந்திரசேகர கவி என்பவர் 1775இல் இந்நூலை அச்சிட்டதாகத் தெரிகிறது.

இவ்வாசிரியரின் காலம் காளமேகப் புலவரின் காலமே. 1422-1462இல் தென்காசியை யாண்ட பாண்டிய அரசரும்

*வள்ளலும் புலவரும் சிவ பக்தருமாகிய பராக்கிரம பாண்டியர் மீது இப்புலவர் பாடியதாக ஒரு பாடல் வழக்கிலுள்ளது. இவ் வரசருடைய பக்திப் பெருக்காலும் புலமையாலும் வள்ளன் மையாலும் அக்காலத்திலிருந்த புலவர்களுள் இவரைப் பாடா தவர் சிலர். எனவே காளி முத்தம்மையார் இவரைப் பாடியதில் வியப்பில்லை. பாடல் பின்வருவது:*

> கடந்தூங்கும் வேழப் பிடர்க்கே வரக்கண்டு கண்கள் முத்து
> வடந்தூங்க வாடும் மயிற்கென் செய்கேன் மணிவாய் திறக்க*
> விடந்தூங்கும் பாம்பின் படத்தேயுறுத்தி மிதித்தொருகால்
> படந்தூங்க ஆடும் புயலே பராக்ரா பாண்டியனே.

### *பதிப்பு*

*அம்மைச்சி செய்தார் என்று இது 1775இல் முதன்முதல் அச்சிடப்பட்டது.*

## *பகழிக் கூத்தர்*

*பகழிக் கூத்தர் செய்த நூல்களில் மிகவும் பிரசித்தமானது திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ். இந்நூலில் ஆசிரியர் பற்றிய செய்தி எதுவும் புலப்படவில்லை. ஆனால் அவர் செய்த மற்றொரு நூலாகிய சீவக சிந்தாமணிச் சுருக்கம் என்பது அவ ருடைய வரலாற்றைச் சிறிது விளக்கமாகப் புலப்படுத்துகிறது.*

*பகழிக் கூத்தர் இராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள செம்பி நாட்டைச் சேர்ந்த சன்னாசிக் கிராமம் என்ற சிற்றூரில் பிறந்தவர்; இவ்வூர் இப்போது வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என வழங்குகிறது. இவர் முன்னோர் திருப்புல்லாணியில் தருப்ப சயனத்தே அறிதுயில் கொண்டருளும் தருப்பாதன மழகியார் என்ற திருப்பெயர் கொண்ட இராம பிரானடியார்கள்; இவர் தந்தை பெயர் தருப்பாதனன். இச்செய்திகள் அச்சிந்தாமணிச் சுருக்க ஏட்டின் முகப்பில் எழுதப்பட்டுள்ள "செம்பி நாட்டுச் சன்னாசிக் கிராமத்துத் திருப்புல்லாணி மாலடியான் தருப்பா தனன் மகன் பகழிக் கூத்தன் வாக்கு" என்ற குறிப்பினால் தெரிய வருகின்றன. இக்குறிப்பு அன்றியும், ஆசிரியர் தம்மை இவ்வாறு தாமே கூறிக் கொள்வதை அந்நூற் பாயிரச் செய்யுளொன்றா லும் அறிகிறோம்:*

---

* *மணிவாய் திறக்க என்பது முதல் பதிப்பில் பலவாய்கள் தொறும் என்று இடம்பெற்றிருந்தது.*

மாரனாமென வடிவ கொண்ட சீவக சரிதை
மாமுனியுரைத்த சிந்தா
மணியிற் பெருங்கதை எவர்க்குமள விடலொணா
மற்றது தனைச் சுருக்கிச்
சேர நான் என்னுடைய புன் சொற்க ளாயினும்
செப்புவனென விரும்பிச்
செந்தமிழ்ப் பாவாணர் திருவுளக் கருணையென்
சென்னியுற வைத்துரைத்தேன்
ஆர நாண் மலர் நெட்டிதழ்க் குவளை யகவயலில்
அகடு நொந்தொரு கோடி சங்கு
அடைகிடக்கக் குருடு பெடையெனச் சிறகால்
அணைத்திடுஞ் செம்பி நாட்டு
வீரநா ராயணச் சதுர்வேத மங்கலம்
விளங்கவே வந்த நெடுமால்
வேதியர் குலாதிபதி தர்ப்பாதனன் புதல்வன்
மிக்க பகழிக் கூத்தனே.

பகழிக்கூத்தர் என்ற பெயரால் அறியப்படும் புலவர் ஒரு வரே; அவரே மேற்குறித்த இரு நூல்களையும் பாடினார் என் பதில் தடையில்லை.

இவர் இரும்பு வேலை செய்யும் கொல்லர் மரபினர் என்பர். இயற்பெயர் கூத்தர்; அம்புகள் செய்து வந்த பரம்பரையாத லினால் பகழிக் கூத்தர் (பகழி - அம்பு) எனப் பெற்றார் எனவும் சிலர் சொல்வதுண்டு, பிராமண குலம் என்றே பலரும் கூறி யுள்ளனர்; பாடலும் கூறும். அன்றியும், சேதுபதிகளின் பழைய தலைநகரான புகலூர் என்ற ஊரில் உள்ள ஐயனார் (அரிகர புத்திரர்) திரு நாமம் பகழிக் கூத்தர் என்றும் சொல்வர்.

வடமொழி தென்மொழி இரண்டிலும் சிறந்த கல்விமா னாக விளங்கிய இவருக்கு நெடுநாள் வயிற்றுவலி மிக்க துன்பம் விளைவித்தது. எந்தக் காலத்திலும் எந்த மருந்தாலும் தீராமல் துன்புற்றிருந்தபோது, ஒரு நாள் திருச்செந்தூர் முருகன் பூசை செய்யும் திரிசுதந்தரர் என்ற இனத்தாருள் ஒருவர் தம் கனவில் தோன்றி "பகழிக்கூத்தா, நம்மீது பிள்ளைத் தமிழ் பாடு" என்று கூறி, இலை விபூதி அளித்ததாகக் கண்டார். விழித்தெழுந்த போது இலையில் விபூதியும் அருகில் பாட்டு எழுதிய ஏடொன் றும் இருக்கக் கண்டார். விபூதியை அணிந்து பாட்டை நோக் கிய போது, அது பின்வருமாறு இருந்தது:

பூமாது போற்றும் புகழ் பகழிக் கூத்தாஉன்
பாமாலை கேட்கயாம் பற்றேமா? – ஏமம்
கொடுக்க அறியேமா கூற்றுவன் வாராமல்
தடுக்க அறியேமா தாம்.

வந்தவர் முருகனே எனத் தெரிந்து அது முதல் இவர் செந்தில் முருகனையே வழிபடலானார். வயிற்று நோயும் தீர்ந்தது. முருகன் மீது இப்பிள்ளைத் தமிழையும் பாடினார். சொற்சுவையும் பொருட் சுவையும் ததும்புமாறும், பல்வகைச் சந்தவிகற்பங்க ளோடும் கற்பனை அலங்காரச் செறிவோடும், நூலைப் பாடி முடித்து, உரிய காலத்தில் முருகப் பெருமான் சந்நிதியிலேயே இதை அரங்கேற்ற முற்பட்டார்.

சபையோர் நூலில் அமைந்த புலவருடைய வாக்குக்கு மிக்க மகிழ்ச்சியடைந்து பாராட்டினராயினும், இவர் முன்னேமே வைணவராயிருந்தவர் என்ற காரணத்தைக் காட்டி, அழுக்காறு கொண்ட சிலர், இவருக்கு மரியாதை செய்தல் தகாது என்று கூறித் தடுத்து விட்டனர். புலவர் இதைப் பொருட்படுத்தாது தம்மைப் பாடுவித்த பெருமான் அருட் செயலை எண்ணித் தம் இல்லம் சென்றுவிட்டார்.

அன்றிரவு முருகன் மார்பில் அலங்காரமாகச் சாத்தியிருந்த மாணிக்கப் பதக்கம் காணாமற் போய்விட்டது. மறுநாள் திரு வனந்தல் சமயத்தில், இது காணாது போனமையறிந்த கோயி லார், எங்குத் தேடினும் பதக்கம் அகப்படாமல் அதிகாலை யில் உறங்கிக்கொண்டிருந்த பகழிக் கூத்தர் கழுத்தில் இது அணி யப்பட்டிருத்தலைக் கண்டு பெருவியப் படைந்தனர். இது புல வரின் பெருமையை உலகுக்கு உணர்த்த வேண்டி முருகன் செய்த திருவிளையாடலே என்று துணிந்து, அவரை வணங்கி, தங்கள் பிழையைப் பொறுக்குமாறு வேண்டி, அவரைப் பல்லக்கிலேற்றி ஊர்வலம் செய்வித்து, உரிய மரியாதைகள் யாவும் செய்தார்கள். அது முதல் இந்நூல் தெய்வத் தமிழ் என்றே கருதப்படலாயிற்று; நாள்தோறும் ஆலயத்தில் பெருமான் சந்நிதியில் அடியார் இந்நூலை ஓதிவரலாயினர்.

இந்நூலின் சிறப்புப் பாயிரப் பாடல் இப்புலவர் திரு மாலடியராயிருந்தவர் என்பதைத் தெரிவிக்கும்:

செந்தமிழ்க்கு வாய்த்த திருச்செந்திற் பதிவாழும்
கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான் – நந்தேர்
திருமாது சேர்மார்பன் தேர்ப்பாகற் கன்பு
தருமால் பகழிக் கூத்தன்.

இக்கதையைச் சிறிது மாற்றிச் சொல்வதும் உண்டு. முருகன் சந்நிதியில் புலவர் தம் நூலை அரங்கேற்ற முடியாமற் போயிற்று. கவலையோடிருந்த அவரிடம் முருகப்பெருமான் தமது பதக்கத்தைத் தந்து ஓரிடத்தில் தங்கியிருக்குமாறு பணித்துக் குலசேகரன் பட்டினம் என்ற ஊரில் வாழ்ந்த காத்த பெருமாள் மூப்பனார் என்பவர் கனவில் தோன்றி அரங்கேற்றத்தை நடத்தித் தருமாறு கட்டளையிட்டார். அவரும் அவ்வாறே கோயிலில் பதக்கத்தைக் காணாமல் தவித்துத் தேடிய கோயில் அந்தணரை அழைத்துக் கொண்டு, பகழிக் கூத்தரை அடைந்து அவரையழைத்து வந்து அரங்கேற்றத்தை நிறைவேற்றி அவருக்குத் தக்க மரியாதையும் பரிசிலும் தந்து, பதக்கத்தை மீட்டுக் கோயிலுக்கு அளித்தனர். அரங்கேற்றித்தின்போது பெருமானே அவையில் ஒரு புலவராக அமர்ந்திருந்து "செந்தமிழ்க்கு வாய்த்த" என்ற சிறப்புப் பாயிரப் பாடலையும் பாடியளித்து மறைந்தார். எனினும், முதலிற் கூறிய வரலாறே பெரு வழக்காயுள்ளது.

**காலம்**

திண்டிமம் முழக்குதல் என்ற தொடரை இவர் ஈரிடங்களில் பிள்ளைத் தமிழில் உபயோகிப்பது கொண்டு மு. ராகவையங்கார் இவர் காலம் அருணகிரிநாதர் காலம் என முடிவு செய்திருக்கிறார். திண்டிமம் டிண்டிமம் என்ற வடசொல்; ஒரு வகைப்பறை என்பது பிங்கல நிகண்டு.

பண்தரு பெருங்கவிப் புலமைக்கு நீ சொன்ன
படி திண்டிமம் முழக்க. (சப்பாணி–2)

பாவாணர் மங்கலக் கவிமொழி பாடிப்
பரிந்து திண்டிமம் முழக்க. (சிறுபறை–4)

ஆசுகவி பாடவல்ல பெரும் புலவர்கள் தம் புலமைக்கு அடையாளமாகத் திண்டிமம் முழக்கும் உரிமை பெற்றிருந்தார்கள். அவ்வாறு உரிமை பெற்றோருள் சிறந்தவர் அருணகிரிநாதர். இவ்வரிகளில் பகழிக் கூத்தர் அருணகிரிநாதரையே

குறிப்பிடுகின்றார். ஆகவே இவர் காலம் அருணகிரியார் காலம் அல்லது அதையொட்டிப் பின்வரும் காலமென்பது ஐயங்கார் கருத்து.

இந்த அடிப்படை பொருந்துமா என்ற ஐயம் இருந்த போதிலும், வேறு வகையில் பகழிக் கூத்தர் காலம் அருணகிரி நாதரை யொட்டியே இருக்கலாம் என்பதற்குப் பல சான்றுகள் நூலகத்துக் கிடைக்கின்றன. அவற்றையும் இங்கு முறையாகக் குறிப்பிடுவோம்.

முதலாவதாக இவர் கூறும் வரலாறு அவ்வையார் விநாயக பூசை செய்ததும் அகவல் பாடியதும் பழமையாக வழங்கும் வரலாறு. இதன் உண்மை எவ்வாறிருந்த போதிலும், இக்கதை வழங்கியது என்பதை மட்டும் நாம் அறிவோம். இந்நூலின் வரலாற்றைக் கூறியவிடத்து, இதன் காலம் சுமார் 1350 ஆக இருத்தல் கூடும் என்று குறிப்பிட்டோம். அவ்வையாரை விநாயகப் பெருமான் கயிலையில் தூக்கிவிட்டார் என்ற கதையை மட்டும் பகழிக்கூத்தர் குறிப்பிடுகிறார்:

**கருணையின் வழிபடு முதியவள்தனை உயர்**
**கயிலையின் ஒரு முறை உய்த்த விதத்தினர். 4**

இக்கதை பின்வந்த ஆசிரியர்களால் பொதுவாக எவ்விடத்தும் சொல்லப்பட்டதில்லை. கூத்தர் இதைக் கூறுகிறார். இவர் அவ் வையார் காலத்தை ஒட்டி வாழ்ந்து இவ்வரலாற்றை அறிந்து குறிப்பிடுகின்றார்; பிற்காலத்தில் ஒருகால் இவ்வரலாறு மறைந்து போயிற்று என்றும் நாம் யூகிக்கலாம். அருணகிரிநாதர் காலமே இவருக்கும் உரியது என்று கூறியமையால், இவர் காலமும் 14ஆம் நூற்றாண்டின் இறுதியும் 15ஆம் நூற்றாண்டின் தொடக்கமு மாகிறது. அதாவது கி.பி. 1375-1425க்குள் அவ்வையாருக்குப் பின் இவர் வந்தார் என்ற கருத்துக்கும் இது பொருந்துவதாகிறது.

இரண்டாவதாக, சில சொற்களின் ஆட்சி. மேகாரம், பவுரி என்பன பிள்ளைத் தமிழில் வரும் சில அருஞ்சொற்கள்.

மேகாரம் என்ற சொல் பல இடங்களில் வருகிறது. மேகாரம் என்பது மயில்; மேகங்களின் முழக்கம் கேட்டு மயில் மகிழ்வது அதன் இயல்பாதலாலே அதற்கு இப்பெயர் வந்தது என யூகிக்கலாம். இச்சொல் வடமொழி; மேகானந்தி என்பது வடமொழியில் மயில். கடைசி மூன்று பாடல்களின் மகுடத்தில், மேகாரம் என்ற சொல் வருகிறது. (9, 10, 11);

தோகை மேகார வாகன செந்திலாய் உனது
துகிரில் விளை முத்த மருளே.

அம்புலிப் பருவத்தில் (1):

கோளரவைக் கொத்தி எறியும் மேகாரம் இக்
குமரனுக்குண்டு கண்டாய்.

என்கிறார். மேகாரம் என்ற சொல் அருணகிரிநாதர் வாக்கிலும் வருகிறது. 'உகரமெடுத்தாடு மேகாரமீது மிசை வரவேணும்' என்பது பழனிக்குரிய திருப்புகழ். எனவே, பிறரிடம் இச்சொல் அதிகம் ஆட்சி பெறாத காரணத்தால், இது ஒரு காலத்தில் ஒரு சூழ்நிலையில் மட்டும் புதிதாக ஆட்சிக்கு வந்ததென்று கருத இடமிருக்கிறது. ஆதலால் இச்சொல்லைப் பயன்படுத்தும் பகழிக்கூத்தர் அருணகிரிநாதர் காலத்தவர். அவரோடு பழகியவர் என்று கருதுவதற்கு இடமுண்டு.

இனி பவுரி என்ற சொல்,

உடைமணி கனக பரிபுரம் முரல
ஒருமுறை பவுரி கொண்ட மெய்க் கூத்தினர். 2

என்று பவுரிக் கூத்தைக் குறிப்பிடுகின்றார். பவுரி என்ற சொல்லும் புதிதாக 14-15ஆம் நூற்றாண்டுகளில் தமிழில் அதிக ஆட்சிக்கு வந்த சொல்லென்று தெரிகிறது. 'பாடுங் கவுரிபவுரி கொண்டாட' என்பார் அருணகிரிநாதர், கந்தரலங்காரத்தில் (68). கண்ணுடைய வள்ளல் தம்முடைய ஒழிவிலொடுக்கம் முதற்பாடலில் இச் சொல்லைக் குறிப்பிடுகிறார்; இவர் காலம் கி.பி. 1400-25.

வேதாகமப் பவுரி வீசும் களாச நிலை
ஆதார சத்தி அபிடேகம்.

அருணகிரிநாதருக்குச் சற்று மூத்தவரெனக் கருதப்படும் வில்லி புத்தூரார் இச்சொல்லை உபயோகிக்கிறார். காளை பவுரி வந்து - (பாரதம் நிரை மீட்சிச் சருக்கம் 98) பிற்காலத்தில் காளத்திநாதர் உலா (கண்ணி 107; 16 நூ.) முதலான நூல்கள் இச்சொல்லை ஆளுகின்றன. இவற்றாலும் பகழிக் கூத்தர் காலம் அருணகிரி நாதர் காலமே என்ற கருத்து வலியுறுகின்றது.

நால்வகைக் கவிகள் முன்னமே நிகண்டுகளிற் கூறப்பெற்றிருந்தாலும், இவ்வாசிரியர் அவற்றைப் பாடலில் குறிப்பிடும் செய்தி அறியத்தக்கது:

ஆயும் பெரும் பனுவர் ஆசுகவி மதுர கவி
அரிய சித்திர கவிதை வித்–
தார கவி யிடு முடிப்புக் குளம் மயங்காமல்
அடியவர்க் கருள் குருபரன். 8

என்பது காண்க; இதே காலத்தில் ஆசுகவியாகக் காளமேகமும் மதுர கவியாக அதிமதுர கவிராயரும் பிரசித்தி பெற்றிருந்தார்கள்.

பாட்டியல் கூறும் இலக்கணங்கள் பிள்ளைத்தமிழ் இலக்கணத்தை விரிவாய்க் கூறுகின்றன. அவற்றுள்ளும் பன்னிரு பாட்டியலும் நவநீதப் பாட்டியலும் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில் காப்புக் கூறத்தக்க தெய்வங்களின் வரிசையில் சாத்தனையும் சேர்த்துக் கூறுகின்றன. முதல் தனிப்பிள்ளைத் தமிழ் நூலாகிய குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் ஒட்டக்கூத்தர் சாத்தனுக்கு (ஐயனார்) வணக்கம் கூறுகிறார். ஒட்டக்கூத்தருக்குப் பின் சில நூற்றாண்டுகள் வரை எழுந்த பிள்ளைத் தமிழ் பிரபந்தங்கள் அனைத்தையும் ஆராய்ந்தால், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் ஒன்றே பண்டை இலக்கணம் கூறிய மரபையொட்டி சாத்தன் காக்க என்று கூறுவது; ஏனையவை கூறவில்லை. (19ஆம் நூற்றாண்டுக்குரிய திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் சாத்தனும் பிறதெய்வங்களும் காக்கவென்று ஒரே பாட்டில் பலரைக் கூறுகிறது.) இதைக் கருதும்போது திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் காலத்தால் மிகவும் முற்பட்டதென்பதில் ஐயமில்லை. இதன் ஆசிரியர் 15ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில் வாழ்ந்திருந்தார் என்ற கருத்துக்கு இது அரண் செய்கிறது.

### திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்

இந்நூல் முருகன் அன்பர்களிடையே மிகவும் பிரசித்தமாய் வழங்குவது. பிற பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களைப் போலவே இதுவும் காப்பு முதல் சிறுதேர் ஈறாகப் பத்துப் பருவங்களையுடையது. பாடல் தொகை 103: முத்தம் வாரானை அம்புலியாகிய பருவங்கள் மட்டும் 11 பாடல்கள். ஆசிரியர் வரலாற்றில் குறிப்பிட்ட "பூமாது" "செந்தமிழ்க்கு" என்ற இரு வெண்பாக்களும், அவையடக்கப் பாடல் ஒன்றும் நூல் முகப்பில் உள்ளன. நூற்பயன் கூறும் ஆசிரிய விருத்தமொன்று இறுதியில் உள்ளது. "திருச்செந்தில் வருமயில் வாகனக் கடவுள் என்குரு நாதன்... இனிய பிள்ளைத்திருநாமம் எழுதுவார்... கற்பார் படிப்பார்... சிவபதம் எய்துவாரே" என்று இது கூறுகிறது. நூல் முடிவு

சிறுதேர் இறுதியில் ஐந்து பாடல்களும் அறுசீர் விருத்தமாக உள்ளவை. இங்கு வழக்கமாய்ப் பருவத்துக்கு மகுடமாய்ப் பாடல் தோறும் "உருட்டுக சிறுதேரே" என்று வருகின்ற தொடரானது ஒவ்வொரு பாடலிலும் நான்கடியின் மிக்கு ஐந்தாம் அடியாக அமைக்கப்பெற்றுள்ளது:

> உரக நாயகன் பஃறலை பொடிபட
> உருட்டுக சிறு தேரே.

இவ்வாறுள்ள அமைப்பு பிற பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களில் காணுதல் அரிது.

நூற்பொருள் பல இடங்களில் மிகவும் சிறப்பாக உள்ளது. முருகன் அவதாரம் (43) படை வீடுகள் (80) முருகன் பரத்துவம் (98) என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. சிறுதேர்ப் பருவத்து 4ஆம் பாடலில் விளங்காத தல வரலாறுகளைக் குறிப்பிடுகின்றார்: கொடிமரம் எருமை இளநீர் என்பன. முத்தப் பருவம் 10ஆம் பாடலில் முத்துக்குரிய 34 குற்றங்களை நிரலே கூறுவதும் அருமையான செய்தி.

வாரானைப் பருவம் 9ஆம் பாடலான "பேராதரிக்கும்" என்ற பாடலைப் பாடக் கேட்டு உருகாதவர் தமிழருள் இரார். சென்ற தலைமுறையில் உருக்கமாய்ப் பாடிய இசைத்தட்டின் மூலம் இது அத்துணைப் புகழ் பெற்றிருந்தது. முத்தப் பருவத் முதற்பாட்டில் 'வலம்புரிகள் கான்ற மணிக்கு விலையுண்டு, தந்தி மருங்கில் விளைதரளம், சாலிக்குளிர் முத்து, கொண்டல் தருநித்திலம் இவற்றுக்கு விலையுண்டு, உன் கனிவாய் முத்தந் தனக்கு விலையில்லை' என்பது மிகவும் நயமான பாட்டு. இந்நயங்கள் கருதியே போலும், "பகழிக் கூத்தர் பிள்ளைத் தமிழ் பெரிய தமிழ்" என்றொரு பழமொழியும் சொல்வார்கள்.

### சிந்தாமணிச் சுருக்கம்

இப்புலவர் செய்த இந்நூலில் இன்று இலக்கணையாரிலம்பகம் வரையிலுமே கிடைப்பதாக மு. ராகவையங்கார் குறிப்பிட்டிருக்கிறார். இவ்விலம்பகங்கள் 10; கிடைத்த வரை பாடல் தொகை 318. பாடல்கள் யாவும் பதினான்கு சீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்; யாவும் அந்தாதித் தொடை. நல்ல நடை. சிந்தாமணித் தொடர்களாலேயே ஆசிரியர் இச்சுருக்கம் செய்திருக்கிறார்.

*ஆசிரியர் வரலாறு கூறிய இடத்து இதன் பாயிரச் செய்யுளொன்று காட்டப்பட்டது. பின்வருவது இதன் அவையடக்கப் பாடல். இதனால் இந்நூலை மதுரையில் பாடி அரங்கேற்றினாரென்று கருதுதல் தகும்:*

கொல்லையிி லிரும்புனக் குற்றியை யடைந்த புற்
கோடா தெனப் பழமை நூல்
கூறுந் திரத்தைக் குறித்துக் கருத்துடன்
கூறினேன் என்னுடைய புன்
சொல்லையும் பொருளையும் காதையிற் படு வழுத்
தொகையையும் அளந்து கண்டு
சோர்வு ரைக்கப் பெரும் பாரமோ பணைமுலைத்
துடியிடைப் பவளவாய் வெண்
முல்லை நகை அங்கயற் கண்ணுமை மடந்தையுடன்
முன்னே முளைக்கும் பிரான்
முடி சூடு மெம் பிரான் மூவாத தம்பிரான்
முத்தமிழ்த் திருவாலவாய்
எல்லைதனின் மதுரைமா நகரியி லிருந்திவை
எடுத்து ரைத்தே னாதலால்
இத்தல விசேடத்தை யெண்ணியும் பெரியோர்கள்
இகழப் படார் காணுமே.

*இவர் சிவபிரானிடத்து ஈடுபட்ட பக்தி முதிர்வுடையவரென்பது இப்பாடலால் விளங்குகிறது. இதற்கு இவர் வைத்த பெயர்* **சிந்தாமணி விளக்கம்**. *இதுவன்றியும்* **சிந்தாமணி மாலை** *என்றொரு நூலிருப்பதாக டாக்டர் சாமிநாதையரவர்கள் குறித்திருக்கிறார்கள்.*

## *கபிலரகவல்*

*சமூகப்புரட்சி என்ற சொற்றொடரை இந்தக் காலத்தில் அதிகம் கேள்விப்படுகிறோம்; ஆனால் சொல் புதிதேயன்றி, இந்தக் காரியம் புதிதன்று. பழங்காலந் தொடங்கியே சமுகப் புரட்சிகள் வெவ்வேறு அளவில்நடைபெற்று வந்திருக்கின்றன. இப்புரட்சியின் கவியுருவ வெளிப்பாடாகத் தோன்றி இன்று நமக்குக் கிடைப்பது* **கபிலரகவல்** *என்ற சிறு நூலாகும்.*

சாதி வேற்றுமை என்ற ஒரு கோளாறு நாட்டில் புகுந்தது. கடவுளுக்குச் சாதி வேற்றுமை இல்லை, அவருடைய மெய்யடியார்களுக்கும் ஞானிகளுக்கும் சாதி வேற்றுமை இல்லை என்று அடியார் வரலாறுகள் காட்டுகின்றன. "அங்கமெல்லாம் குறைந்தழுகு தொழுநோயரா்ய், ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், அவர் கடவுளுக்கு அன்பராகில் அவரே நாம் வணங்கும் கடவுள்" என்கிறார் அப்பர் சுவாமிகள். "குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை நலந்தான் இலாத சண்டாளராகிலும் திருமாலுக்கு அடியார் எமக்கு இறைவர்" என்று நம்மாழ்வார் பாடுகிறார்.

பாடுவது மட்டுமல்ல; வரலாறுகளும் இதையே சொல்கின்றன. நந்தனாரைத் தில்லை மூவாயிரவர் அழைத்துச் சென்று நடராச தரிசனம் செய்வித்தார்கள். திருப்பாணாழ்வாரை லோக சாரங்க முனிவர் தம் தோளில் ஏற்றிக் கொண்டு அரங்கநாதன் சந்நிதியில் சேர்ப்பித்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் சம்பந்தரோடு உடன் உறையும் வாழ்க்கை பெற்றார். வரந்தரும் பெருமாளரையர் என்ற அரையர் பொருட்டு அரங்கநாதப் பெருமான் பள்ளு உற்சவம் கொண்டருளினார். சோமயாஜி மாறர் செய்த யாகத்தில் தியாகராசப் பெருமான் புலையர் வேடத்தில் எழுந்தருளினார் என்பது தல வரலாறு. மாறனேர் நம்பி வரலாறு, பிள்ளையுறங்கா வில்லிதாசர் வரலாறு, விளாஞ்சோலைப் பிள்ளை வரலாறு போன்ற வைணவ ஆசாரியர் வரலாறுகள் கீழ்ச்சாதி என்று கருதிய சாதியில் பிறந்த பெருஞானிகள் எப்படி மேல்சாதியினருக்கு ஆசாரியராயினர் என்பதை நன்குணர்த்தும்.

திருக்குறுங்குடியில் நம்பாடுவான் என்ற தாழ்ந்த சாதி அடியவர் பெருமையைச் சிறப்பிக்கும் பொருட்டு அவர் கைசிகப் பண் பாடிய ஏகாதசியைக் கைசிக ஏகாதசி என்று சிறப்பாகத் திருமால் அடியார்கள் கொண்டாடி வருகிறார்கள்.

பிற்காலத்தில் திருவிச நல்லூரில் வாழ்ந்த ஸ்ரீதர ஐயாவாள் என்ற பெரியார் தம் தந்தை சிராத்த தினத்தன்று பசியோடு வந்த ஒரு புலையனுக்கு உணவளித்த கதை பிரசித்தமாய்த் தெரிந்தது.

இவ்வாறு எழுந்த கதைகள் எண்ணற்றன. இவை யாவும் பத்தித்துறையில் சாதி வேற்றுமை இல்லை, சாதியில் உயர்வு

தாழ்வு இல்லை, இறைவன் சந்நிதியில் எல்லோரும் சமம் என்ற உண்மையை உணர்த்த வந்த வரலாறுகள். இவ்விடங்களிலெல் லாம் தாழ்ந்த வகுப்பு அடியவரின் பெருமையை மக்களுக்கு இறைவன் அருளே உணர்த்துகிறது.

இந்த மரபுக்குச் சற்று வேறான வரலாறு கபிலரகவலின் வரலாறு. இங்கு, சாதியால் குறைவு சொல்லப் பெறுகின்றவ ராகிய கபிலரே முன்வந்து, சாதி என்ற போர்வையைக் கிழித்து; மனிதத் தன்மையே பெரிது என்று நிலைநாட்டுகிறார்.

கபிலர் என்ற பெயரால் புலவர் பலர் இருந்திருக்கின்றனர். ஒருவர் பாரியின் தோழராகச் சங்க நூல்களின் காலத்தில் வாழ்ந்தவர். மற்றொருவர் 10ஆம் நூற்றாண்டுக்குச் சற்றுமுன் வாழ்ந்து 11ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ள மூன்று பிரபந்தங்களைப் பாடியிருக்கிறார். இக்கபிலர், கபில தேவ நாயனார் என்றும் வழங்கப் பெறுகிறார். இவ்விருவரில் ஒருவர் பிறந்த ஊர் திருவாதவூர் என்ற வரலாறு உண்டு.

இனி மூன்றாவது கபிலர் ஒருவர், இவர்களுக்குப் பின்னர் வாழ்ந்தார். இவரே இங்கு குறிப்பிட்ட கபிலரகவல் பாடினார். இந்த அகவலால் இவருடைய வரலாறு விளங்குகிறது. தாம் பிறந்த வரலாற்றை இப்பாடலில் இவர் கூறுகின்றார். பிராமண னாகிய பகவன் என்பவன் கருவூரில் புலையர் குலத்தில் பிறந்த ஆதி என்பவளை மணந்து ஏழு குழந்தைகளைப் பெற்றான். பிறந்த குழந்தையை அவள் என்ன செய்தாலும் கேட்பதில்லை என்ற பிரதிக்ஞை செய்து கொடுத்தே மணந்தான். அவ்வேழு குழந்தைகள் அவ்வை, உப்பை, உறுவை, வள்ளி, வள்ளுவர், கபிலர் அதிகமான் என்போர். பிறந்த ஒவ்வொரு குழந்தையை யும் பிறந்த இடத்திலேயே விட்டுவிட்டுத் தாயானவள் அகன்று சென்று விட்டாள். பிரிய மனமில்லாமல் தந்தை அங்கு நின்று தவித்த போது, ஒவ்வொரு குழந்தையும் கடவுள் அருளால் ஒவ் வொரு பாடல் பாடிற்று. அப்போது கபிலர் பாடிய பாடல்:

**கண்ணுழையாக் காட்டிற் கடுமுள் மரத்துக்கும்**
**உண்ணும் படிதண்ணீர் ஊட்டுவார் – எண்ணும்**
**நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்**
**தமக்குந் தொழிலென்ன தான்.**

கபிலர் வளர்ந்த இடம் திருவாரூரில் அந்தணர் வாழ்ந்த அக்கிரகாரம். அனாதையாகக் கிடந்த இக் குழந்தையை எடுத்து ஓர் அந்தணன் வளர்த்து வந்தான். குழந்தைக்கு வயது ஏழு ஆனதும் அவன் அதற்கு உபநயனத்திற்கான ஏற்பாடுகள் செய் தான். அப்போது அந்தணர் பலர்கூடி, குழந்தையின் வரலாறு ஒன்றும் தெரியாமலேயே அதை அந்தணர் குழந்தையாகக் கருதிப் பூணூல் அணிவித்தல் கூடாது என்று தடுத்தனர். வளர்த்த தகப்பன் ஒன்றும் சொல்ல முடியாது திகைக்கவே, குழந்தை யாயிருந்த கபிலரே கடவுள் அருளால் இந்த அகவலைப் பாடி, கூடியிருந்த அனைவர்க்கும் நற்புத்தி புகட்டினார்.

இது நெடுநாளாகச் சொல்லப்பட்டு வருகின்ற வரலாறு. இதில் பல பகுதிகள் ஒப்புக்கொள்வதற்கு இயலாதன. அவ்வை திருவள்ளுவர் கபிலர் அதிகமான் என்ற நால்வரும் உடன் பிறந் தவர்கள் என்ற கருத்து கற்பனையே மற்ற உப்பை, உறுவை, வள்ளி என்போரைப் பற்றிய செய்தி எதுவும் தெரியவில்லை. எனினும், ஒரு புலவர் இருந்து இவ்வகவற் பாடலைப் பாடினார் என்பது உண்மை. அவர் பெயர் கபிலராகவே இருக்கலாம். இப்பாடலை அவர் ஏழு வயதுக் குழந்தையாகப் பாடியிரா விட்டாலும் கூட, வயது வந்த, உணர்ச்சி வேகம் பெருந்திய இளம் காளைப் பருவத்தில் இதைப் பாடியிருக்கலாம். அற்புதச் செய்திகளுக்கே மதிப்பிருந்த காலத்தில், வயது வந்த இளைஞரை ஏழு வயதுக் குழந்தையாகக் கதை சித்தரிப்பது ஏற்கக்கூடியதே. அவர் அனாதையாக இருந்தார், அவர் சாதியைப் பற்றிப் பிறர் பழித்தார்கள், அதனால் ஆத்திரம் மூண்டு இவ்வாறு பாடினார் என்று கருதுவது நியாயமாகும், பொருந்தும்.

இச் சிறு பாடல் 136 அடிகள் கொண்டது. இதற்குச் சமமான வேகம் பொருந்திய உணர்ச்சி மிக்க பாடல் தமிழில் வேறு சொல்லமுடியாது.

'மனிதராய்ப் பிறந்தோர் வாழ்நாள் நிலையற்றது என நினைந்து பிறருக்கு இட்டு உண்டு வாழவேண்டும். கூற்றுவன் உயிரைக் கவரும்போது எந்த வேறுபாடும் பார்ப்பதில்லை. மனிதகுலம் ஒன்று. ஆனால் இதில் பார்ப்பனரே குல வேற்று மையை உண்டாக்கினர். ஆயினும் தாழ்ந்த நிலையில் வந்தவ ராயினும், தம் ஒழுக்கத்தால் யாரும் மிக உயர்ந்த நிலைக்கு வரமுடியுமென்பதைச் சரித்திரம் சொல்லும் சீலம் பெரிதே

யன்றிப் பிறப்புப் பெரிதன்று. மக்களாய்ப் பிறந்தோர் இரப்பவர்க்கு இட்டு, புலையும் கொலையும் களவும் தவிர்ந்து அறத்தில் நிற்பார்களாக' என்பதே கபிலருடைய உபதேசம்.

இது அந்தணர் மரபினரைப் பழிப்பதற்காகச் செய்யப்பட்ட பாடல் என்று சிலர் கருதுகின்றனர். அது பிழை. தாழ்ந்த குலம் என்று பழிக்கும் மேல் வகுப்பினர் அனைவரையும் நோக்கி நல்லறிவுச்சுடர் கொளுத்துவதற்காகவே இது பாடப்பட்டது. நாடகப் பாங்கில், ஒரு கட்டத்தில் பேசுவதாக அமைந்திருப்பதால் இதற்கு வலிமை அதிகமாகிறது. பொதுவாக உலகத்தாரை நோக்கிச் சொன்னதன்றி, இது பார்ப்பன மாந்தரை மட்டும் பழிப்பது எனல் பிழையாகும்.

இந்தக் கபிலரைக் குறித்து வேறு எந்தச் செய்தியும் தெரியவில்லை; காலமும் அறிய வழியில்லை. எனினும் இரண்டு கருத்துக்களை இங்குக் குறிப்பிடலாம். 14 - 15 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ஞானிகள் பலர் அகவற்பாவில் நூல் செய்வதை ஒரு முறையாகக் கொண்டிருந்தார்கள். அவ்வையார் **விநாயகரகவல்** பாடினார். சித்தராக வாழ்ந்த பிற்காலப் பட்டினத்தார் தனிப்பாடல்கள் பல பாடிய போதிலும் கூட, **கோயில் திருவகவல் கச்சித் திருவகவல்** என்று நான்கு நூல்கள் பாடினார். மெய்கண்ட பரம்பரையில் வந்த ஆசிரியரான காவை அம்பலநாதத் தம்பிரான் என்பவர், பல சாத்திர நூல்களை அகவலாகவே பாடினார். சட்டை நாத வள்ளல் சதாசிவரூபம் என்ற சாத்திரத்தை அகவலாகவே பாடினார். இவ்வாறு அகவற்பாவில் நூல் பாடுவது ஒரு மரபாக ஏற்பட்டிருந்த இந்தக் காலத்தில் இக் கபிலரும் வாழ்ந்தார் என்பது பிழையாகாது.

மேலும், கபிலரகவலின் சொல் நடையானது இது மிகவும் பழைய நூல் என்று கருத இடம் தராது. கருத்தினுடைய அமைதி மிகவும் பிற்காலத்து நூலாக இதைக்கொள்ளவும் இடம் தராது. இதிலுள்ள சில சொற்கள் மேற்குறிப்பிட்ட காலத்துக் குரியவை என்று கருத இடம் கொடுப்பவை - உதாரணம்: கூத்தி சண்டாளி, சான்றார் (சாணார்) போன்றன. எனவே இந்த நூலும் 15ஆம் நூற்றாண்டுக்குரியது என்று கொள்ளுகின்றோம். வேறு எவ்வித ஆதரவும் கிடைக்காத போது கிடைப்பவற்றைக் கொண்டு இவ்வாறு முடிவு செய்வது பிழையாகாது.

சாதி குலம் முதலியவற்றால் வரும் கொடுமையைக் கண்டிக்கும் சூழ்நிலையும் இக்காலத்தில் எழுந்தது. அவ்வையார் பட்டினத்தார் பத்திரகிரியார் முதலியோரும் சாதியைப் பழிக்கின்றவர்கள் என்பது இங்குக் கருதத்தக்கது.

கபிலரகவல் கூறும் உபதேசம் எக்காலத்துக்குமே பொருந்துவதாகும்:

குலமு மொன்றே குடியு மொன்றே,
இறப்பு மொன்றே பிறப்பு மொன்றே,
வழிபடு தெய்வமும் ஒன்றே, ஆதலால்,
முன்னோர் உரைத்த மொழி தவறாமல்,
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டு,
புலையும் கொலையும் களவும் தவிர்ந்து,
நிலை பெற அறத்தில் நிற்பதை யறிந்து,
ஆணும் பெண்ணும் அல்லதை உணர்ந்து,
பேணி யுரைப்பது பிழைஎனப் படாது,
சிறப்பும் சீலமும் அல்லது,
பிறப்பு நலம் தருமோ பேதையீரே?

கபிலரகவலை யொப்ப, சாதியால் உயர்வு கூறுவோரைக் கண்டிக்கும் வேறு நூல், பத்துப் பாடல்கள் கொண்ட பாய்ச்சலூர் பதிகம் என்ற ஒரு நாடோடிப் பாட்டு, தீண்டாத வகுப்புப் பெண்ணொருத்தி தன்னைக் காதலித்த ஓர் அந்தண இளைஞனை மணக்கும் போது தடை செய்வோரை எதிர்க்கும் முகத்தால் இப்பாடல்களைப் பாடுகிறாள்; நல்ல பாடல்கள். இப்பதிகமும் இக்காலப் பகுதியை அடுத்து வந்ததாகவே இருக்கலாம் (பதின்மூன்றாம் அத்தியாயம் பார்க்க).



*அத்தியாயம் 12*

# சித்தர் பாடல்

## *முன்னுரை*

*14ஆம் நூற்றாண்டுப் புலவர் வரலாற்றில் இதே பகுதியில், சித்தர் என்று கருதப் பெறுகின்ற சிவவாக்கியர், பிற்காலப் பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகிய மூவர் வரலாறுகளும், பெண்பாற் சித்தர் என்று நாம் கருதுகின்ற அவ்வையார் வரலாறும் விரிவாகப் பேசப்பட்டன. அவர்கள் பெயரோடு சித்தர் என்ற சொல் சாத்தி வழங்கப் பெறாவிட்டாலும், அப்பெயர் அவர்கள் அனைவருக்குமே நன்கு பொருந்தும்.*

*சித்தர் என்ற பெயரில் கருத்து விளக்கமும், நவநாத சித்தர், பதினெண் சித்தர் என்ற வரலாறுகளும் அங்கு விரிவாக ஆராயப் பட்டன. பதினெண் சித்தர் பட்டியல் அங்கு (14 நூற்றாண்டு வரலாறு) இரு வகையாகச் சொல்லப்பட்டது. இப்பட்டியல் பின்னும் பல வகையான மாறுதல்களுக்கும் உட்பட்டது என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. 19ஆம் நூற்றாண்டில் நிஜானந்த போதம் என்ற சாத்திர நூல் செய்த அருணாசல குரு என்பவர் இராயவேலூர் அமுத சித்தர் என்ற தமது குருவுக்குத் தனி வணக்கம் கூறியதோடு; சித்தர் வணக்கம் என்ற ஒரு பாடல் பாடிச் சேர்த்திருக்கிறார். இதனுள் பதினெண் சித்தருக்கும் வணக்கம் கூறியிருக்கிறார்; இவர்களன்றி, நவநாதர், இவர் மர பினர், சிவன் திருமால் இருவரின் அடியார்கள் ஆகியோரை யும் வணங்குகிறேன் என்றும் கூறுகிறார்:*

**சீரார்ந்த துணர்மலியு தளிகன்* பண் பட்டவிதி**
**திகழ்கின்ற பொதிகை முனிவர்**
**திவ்யகுண போகர்நந் தீசர்பிண் ணாக்கீசர்**
**சீலகரு வூரரெங்கும்.**

---

* *உதளிகன் - பெயர் விளங்கவில்லை; ஒரு கால் பனையோலைக் குடிசையில் வாழ்ந்த ஒரு சித்தர் போலும்.*

பேரார்ந்த சுந்தரா னந்தர்திரு மூலர்மிகு
　　பெருமைசேர் கொங்கண முனி
பிரமமுனி ரோமமுனி வாசமுனி அமலகுரு
　　பரமமுனி கமலமுனிவர்

ஏரார்ந்த கோரக்கர் சட்டைமுனி மச்சமுனி
　　இடைக்காடர் முதலியர்களோடு
இன்னமுயர் முத்தருயர் முத்தர்நவ நாதர்புவி
　　யிவர்மரபி லுற்ற புனிதர்

காராந்த சுந்தரக் கடவுளடி யார்மலர்க்
　　கண்ணனடி யாரிவர் கள்தம்
கனமிகுந் திடுவனச பாதமல ரென்றும்
　　கருத்தி லஞ்சலி செய்குவாம்.

இவ்வருணாசல குருவே, பின்னரும் ஒரு நீண்ட சித்தர் பட்டியல் தருகிறார்; அங்கு, சித்தர்களும் அவர்கள் சமாதி கொண்ட இடங்களும் குறிப்பிட்டு, இவை போகர்-ஐந்நூறில் சொல்லப்பட்டுள்ளன என்று எழுதுகிறார். இந்தப் பட்டியலில் அதிகமாய்க் காணப்படும் சித்தர் பெயர்கள்: கும்பமுனி, புலத்தியர், பதஞ்சலி, அழுகண்ணர் (ஒரு கால் அழு குணிச்சித்தர் இவரேயாகலாம்.) நாரதர், காசிபர், வாதர், கன்னிசித்தர், தன்வந்தரி, வசிட்டர், விசுவாமித்திரர், காலாங்கி, கௌதமர், சேதுச்சித்தர், கமலமுனி, சுந்தரர், காளாங்கி என்போர்; இவர்கள் தொகை 32. அகத்தியர் கும்பமுனி என்ற இரு பெயர்கள், காலாங்கி-காளாங்கி, போகர் - போகநாதர் என இரு முறை சில பெயர்கள் வருகின்றன. இவற்றைச் சிந்திக்கும்போது, இரண்டு கருத்துக்கள் புலப்படுகின்றன. ஒன்று, சப்த ரிஷிகளையும் இங்கு சித்தர் வரிசையில் சேர்த்து வைத்திருக்கும் நிலையை முதலில் காண்கிறோம். இரண்டு, வைத்திய நூல் செய்த ஆசிரியர் அனைவரையும் சித்தர் என்றே சொல்லும் ஒரு நிலையையும் காண்கிறோம். இக் காரணங்களாலேயே இச் சித்தர் வரிசை, நாம் கருதும் சித்த மார்க்கத்தில் சென்று ஞானநூல் செய்தார் வரிசைக்கு உரியதன்று என முடிவு செய்தல் வேண்டும்.

மேலும் இங்கு ஒவ்வொரு சித்தரும் சமாதி கொண்ட இடத்தைக் குறிப்பிடும் முயற்சியில், முருகன் தலங்களில் ஐந்து, போகநாதருக்கே சொல்லப்பட்டுள்ளன். ஒருவரே இத்தனை இடங்களில் எவ்வாறு சமாதி கொள்ள முடியும் என்பது விளங்க

வில்லை. அனந்த சயனம், திருப்பதி, திருக்கண்ணங்குடி முதலான வைணவத் தலங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றை யெல்லாம் ஊன்றிப் பார்க்கும்போது, இச்சித்தர் வரிசையும், சமாதித் தலங்களும் ஒருவகையான அபிமானத்தால் எழுந்தன என்றும், இவ்வை உண்மையாகா என்றுமே நாம் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது.

தமிழ்நாட்டில் போகநாதர் உயர்வுடைய ஒரு சித்தர் என்பது ஆன்றோர் வழக்கு. இவர் பெயரால் வைத்தியச் சிறுநூல்கள் சில வழங்குகின்றன. பார்க்கும்போது இவையாவும் மிகவும் பிற் காலத்து நூல்கள் என்பது நன்கு தெரியும். ஆனால் எப்படியும் போகர் எனப் பெயர் படைத்திருந்த சித்தர் ஒருவர் இருந்தமை உண்மை. இவர் பழனியில் மலை மீது சமாதி கொண்டார் என்று வரலாறும் உண்டு. அவர் சமாதியின் மீதே முருகன் ஆலயம் நிருமாணிக்கப்பட்டது என்றும், போகருடைய தவ வலிமையின் பயனாகவே அந்த இடத்தில் முருகப் பெருமான் வரப் பிரசாதி யாய் அன்பர்களுக்கு இன்றும் அருள் வழங்குகிறான் என்றும் பொது மக்கள் நம்புகிறார்கள்.

இனி, இவ்வரிசைகளில் சேராத வேறு சித்தர் பெயர்களும் வழங்குகின்றன. கயிலாயச் சித்தர் என்பவர் ஒருவர்; திருமந் திரத்தில் சில பாடல்களுக்கு உரை எழுதினார். ரேவண சித்தர் என்ற பெயருடைய வீரசைவ ஆசிரியர் பதினாறாம் நூற்றாண்டில் அகராதி நிகண்டும் சிவஞான தீபம் என்ற சமய நூலும் பாடி னார். இப்படி இன்னும் பலர்: “கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா?” என்று வாசுகியம்மையால் கேட்கப் பெற்ற கொங்கணச் சித்தர் ஒருவர். இவர்களனைவரையும் விலக்கி, இப்போது, நூல் செய்தோரில் இக்காலப் பகுதிக்கு உரியர் என்று கருதத்தக்காராய்ச் சித்தர் என்ற பெயராலேயே வழங்கப்பெறு வோர் மிகச் சிலரே.

அவர்களுள் அகப்பேய்ச் சித்தர், அழுகுணிச் சித்தர், இடைக் காட்டுச் சித்தர், கடுவெளிச் சித்தர், ஏனாதிச் சித்தர், காளைச் சித்தர், குதம்பைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர் ஆகியோரைப் பற்றி இங்கு ஆராயலாம். இவர்களுள் ஏனாதிச் சித்தர், காளைச் சித்தர் என்ற இருவர் பாடல்களும் அச்சாகவில்லை; சித்தர் ஞானக்கோவையில் சேரவில்லை. ஏனையோர் பாடல்கள் கிடைத்த வரை அச்சாகி உள்ளன.

சித்தரந்தாதி என்ற 22 கட்டளைக் கலித்துறை கொண்ட சிறு நூல் உரையோடு அச்சிடப்பட்டுள்ளது; சித்தர் பாடியதாக உரையாசிரியர் கூறுகிறார். நல்ல நடை. இது அபிராமி அந்தாதிக்குப் பின்வந்த நூலாயிருக்கும். நாம் கருதும் வரலாற்றிற்குப் பொருந்துவதன்று.

சித்தராரூடம் என்ற நூலை நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். இது பாம்புகளின் பிறப்பு, சாதி, விடம் முதலியவற்றைக் கூறுவது, சாமானிய நடையில் உள்ளது. 'பதினெண் சித்தர்களில் மகாமகத்துவம் பொருந்திய கௌசிக முனிவர் திருவாய் மலர்ந்தருளிய சித்தராரூடம்' என்பது இதன் தலைப்பு. நூல் சித்தர் செய்திருந்தால் பெருமை என்ற கருத்தினால் இதற்குச் சித்தர் பெயர் பொருத்தப்பட்டது போலும். பதின்மூன்று நூற்றாண்டுப் புலவர் வரலாற்றில் இதன் விளக்கத்தைக் காணலாம்.

அடுத்து, திருவிசைப்பா பாடிய திருமாளிகைத் தேவர் கருவூர்த் தேவர் பற்றியும் இத்தகைய வரலாறுகள் உள்ளன. இவற்றுள் சிறிது உண்மையும் பெரும்பகுதி கற்பனையும் கலந்திருக்கும். திருமாளிகைத் தேவர் திருவாடுதுறையிலும், கருவூர்த் தேவர் கருவூரில் தோன்றி தஞ்சையிலும் வாழ்ந்து வந்தார்கள் என்பர். திருமாளிகைத் தேவர் செய்த சிந்து விளையாட்டுக்களை அவர் வரலாற்றில் விளங்கக் காணலாம். (9ஆம் நூற்றாண்டு) கருவூர்த் தேவரைக் கருவூர்ச் சித்தர் என்றும் கூறுவர். இவர் இராசராச சோழன், இராசேந்திர சோழன் ஆகிய இருவர் காலத்திலும் வாழ்ந்தவர். இவர் பெயரால் கருவூரார் ஞானம் முதலிய சில வைத்திய நூல்களும் யோக நூல்களும் வழங்குகின்றன. இவற்றைத் திருவிசைப்பா பாடிய கருவூர்த் தேவரே செய்தார் என்று கருதுவதற்கு இல்லை; இவை மிக்க பிற்கால நூல்களே. இவ்விருவரும் திருவிசைப்பா பாடியுள்ள காரணத்தால் தமிழ் இலக்கிய உலகில் நிகரற்ற இடம் பெற்றுள்ளனர்; சித்தர் என்ற கருத்தில் இவர்கள் இடம் பெறவில்லை.

முன்னே தனியே பெயர் குறிப்பிட்ட எண்மரும் இந்நூற்றாண்டுக்கு உரியோர் என்று கருதி இங்கு குறிப்பிடுகிறோம். இவர்கள் பாடிய பாடல்கள் இவ்வளவே என்று கருதுவதற்கு இல்லை; அன்றியும், வேறு சித்தர்கள் இக்காலத்தில் இல்லை என்றோ, வேறு பாடல்கள் இக்காலத்தில் செய்யப் பெறவில்லை என்றோ இதனால் பொருள் ஆகாது. கிடைத்த பாடல்களைக் கொண்டே நாம் ஆராய முடியும் என்று மட்டுமே சொல்லலாம்.

பதினெண் சித்தர் என்பது வழக்கு. இவர்களுள் சிவ வாக்கியர், பட்டினத்தார் போன்றார் 14ஆம் நூற்றாண்டினர் என்பதை அந்நூற்றாண்டு வரலாற்று நூலில் விளக்கியிருக் கிறோம். இங்கு இதே பகுதியில் மேலுள்ள சித்தர்கள் செய்த நூல்களை ஆராய்கிறோம். நூல் செய்யாத சித்தரைக் குறித்து இவ்விலக்கிய வரலாற்றில் ஆராய இடம் இல்லை. இனி சித்த மார்க்கப் பாடல்களே அன்றி மூலிகை அகராதி போன்ற சில பிற துறை நூல்கள் "பதினெண் சித்தர் திருவாய் மலர்ந்தருளி யவை" என்று வழங்குகின்றன. இவற்றுக்கும் நாம் கருதும் சித்த ருக்கும் எவ்விதத்தொடர்பும் இல்லை. இவற்றுக்கும் சித்தர் பெயர் சூட்டினால் அதிகார பூர்வமானதென்று மக்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்ற கருத்தோடு, பிற்காலத்தில் நூல் செய் தோர் சித்தர் பெயரைத் தங்கள் நூல்களுக்குச் சூட்டிக் கொண் டார்கள் என்று கூறுதல் பொருந்தும்.

## அகப்பேய்ச் சித்தர்

மனத்தைப் பேய் என்று கூறி இவர் பாடியமையான் அகப் பேய்ச் சித்தர் என்று பெயர் பெற்றார். (இப்பொருளறியாது அச்சுப் புத்தகங்களில் அகப்பையென்றே அச்சிடப்பட்டுள்ளது)

> **சமயம் ஆறுமடி – தன்னாலே வந்ததடி**
> **அமைய நின்ற இடம் – அகப்பேய் – ஆராய்ந்து சொல்வாயோ.**

இது இவர் பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டு. இவ்விதமான 90 கண்ணிகள் இவர் பாடியிருக்கிறார். பேய் போல் கட்டுப்படாமல் அலைகின்றபடியால் மனம் பேய் ஆயிற்று. இந்நூலுள் ஆசிரியர் பூதாதிகளின் உற்பத்தி, பிருதிவி முதலானவற்றின் நிறங்கள், அகார உகார மகாரங்கள் விந்து நாதம் சரியை கிரியை யோகம் ஞானம், பாசம் பசு, சைவம், ஆணவம், சும்மாயிருத்தல், அருள் பெறுதல், வாசியிலேறுதல், தன்னையறிதல் முதலான பொருள் களைக் குறிப்பிட்டுப் பாடுகிறார். குழூஉக் குறியாகப் பல செய் திகள் உள்ளமையால் பொருள் ஆங்காங்கு கருகலாயுள்ளது. சைவ சித்தாந்தக் கருத்தையே இவர் சித்தர் நெறியில் சித்தர் மொழியில் பாடுகிறார். பாடல்கள் பாமர மக்கள் நாவிலும் வழங்குபவை.

## அழுகுணிச் சித்தர்

*இவர் பாடல்கள் 32. குழந்தையைக் 'கண்ணம்மா' என்று விளித்துக் கேட்கும் முறையில் தம் பாடல்களைப் பாடியுள்ளார்.*

பையூரிலே இருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் பையூரும் – என் கண்ணம்மா
பாழாய் முடியாவோ?

புல்லரிடத்திலே போய்ப் பொருள் தனக்குக்கையேந்திப்
பல்லை மிகக்காட்டிப் பரக்க விழிக்கிறேண்டி
பல்லை மிகக் காட்டாமல் பரக்க விழிக்காமல்
புல்லரிடம் போகாமல் – என் கண்ணம்மா
பொருள் எனக்குத் தாராயோ.

*கண்ணம்மா என்று விளிப்பது இறைவனை. இவ்வகைப் பாடல்களே பிற்காலத்தில் பாரதியாருக்குக் கண்ணன் பாட்டுப் பாடத் தூண்டுகோலாய் இருந்தனவென்று நாம் கருதலாம்.*

*இவை யாவும் மேற்குறித்தவாறு ஐந்து வரி கொண்ட கண்ணிகள். இரண்டாம் அடி மூன்றாம் அடியில் மடங்கி வருகிறது. முன்னிலைப்படுத்தி விளிக்கும் சொல் "என் கண்ணம்மா" என்று வருகிறது. இவையன்றி வேறு வகையான பாடல்கள் சில அரசாங்கத் தொன்னூல் நிலைய ஏடு ஒன்றில் காணப்படுகின்றன. அவற்றுள் வரிகள் மடங்கி வரவில்லை. தனிச்சொல்லாகிய விளியும் ஆத்தாடி என்று வரக் காண்கிறோம்.*

ஐங்கரனைத் தெண்டனிட்டேன் – ஆத்தாடி
அருளடைய வேணு மென்று
தங்காமல் வந்தொருவன் – ஆத்தாடி
தற்சொ ருபங்காட்டி யென்னை.

கொள்ளைப் பிறப் பறுக்க – ஆத்தாடி
கொண்டான் குருவாகி
கள்ளப் புலனறுக்க – ஆத்தாடி
காரணமாய் வந்தாண்டி.

ஆதாரம் ஆறினையும் – ஆத்தாடி
ஐம்பத்தோ ரக்கரமும்
சூதான கோட்டை யெல்லாம் – ஆத்தாடி
சுட்டான் துரிசறவே.

வாகாதி ஐவரையும் – ஆத்தாடி
மாண்டு விழக் கண்டேண்டி
தத்துவங்க ளெல்லாம் – ஆத்தாடி
தலை கெட்டு வெந்ததடி.

மஞ்சன நீராட்டி – ஆத்தாடி
மலர் பறித்துத் தூவாமல்
நெஞ்சு வெறும் பாழாய் – ஆத்தாடி
நின்றநிலை காணேண்டி.

பாடிப் படித்து – ஆத்தாடி
பன்மலர்கள் சாத்தாமல்
ஓடித் திரியாமல் – ஆத்தாடி
உருக்கெட்டு விட்டேண்டி.

மாணிக்கத் துள்ளொளிபோல் – ஆத்தாடி
மருவி யிருந்தாண்டி
பேணித் தொழுமடியார் – ஆத்தாடி
பேசாப் பெருமையன் காண்.

புத்தி கலங்கியடி – ஆத்தாடி
போந்தேன் பொறி வழியே
பத்தியறியாமல் – ஆத்தாடி
பாழில் கவிழ்த்தேனே.

தோற்ற மொடுக்க மில்லா – ஆத்தாடி
தொல் பொருளை அறியார்கள். –

*இப்பாடல்களில் ஆத்தாடி என்ற தனிச்சொல்லை எடுத்து விட்டு, அச்சிலுள்ளவை போல என் கண்ணம்மா என்ற தொடரைப் பெய்தாலும், பொருளோ சந்தமோ வேறுபடாது. இவற்றால் நாம் காண்பது, அழுகை போன்ற அமைப்புடைய பல வகைப் பாடல்கள் இச்சித்தர் பாடல்களாக வழங்கி வந்தன என்பதாகும். கஞ்சா, வெறி மருந்திடுதல் முதலான செய்திகளும் இங்கு பாடுகிறார். இவை இவரே பாடியனவா பிற்காலச் சேர்க்கையா என்று முடிவு செய்ய இப்போது போதிய ஆதார*

*மில்லையாயினும், இடைச் செருகலாகவே கருத வேண்டும். குழூஉக் குறியான கருத்துக்கள் தொடர்கள் சொற்கள் இவர் பாடலில் மிக்க அதிகம். பாடல்கள் அழுவது போன்ற சந்த அமைப்பு உடைமையால் இவர் அழுகுணிச் சித்தர் என்ற பெயர் பெற்றார் போலும்.*

## இடைக்காட்டுச் சித்தர்

*இவர் பாடிய பாடல்கள் 130. வெவ்வேறு வகைச் சந்தங்களில் இவை அமைந்துள்ளன. இவர் இடைக்காடு என்ற ஊரினர் போலும். கோனே, கோனாரே, தாண்டவக்கோனே என்று இவர் பல பாடல்கள் பாடுவதால், இவர் கோனார் வகுப்பினர் (இடையர்) என்று கருதப்படுவார். இவர் பெயரிலுள்ள இடை என்ற சொல், இடையர் வகுப்பைக் குறிப்பதுமாகலாம். குழல் ஊதல், பசுவை விளித்துப் பேசுதல், பால்கறத்தல், கிடை கட்டுதல், பிறகு தரிசித்தல் போன்ற பல பகுதிகள் உண்மையாகவே ஆயருக்குப் பொருந்துவன.*

*இவர் பாடல்கள் முந்திய இரு சித்தர் பாடல்களை விடச் சுவையும் பெருளும் சிறக்க உள்ளன. முதலில் தாண்டவக் கோன் தோன்றி இறைவுணர்வு பற்றிப் பத்துப் பாடல்கள் பாடுகிறார். பாட்டோடு ஆட்டமும் கலந்துள்ளது. பாடல்கள் கோனாரே என்று முடியும். பின் நாராயணக்கோன் தாண்டவக் கோனை விளித்துப் பாடல் பாடுகிறார்.*

**மனமென்னும் மாடடங்கில் தாண்டவக்கோனே – முத்தி**
**வாய்த்த தென்றெண்ணேடா தாண்டவக்கோனே**
**சினமென்னும் பாம்பிறந்தால் தாண்டக்கோனே – யாவும்**
**சித்தி என்றே நினையேடா தாண்டவக்கோனே.**

*பின் தாண்டவக்கோன் பாடியாடுகிறார்.*

**மண்ணாதி பூதங்களனைத்தையும் கண்டேனே**
**மாய விகாரங்கள் யாவையும் விண்டேனே**
**விண்ணாளி மொழியை மெய்யினுட் கொண்டேனே**
**மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே.**

*இதன்பின் நாராயணக்கோன் தோன்றி 14 பாடல்களில் பசுவை விளித்து,*

ஆதி பகவனையே – பசுவே – அன்பாய் நினைப்பாயேல்
சோதி பரகதிதான் – பசுவே – சொந்தம தாகாதோ?
ஐயன் திருப்பாதம் – பசுவே – அன்புற்று நீ பணிந்தால்
வெய்ய வினைகளெல்லாம் – பசுவே – விட்டோடும் கண்டாயே.

என்று பாடுகிறான். பின்னர் கோன் வந்து குழல் ஊதுகிறான் (12 பாடல்), பால் கறக்கிறான் (6 பாடல்), கிடை கட்டுகிறான் (10 பாடல்), பிறகு நித்தியமானது நேர்படுகின்றது (8 பாடல்). இப்பகுதியில் சைவ சித்தாந்தக் கருத்துக்களே பூரணமாய் சொல்லப்பட்டுள்ளன. பசு என்பது ஆன்மாவைக் குறிக்கிற தென்றும் கொள்ளலாம்.

இவர் பாடல்களில் இந்தப் பகுதிக்குப் பொருத்தம் இல்லாத வேறுபல பகுதிகள் இடையே பெய்யப் பெற்றுள்ளன. பலரொடு கிளத்தல் நெஞ்சொடு கிளத்தல் அறிவொடு கிளத்தல் என்பன சில பகுதிகள். அடுத்து, தும்பீ பற என்ற முடிவுடைய பாடல் கள், சித்தத்தொடு கிளத்தல் என்ற தலைப்பில் உள்ளன. பின்பு குயில் கூவக் கேட்டல், மயில் பாட்டு. இது மிகவும் இனிமை யான ஆட்டத்திற்குரிய பாட்டு:

ஆடுமயிலே நடமாடுமயிலே – எங்கள்
ஆதியணி சேடனென்று ஆடுமயிலே
கூடு போகு முன்னங் கதிகொள்ளு மயிலே – என்றும்
குறையாமல் மோனநெறி கொள்ளு மயிலே.

பின்னர் மனத்தொடு கிளத்தல் (நெஞ்சொடு கிளத்தல்) என்ற பகுதியிலுள்ள இறுதிப்பாட்டு, “என்றும் தான் சாவாமற் கற்பதே கல்வி” என்ற அவ்வையார் வாக்கை நினைப்பூட்டுகிறது:

சாகாதிருப்பதற்குத் தான் கற்றஅருங் கல்வியன்றோ
வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ கல்மனமே.

பிற சித்தர் பாடல்கள் அனைத்தையும் விட இப்பாடல்கள் சித்த மார்க்கத்தில் இருக்கும் இன்பத்தை மிகத் தெளிவான சொற் களால் விளக்குகின்றன. இப்பாடல்கள் ஆட்டத்திற்கும் அமைந் தன என்று தோற்றுகிறது. ஆடுமயிலே* என்று இவர் பாடிய

---

* பிற்காலத்தில் ‘ஆடுமயிலே’ என்று இதே சந்தத்தில் இதே தொடக்கத் தோடு வ.சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் அழகான சிறுபாடல் பாடியிருக்கிறார்.

சந்தமும் ஆடுபாம்பே என்று பாம்பாட்டிச் சித்தர் பாடிய பாடல்களின் சந்தமும் ஒன்றாகவே இருப்பது இங்கு கூர்ந்து நோக்கத்தக்கது.

இடைக்காட்டுச் சித்தர் பற்றிய வரலாறொன்றைக் கொங்கு மண்டல சதகம் கூறும் (38). கொற்றவானூரில் வாழ்ந்த இடையர் சிறுவன் ஒருவன் மலைப்பக்கம் ஆடுமேய்க்கச் சென்றவன், பொழுது சாய்ந்தும் வீடு திரும்பவில்லை. இரவு முழுமையும் தனிமையில் வருந்திக் காட்டில் இருந்து, பொழுது புலந்ததும் பசி அதிகமாகவே, ஒரு காட்டுக்கொட்டையை எடுத்து விதை தின்பதற்காக அதை உடைக்க வேண்டித் தரையில் பதித்திருந்த ஒரு கல்லின் மீது அக்கொட்டையை வைத்து மற்றொரு கல்லால் உடைத்தான். தட்டி உடைக்கவே கீழிருந்த கல்லிலிருந்து இரத்தம் பெருகிற்று. கண்ட சிறுவன், முன்னை நல்வினைப் பயனால், இது சிவலிங்க வடிவு என்றுணர்ந்து இதைக் கட்டிக்கொண்டு தன் வசமற்றுக் கண்ணீர் உகுத்த படியே அங்கிருந்தான். பிள்ளை வராதது கண்ட தந்தை இரவெல்லாம் தேடி அங்கு வந்து தன் புதல்வனின் நிலை கண்டு அதிசயித்தான். புதல்வன் சிவலிங்கத்தை விட்டு பிரிந்து வர மனம் வராமையால் அங்கேயே ஒரு கொட்டகை அமைத்து அவிடத் தைக் கோயிலாக்கி, இவனும் புதல்வனுடன் சேர்ந்து வழிபட்டு வந்து, உரிய காலத்தில் சிவ பதமடைந்தான். சிறுவனும் நெடுநாள் தங்கியிருந்து பெரிய ஞானியாகவும் சித்தராகவும் விளங்கினான். இடையர் குலத்தில் பிறந்தமையால் இடைஞானி எனவும், சித்தராக விளங்கியமை யால் இடைக்கட்டுச் சித்தர் எனவும் இவர் பெயர் பெற்றார். இவருடைய திருவுருவம் கொற்றவனூர்க் கோயிலில் இன்றும் பூசிக்கப் பெறுகிறதாம். இவர் குலத்தாருக்கு அக்கோயிலில் சில மரியாதைகளும் நடைபெறுகின்றன.

இவ்வரலாறு இச்சித்தருக்குப் பொருந்தும் என்று சொல்வதில் முரண் ஒன்றும் இல்லை.

இடைக்காட்டுச் சித்தர் பாடல் 130உம் முழுமையாக, யோக ஞான சூத்திரத் திரட்டு என்ற தொகுப்பு நூலில் 51ஆவது நூலாகத் தொகுத்து அச்சிடப்பட்டுள்ளன. இதற்கு முன்னால் 50ஆவது நூலாக இடைக்காட்டுச் சித்தர் ஞான சூத்திரம் 70 என்ற நூல் அச்சிடப்பட்டுள்ளது. இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள் வேறு சில அரசாங்கத் தொன்னூல் நிலைய ஏட்டுப்

*பிரதியொன்றில் காணப்படுகின்றன. அங்கு ஏழு பாடல்கள் இப் பெயரோடு உள்ளன. சில பின் வருவன:*

நூறாட்டில் ஐம்பது தூங்கப் போச்சு – இந்த
நோயாட்டில் அஞ்சாடு நொந்து போச்சு
சீராட்டில் பதினைஞ்சு சென்றுபோச்சு – இனி
செலவாடு முப்பதும் கூலிக்கிடும்
மாறாட்டம் பண்ணாதே மங்கைக் கோனே – நன்றாய்
மங்காமல் நம்மாட்டை மடக்கித் தாரும்.

உச்சி உருமத்தில் எருதில் ஏறி
ஊரேங்கும் சுற்றி உலாவி வந்து
கச்சி வரதக் கோன் தங்கையரை – இந்தக்
கம்பக் கோனார் தாலி கட்டினாரே.

## *கடுவெளிச் சித்தர்*

*கடுவெளி என்பது பரவெளி; அதாவது பரம்பொருள் நிலை. இதைப் பாடுகின்றமையால் இச்சித்தர் இப்பெயர் பெற்றார்*

வெல்லும் அளவில் விடுமின் வெகுளியை
செல்லும் அளவில் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலும் அருளுடன் தூங்கினால்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. 2303

*என்ற திரு மந்திரப் பாடல் இங்கு கருதத்தக்கது. தொன்னூல் நிலைய ஏட்டுப் பிரதியொன்றில் இப்பாடலும் பின்வரும் பாடலும் கடுவளிச் சித்தர் பாடல் என்ற தலைபோடு எழுதப் பட்டுள்ளன. ஏடெழுதியவர் இவற்றின் பின் இச்சித்தர் பாடல் களை எழுத எண்ணினார் போலும்; ஆனால் எழுதவில்லை:*

எட்டும் இரண்டும் அறியாத என்னை
எட்டும் இரண்டும் அறிவித்தாய் என்னந்தி
எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்
எட்டும் இரண்டும் இலிங்கம் தாமே.

*கடுவெளிச் சித்தர் பாடிய பாடல் 32 கண்ணிகள் கொண்ட ஓர் ஆனந்தக்களிப்பு;*

பாபம் செய்யாதிரு மனமே
பாபம் செய்தால் ஏமன் கொண்டோடிப் போவான்
பாபம் செய்யாதிரு மனமே – நாளைக்
கோபம் செய்தே ஏமன் கொண்டோடிப் போவான்
பாபம் செய்யாதிரு மனமே.

என்பது இதன் மகுடம். இவர் பாடலில் இடைச் செருகல்கள் பல. குருவின் சொற்படி நடந்து, உலகப் பற்றைத் துறந்து, யாரிடத்திலும் அன்பு காட்டி வாழ்ந்தால் பரமானந்தம் சித்திக்கும் என்பது இவர் கருத்து. காலத்தால் சித்த மார்க்கத்தில் இவர் ஏனையோருக்குப் பிற்பட்டு வந்தவர் போலும். சித்த மார்க்கம் என்ற பெயரால் ஏற்பட்டுள்ள தவறுகளை எல்லாம் கண்டிக்கிறார். இவருடைய கருத்து,

சிவமன்றி வேறே வேண்டாதே – யார்க்குந்
    தீங்கான சண்டையைச் சிறக்கத் தூண்டாதே
தவநிலை விட்டுத் தாண்டாதே – நல்ல
    சன்மார்க்க மில்லாத நூலை வேண்டாதே.

என்பதாகும். இவர் பாடல்களில்,

நந்த வனத்திலோ ராண்டி – அவன்
    நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தானொரு தோண்டி – மெத்தக்
    கூத்தாடிக் கூத்தாடிக் போட்டுடைத் தாண்டி.

என்ற பாடல் படிப்பில்லாத பாமர மக்களனைவரும் கூட அறிந்தது. இப்பாடல்கள் ஏற்பட்டபின் இந்த மெட்டுக்கே ஆனந்தக்களிப்பு என்ற பெயர் நிலைபெற்றுவிட்டது. ஆன்மா பெறுவதற்கரிய மனித யாக்கையைப் பெற்று அதனை வீணாக்குவது இங்கு சொல்லப்பட்டது.

## குறிப்பு

தொடக்கத்தில் குறித்த இரு பாடல்களையும் வைத்து ஒரு வரலாறு சொல்லுவர். இச்சித்தர் சோழநாட்டில் கடுவளி என்ற ஊரில் பிறந்தார். அவ்வூர்ச் சிவாலயத்தில் உலகப் பற்றின்றி நிலைத்த சமாதியில் ஆழ்ந்திருந்தார். வழிபடச் சென்ற ஒரு மன்னன், இவரது நிலையை உணராமல், இவரை உலக நாட்டம் கொள்ளச் செய்ய எண்ணி, ஒரு தாசியை இவரிடம் அனுப்பினான். சருகே உண்டுவந்த இவருக்கு அவள் சருகுபோல

உணவைச் சமைத்துக் கொடுத்து, அதன் வழியாக இவரைத் தன்னிடம் மயங்கச் செய்து உலக வாழ்க்கையில் ஈடுபடச் செய்தாள். அரசன் முன்னிலையில் அவள் நடனமாடியபோது, அவள் நெகிழவிட்ட காற்சதங்கையை அவர் எடுத்து அவள் காலில் கட்டியும் விட்டார். பிறர் பார்த்துச் சிரிக்க, இவர், "செல்லும் பொழுது செலுத்துவேன் சிந்தையை, வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியை, அல்லும் பகலும் அறிவுடன் தூங்கினால், கல்லும் பிளந்து கடுவளியாமே" என்ற பாடலைப் பாடவே, சிவலிங்கம் இரண்டாகப் பிளந்தது. அரசன் முத லானோர் அஞ்சிப் பணியவே, இவர் 'எட்டும் இரண்டும்' என்ற பாடலைப் பாடினார்; சிவலிங்கம் ஒன்றாகியது; இவரும் அதற்குள் அடங்கிவிட்டார். இவரைப் பழித்த ஊராரும் அரச னும் அழிந்தனர்; கோயிலும் பழுதடைந்தது. இதுவே கதை. ஏட்டில் கண்ட இரண்டு பாடல்களுக்காக ஒரு காலத்தில் இக்கதை புனையப்பட்டது போலும். கடுவளி என்ற பெயரினும், கடுவெளி என்ற திருமந்திரத் தொடரே சிறப்புடையது. கடு வெளி என்ப தற்கு, ஓயாது கடுகி இயங்கிக் கொண்டிருக்கும் மூச்சு என்று பொருள் சொல்வர்.

## குதம்பைச் சித்தர்

குதம்பை என்பது பெண்கள் காதில் அணியும் அணி. குதம்பையணிந்த பெண்ணை, மகடூஉ முன்னிலையாகக் 'குதம்பாய்' என்று விளித்து இச்சித்தர் பாடல் பாடினமையால் குதம்பைச் சித்தர் என்று பெயர் பெற்றார். இவர் பாடல்கள் 32. யாவும் எளிய இனிய சொற்களாலானவை, இவர் பாடல்களில் மிகவும் பிரசித்தமானது, "மாங்காய்ப் பால் உண்டு" என்ற பாடல். உண்மையறிவைப் பெற்று இறைவனை நாடியிருக்கும். மெய்ஞ்ஞானிக்கு உலகப்பொருள்களும் சடங்குகளும் வேண்டு வனவல்ல என்பது கருத்து. சித்த நெறியினர் காயகற்பம் தேடி யலைய வேண்டுவதில்லை என்று கூறுகிறார்.

> **மெய்ப் பொருள் கண்டு விளங்கும் மெய்ஞ்ஞானிக்குக்**
> **கற்பங்கள் ஏதுக்கடி – குதம்பாய்**
> **கற்பங்கள் ஏதுக்கடி.**

யோக நெறி, பத்தி நெறி, புறப்பூசை முதலியவற்றைப் பழிப்பன போன்ற பாடல்கள் பல இங்கு உள்ளன. சித்தர் மரபுக்கு ஏற்ப

இவர் இவையனைத்தையும் கடந்த மேல் நிலையிலுள்ளவராத லால், கீழ்ப்பட்ட நிலைகள் வேண்டுவனவல்ல என்ற கருத்துப் படப் பாடுகிறார்.

நித்திரை கெட்டு நினைவொ டிருப்பார்க்கு
முத்திரை ஏதுக்கடி – குதம்பாய்
முத்திரை ஏதுக்கடி.

இங்கு சுழுத்தி நிலையடைந்தோருக்குப் பூசைகளால் விளையும் பயனில்லை என்பது கருத்தாகும். வேகமடங்கி விளங்கும் மெய்ஞ்ஞானி, செத்தாரைப் போலே திரியும் மெஞ்ஞானி, பட்டணம் சுற்றிப் பகலே திரிவோர் முதலான தொடக்கமுடைய பாடல்கள் சீவன் முத்தர் நிலையைக் குறிப்பன. ஆடம்பரங்கள் வேண்டாம், விழா வேண்டாம். சிறப்பான தனியுடை வேண் டாம் என்பன போன்ற கருத்துக்களைச் சொல்லி உள்ளத் துற வினால் வரும் அத்துவித நிலையே உயர்வானது என்பதை எல் லாப் பாடல்களிலும் வற்புறுத்துகிறார். பாமர மக்களுடைய மொழியில் பாடியிருப்பதால், குழூஉக் குறியாயுள்ள ஆழ்ந்த பொருள் எளிதில் விளங்குவதில்லை.

இவர் பாடல்களில் அச்சாகாதனவும் உள்ளன. இதுவரை கூறிய சித்தர்கள் அனைவருக்கும் நாடு ஊர் பிற வாழ்க்கை வரலாறு முதலியன ஒன்றும் திட்டமாய் விளங்கவில்லை.

## பாம்பாட்டிச் சித்தர்

இவர் பாண்டி நாட்டில் பிறந்து சட்டை முனியிடம் தீக்கை பெற்றவர்; திருக்கோகர்ணத்தில் பிறந்த சித்தர், கொங்கு நாட்டு மருதமலையில் பிரசித்தமாக விளங்கினார்; இவர் வாழ்ந்த சின்னங்களை அம்மலையில் இன்றும் காணலாம் - இவை போன்ற பல செய்திகள் இச்சித்தரைப் பற்றி இன்று வழங்கு கின்றன. இவற்றுள் உண்மை காண்பது கஷ்டம். எனினும் இவர் பாடிய "ஆடு பாம்பே" என்று தொடங்குகின்ற பல பாடல்கள், தமிழ்நாடு முழுமையும் சிறு பிள்ளைகள் பள்ளியில் பாடு வதற்கும் ஆடுவதற்கும், பெரியவர் ஆடவர் பெண்டிர், நாடக மேடையில் பாடி ஆடுவதற்கும், நெடுங்காலமாகப் பயன்பட்டு வருகின்றன. இவர் பாடல்களைப் பின்பற்றி அனேகர் இயற்றிய புதிய பாடல்கள் பல நடனக் கோலங்களில் தமிழ் நாடெங்கும் காட்சி தருகின்றன.

சித்தர் பாடல்கள் தொகுப்பில் இவர் பெயரில் 129 பாடல்கள் காணப்படுகின்றன. இவை கடவுள் வணக்கம் 9. குரு வணக்கம் 10; பாம்பின் சிறப்பு 5. சித்தர் வல்லபம் 10; சித்தர் சம்வாதம் 5; பொன்னாசை விலக்கல் 10; பெண்ணாசை விலக்கல் 10; யாக்கை நிலையாமை 10; யாக்கை யியல்பு 10; பாச நீக்கம் 10; சொரூப தரிசனம் 10; குரு உபதேசம் 10; ஞான தரிசனம் 12. இறுதியில் மீண்டும் சித்தர் வல்லபம், இறுதிப் பதினாறு பாடல்கள்; இவை எண் சீரடி விருத்தங்களாக, பாட்டுக்கு நாலடி கொண்டுள்ளன. இவற்றை ஆராயும்போது, பத்துப் பத்துப் பாடல்கொண்ட பகுதிகளாக இச்சித்தர்பாடல்கள் வகுக்கப் பெற்றன அல்லது வகைப்படுத்தப்பெற்றன என்று நாம் முடிவு செய்யலாம்.

இவ்வனைத்திலும்,

> நாதர் முடிமேலிருக்கும் நாகப் பாம்பே
> நச்சுப் பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே
> பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே
> பாடிப்பாடி நின்று விளையாடு பாம்பே.

என்பது தொடங்கி ஐந்து பாடல்களும்,

> ஆடு பாம்பே – நெளிந்தாடு பாம்பே – சிவன்
> அடியிணை கண்டோமென் றாடுபாம்பே.

என்பதைப் பல்லவியாகக் கொண்ட சில பாடல்களும் பழமையாகப் புன்னாகவராளி இராகத்தில் பாடுவது வழக்காமாயிருந்து வருகிறது. இவை போக, ஏனைய பாடல்களில் இடைச் செருகல் பல இருக்குமென்று தெரிகிறது.

இவர் பாடல்கள் முழுமையும் தத்துவார்த்தம் கொண்டவை. பாம்பு வடிவாக மண்டலித்துள்ள குண்டலினி சக்தியை எழுப்பி அதன் மூலம் ஆன்ம சொரூப தரிசனமும் பரதரிசனமும் செய்வதை இவர் பாடல்கள் கூறுகின்றன. பாடல்கள் அனைத்திலும் நயமான எளிய உவமைகள் காணப்படுகின்றன. குரு வணக்கம் என்ற பகுதி முழுமையும் 'உள்ளங்கை நெல்லிக் கனி போல உள்ள பொருளை உண்மையுடன் காட்ட வல்ல உண்மைக் குருவைக் கண்டு களித்து ஆடாய் பாம்பே' என்று கூறுகிறார். சித்தர் வல்லபம் மற்றொரு சிறப்பான பகுதி. பொருளாசை பெண்ணாசை இரண்டும் சம்பிரதாயமான கருத்து அமைந்தவை.

ஆசிரியரைக் குறித்து வரலாறு விளக்கமாகத் தெரியாத போதிலும், காலத்தை அறிவதற்குச் சில சொற்கள் நமக்குத் துணை செய்யும். பின்வரும் சொற்களைக் குறிப்பிடலாம்: கப்பல் (69,114) சுக்கான் (14) சீனி (78,114) என்ற வார்த்தைகள் மரக்கலம் சம்பந்தப்பட்டவை. இவை பழைய தமிழ் நூல்களில் காணப் படவில்லை. பிற சொற்கள் துப்பாக்கி (121) வையாளி (120) சவாரி (78) ஒயில் (50-56) வருடித்தல் (வருஷித்தல் 86) என்பன. வையாளி என்பது குதிரை செல்மார்க்கம்; 13ஆம் நூற்றாண்டில் இது காணப்படுகிறது. ஒயில் என்பது அருணகிரி நாதர் திருப் புகழில் காணப்படுகிறது. ஏனையவை 14-15ஆம் நூற்றாண்டு களில் தமிழில் வழங்கப் பெறுகின்றன. எனவே இச் சித்தருடைய காலமும் இக்காலமாகுமென்பது பொருந்தும்; கி.பி. 1400-1450 என்று கொள்ளலாம். பிற சித்தர்களும் இக்காலத்திற்குரியவர் கள் என்ற கருத்துக்கு இக்குறிப்பு அரண் செய்கிறது.

பொதுவாக, சித்தர் பாடல்களில் தலப்பெயர்கள் காணப் படுவது அருமை. இவர் பாடலில் காசி வருகிறது. உளியிட்ட கற்சிலைக்கும் மூடர்களுக்கும் உணர்ச்சி வராது (92); ஏட்டுச் சுரைக்காய் கறியாகாதது போல நாட்டுக்கொரு கோயில் கட்டினாலும் நாதன் பாதம் காணார் தன்னையறியாதவர் (94); பூசை செய்தால் போதம் வராது (100); ஆசை யறுத்தலே சிறப்பு; உடலில் உயிர் உள்ளபோதே உண்மையை நாடி உணர வேண் டும் (107) என்பன போன்ற கருத்துக்கள் சிறப்புடையவை. இவர் பாடல்கள் சிறந்த இலக்கியப் பண்பு பொருந்தியுள்ளன. சாமானியக் கொச்சை நாடோடிப் பாடல் போன்றவை அல்ல.

பாம்பாட்டி என்பது பல் வரிக்கூத்துள் ஒன்று எனச் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார் கூறுகிறார். பாம் பாட்டுவோர் பிடாரர். இவர்களே பாம்பாட்டிகள். இவர்கள் போல அபிநயம் செய்வது இக்கூத்தாகும். பாம்பை ஆடு என்று சொல்லிப் பாடுவதால் இச்சித்தர் பாம்பாட்டிச் சித்தர் எனப் பெயர் பெற்றார்.

அரசன் ஒருவன் இறந்த காலத்தில் ஒரு சித்தர் தமது சரீ ரத்தை ஆலமரப் பொந்தில் மறைத்துச் சீடரைக் காவல் வைத் துச் சில நாளைக்குள் வருவேன் என்று அவ்வரசன் சரீரத்தில் பரசாயப் பிரவேசம் செய்தாரென்றும், அவர் நெடுநாளாக வராமையால் சீடர்களாகிய சித்தர்கள் தங்கள் ஆசிரியராகிய

*அரசன் முன் சென்று இப்பாடல்களைப் பாடினார்கள் என்றும் நூலின் இறுதியில் இந்நூல் பிறந்த வரலாறு தரப் பெற்றிருக் கிறது. (தமிழ்நூல் விவர அட்டவணை 1-1 பக்கம் 50)*

*மருதமலை அம்மானையில்,*

**தேம்படு மாஞ்சோலைசூழ் திவ்விய மாமலையில்**
**பாம்பாட்டிச் சித்தர் பயின்றனர் காணம்மானை**
**பாம்பாட்டிச் சித்தர் பயின்றனரே ஆமாகில்**
**பாம்பெல்லாம் நிர்ப்பயமாய்ப் பார்ப்பாரே அம்மானை**
**பாம்பிற்கே வேதாந்தம் பகர்ந்தித்தார் அம்மானை.**

*இது பிற்காலத்துக் கதை போலும். எனினும் இப்படியொரு செய்தி உண்டென்று இது காட்டுகிறது.*

*அவர் சித்தராரூடம் என்ற நூல் செய்ததாகச் சொல்வர். அந்நூல் சீவக சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியரால் குறிப்பிடப்பட்டுள்ளது. அது விஷம் பற்றிக் கூறும் நூல்; விஷ காகசம் என்ற பாடபோதமும் குறிப்பிடப்பட்டுள்ளது. பாம்பு என்று பெயர் வந்ததனாலேயே இந்நூலை இச்சித்தர் பாடினார் என்று சொல்வது ஆதாரமற்றது. சித்தராரூடம் 13ஆம் நூற் றாண்டு என்று கருதவேண்டும்.*

*பாம்பாட்டிச் சித்தர் இன்னும் ஒன்றிரண்டு நூற்றாண்டு கள் முன்னதாக வாழ்ந்தார் என்றும் சிலர் சொல்வர். இது பொருந் தாது என்றே சொல்லத்தக்கது.*

## *ஏனாதிச் சித்தர்*

*சித்தர்கள் தாங்கள் கொண்ட கருத்தை எடுத்துரைப் பதற்குப் பல உயர்திணைப் பொருள்களையும் அஃறிணைப் பொருள்களையும் முன்னிலைப் படுத்தியுரைப்பது மரபு. இடைக் காடர் கோனாரை முன்னிலைப் படுத்துகிறார். குதம்பைச் சித்தர் குதம்பையணிந்த பெண்ணை முன்னிலைப்படுத்துகிறார். பிறர் பாம்பு மயில் போன்றவற்றையும் கிளியையும் முன்னிலைப் படுத்தியதுண்டு. இவ்வாறு பாடினவருள் ஏனாதிச் சித்தரும் ஒருவர். இவர் ஏனாதியை முன்னிலைப்படுத்திப் பாடியிருக் கிறார். இது காரணமாகவே இவருக்கு ஏனாதிச் சித்தர் என்ற பெயரமைந்தது போலும்.*

ஏனாதி, பண்டை நூல்களில் படைத் தலைவனுக்குரிய தொரு சிறப்புப் பட்டமென்று அறிகிறோம். ஆனால் பிற் காலத்தில் குலத்தால் இழிந்தவர் என்று அக்காலத்தார் கருதிய சில குலத்தாருக்கு உரிய சொல்லாக இது ஆகியது போலும். சித்தர்கள் தாழ்ந்த பொருள்களை முன்னிலைப்படுத்தி உரைக்கும் முறைமையால் அப்பொருள்களுக்குப் பாடலில் ஓர் ஏற்றம் பிறக்கிறது. அதுபோல இச்சித்தர் நாவிதர் வண்ணார் என்று பிற்காலத்தில் பொருள்படுகின்ற ஏனாதி என்ற சொல்லை முன்வைத்துப் பாடியதால் ஏனாதிக்குச் சிறப்பு உண்டாகிறது.

ஏனாதிச் சித்தர் பாடிய பத்துப் பாடல்கள் தொன்னூல் நிலையத்திலுள்ள ஓர் ஏட்டில் காணப்படுகின்றன. இவை அச்சுப் பிரதிகளில் காணப்படவில்லை. பாடல்கள் தாழிசை; முதற் பாதி சித்தர் கேட்கும் வினாவாகவும் பிற்பாதி ஏனாதி கூறும் விடையாகவும் அமைந்துள்ளன.

1. வேதாகமத்தின் விசும்ப தனுள்புக்கு
   மெய்கண்ட ஏனாதி, என்கொண்டு வந்தீர்?
   பேதாதி பேதச் சமயப் பிணக்கைப்
   பிசைந்துள் ளடக்கும் வியன் கொண்டு வந்தேன்.

2. என்றும் பிறப்பும் இறப்பும் எமக்கில்லை
   என்கின்ற ஏனாதி, என்கொண்டு வந்தீர்?
   குன்றும் பதங்களும் குன்றாப் பதங்களும்
   கூட விழுங்கும் குளிகை கொண்டுவந்தேன்.

9. தானாதனா தந்த னானாதனா வென்று
   சாற்றிய ஏனாதி, என் கொண்டு வந்தீர்?
   ஊனாய் உயிராய் உணர்வாய் இருக்கும்
   ஒப்பில்லா மெய்ஞ்ஞானம் கொண்டல்லோ வந்தேன்.

10. அன்புக்குள் அன்பாய் அறிவாய் இருக்கும்
    அறிவுள்ள ஏனாதி, என்கொண்டு வந்தீர்?
    முன்செய்தவத்தின் முறையின் வழியே
    முடிவில்லா மெய்ஞ்ஞானம் கொண்டல்லோ வந்தேன்.



## காளைச் சித்தர்

இவருடைய பாடல்கள் எட்டு, தொன்னூல் நிலையத்து ஏட்டுப் பிரதியில் காணப்படுகின்றன. அச்சில் வரவில்லை. இவர் காளையைப் பூட்டி உழக்கோலைக் கையில் கொண்டு ஏர் உழுது பயிர்த்தொழில் செய்வதாக ஞானப்பொருள்களை உருவகம் செய்து பாடுவதால் இப்பெயர் பெற்றார் போலும். காளச்சித்தர் என்றும் இவர் பெயர் வழங்கும். பின்வரும் பாடல்களைக் காண்க.

எல்லாருங் கொல்லையுழ – என்தோழா
　என் கணவன் பள்ளமுழ –
பள்ளம் பழுத்தலவோ – என்தோழா
　பார்த்து வரப் பிள்ளையீரே.

முன்னேரும் பின்னேரும் – என்தோழா
　மூவணையும் ஓரணைதான்
முன்னேர் உழுதுமிட – என்தோழா
　முகவெள்ளைக் காளையடா.

சந்திரரும் சூரியரும் – என் தோழா
　சந்தி பண்ணும் பொய்கையிலே
இந்திரனை நோக்கியடா – என் தோழா
　எடுத்தேன் உழக் கோலை.

இச்சித்தர்களுடைய காலம் இதுவென்று திட்டமாய்ச் சொல்ல முடியாத போதிலும், சித்தர்கள் அனைவரும் ஒரு கால எல்லைக்குள் புகழோடு விளங்கினார்கள் என்ற கருத்து ஏற்கக் கூடியதாதலால், இவர்கள் காலமும் 15ஆம் நூற்றாண்டு என்றே கருதுகிறோம்.

### குறிப்பு

திருமூலர் பாடிய பாடல்கள் அவற்றின் பெருந்தகுதி காரணமாகத் திருமந்திரம் எனவே வழங்கப் பெறுகின்றன. அவை சைவத் திருமுறைகளில் பத்தாவது திருமுறையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. எனினும், அவரைச் சித்தர் என்று சொல்லுகின்ற மரபு இருந்து வருகிறது. சேக்கிழாரே அவரைச் சித்தி பெற்றுடையார் என்று சொல்லுகிறார். (3570) – அணி

மாதி வரும் சித்தி பெற்றுடையார்..... சில நாள் உறைவதற்கு நற்றமிழின் பொதியமலை நண்ணுதற்கு வழிக்கொண்டார்.'

திருமூலர் பாடல்கள் சிறப்பான குழூஉக் குறி படைத்திருப்பதனால், சாமானியப் பக்தர்களுக்கு எளிதில் பொருள் விளங்குவதில்லை. மேலும், அவர் சமாதி நிலையில் இருந்து ஆண்டுக்கொரு பாடல் பாடியதாகப் புராணம் கூறுகின்றது. பாடல்கள் யோக மார்க்கத்தையே பெரும்பாலும் உணர்த்தி நிற்பதனால், அவரைச் சித்தர் என்று கூறுவதிலும் பொருள் இருக்கிறது.

சித்தருக்கு அவர் குறிப்பிடும் இலக்கணமும் இங்கும் கருதத்தக்கது. சைவ மார்க்கத்தில் கூறுகின்ற ஞானம்,யோகம், கிரியை, சரியை என்ற நான்குக்கும் முறையே உரியனவான சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாசமார்க்கம் என்ற நான்கில், சகமார்க்கமாகிய யோகத்தைக் குறிப்பிடும் போது, சித்தரைக் குறித்து ஒரு பாடல் சொல்கிறார்:

> **யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்**
> **யோகச் சமாதியின் உள்ளே யுயிரொளி**
> **யோகச் சமாதியின் உள்ளே யுளசக்தி**
> **யோகச் சமாதி உகந்தவர் சித்தரே. 1490**

இங்கு யோகச் சமாதி நிலையில் இருப்பவர் சித்தர் என்று இவர் கூறுவது நினைவுகூரத்தக்கது.



# அத்தியாயம் 13

# பிற ஆசிரியர்

## முன்னுரை

இதுகாறும் பல்வேறு தலைப்புகளில் இந்நூற்றாண்டில் தோன்றிய புலவர்களையும் அவர்கள் செய்த நூல்களையும் ஆராய்ந்தோம். அத்தலைப்புக்களில் வராத சில புலவர்களையும் நூல்களையும் இங்கு காண்போம்.

அருணாகிரிநாதர் காளமேகம் காலத்தில் சில புலவர்கள் இருந்தனர். அவர்கள் வரலாறு சிறிதளவு தெரிகிறது. நூல் எதுவும் தெரியவில்லை. தென்காசி யாண்ட பராக்கிரம பாண்டியர் பெரும் புலவரும் வள்ளலும் சிவ பக்தருமாயிருந்தார். கணித நூல்கள் சோதிட நூல்கள் முதலியனவும் இக்காலத்தே செய்யப் பெற்றிருந்தன. வைத்திய நூல்களும் மிகப் பல இருந்திருத்தல் வேண்டும். சமயத்துறையில் மட்டுமின்றி, வைத்தியத் துறையில் சித்தர் பலரை நாம் நினைவில் வைத்திருக்கிறோம்.

இயன்றவரையில் இப்பொருள்கள் பற்றிய ஆராய்ச்சி இவ் வத்தியாயத்துள் காணப்பெறும்.

## சொரூபசாரம்

வேதாந்த நூல் வரிசையில் இது சிறப்புடைய ஒரு சிறு நூலாகும். 100 வெண்பாக்கள் உடையது. இதன் மூலம் மட்டும், ஞானவாசிட்டக்கதைகள் அவதாரிகை, பகவத்கீதை அவதாரிகை, பிரமகீதை அவதாரிகை, உபநிடதமூலம், மகா வாக்கியங்கள், ரிபுகீதை ஆகியவற்றோடு சேர்த்து, வியவருடம் (1886) அச்சிடப் பெற்றது. இங்கு ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை. அடுத்த சில ஆண்டுகளில் (1900) (சர்வதாரி), பல வேதாந்த நூல் களுக்கு உரை எழுதிய ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள் உரையோடு

இது சொரூபானந்தர் செய்தது என்ற தலைப்பில் வெளியிடப் பட்டது. சொரூபசாரம் என்று பெயர் வந்ததனாலும், நூல் நல்ல நடையில் இருந்தமையினாலும், நல்ல நடையில் வேதாந்த நூல் செய்தவராகிய தத்துவராயரின் குருவான சொரூபானந்தர் செய் தார் என்று கருதினர் போலும். இவ்விருவர் வரலாற்றிலும், பின்னர் இவர்கள் மரபு கூறிய பெருந்திரட்டுச் சந்தான வரலாற் றிலும், இந்நூல் பற்றிய பேச்சு இல்லை; சொரூபானந்தர் செய்த தாகிய குறிப்பும் இல்லை. சொரூபானந்தர் தத்துவராயரைக் கொண்டு நூல் செய்வித்தாரேயன்றித் தாம் எந்த நூலும் செய்ய வில்லையாதலால், இந்நூலை அவர் செய்ததன்று என்றே கருத வேண்டும்.

ஒருகால் இதைத் தத்துவராயர் செய்தாரோ என்ற கருத்து ஆராயத்தகுந்தது. வரலாற்றில் இப்படிப்பட்ட குறிப்பு இல்லை. சொரூபானந்தரை ஓரிடத்தேனும் குறிப்பிடவில்லை; ஆதலால் இவர் செய்திருக்கலாமென்று கருத முடியாது.

இதன் 100ஆம் பாடல் பல சுருதிகூறும். சொரூபசாரம் அமுதை 'உண்டிருக்க வல்லார் உலகமெலாம் தாமாகக் கண்டிருக்க வல்லார்' என்று முடிக்கிறது. நூற்பாடல்கள் நல்ல நடையும் பொருட்சுவையும் உடையன. ஞானிநிலையும் ஞானிக் குச் செய்யும் தொண்டின் சிறப்பும் கூறுவன காண்க:

**எங்கும் பொதுவாக இருக்குமொரு சீவன்முத்தர்**
**தங்குமிடந் தானே தலவாசம்; – அங்கவர்கள்**
**பார்வையே தீர்த்தம்; அவர் பாதார விந்தமலர்ச்**
**சேவையே சாயுச் சியம்.**

**மெத்தேன்ற சொல்லும் விருப்பமற்ற நோக்குமெலாம்**
**சத்தென்ற நெஞ்சும் தளர்நடையும் – சித்தத்து**
**அடங்கா மகிழ்வும் அனவரதம் பெற்றால்**
**திடந்தானே ஞானி செயல்.**

## பராக்கிரம பாண்டியர்

தமிழ்நாட்டில் பழைய காலம் முதல் தமிழரசர் பலர் புலமை மிக்கவர்களாக இருந்திருக்கிறார்கள். சங்க காலத்தில் இத்தகைய அரசர் பலரும் அரசியரும் இருந்தனர். வழுதி, பாண்டியன், மாறன், செழியன் என்ற பெயருடைய பாண்டிய மன்னர் பலர், சோழன் செம்பியன் கிள்ளி என்ற பெயருடைய

*சோழர் பலர், கோதை சேரமான் குட்டுவன் கடுங்கோன் என்ற பெயருடைய சேரமன்னர் பலர், பாண்டியன் தேவி ஆகியோர் சங்கநூற் புலவர் பெயர் வரிசையில் காணப்படுவர். சிலப்பதி காரம் பாடிய இளங்கோ ஒரு சேரர். கண்டராதித்தர் என்னும் சோழ மன்னர் திருவிசைப்பா என்ற திருமுறைப் பதிகம் பாடி னார். இவர்களனைவரும் பண்டைக் காலத்தவர்.*

*பிற்காலத்தில் முகம்மதியர் படையெடுப்பினால் மதுரையை விட்டு ஓடிவந்து தென்காசியைத் தலைநகராக்கிக் கொண்டு அரசாண்ட பாண்டியர்கள் பலர் பெரும் புலவராக விளங்கி யிருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் மிகச்சிறந்த சைவ சீலர் கள். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் பராக்கிரம பாண்டியர் - காலம் 15ஆம் நூற்றாண்டு; அதிவீரராம பாண்டியர், வரதுங்க ராம பாண்டியர் - காலம் 16ஆம் நூற்றாண்டு. இவர்களுள் பராக்கிரம பாண்டியர் வரலாறு இங்கு நாம் கருதத்தக்கது.*

*13ஆம் நூற்றாண்டில் மூன்றாம் இராசேந்திரசோழனுக்கு பின் சோழருடைய ஆதிக்கம் அழிந்தது. மாறவர்மன் என்ற சுந்தர பாண்டியன் சோழரை வென்று மதுரையில் ஒடுங்கியிருந்த பாண்டியர் தனிப் பேரரசை மீண்டும் நிலைநிறுத்தினான். ஆனால் இவ்வரசு அதிக நாள் நிலை பெறவில்லை. ஒரு நூற் றாண்டு அளவு கூட இது நிற்கவில்லை. பாண்டியர்கள் தங்க ளுக்குள் சண்டையிட்டுக் கொண்டு பெரும் குழப்பம் விளைவித் திருந்தார்கள். அதே சமயத்தில் டில்லி சுல்தானுடைய படைத் தலைவனாகிய மாலிக்காபூர் படையெடுத்து வந்து பாண்டியரை வென்று மதுரையையும் அழித்தான். இது நிகழ்ந்தது 1310இல். மதுரை நாடு முகம்மதியர் ஆட்சியில் எழுபது ஆண்டுகள் இருந்தது. அப்போது அந்நாட்டிலிருந்த எல்லாக் கோயில்களும் இடிக்கப்பட்டன. செல்வம் முழுமையும் சூறையாடப்பட்டது. தமிழ்நாட்டில் இதற்கொப்பான நாசவேலை வேறு சொல்வதற் கில்லை. மதுரையில் ஏற்பட்ட நாசவேலையை விசய நகர வீழ்ச்சியோடு தான் ஒப்பிட முடியும். இதனோடு மதுரையில் பாண்டியர் ஆட்சி முடிவு பெற்றது.*

*அதன்பின் விசயநகர் வேந்தருடைய தளபதியாகிய கம்பண்ண உடையார் என்பவர் மதுரை மீது படையெடுத்து வந்து அங்கிருந்த முகம்மதியரை வென்று விசயநகர ஆட்சியை நிலைநாட்டினார். மதுரையை விட்டு ஓடிய பாண்டியர் திரு நெல்வேலிப் பகுதிக்கு வந்து அங்கு தங்களுடைய ஆட்சியை*

*நிலைபெறுத்திக் கொண்டார்கள். இவ்வாறு திருநெல்வேலிப் பகுதியில் ஆண்ட அரசர்களுள் முதன்மையானவர் அரிகேசரி பராக்கிரம பாண்டியர். இவர் 1422இல் பட்ட மேற்றார். இவர் மானாபரணர் மானபூஷணர் என்று புகழ்பெற்றார். இவரே தென்காசியைத் தலைநகராகக் கொண்டு, அங்கிருந்த பழைய கோயிலைப் புதுப்பித்து, காசி விசுவநாதர் கோயில் என்ற பெரும் கோயிலாக அமைத்து, அங்கிருந்து ஆட்சி புரிந்தார். இவருடைய கோயிற் சாசனங்கள் பல. "பூமிசை வனிதை" என்ற மெய்க்கீர்த்தி இவ்வரசருடைய சிறப்புக்களையும் புலமையையும் பிற செய்திகளையும் நன்கு விளக்கிக் கூறும்.*

பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசைக் கலைமகள் நலமுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிக்
செங்கோ லோச்சி வெண்குடை நிழற்றி
வான வாரியும் மன்னருள் வாரியும்
தான வாரியுந் தப்பா தளித்து
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்துச்
சிங்கையில் அனுரையில் இராசையிற் செண்பையில்
விந்தையிலு றந்தையின் முதலையில் வீரையில்
வைப்பாற்..... மன்னரை வெந்கண்டு
எப்பால் திசையும் இசைவிளக் கேற்றிப்
பதினெண் பாடைப் பார்த்திவ ரனைவரும்
திறையுஞ் சின்னமும் முறைமுறை கொணர்ந்து
குறைபல இரந்து குரைகழல் இறைஞ்ச
அவரவர் வேண்டிய தவரவர்க் கருளி
அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தைமுத லகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரவர்க்கு மண்டப மமைத்து
முன்னொரு தூறு மூங்கில் புக்கிருந்த

சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி
விழாவரை நடாத்தி விரைப்புன லாடல்
விழாவகை நடாத்தநின் மன்னரு ளதனால்
வற்றா அருவியும் வற்றி வற்கடம்
உற்றஇக் காலத் துறுபுனல் நல்கென
வேண்டியப் பொழுதே வேறிடத் தின்றிச்
சேண்தரு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேணி விசுவ நாதர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித்திக முடன்
எல்லாப் பூசையு மெக்கோ யிலினும்
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொற் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ளுடனே
இலகு கருணை இரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனும் மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந்த ருளிய
ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம தேவர்

என்பது காண்க. அரிகேசரி என்பது இவருடைய பட்டப் பெயர்களுள் ஒன்று.

இவ்வரசர் இக்கோயில் கட்டியது சம்பந்தமாகப் பழங் கதையொன்று சொல்வார்கள். வட இந்தியாவில் காசி விசுவ நாதராலயம் முகம்மதியரால் இடித்து அழிக்கப்பட்டது. அதை விசுவநாதப் பெருமான் ஒரு கனவில் தோன்றிப் பராக்கிரம பாண்டியருக்கு உணர்த்தி, "அப்பனே, நீ நமக்கு இங்கு ஒரு புதுக் கோயில் கட்டி இவ்விடத்தைத் தென்காசி ஆக்குவாயாக" என்று கட்டளை யிட்டாராம். அதன்மேல் அரசர் இக்கோயில் கட்டத் தொடங்கினார். மிகவும் சிறப்புக் கொண்ட கோயில்களில் தென்காசி விசுவநாதர் ஆலயமும் ஒன்று. இதை இவ்வரசர் 1446 இல் கட்டத் தொடங்கினார். இவர் காலமான 1462 ஆம் ஆண் டிலும் இது முழுமையும் பூர்த்தியாகவில்லை. 17 வருஷம்

*கட்டிட வேலை நடைபெற்றது. இவருடைய காலத்திற்குப் பிறகே கோபுர வேலைகள் நிறைவேறின. கோபுரவாயில் நிலையில் இவ்வரசர் பாடி எழுதி வைத்த சாசனங்கள் இவரது புலமை யையும் சிவ பக்தி மேலீட்டையும் சிவனடித் தொண்டையும் நன்கு புலப்படுத்துவன.*

*முதன் மூன்று பாடல்கள் இக்கோயில் இவ்வாறு அரசர் செயலாலே அமைந்தது என்று சொல்லவில்லை: "இது மனத் தால் வகுக்கவும் எட்டாத கோயில். இதைப் புரப்பவர்கள் மன்னனாகிய எனது வணக்கத்திற்குரியவர்கள்" என்று அரசர் கூறுவதாக உள்ளன:*

சேலே றியவயல் தென்காசி யாலயம் தெய்வச் செய–
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல அதனையின்னும்
மேலே விரிவு செய்தே புரப்பாரடி வீழ்ந்தவர்தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்கிரம பாண்டியனே.

மனத்தால் வகுக்கவும் எட்டாதகோயில் வகுக்கமுன்னின்று
எனைத்தான் பணிகொண்டநாதன் தென்காசியை யென்று மண்மேல்
நினைத்தா தரஞ்செய்து தங்காவல்பூண்ட நிருபர் பதம்
தனைத்தாழ்ந் திறைஞ்சித் தலைமீது யானந் தரிந்தனனே.

பூந்தண் பொழில்புடை சூழ்தென் காசியைப் பூதலத்தில்
தாந்தங் கிளையுடனே புரப்பார்கள் செந்தாமரையாள்
காந்தன் பராக்ரமக் கைதவன் மான கவசன்கொற்கை
வேந்தன் பணிபவ ராகிஎந் நாளும் விளங்குவரே.

*அடுத்த பாடலில், "இக் கோயிலில் வரும் இடையூறுகளை அகற்றிக் காப்பவர்களை இப்போதே நான் வணங்குகின்றேன்" என்று கூறுகிறார்.*

ஆராயினும் இந்தத் தென்காசி மேவும் பொன் னாலயத்து
வாராததோர் குற்றம் வந்தாலப் போதிங்கு வந்ததனை
நேராக வேயொழித்துப் புரப்பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே.

அரிகேசரிமன் பராக்ரம மாறன் அரனருளால்
வரிசேர் பொழிலணி தென்காசிக் கோயில் வகுத்துவலம்
புரிசேர் கடற்புவி போற்றவைத் தேனன்பு பூண்டிதனைத்
திரிசேர்விளக்கெனக்காப்பார் பொற்பாத மென் சென்னியதே

சாத்திரம் பார்த்திங்கு யான்கண்ட பூசைகள் தாம்நடத்தி
ஏத்தியன் பால்விச்வ நாதன் பொற் கோயிலென் றும்புரக்கப்
பார்த்திபன் கொற்கைப் பராக்ரம மாறன் பரிவுடனங்
கோத்திரந் தன்னிலுள் ளார்க்கு மடைக்கலங் கூறினனே.

இவ்வாறு இவ்வரசரால் பாடப் பெற்ற இக்கோயிலின் கோபுரமானது 1900ஐ ஒட்டி ஏற்பட்ட ஒரு தீ விபத்தில் இடிந்து விழுந்துவிட்டது. இடிந்த பகுதிகளைச் சென்ற 60 வருஷ காலமாக அந்தப் பக்கம் செல்பவர்கள் யாவரும் நெடுந்தூரத்தில் இருந்து கூடப் பார்த்திருக்கக் கூடும். இவ்வரசர் இவ்வாறு வணங்கிய போதிலும் கூட இதைத் திருப்பணி செய்து அமைப்பார் இல்லை. இப்போதுதான் இதைப் புதுப்பித்துக் கட்டும் முயற்சி தொடங்கியிருக்கிறது என்று அறிகிறோம்.

இக் கோயில் கட்டியது மட்டுமின்றி இவ்வரசர் விசுவநாதப் பேரேரி என்ற ஓர் ஏரியை அமைத்தார். பல கோயில்களில் மண்டபம் கட்டினார். மெய்க்கீர்த்தி சில திருப்பணிகளைக் கூறுகிறது. இவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த குலசேகர பாண்டியன் தென்காசிக் கோபுரத்தைப் பூர்த்தி செய்தான். தென்காசிக் கோயில் மண்டபத்துக்குப் பக்கத் தூண்களிலும் பராக்கிரம பாண்டியர் செய்து வைத்துள்ள சிற்ப வடிவங்கள் இன்று உலகப் பிரசித்தி பெற்றுள்ளன. செய்த காலத்திலேயே ஒரு புலவர் அவற்றின் சிறப்பைப் பின்வருமாறு பாடினார்:

ஓங்கு நிலைஒன்ப துற்றதிருக் கோபுரமும்
பாங்குருவம் பத்துப் பயில்தூணும் – தேங்குபுகழ்
மன்னர் பெருமான் வழுதிகண்ட தென்காசி
தன்னிலன்றி உண்டோ தலத்து?

இப்பாண்டியர் சிவபதம் அடைந்தபோது முன்னோர் மிகவும் மனமுருகிப் பாடியிருக்கிறார்கள்:

காண்தரு சீர்புனை தென்காசிக் கோபுரக் கற்பணியா
றாண்டின் முடித்துக் கயிலைசென் றானகி லேசர்பதம்
பூண்டுறை சிந்தை யரிகே சரிவிந்தைப் போர்கடந்த
பாண்டியன் பொன்னின் பெருமாள் பராக்ரம பாண்டியனே.

கோதற்ற பத்தியறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
தீ தற்ற வெள்ளிச் சிலம்பகத் தேசெம்பொ னம்பலத்தோ
வேதத்திலோ சிவ லோகத்தி லோ விச்வ நாதனிரு
பாதத்தி லோசென்று புக்கான் பராக்ரம பாண்டியனே.

மேலும் இவ்வரசர் கோயில்களுக்குச் செய்த திருப்பணிகளின் சிறப்பை மதுரைத் திருப்பணி மாலையும் மதுரைக் கோயில் சாசனப் பாடல்களும் பிறவும் தெரிவிக்கும். இவரைப் புகழ்ந்து அக்காலப் புலவர்கள் பாடிய அகத்துறைப் பாடல்கள் மிகப்பல. இவற்றுக்கும் மேலாக தமிழ் நாவலர் சரிதையில் காணப்பெறும் ஒரு தனிப் பாடல் இவருடைய தமிழ்ப் புலமையை மிகவும் வியந்து கூறுகிறது. இப்பாடல் சார்வ பௌமன் என்ற புலவர் பாடியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது:

**எண்ணீர்மை நூலுக் ககத்திய னாமிவனென் பதெல்லாம்**
**வெண்ணீர்மை யன்றி விரகல்ல மாறன் செஞ்சொற்**
**பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்**
**தண்ணீர் குடித்தல்ல வோ கும்ப யோனி தமிழ் கற்றதே.**

இதுகாறும் கூறிவற்றால், பராக்கிரம பாண்டியர் என்ற அரசரது ஆட்சியின் சிறப்பும் தெய்வ பக்தியும் கோயில் திருப்பணிகளும் விளக்கமாவதோடு இவருடைய புலமைத் திறனும் தெளிவாகும். இவர் எந்த நூலும் செய்ததாக வரலாறு இல்லை.

## காரியார் செய்த கணக்கதிகாரம்

காரி என்பவர் கணக்கதிகாரம் என்ற ஒரு நூல் செய்தார். இது பண்டைய கணித நூல்களுள் ஒன்று. இந்நூல் வரலாறு கூறுகின்ற வெண்பா நூற்பொருளைக் கூறுகிறது. அதாவது இந்நூல், நிலம், பொன், நெல், அரிசி, கல், கால் என்ற ஆறு வழிகளில் வரும் கணக்குகளை உரைப்பது. இந்த ஆறு அன்றியும் வேறு பல சிந்தனைக் கணக்குகளும் இதனுள் சொல்லப்பட்டுள்ளன.

இந்நூலானது சரவணபுரம் சண்முக முதலியாரால் பார்வையிடப்பட்டு சென்னை விவேக விளக்க அச்சுக்கூடத்தில் 1872 இல் அச்சிடப்பட்டது. இப் பதிப்பு பிழை நிறைந்த பதிப்பு. பின்னால் சமீப காலத்தில் திருத்தமான பதிப்பு ஒன்றும் வெளிவந்திருக்கிறது.

இந்நூலானது பாயிரம் பதினேழு பாடல்களும் நூல் 110 பாடல்களும் உடையது. இப்பாடல்களுள் வெண்பா நூற்பா கட்டளைக் கலித்துறை விருத்தம் ஆகிய பாக்கள் காணப்படு

கின்றன. நூல், மூலமும் உரையுமாக உள்ளது. ஆராயும் பொழுது ஆசிரியரே தம் கருத்தை விளக்க வேண்டி உரைப்பகுதி எழுதி னாரென்று தோன்றுகிறது. பாயிரப் பகுதியில் முறையாக விநாயகர், முருகன், திருமால், சரசுவதி, சபாநாயகர், பராசக்தி வணக்கம் கூறுகின்றார். அடுத்து அவையடக்கம், நூல் வரலாறு; நூல் வரலாற்றிலிருந்தே உரைப் பகுதி தொடங்குகிறது. நூல் அகச் சூத்திரம் அறுபது. மேல் புறச் சூத்திரம் என்கிறார். பாயிரம் கடைசி நான்கு பாடல்களும் பிழையாகப் பின்னே சேர்த்து அச்சிடப் பெற்றன என்பது தெரிகிறது. 'வென்றுளே புலன் களைந்தார்' என்ற திருவிளையாடற் புராணக் கடவுள் வணக்கப் பாடல் இங்கு அச்சிடப் பெற்றுள்ளது அடுத்து தொடக்கத்திலுள்ள திருமால் கலைமகள் துதிகள். பின்னர் அறுசீர் விருத்தமாக உள்ள அவையடக்கத்தைச் சுருக்கி இங்கு கலி விருத்தமாக அச்சிடப் பெற்றுள்ளது. இந் நான்கு பாடலும் நீக்குதற்குரியன. இதுபோலவே 110ஆவது பாடலும் நீக்குதற் குரியது. இது வாழி விருத்தம். அச்சிட்டோரை வாழ்த்துகிறது. பன்னிரண்டாம் பாடலாகிய அகவல் ஆசிரியர் வரலாறு கூறுகிறது:

**பொன்னி நாட்டுப் பொருந்திய புகழோன்**
**மன்னர் கோமான் வழிமுத லுடையோன்**
**முத்தமிழ் தெரிவான் முகரியம் பெரும்பதி**
**மத்திமத் தலத்தின் மறையவர் வாழுங்**
**குற்றமில் காட்சிக் கொறுக்கையர் கோமான்**
**புத்தன் புதல்வன் காரி என்பவனே.**

(புராரி என்பவனே என்று பாடபேதமுண்டு.) இதனால் இந் நூலாசிரியர் காரி என்பவர்; காரி நாயனார் என்றும் உரையில் சொல்லப்படுகிறார். சோழ நாட்டினர் முகரி என்ற ஊரினர், கொறுக்கையர் கோமானாகிய புத்தன் என்பவருடைய புதல்வர் என்று அறிகிறோம். இவர் ஆரிய மொழியிலுள்ள கணித நூலைத் தமிழிலே தாம் செய்வதாகப் பல இடங்களில் கூறுகிறார்.

பதினொராவது பாடலின் உரையில் தமிழில் உள்ள கணித நூல்கள் என்னென்னவென்று வரிசையாகக் கூறுகிறார்: "ஆரிய சூத்திரத்தின் வழங்கு நூல் தனக்கு அஞ்சனம் செய்தவம் என்றும், கோவிந்தனார் படிகம் என்றும், புவன தீபம் என்றும், கணித ரத்தினம் என்றும், இத்தனையடைவு நூற்கணக்குண்டு.

இதனைத் தமிழாலே செய்த நூற்குங்கணக்கதிகாரம் என்றும், ஓரம்பம் என்றும், கிளராலயம் என்றும், அதிசாகரம் என்னும், கலம்பகம் என்றும், திரிபுவன திலகம் என்றும், கணித ரத்தினம் என்றும், சிறு கணக்கு என்றும், இத்தனை நூல்களுண்டு. இந் நூல்கள் யாவும் முகவுரையிலே தெரியும்படி பார்த்து வருகை யில் முகவுரை சூத்திரக் கணக்கதிகாரம் என்றும், பல தொகை யெல்லாம் தொகுத்து முகவுரையிலே எல்லாக் கணக்கும் அறியச் சொன்னபடி கண்டு கொள்க." இங்குப் பெயர் சொல்லப் பட்ட கணித நூல்கள் 13; இவற்றுள் கணக்கதி காரமொன்றே இன்று கிடைப்பது. ஏனைய ஒன்றும் கிடைக்கவில்லை. ஏரம்பம் என்ற நூலை 302ஆம் குறள் உரையில் பரிமேலழகர் குறிப்பிடுகிறார்.

பழந்தமிழ்க் கணக்கின் பரிபாஷையும் பின்னமும் பின்ன எண்களுக்குரிய பெயரும் குறிகளும் பேரெண்களுக்குரிய பெயரும் அனேகமாய் இன்று வழக்கிலிருந்து மறைந்து விட்டன. இவற்றை அறிவதற்குக் கருவியாக இருப்பது இச்சிறு நூல். இவற்றோடு கூட, இதிலுள்ள கணக்குகள் நாற்பத்திரண்டு; அன்றியும் முத்தும் சரியாய் விலையும் சரியாய்ப் பங்கிட்டுக் கொடுத்தல் என்ற பெயரில் ஒன்பது இருபத்தைந்து நாற்பத் தொன்பது எண்பத்தொன்று ஆகிய எண்களை அதே எண்ணுள்ள சதுரக் கட்டங்களில் கூட்டுத்தொகை ஒரே எண்ணாக வரும்படி அடைப்பதற்கான சக்கரங்களும் போட்டுக் காட்டப்பட்டுள்ளன.

பண்டைக் காலத்தில் இப்படிப்பட்ட கணக்கு முறைகள் மக்களுக்கு நல்ல பொழுது போக்காயும் அறிவுக்கு விருந்தாயும் இருந்திருக்கின்றன. இவ்வகை நூல்கள் பல இருந்தும், மாதிரிக்கு இன்றைக்குக் கிடைப்பது இது ஒன்றுதான்.

காரி என்ற பெயரில் பலர் இருந்திருக்கிறார்கள். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான காரி நாயனார் திருக்கட வூரில் வாழ்ந்த அந்தணர்; கோவை பாடினார். நம்மாழ்வார் தந்தையும் ஒரு காரிப்பிரான். கடையெழு வள்ளல்களில் ஒரு வருக்கு மலையமான் திருமுடிக்காரி என்ற பெயருண்டு. சிறு பஞ்ச மூலம் செய்த காரி ஆசான் என்பவரும் ஒரு காரி. திருமா லுக்கும் ஐயனாருக்கும் காரி என்ற பெயர் உண்டு. நம் காரியார் இவர் அனைவரினும் வேறாவர். இக்காரியாரைக் குறித்த பழம் பாட்டொன்றும் உள்ளது:

எண்ணி லிவைவைத் தியம்பும் கணக்கெலாம்
மண்ணிலற வோர்க்கு வகுத்துரைத்தான் – ஒண்ணுதலாய்
பாரின் முழுதும் பரந்த புகழ்க்கொறுக்கைக்
காரிதான் சொன்ன கணக்கு.

இவர் வாழ்ந்தவூர் கொறுக்கை என்று சொல்லப்பட்டுள்ளது. கொறுக்கை (குறுக்கை) சோழநாட்டில் உள்ள நாடு அல்லது கூற்றம். அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்றான குறுக்கை வீரட்டம் என்ற தலம் மாயூரத்திற்கு அருகிலுள்ளது. அப்பர் சுவாமிகள் குறுக்கையர் குடி. அக்குறுக்கை என்பது திரு முனைப்பாடி நாட்டின் பகுதி. இந்தக்காரி ஆசிரியர் குறுக்கை வீரட்டத்தினர் என்று கருதலாம்.

இவ்வாசிரியர் காலம் பதினான்காம் நூற்றாண்டு என்பது முந்தையோர் குறிப்பு. இதைக் கொள்ளுவதற்கும் காரணங்கள் புலப்படவில்லை, தள்ளுவதற்கும் காரணங்கள் இல்லை. எனினும், இலக்கிய வளம் பெருகிய காலமாகிய 16-18 நூற்றாண்டுகளில் இவ்வகைப் பரிபாஷை காணப்படவில்லை. 19ஆம் நூற்றாண்டில் இது தோன்றியிருக்க முடியாது. ஆகவே 16க்கு முந்தியது என்பது தெளிவாகிறது. எனவே, 15ஆம் நூற்றாண்டு என்று கொள்வதில் தடையெழ நியாயமில்லை.

## அதிமதுர கவிராயர்

காளமேகப் புலவர் வரலாற்றால் இப்படியொரு கவிஞர் இருந்தார் என்று நமக்குத் தெரியவருகிறது. இப்புலவர் 15ஆம் நூற்றாண்டின் மத்தியில் விசய நகர சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியாகத் தமிழ்நாட்டை ஆண்டு வந்த சாளுவத் திருமலைராயரின் ஆஸ்தான வித்துவானாகப் பெருஞ்சிறப்புப் பெற்றிருந்தார். அச்சமயம் அரசவைக்கு வந்த இளம் புலவரான காளமேகப் புலவரை இவர் அவமதித்த காரணத்தால் இவர் வரலாற்றில் ஒரு பகுதி காளமேகத்தின் கதையோடு பிணைந்துள்ளது. அதிக மதுரமான கவிகளை இவர் பாடியமையால் இவருக்கு இப்பெயர் வந்தது போலும். இவர் நூலெதுவும் செய்ததாகக் கிடைக்கவில்லை. சில கதைகளும் தனிப்பாடல்களும் வழங்குகின்றன. தமிழ் நாவலர் சரிதை இவரைக் குறிப்பிடுகிறது. இவற்றால் இவரைப் பற்றிப் பின்வரும் செய்திகளை நாம் இங்கு கூறலாம்.

கவிராயர் திருமலைராயனுடைய நகரில் வழக்கம் போல் குதிரைமீது ஆரோகணித்து தண்டிகைப் புலவர் புடைசூழ வருங்காலத்தில், அப்போதுதான் அவ்வூர்க்குப் புதிதாய் வந்த இளைஞராகிய காளமேகம், இவருக்கு அவ்வரசனிடத் திருந்த சிறப்பு ஒன்றும் அறியாராய், மரியாதை காட்டும் மனமும் இல்லாதவராய், தம் இருக்கைவிட்டு எழாமலும் வணங்காமலும் இருந்தார். குதிரை மீது வந்த கவிராயரைக் கண்டு அவர்,

> **கோக்குதிரை நன்குதிரை கோவன் மதுரா வொன்னார்**
> **மாக்கு திரையெல்லா மண்குதிரை – தூக்குதிரைத்**
> **துங்கக் கரைக்குதிரை சொக்கன் குதிரைசது –**
> **ரங்கக் குதிரைகளே யாம்.**

என்ற பாடலைப் பாடினார் (கரைக் குதிரை என்பது நீர் உடைப்பை அணைக்கிற அணை. சொக்கன் குதிரை என்பது நதி). பின்னர் கட்டியக்காரன் ‘அதிமதுர கவிராயர் வருகிறார். பராக் பராக்’ என்று எச்சரித்துச் சென்றது கேட்டு, காளமேகம் இச்செருக்குத் தகாது என்ற கருத்துப்பட, ‘அதிமதுரம் என்பது குன்றியின் வேராகிய காட்டுச் சரக்குத் தானே; இது, மற்றக் கூட்டுச் சரக்குக்களோடு சேர்ந்தால் தானே பயன்?’ என்ற பொருள்பட ஒரு வெண்பாப் பாடினார்.

> **அதிமதுரமென்றே யகில மறியத்**
> **துதிமதுர மாயெடுத்துச் சொல்லும் – புதுமையென்**
> **காட்டுச் சரக்குலகிற் காரமில்லாச் சரக்குக்**
> **கூட்டுச் சரக்கெனவே கூறு.**

அதிமதுர கவிராயர் இதைக் கேட்டுக் கொண்டே சென்று தம் இருக்கை அடைந்தார். அங்கு தம் மாணாக்கருள் ஒருவனை விளித்து, காளமேகம் இருந்த கடைவீதி அடையாளத்தைக் கூறி, “நீ அவன் இருக்கும் கடையருகு சென்று கடைக்காரனை மேகம் பசு இரத்தினம் வேண்டுமென்று கேட்டு, மேல் நிகழ்வதை எம்மிடம் வந்து சொல்” என்று கூறி அனுப்பினார். அவன் அவ்வாறே சென்று வினவ, கடைக்காரன் ஒன்றும் புரியாமல் விழித்தான். அருகில் அமர்ந்திருந்த காளமேகம் இது தம்மைச் சோதிக்க விடுத்த வினா என்றுணர்ந்து, “கடைக்காரரே, நீர் காராமணி கொடுத்து அனுப்பும். மேகம் - பசு - இரத்தினம் என்பது கார்-ஆ-மணியாகும்” என்றார். இதை மாணவன் கவிராயரிடம் சொல்ல, அவரும் கேட்டு, காளமேகத்தின் அறிவை

*வியந்தாலும், கோபமும், பொறாமையும் கொண்டிருந்தார். பின்னர் இவர் யாரென்று வினாவியனுப்ப அவர் கேள்விக்கு விடையாகக் காளமேகம்,*

தூதைந்து நாழிகையில் ஆறு நாழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா அந்தாதி ஏழு நா ழிகைதனிற்
தொகை பட விரித்துரைக்கப்
பாதஞ் செய்மடல் கோவை பத்து நாழிகைதனிற்
பரணியொரு நாள் முழுதுமே
பாரகவியமெலாம் ஓரிரு தினத்திலே
பகரக் கொடி கட்டினேன்
சீதஞ் செயுந் திங்கள் மரபினான் நீடுபுகழ்
செய்ய திருமலையராயன் முன்
சீறு மாறாகவே தாறு மாறுகள் சொல்
திருட்டுக் கவிப்பு லவரைக்
காதங் கறுத்துச் செருப்பிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையினொடு கொடிய கடிவாளம் இட்டேறும்
கவி காளமேகம் நானே.

*என்ற பாடலை ஓர் ஓலையில் எழுதியனுப்பினார். பின்னர் காளமேகம் அரசன் சபையில் வரக்கண்ட அதிமதுர கவி, அவர் ஆணவத்தையடக்கக் கருதி தம் புலமை காட்டி வெருட்டி விட எண்ணி,*

மூச்சு விடு முன்னே முந்நூறும் நானூறும்
ஆச் சென்றால் ஐந்நூறும் ஆகாதோ – பேச்சென்ன
வெள்ளைக் கவிகாள மேகமே உன்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு.

*என்று பாடிய போது, அதற்குச் சிறிதும் சளைக்காமல் காள மேகம் பின்வரும் பாடல் பாடினார்:*

இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும்
அம் மென்றால் ஆயிரம் பாட்டாகாதோ – சும்மா
இருந்தால் இருப்பேன் எழுந்தேனே யானால்
பெருங் காளமேகம் பிளாய்.

பின்னர் அரசன் காளமேகத்தின் புலமையை நன்கு சோதித் தறிந்து மகிழ்ந்து அவருக்குப் பெருஞ்சிறப்புச் செய்தபோது, கவிராயர் தம்முடைய பகைமையை வளர்த்துக் கொள்ள இயலவில்லை. நாளடையில் அவருடன் நட்புக் கொண்டு வாழ்ந்து வந்தார். இருவருமாகத் திருவாரூர் முதலான பல இடங்களுக்குச் சென்று பாடல்கள் பாடி வந்தார்கள். முதல் பாடலில் காளமேகம் இவரைக் கோவல் மதுரா என்றமை யால், இவர் ஊர் கோவலூர் என்று மட்டும் தெரிகிறது. வேறு எந்தச் செய்தியும் இவரைப் பற்றித் தெரியவில்லை. நூலும் தெரியவில்லை.

## சம்பந்தாண்டான்

"அழுக்காறு என ஒரு பாவி திருச்செற்று தீயுழி உய்த்து விடும்" என்பது திருக்குறள். இதற்கு இலக்கியமாக வாழ்பவர் களை நாம் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் பார்க்கி றோம். பண்டைக் காலத்தில் இலக்கியத் துறையிலேயே இதற்கு இலக்கியமானவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களுள் 14-15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தாண்டான் என்ற புலவ னும் ஒருவன். இவனுடைய புலமையைப் பற்றிய செய்திகளை நாம் நன்கு அறிய வாய்ப்பில்லாவிட்டாலும், இவனுடைய அழுக் காறு இருவேறு புலவர்களுடைய வாழ்க்கையில் குறுக்கிட்ட மையை நாம் காண்கிறோம்

இப்புலவன் சாக்த மதத்தினன். திருவண்ணாமலையில் அரசனால் பெருஞ்சிறப்புப் பெற்று மிக்க செல்வத்தோடு வாழ்ந் திருந்தான். ஒரு சமயம் அந்நகர் வழியே தலவழிபாடு செய்து செல்லும் நோக்கத்துடன் வந்த இரட்டைப் புலவர் இவன் சிறப்பைக் கேள்வியுற்று இவனைப் பார்க்கச் சென்றார்கள். பாடிப் பரிசு பெறுவது அவர்கள் இயல்பு. சென்ற புலவர்கள் அவனைப் பார்த்த சமயம் நாவிதன் அவனுக்குச் சவரம் செய்து கொண்டிருந்தான். வருவோரைப் பார்த்த சம்பந்தாண்டானுக்கு, முடவரும் குருடருமாய்த் தோன்றிய இவர்கள் ஏளனத்துக்கிட மாயினார்கள் போலும். இவர்களைப் பற்றி முன்னமே அவன் கேள்விப்பட்டிருத்தலும் கூடும். சிறந்த புலவர்கள் எனப் புகழ் பெற்றிருந்த இவர்களை அவன் தன் அழுக்காறு என்ற இயல்பு காரணமாக அவமதிக்க எண்ணினன் போலும், தன் ஆடம்பரப்

புலமைக்கு ஏற்றபடி "மன்னென்றெடுத்து மலுக்கு என்று முடிய ஒரு வெண்பாப் பாடுக" என்று கூறினான். கேட்ட புலவர்களோ சமுத்தி பாடுதலில் மிக்க வல்லவர்கள். ஆனால் பாடச் சொன்ன சமயமும் சூழ்நிலையும் மரியாதைக் குறைவாக இருந்தது. ஆகவே, மிக்க கோபத்தோடு தங்கள் கோபத்துக்கும் ஏச்சுக்கும் சம்பந்தாண்டானையே இலக்காக்கி அவர்கள் பாடினார்கள்:

மன்னு திரு வண்ணா மலைச்சம்பந்த தாண்டற்குப்
பன்னு தலைச் சவரம் பண்ணுவதேன்?–

என்று முடவர் கேட்டார். அந்நேரம் அவன் தலையை நாவிதன் மொட்டையாக அடித்துக் கொண்டிருந்தான். கேட்ட குருடர் சந்தர்ப்பதை நன்கு உணர்ந்து கொண்டார்; பாடினார்:

– மின்னின்
இளைத்த இடைமாதர் இவன் குடுமி பற்றி
வளைத் திழுத்துக் குட்டா மலுக்கு-

என்று முடித்தார். சம்பந்தாண்டன் மனம் எவ்வளவு வெதும்பி யிருக்கும்? வீணே இந்த வம்பை வாங்கிக் கொண்டோமே என்று வருந்திப் புலவர்களை ஒருவாறு உபசரித்து வழியனுப்பினான்.

ஆனால் இவனுடைய குணம் மாறுபடவில்லை என்று தெரிகிறது. சில ஆண்டுகள் சென்ற பின்னும் இவன் இதே பொறாமைக் குணமும் வக்ர புத்தியும் உடையவனாயிருந்தான். அக்காலம் திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் தோன்றி முருகப் பெருமான் அருள் பெற்று ஆசு கவியாகவும் வர கவி யாகவும் திகழ்ந்த காலம். இவருடைய முருக பக்தியைக் கண்டு அரசனாயிருந்த பிரபுடதேவராயன் அவரிடம் மிக்க ஈடுபாடு கொண்டிருந்ததையறிந்த சம்பந்தாண்டன், அரசனுக்கு இவர் இடத்தில் அதிருப்தி விளைவிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டான். தான் சத்தி உபாசகனாக இருந்தமையால் எந்த நேரத்திலும் சத்தியைத் தன்முன் வந்து காட்சி தரும்படிசெய்ய முடியுமென்று எண்ணியும், அருணகிரிநாதரால் அவருடைய வழிபடு தெய்வமாகிய முருகனை இவ்வாறு வருவிக்க முடியா தென்று கருதியும், அவன் இறுமாந்து அரசனிடம் சென்று, "யான், தேவியை உன்முன் வரவழைக்கின்றேன். இம் முருக பக்தர் முருகனை வரவழைக்கட்டும்; அப்போது இவருடைய உண்மைப்

பெருமை விளங்கும்" என்று கூறினான். அரசனும் இதற்கிணங்கினான். ஆனால் முருகப் பெருமான் தமது அடியவரான அருணகிரி நாதர்பால் அருள் கரந்து தேவி காட்சி கொடுக்க வரமுடியாதபடி அவர் மடியில் தங்கித் தடை செய்தும், அருணகிரிநாதர் "அதல சேடனாராட" என்ற பாடல் சொல்லி "மயிலுமாடி நீயாடி வரவேணும்" என்று வேண்டின மாத்திரத்தில் தன் முன் தோன்றி நடனம் ஆடிய மயில் மீது ஏறி அரசனும் புலவர்களும் இருந்த சபையில் வந்து மின்னல் போல் காட்சியளித்தார் என்று வரலாறு கூறுகின்றது. முருகப் பெருமானைக் கண்ட ராயன் மிக்க விம்மித மெய்தி அது முதல் அருணகிரி நாதருக்கு அடிமையானான். அவர் உவக்கும்படி கோயிலில் ஆயிரக்கால் மண்டபம் முதலிய திருப்பணிகள் செய்தான்.

தோல்வியுற்ற சம்பந்தாண்டானை ஊரை விட்டு வெருட்ட ஊரார் அரசன் முகமாக முற்பட்ட போது, அவன் அரசனிடத்தில் தனக்கு நெடுங்காலமாயுள்ள செல்வாக்கினால், இவ்வாறு தம்மிடத்தில் தெய்வம் விளங்கப் பெற்றவரான அருணகிரி நாதரை இந்திரலோகம் சென்று பாரிசாதமலர் கொண்டு வந்து தருமாறு கேட்கும்படி ராயனுக்குச் சொன்னான். அவனும் ஆராயாது அவ்வாறு கேட்கவே, அருணகிரிநாதர் சம்மதித்தார். தம் உடலை அண்ணாமலைக் கோபுரத்தில் விட்டுக் கிளியுருவத்தோடு இந்திரலோகம் சென்றார். தருணம் பார்த்திருந்த சம்பந்தாண்டான் குறிப்பிட்ட நேரத்தில் அவர் மலரோடு திரும்பவில்லையென்று அரசனிடம் தெரிவித்து அவருடலைச் சமாதி செய்யாமல் எரித்துவிடச் செய்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் கிளியுருவில் திரும்பிய அருணகிரிநாதர் நிகழ்ந்தவை அறிந்து யாவும் முருகனருளே எனத் துணிந்து, மனச் சமாதானமடைந்து, கிளியாகவே இருந்து அரசனுக்கு மட்டும் உபதேசம் செய்து பல பாடல்கள் பாடிக்கொண்டிருந்து, முருகன் திருவடியடைந்தார்.

சம்பந்தாண்டான் ஊரைவிட்டு ஓடிவிட்டான். பின்னர் அவன் வரலாறு ஒன்றும் புலப்பட்டிலது. இக்கதைகள் வரலாற்றுணர்ச்சிக்குப் பொருந்தாவாயினும் பழைய நூலாகிய தமிழ் நாவலர் சரிதையும் புதிய நூலாகிய புலவர் புராணமும் இக் கதைகளைக் குறிப்பிட்டுள்ளமையால் இங்குக் குறிப்பிட்டோம்.

## பிறவாநெறியார்

திருமலைராயன் அவைக்களப் புலவரில் பிறவா நெறியார் (பிறவா நெறி காட்டியார்) என்பவர் ஒருவர் இருந்தனர் போலும். அதிமதுர கவிராயன் காளமேகத்தை அடக்க முற் பட்டபோது ராயன் அவையில் இருந்து சமுத்தி கொடுத்துப் பாடச் சொன்ன புலவருள் இவரும் ஒருவர்.

பலர் பல விதமான சமுத்திகள் கொடுத்தபோது, இவர் பொருள் உடைய தொடர் கொடுத்துப் பாடச் சொன்னார்.

> கடுங்காற்று மழை காட்டும்
> கடுநட்புப் பகை காட்டும்.

என்ற முடிவுடைய வெண்பாப் பாடுக என்று இவர் கூறினார். உடனே காளமேகம் பின்வரும் வெண்பாப் பாடினார்:

> நீரோ பிறவா நெறிகாட்டி யார் எமக்கு
> நீரோ சமுகை நிலையிட்டீர் – நீரோ இவ்
> விங்களமேன் செய்தீர் விடும் கடுங்காற்றும் மழைகாட்–
> டுங்கடுநட்புப் பகை காட்டும்.

இதில் காளமேகம் கேட்டவர் பெயரையே அமைத்துப் பாடி யிருத்தல் சிறப்பு.

பிறவா நெறி காட்டியார் என்பது திருப்பேரூர்ச் சிவபிரான் திருநாமங்களில் ஒன்று. இப்புலவருடைய தகுதியையுணர்ந்த காளமேகம், ‘தகுதியற்ற அதிமதுரகவி என்னைச் சோதிக்க லாம். பெருமான் பெயர் பூண்டு தகுதியும் பெற்றுள்ள நீர் இப் படிச் சமுத்தியிடலாமா? ஏன் இவ்வாறு? வஞ்சகம் செய்தீர்?” என்று சமத்காரமாகப் பாடியிருக்கிறார் என்பது நாம் கருத லாம். (விங்களம் - கபடம்.)

இதனால் இப்புலவர் திருப்பேரூரைத் தன்னகத்து உடைய கொங்கு நாட்டைச் சேர்ந்தவர், நல்ல உள்ளம் படைத்தவர், ராயன் அவைப் புலவருள் ஒருவர் என்று, அறிகிறோம். இவர் குறித்து வேறு வரலாறு தெரியவில்லை.



## சாசனப் புலவர்கள்

நம் முன்னோர் சரித்திரவுணர்ச்சியோடு எல்லா வரலாறும் எழுதி வைத்ததில்லை. தமிழ் மக்களின் புராதன வழக்க வொழுக்கங்களை அறிவதற்குச் சிறந்த சாசனங்களாயுள்ளன, பண்டைப் புலவர் செய்த நூல்கள். ஆனால் புலவர்கள் நூல் செய்தார்களே யொழிய, தங்கள் சொந்தச் சரித்திரத்தைக் கூறினார்களில்லை. சிலர் தங்கள் பெயரைக் கூடக் கூறினதில்லை. நூல்களுக்கு அடுத்தபடி நம் நாட்டுக் கலைச் சின்னங்களாகிய திருக் கோயில்கள். கோயில்களின் வரலாறு கொண்டு நாம் அறியாத பிற செய்திகள் எவையும் இல்லை என்றே கூறலாம். எனினும் வரலாற்றுக்குச் சிறப்பாகப் பயன்படுவன, பல்லவர் காலந் தொடங்கிய நாயக்கர் காலம் வரை பல்வேறு பகுதிகளிலும் அரசாண்ட அரசர்களும் தலைவர்களும் கோயில்களில் பொறித்து வைத்துள்ள கல்வெட்டுக்கள். இன்று பண்டைத் தமிழருடைய வாழ்க்கையின் சிறப்புக்கள் யாவையும் நாம் அறிய முடிவது கல்வெட்டுக்களால் தான்.

கல்வெட்டுக்களின் மூலம் அனேகம் பாடல்கள் வெளியாக யுள்ளன. **திருவிடைவாய்த் தேவாரம்** என்பது அடங்கன் முறையுள் காணப்படவில்லை. வேறெங்கும் இது பற்றிய குறிப்பும் இல்லை; கல்வெட்டினால் மட்டுமே தெரிய வந்தது. **சிராமலை யந்தாதி** என்ற நூலும் அப்படியே கல்வெட்டினால் மட்டுமே தெரிய வந்தது. பல புலவர்களைக் குறித்த செய்தியும் கல்வெட்டுக் களால் அறிகிறோம். பராக்கிரம பாண்டியர் தாமே சிறந்த புலவர் என்பதைக் கல்வெட்டின் மூலமே நாம் அறிகிறோம். கல்வெட்டில் பாடல் பாடின புலவர் எண்ணிறந்தோர். எல்லோர் பெயரும் வரலாறும் அறிய வழியில்லை. அவைகளப் புலவரும் அரசர்களுடைய மெய்க்கீர்த்திகளைப் பாடின புலவர்களும் எத்தனையோ பேர். இவர்களைப் பற்றிய செய்திகள் ஒன்றும் இன்று தெரிய வழியில்லை. மேலும், சில புலவர்களைப் பற்றிச் சாசனங்கள் கூறுகின்றனவேயன்றி, வேறு வழியில் அவர்களுள் யாரைப் பற்றிய செய்தியும் அறிய இடமில்லை.

மு. ராகவையங்காரவர்கள் சாசன வாயிலாய்த் தெரிய வந்த தமிழ்ப் புலவர்களைத் தொகுத்தெழுதியவிடத்து 15 நூற் றாண்டுக்குரியவர்களாக இரு புலவர்களைக் குறிப்பிட்டிருக் கிறார்கள். இவர்கள் வரலாறுகள் இங்கு சிறிது சொல்வோம்.

## வஞ்சி மார்த்தாண்டன்

சோழ நாட்டின் ஒரு பகுதியாகிய தென் திருவாங்கூர்ப் பகுதி வேணாடு என்று சொல்லப் பெறும். வேணாட்டடிகள் என்ற திருவிசைப்பா ஆசிரியர் இப்பகுதிக்குரியர்: இங்கு ஒவ்வொரு காலத்திலும் தமிழ் வல்ல அரசர்களும் புலவர்களும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். 15ஆம் நூற்றாண்டிலும் அவ்வாறு தமிழ்ப் புலமையுடையோர் இருந்தனர். மூவலூர்க் கோயில் கோபுர வாயிலில் உள்ள ஒரு கல்வெட்டு, "அகிலாகலா வல்லவன் சேரமான் பெருமாள் வஞ்சி மார்த்தாண்டன் திருப்பா மூத்த திருவடி சொல்லி வரக் காட்டின பாகுடக் கவி" என்ற குறிப் போடு சில பாடல்களைக் கொண்டிருக்கிறது. பாகுடம் என்பது கையுறை. மூவலூர்ப் பகுதியில் வாழ்ந்த புதுவைச் சடையன் என்பார்க்கு இவ்வஞ்சி மார்த்தாண்டன் கையுறையாகச் சொன்ன பாடல்கள் இங்கு பொறிக்கப்பட்டுள்ளன. இவர் பல கலை களில் வல்லவர்; வஞ்சி சேரமான் பெருமாள் என்றமையால் சேர குலத்தின் கிளையொன்றைச் சேர்ந்த மன்னர் என்பது பெறுகிறோம் திருப்பா என்றமையால் அம் மன்னர் கால் வழியில் இவர் திருப்பாப்பூர் என்ற வமிசத்தவர் என்றும் நாம் அறிகிறோம். இவருடைய சாசனமொன்று தென் பாண்டி நாட்டுச் சேரமா தேவிப் பக்கத்தில் கொல்லம் 624இல் (கி.பி. 1448) அமைந்துள்ளது. இதனால் காலம் 15ஆம் நூற்றாண்டு என்று ஏற்படுகிறது.

இப்புலவராகிய அரசரைக் குறித்து வேறு செய்திகள் தெரியவில்லை. பிற்காலத்தில் இதே பெயரைத் தரித்த அரசர்கள் வாழ்ந்தனர் என்றும் சாசனத்தால் அறிகிறோம்.

## மணவைக் கூத்தர்

மணவைக் கூத்தர் பாடலைச் சிறப்பித்து அழகான தனிப் பாடலொன்று வழங்குகிறது:

துளைபடு மாமர மோரேழும் எய்தவன் தூதுருவி
உளைபடு வாரிதி யொன்றே கடந்தது ஒளிர்தரள
வளைபடு வாவி மணவைமன் கூத்தன் வகுத்தகவி
தளைபடு காலுட னே கட லேழையும் தாண்டியதே.

புதுக்கோட்டையைச் சார்ந்த திருமெய்யம் சாசனமொன்று மணவையூர் பூமாலைக் கூத்தரைக் குறிப்பிடுகின்றது. சக வருஷம் 1420 (கி. பி. 1498) இல் மெய்யம் கோயிலில் திருவாதவூரரை ஏறியருளப் பண்ணி அவ்வடியாருக்கு மார்கழித் திருநாள் பத்துத் தினமும் திருவிழா நடத்தி வைக்க நிபந்தம் செய்த இருவருள் கானநாட்டு இராசசுந்தர புரத்து மணவையூருடையான் பூமாலைக் கூத்தன் பாண்டிப் பெருமாள் என்பாரொருவர் என்பது சாசனம். இவர் முற்காட்டிய தனிப்பாடல் போற்றுகின்ற மணவைக் கூத்தன் என்ற கவிராயராவார். இவருடைய புலமையை அக்காலப் புலவர்களுள் மிகவும் போற்றினார் என்பதன்றி வேறு செய்திகள் புலப்படவில்லை. இவர் பெயருள் பாண்டிப் பெருமாள் என்ற தொடர் காணப்படுகிறது. இது இவரது இயற் பெயராயிருத்தலுங் கூடும். ஆனால் பிற்காலத்தில் சிவஞான போதத்துக்கு உரை செய்த பாண்டிப் பெருமாள் என்பவர் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் வேறு, இக் கூத்தர் வேறு.

## திருவம்பலமுடையார் மறைஞான சம்பந்தர்

மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்தவராய் திருவம்பலமுடையார் மறைஞான சம்பந்தர் என்ற பெயருடைய பெரியார் ஒருவர் இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூரில் வாழ்ந்திருந்தார். இவர் திருப்புத்தூர்க் கோயிலில் உள்ள திருத்தளியாண்ட நாயனார் என்ற பெயருடைய சிவபெருமான் புரிந்தருளிய திருவிளையாடல்களை **ஓங்கு கோயில் புராணம்** என்ற பெயருடைய புராணமாகப் பாடி அரங்கேற்றினார் என்று இக் கோயில் கல்வெட்டு ஒன்று உணர்த்துகிறது. நடராசப் பெருமானுக்குக் கற்சிலை அமைக்கப்பட்ட அபூர்வமான சிவதலங்களுள் திருப்புத்தூரும் ஒன்று. இதனால் போலும் இவர் பெயரில் திருவம்பலமுடையார் என்ற அடைமொழி காணப்படுகின்றது. இவ்வாசிரியர் இங்கிருந்த ஒருசிறு மடத்தில் வாழ்ந்தார். கி.பி. 1484ஆம் ஆண்டில் இவர் இப்புராணத்தைப் பாடி அரங்கேற்றினார். அப்போது கோயில் அதிகாரிகள் மேல்திருமங்கலம் என்னும் மண்ணி மங்கலத்தில் இவருக்கு ஐந்து மாநிலம் இறையிலியாக அளித்தனர் என்று கல்வெட்டு கூறுகின்றது.

இப்புராணம் இப்போது கிடைக்கவில்லை. இது பற்றி வேறு எந்த விவரமும் அறிவதற்கில்லை. மறைஞான மாலை

வெள்ளியம்பலவாணத் தம்பிரான் எழுதிய முத்தி நிச்சயப் பேருரையில் கிடைக்கிற ஒரு குறிப்பு இங்கு ஆராயத் தகுந்தது. அவர் மறைஞான மாலை என்ற ஒரு நூலைப் பெயர் குறிப்பிட்டு அதிலிருந்து இரு பாடல்களை எடுத்துத் தருகிறார்.

இருந்தாலும் ஐம்புலன் ஒன்று பெற்றாலுன்னையன்றி யொன்றும்
அருந்தா துனக்கும் இங்கப்படி நாம் அந்த இன்பதுன்பம்
பொருந்தா தெமை அருட் பேரின்பம்நாம் புசிக்கின்றவன்நீ
வருந்தாகொல் என்றனன் புத்தூர்வருமறை ஞானமன்னே.

எனக்கோ நினைவற்று அனனியமாக எழுந்த சுகம்
உனக்கே உரியதென்றனை என்ற போதில் உயிர்கட்கின்றித்
தனக்கோ பயனில்லை சர்க்கரை போலும் தன்தன்மை என்றான்
மனக்கோயில் வாழும் மறைஞான சத்திய வாசகனே.

என்பன அவ்விரு பாடல்கள். முதற்பாட்டு புத்தூர் வரும் மறை ஞான மன்னே என்று கூறுகிறது. புத்தூரில் ஒருமடம் இருந்தது என்று குறிப்பிட்டோம். ஆதலால் இப்புத்தூர் மேற்கூறிய திருப் புத்தூர் என்றும் மறைஞானர் அம்மடத்தில் இருந்த மறைஞான சம்பந்தரே என்றும் நாம் கருதலாம். உபதேசம் செய்த ஆசாரி யராக இவர் வணங்கப் பெற்றமையால் மறைஞான சத்திய வாசகன் என்று குறிப்பிடப்படுகிறார்.

இப்பாடல்களினால் புத்தூர் மடத்தில் வாழ்ந்திருந்து புராணம் செய்த மறைஞான சம்பந்தரைத் துதிக்கும் மறை ஞானமாலை என ஒரு நூல் இருந்தமை நாம் அறிகிறோம். ஆன்மா இறைவன் முத்திநிலை அனுபவம் என்பவற்றின் தன்மையை இவை கூறுகின்றன. இம் மறைஞான சம்பந்தர் ஞானவானாக வாழ்ந்து சீடர் பலருக்கு ஞானோபதேசம் செய் தவர் என்று நாம் அறிகிறோம். நூல் கிடைக்காமையால் வேறு செய்திகள் தெரியவில்லை.

முன்கூறிய கல்வெட்டினால் இவர் காலம் 15ஆம் நூற் றாண்டு என்று திட்டமாய்த் தெரிகிறது. 16ஆம் நூற்றாண்டில் சிதம்பரத்தில் வாழ்ந்து பல சமய நூல்கள் செய்த பேராசிரிய ரான மறைஞான சம்பந்தரும் அவர் மாணாக்கராய் சித்தியார் உரை செய்தவரான மறைஞான தேசிகரும் இவரினும் வேறான வர்கள் என்று கருதவேண்டும். இது வெறும் துதி நூலல்ல, சிறந்த சாத்திரமாயிருக்கும் என்றும் நாம் அறிகிறோம்.

## உத்தர நல்லூர் நங்கை

தமிழிலக்கிய வரலாற்றில் பெரும் சிறப்புடைய பெண்பாற் புலவர்கள் காலந்தோறும் இருந்திருக்கிறார்கள். சங்க காலத்து அவ்வையார் முதல் இருபதாம் நூற்றாண்டில் இருந்த அசலாம் பிகை அம்மையார் வரையில் இவர்கள் மிகப்பலர். அவ்வையார், காரைக்கால் அம்மையார், ஆண்டாள் போன்றார் பல பிரபந் தங்கள் பாடினோர். பின்னும் சிலர் இரண்டொரு பாடல்களே பாடி, வரலாற்றிலே சிறப்பான இடம்பெற்றிருக்கிறார்கள். புற நானூற்றில் ஒரே பாடல் பாடிய பூதப்பாண்டியன் தேவி, 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அம்மைச்சி, வரதுங்கராம பாண்டியன் மனைவி போன்றார் இத்தகையோர்.

இவர்கள் வரிசையில் சேர்த்து எண்ணத்தக்காள் வீரப் பெண்மணியான உத்தரநல்லூர் நங்கை என்பவள். இவள் திரி சிராப்பள்ளி ஜில்லாவில் திருப்பாச்சிலாச்சிராமத் தருகிலுள்ள உத்தர நல்லூர் என்ற ஊரில் பிறந்தவள். கிடைக்கும் குறிப்புக் களைக் கொண்டு இவள் வரலாற்றைப் பின்வருமாறு கூறலாம்.

இந்நங்கை நந்தனார் குலத்தில் பிறந்தவள். மிக்க சிறு பிராயத்தில் ஆற்றின் கரையில் இவள் மாடு மேய்த்துக் கொண் டிருந்த சமயம், அங்கு அக்கிரகாரத்திருந்து நீராடவந்த வேதியச் சிறுவனொருவன் வேதம் ஓதி மந்திரம் சொல்லி, சந்தி முதலியன செய்வதை இவள் முதலில் வேடிக்கையாகப் பார்த்து வந்து, பின்னர் இவள் பக்தியோடு பார்த்து, பல ஆண்டுகளில் தானும் கற்றாள். இருவரும் சிறு வயதினராமையால் சாதி வேற்றுமை யுணர்வு மனத்தில் புகவில்லை. அவன் கற்றுத்தர இவள் கற்று வரவும், நாளடைவில் அவன் கற்ற வேதமெல்லாம் இவளும் கற்று ஓரளவு பண்டிதையானாள். மங்கைப் பருவமடைந்தும் மனவிகற்பமின்றி இருவரும் கல்வித்துறையில் கலந்து நாள் தோறும் உறவாடி வந்தபோது, ஊரார் கண்ணில் படவே, வம்பு தலையெடுத்தது. இருவரையும் அவரவர் சுற்றத்தார் கண்டித்த போதிலும், இவர்கள் கூட்டுறவு நிற்கவில்லை. பார்த்த அந்தணர், இவள்தான் அந்தணச் சிறுவனைத் தன்பால் இழுக்கிறாள் என்று எண்ணி, ஒரு நாள் இரவு தீவர்த்தி முதலியன எடுத்துக் கொண்டு இவளைத் தண்டிக்க இவள் இருந்த சேரியை நோக்கி

வந்தார்கள். அந்தண இளைஞன் ஓரளவு கோழையாய் இருந் தாலும், இவள் அச்சமின்றி, வந்தவர்களைத் தடுத்து நிறுத்தி நல்லறிவு புகட்டினாள்; அவனுடைய நட்பினால் இவளுக்கு எல்லாக் கல்வியும் தெரிந்திருந்தமையால், அவர்களோடு சமமா கப் பேசி நல்லறிவு புகட்ட முடிந்தது.

பாய்ச்சலூர் (திருப்பாச்சிலாச்சிராமம்) கிராமத்து அந்தணர் களை நோக்கி இவள் கூறிய மொழிகள், 11 விருத்தப்பாடல்கள்; பாய்ச்சலூர்ப் பதிகம் என்ற பெயர் பெற்றுள்ளன. இப்பதிகம் நங்கையார் பாடல் என்று ஏட்டில் காணப்படுகிறது. இவை நாடோடிப் பாடல் போல வழங்கி வந்திருக்கின்றமையால், பிழைகள் மலிந்து, சில பாடல்கள் உண்மை வடிவம் எளிதில் புலப்படாமலும் உள்ளன. பொருள் பொதிந்த சில பாடல்கள் பின்வருவன:

ஓதிய நூலும் பொய்யே உடலுயிர் தானும் பொய்யே
சாதியும் ஒன்றே யல்லால் சகலமும் வேற தாமோ
வேதியன் படைத்த தல்லால் விதியினை வெல்ல லாமோ
பாதியிற் பழியே சூழ்ந்த பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

கொக்குமேற் குடுமி கண்டேன் கோழிமேற்சூடும் கண்டேன்
நெக்குறுவாலும் கண்டேன் நீரின்மேல் நெருப்புங் கண்டேன்
சற்குலம் என்று சொல்லிச் சதுமறை பேசவேண்டாம்
பக்குவம் அறிந்து பாரும் பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

வெற்றிலை தாழை வாழை வித்தொன்று முளைப்பதொன்றோ
பற்றிய யோனி பேதம் பாருளோர் அறிந்தி டாமல்
பெற்றவர் தம்மைத் தேடிப் பிறந்திருந் திறந்து போனார்
பற்றி நின்றலைவ தேனோ பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

குலங்குலம் என்பதெல்லாம் குடுமியும் பூணு நூலும்
சிலந்தியும் நூலும் போலச் சிறப்புடன் பிறப்ப துண்டோ
நலந்தரு நான்கு வேதம் நான்முகன் படைத்துண்டோ
பலந்தரு பொருளுமுண்டோ பாய்ச்சலூர்க் கிராமத்தாரே.

மகங்கொண்ட தேகந்தன்னில் மற்றொரு சுத்தம் காணீர்
அகங்கண்டு புறமும் கண்டும் அவனுக்கே தார மானேன்
சுகங்கண்டு துக்கங் கண்டு சுக்கில வழியே சென்று
பகங்கொண்ட தேனோ என்னில் பாய்ச்சலூர்க் கிராமத்தாரே.

ஊருள பார்ப்பார் கூடி உயர்ந்ததோர் சாலை கட்டி
நீரிலே மூழ்கி வந்து நெருப்பினில் நெய்யை விட்டுக்
கார்வயல் தவளை போலக் கதறிய வேதந் தானும்
பாரை விட்டகன்ற தோதான் பாய்ச்சலூர்க் கிராமத்தாரே.

சந்தனம் அகிலும் வேம்பும் தனித்தனிக் கந்தம் நாறும்
அந்தணர் தீயில் வீழ்ந்தால் அவர்மணம் வீசக் காணேம்
செந்தலைப் புலையன் வீழ்ந்தால் தீ மணம் வேற தாமோ
பந்தமும் தீயும் வேறோ பாய்ச்சலூர்க் கிராமத்தாரே.

ஒருபனை இரண்டு பாளை ஒன்று நுங்கு ஒன்று கள்ளு
அறிவினில் அறிந்தவற்கு அதுவுங்கள் இதுவுங் கள்ளே
ஒருகுலை உயர்ந்த தேனோ ஒருகுலை தாழ்ந்த தேனோ
பறையனைப் பழிப்பதேனோ பாய்ச்சலூர்க் கிராமத் தாரே.

*(பிற்காலத்தார் இதற்குக் காப்புச்செய்யுள் ஒன்றும் சேர்த்துள்ளனர்)*

*இப்பாடல்களில் உத்தர நல்லூர் நங்கை, சாதியினால் உயர்வு தாழ்வு கூறுவது இயற்கைக்கு முரண் என்றும், பண்பினால் ஒத்துத் தாங்கள் இருவரும் மணம் செய்துகொள்வதைச் சாதிபற்றித் தடுத்தல் தகாதென்றும் வலியுறுத்திக் கூறுவது வெளிப்படை.*

*இவற்றுள் 5, 6, 7 ஆகிய மூன்று பாடல்களும் தமிழ் நாவலர் கவிதையுள் கூறப்படுகின்றன; எனவே, பாய்ச்சலூர்ப் பதிகத்தின் காலம், இத்தொகுப்பின் காலமாகிய 17ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்பதும் வெளிப்படை. நூலின் முன்பின் உள்ள தொடர்புகளாலும், பொருளமைதியாலும், இச்சிறு பதிகம் கபிலரகவலின் காலமாகிய 14ஆம் நூற்றாண்டுக்கு அடுத்த 15ஆம் நூற்றாண்டு ஆகலாம் என்று கருதுகிறோம்.*

## ஒப்பிலாமணிப் புலவர்

*தனிப்பாடல் திரட்டு தனிச் செய்யுட் சிந்தாமணி முதலிய திரட்டு நூல்கள் ஒப்பிலா மணிப்புலவர் என்று ஒருவரைக் குறிப்பிடும். 18ஆம் நூற்றாண்டில் சிவ ரகசியம் பாடிய ஒப்பிலா மணி தேசிகரினும் இவர் வேறாவர். குமணன் வரலாற்றில் கண்ட 'ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பில்' என்ற புறநானூற்று*

*164ஆம் பாடல் குறைந்தும் திரிந்தும், ஆடெரி படர்ந்த கோடுயர் அடுப்பில் என்று வந்ததாய்ப் புலப்படுதலால் இவரைக் குமணன் காலத்தவர் என்று சொல்லுவதற்கு இடமில்லை என்றும், வேறு இவர் செய்த நூல் எதுவுமில்லை என்றும் தனிச்செய்யுள் சிந்தாமணி பதிப்பித்த கந்தசாமிக் கவிராயர் எழுதியிருக்கிறார். இவ் ஒப்பிலாமணி 14ஆம் நூற்றாண்டு என்பது சோமசுந்தர தேசிகர் குறிப்பு. இவர் பாடல்கள் என 21 பாடல்களைக் கவி ராயர் காட்டி இருக்கிறார். இவற்றுள் பெரும்பாலான பாடல் கள் இவர் பாடல்கள் அல்ல. எனினும் வேறு வகையில் கிடைக் கின்ற ஒரு குறிப்பு இக்காலத்தில் இப்பெயர் கொண்ட புலவர் இருந்தது உண்மை என்று புலப்படுத்துகிறது.*

*சத்தியஞான பண்டாரம் பிள்ளைத்தமிழ் முத்தப் பருவத்தில் (47) 'தமிழொப்பிலா மணிக்குப், பெருகும் புகழ் நன்மருகனெ னும் பேரும் தையல் பாகமுனி - பின்னே யுதிக்க முன்னுதித்த பெருமானென்னும் பேரும் உளம், உருகும் உலகந்துதித்தேத்தி உரைக்க விசைந்தாய்' என்று காணப்படுகிறது. இங்கு 'தமிழ் ஒப்பிலாமணி' என்று கூறுவதனால் இவர் தமிழ்ப் புலவர் என்று கருதுகிறோம். இவருடைய மருகர் சத்தியஞானி. சத்திய ஞானியின் காலம் 1400-1450 என்று குறிப்பிட்டிருக்கிறோம். ஆகவே இவ் ஒப்பிலாமணியின் காலம் இதற்குச் சற்று முன்னாக இருக்கலாம். அதாவது 1375-1425. தேசிகர் கூற்றும் இதனால் பொருந்துவதாகும். இவரே தனிப்பாடல் குறிப்பிடும் புலவரு மாவார்.*

*இவர் பாடியதாகக் காட்டிய பாடல்களில் பின்வருவது ஒரு பாடல்.*

> வாழ்நிலை சேர் பொன்னுலகம் வண்களந்தைக் கோபுரத்தின்
> ஏழ்நிலைமே லேறிடினு மேறலாம் – பாழ்மனமே
> அன்புன்னைக் காட்ட அரனறிவ தேயருமை
> தென் புன்னைக் காட்டனடி சேர்.

*களந்தைக் கோபுரத்தை இப்பாட்டுச் சுட்டுகிறது. களந்தையி லிருந்த ஞானப்பிரகாசர் என்பவர் சத்தியஞானியின் சீடர்களுள் ஒருவர். எனவே, ஒப்பிலா மணி சத்தியஞானி இருவருக்கும் களந்தை தொடர்புடைய ஊர் என்று கூறுவது பொருந்தும். ஆதலால், இப்பாடல் இவர் பாடியது என்று கொள்ள இட முண்டு. வேறு இவர் வாழ்க்கை வரலாறு எதுவும் தெரியவில்லை.*

## சாருவ பூமன்

சர்வ பூமிக்கும் அதிபதியாகவுள்ள சக்கரவர்த்தி சார்வ பௌமன் எனப்படுவான். அவ்விதமே புலவர்களுள் நால்வகைக் கவிக்கும் தலைவராய் அரசரால் பெரும் சிறப்புப் பெற்ற புலவர் சார்வ பௌமர் எனப்படுகிறார்; வில்லிபுத்தூரார் முதலான சில புலவர் இவ்வாறு பட்டம் பெற்றவர்கள்.

வில்லிபுத்தூரரையடுத்த காலத்தில் சார்வ பௌமன் (பூமன்) என்ற பெயரோடு ஒரு புலவர் சிங்கள நாட்டரசனாலும் பாண்டிய மன்னனாலும் போற்றப் பெற்று விளங்கினார் என்று தமிழ் நாவலர் சரிதையில் காணும் சில குறிப்புக்களால் அறிகிறோம். சிங்கையில் ஆண்ட ஆரியசேகரன் என்ற அரசன், வலிமை மிகுந்தவனாய், பாண்டி நாட்டின்மீது படையெடுத்து அதன் தென்பகுதியைக் கைப்பற்றியிருந்தான். அதுபற்றி இவனுக்கு, சேதுகாவலன் என்ற ஒரு பட்டமும் ஏற்பட்டிருந்ததென்று பின்வரும் தனிப்பாடல் கூறும்:

> போதுபோனது வந்தது தனிமையும் புகுந்தது பனிவாடை
> தூது போனவண் டிவ்வழி மறந்தது சொல்லுவ தினியேதோ
> ஓதுவார் புகழ் மணவையர் அதிபதி ஒருல கொல்லாதான்
> சேது காவலன் ஆரிய சேகரன் திருவுளந் தெரியாதே.

(மணவை-யாழ்ப்பாணம்.) இவ்வாறு இவன் தென்பாண்டி நாட்டைக் கைப்பற்றியபோது, இங்கிருந்து தமிழ்ப் புலவர்களைத் 'தன் நாடு அழைத்துச் சென்று அவர்களுக்கு மிக்க ஆதரவும் தந்தானென்று உணரக் கிடக்கிறது. இவ்வாறு ஆதரவு பெற்றோரில் ஒருவன் சார்வ பூமன் என்னும் கவிஞன்; இப்பெயர் இவனுக்கு இயற்பெயரா அல்லது நாற்கவிப் புலமையால் வந்த பட்டமா என்பது விளங்கவில்லை.

சார்வபூமன், ஆரிய சேகரனது ஆதரவைப் பெற்றிருந்த இறுமாப்பால், ஒருகால் பாண்டி மன்னனைச் சரியாக மதித்திலன் போலும். அரண்மனை விருந்தில் ஒரு சமயம் இவன் குறும்பாக நடந்து கொண்டதைக் கண்ட பாண்டியன், கோபித்து, "ஆரியசேகரன் வாசலிலும் இந்தக் குறும்பு செல்லுமோ?" என்று கேட்டான். அதற்குப் புலவன், "கவியரசர் முனிந்தால் புவியரசர் பொறுக்கத்தான் வேண்டும்" என்று பின்வரும் பாடலால் விடை பகர்ந்தான்:

> கவியரசர் தம் முனிவு கண்டாற் புகழ்கொள்
> புவியரசர் சீறார் பொறுப்பர் – கவியரசர்
> உன்னான் முனிவும் வரப்பெறார் ஓதுமவர்க்கு
> எந்நாடும் செல்லாதது இல்.

*(இப்பாடலுள் சார்வபூமன் தன்னைக் கவியரசர் என்று கூறுவதனால் சார்வபூமன் என்பது சிறப்புப் பட்டமென்றே கருத இடமாகிறது). இதன்மேல் சார்வபூமன் தன் பெருமையை நிலைநாட்ட வேண்டி, இலங்கை சென்றிருந்தான் போலும். ஆரியசேகரன் இவனை வரவேற்று நன்கு பாராட்டினான். இவன் மீண்டும் தமிழ்நாடு திரும்புங்காலை, புலவனுக்குக் கடகம் முதலான புலமைக்கான விருதுகளையும் பிற பரிசில்களையும், ஆயிரம் பொன்னையும் யானை மீதேற்றி அனுப்பப் பெற்றுக் கொண்டு, சாருவ பூமன் கடலின் மீது இவற்றை ஏற்றிக் கொண்டு வந்து, சேதுக்கரையடைந்தான்.*

*கடலில் வரும்போது, ஓடக்காரன் கலம் செலுத்திய திறமையும் இவனுக்கு மகிழ்ச்சியளித்தன. புலவன் செய்யும் கைம் மாறு பாட்டுத்தானே? தன் நாட்டுத் தலைவனான பாண்டிய மன்னனையும் மறந்து, ஓடக்காரனைப் புகழ்ந்து பின்வரும் பாடல் பாடினான்:*

> கயக் காவி நாறுங் கொழும்பிற்ப்ர சண்டா
> காரோர் கொடைச் செங்கை யாரோதன் மைந்தா
> இயக்காநின் மார்பிற் செழும்புன்னை யந்தார்
> இப்போது நீ நல்கி லென்பேதை தன்மேற்
> சயக்காம வேளம்பு தையாது முத்தின்
> தாமஞ் சுடாசந் தனம்பூசி னாலும்
> தியக்காது வேயுஞ் செவிக்குப் பொறுக்குந்
> தீ யென்று மூளாது திங்கட் கொழுந்தே.

*மதுரையில் சிலநாள் வாழ்ந்திருந்தான் பாண்டிய அரசனும் பழைய கோபம் மறந்து இவனுக்குத் தக்க பரிசில்களை அளித்துச் சிறப்பித்தான். இவ்வாறு இருக்கும் காலத்து, காலகதியால் ஆரிய சேகரன் இறந்தான் என்ற செய்தி வந்தது. கேட்ட சார்வ பூமன் மிக்க மனம் வருந்திப் பின்வரும் பாடலால் தன் துயரத்தை வெளிப்படுத்தினான்.*

ஆஅ விதியோ அடல் ஆ ரியர் கோமான்
ஏஎ வலரால் இழிந்த நாள் – ஓ ஓ
தருக்கண் ணிலுங் குளிர்ந்த தண்ணளிதந் தாண்ட
திருக் கண்ணிலும் சுடுமோ தீ.

*நாட்கள் பல கடந்தன. ஆரிய சேகரன் மரணத்தின் பின், பாண்டியன் தன்னிடமிருந்து அவன் பறித்த சேது முதலான நாடுகளைத் தன் வசமாக்கிக் கொண்டு ஆண்டு வந்தான். அப்போது அவனுக்கு யானை இல்லாத குறை. புலவன் சார்வ பூமனிடத்தில் யானை இருப்பது அவனுக்குத் தெரியும். ஆகவே அதை அரசனான தான் அவனிடத்தில் பெற்றுக் கொள்ள எண்ணி, தானே சார்வபூமன் வீடு சென்று யானை கேட்டுப் பெற்றான். இவ்வாறு அரசனும் தன் வீட்டு வாயிலில் வந்து நின்று யாசிக்கும்படி தனக்குப் பெருஞ்சிறப்புச் செய்த ஆரிய சேகரனுடைய வள்ளன்மையை எண்ணிப் புலவன் அப்போது ஒரு பாடல் பாடினான்:*

பாவலன் வாசலில் வந்திபம் வாங்கப் படிபுரக்கும்
காவலர் நிற்கும்படி வைத்த வாகண்டி யொன்பதினும்
மேவலர் மார்பினும் திண்டோளினும் செம்பொன் மேருவினும்
சேவெழுதும் பெருமான் சிங்கை ஆரிய சேகரனே.

*(சிங்கை-சிங்களநாடு) ஒரு நாள் பாண்டியன் சித்திரத்தில் வரைந்திருந்த ஓர் அனுமன் வடிவத்தைக் காட்டி, ஒரு கேள்வி கேட்டான்.*

புராதனமான தமிழ்ப்புலவீர் இந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென்னா?

*எனலும், புலவர் பாடலைப் பூர்த்தி செய்து பின்வருமாறு விடையளித்தார்:*

– வந்தவாறு சொல்வேன்:
தராதல மெண்ணும் தமிழ்மா றனையுமத் தம்பியையும்
இராகவனென்றும் இலக்குவ னென்றுமிங் கெய்தியதே.

*கேட்ட அரசன் மிக்க மகிழ்ச்சியடைந்தான். இப்பாண்டி மன்னன் பராக்கிரம பாண்டியன் என்று அறிகிறோம். இவனுடைய சிறந்த தமிழ்ப் புலமையும் தெய்வ வழிபாடும் தமிழுலகம் நன்கறிந்தது. (14 நூ.)*

ஒரு சமயம் இப்புலவன், அரசனைக் காண அரண்மனை வாயிலடைந்தான். வழக்கம்போல் பாண்டியன் வரவேற்று உபசரிக்க உடனே வரவில்லை. தாமதம் பொறாது, கோபமே வழக்கமாயுள்ள இச்சார்வ பூமன், 'இவ்வரசனைத் தமிழறிவில் அகத்தியன் என்று கூறுவது அறியாமை' என்று பொருள்பட,

**எண்ணீர்மை நூலுக் ககத்திய னாமிவன் என்பதெல்லாம்**
**வெண்ணீர்மை யன்றி விரகல்ல;**

என்று பாடி நிறுத்திய நேரம், அரசன் வாயிலையடைந்து புலவனை அழைத்துச் சென்று உபசரித்தான். உள்ளங்குளிர்ந்து, புலவன், 'அகத்தியன் இவனிடம் வந்து தமிழ் கற்றான்' என்று தொனிக்குமாறு பாட்டை முடித்தான்:

– விக்ரம மாறன் செஞ்சொற்
பண்ணீர்மை தேரும் பராக்ரம மாறன் பதங்கழுவுந்
தண்ணீர் குடித்தல்லவோ கும்பயோனி தமிழ்கற்றதே.

"பாண்டியன் பதம் கழுவும் தண்ணீர் குடித்தல்லவோ கும்ப யோனி தமிழ் கற்றது" என்றது, பாண்டியன் வடிம்பலம்ப நின்ற பாண்டியன் வழியினன் ஆதலாலும், கும்பயோனியாகிய அகத் தியர் கடலை உண்டவராதலாலும், பொருந்துமாறு காண்க.

இவன் காலம் பராக்கிரம பாண்டியன் காலமேயாகும். இப்புலவன் இருந்த வரலாறுகள் தெரிகின்றனவேயன்றி, நூலெ துவும் செய்ததாகத் தெரியவில்லை.*

(தனிச்செய்யுட் சிந்தாமணி தொகுத்தார், சில பாடல்களை வேறு புலவர் பெயராற் குறிப்பிட்டிருக்கிறார்.)

---

* இலங்கையில் கொழும்பு அரசினர் பொருட்காட்சிச் சாலையில் ஒரு சாசனத்தில் பின்வரும் பாடல் காணப்படுகிறது

கங்கணம் வேற் கண்ணிணையாற் காட்டினார் காமர்வளைப்
பங்கயக்கை மேற்றிலதம் பாரித்தார் - பொங்கொலிநீர்ச்
சிங்கைநக ராரியனைச் சேரா வனுரேசர்
தங்கண் மடமாதர் தாம்.

இங்கு கூறியுள்ள அரசன் சிங்கைநகர் ஆரியன் என்பவன் சார்வபூமனால் பாடப்பெற்ற ஆரிய சேகரன் என்று கருதத்தகும். இப்பாடலும் ஒருகால் சார்வபூமன் செய்ததே ஆகலாம்.

## தேரையர்

தமிழ் மருத்துவ வரலாற்றிலும் சித்தர் வரலாற்றிலும் தேரையர் என்ற பெயர் மிகவும் பிரசித்தமானது. அவர் ஒரு மருத்துவ சித்தர். அவர் மிகப் பலவான மருத்துவ நூல்கள் செய்திருக்கிறார். அதற்கு மேலாக, அவர்தாமே மிகவும் திறமை வாய்ந்த ஒரு மருத்துவர் என்றே நாம் கருத வேண்டும். சத்திர சிகிச்சையில் (அறுவை வைத்தியம் - ஸர்ஜரி), அதிலும் சிறப்பாக மண்டை ஓட்டைப் பிளந்து மூளைக்கு வைத்தியம் செய்வதில் (ப்ரெய்ன் ஸர்ஜரி), அவர் ஒப்பற்ற வெற்றி கண்ட நிபுணர். சாமானிய மக்களால் செய்யமுடியாத காரியங்களையெல்லாம் செய்த காரணத்தினாலே அவர் சித்தர் எனப் பெற்றார் போலும். பின்வரும் வரலாறு இதை விளக்கும்.

ஓர் அரசனுக்குத் தலையில் எப்பொழுதும் குத்தல் இருந்து கொண்டேயிருந்தது. இக்கால விஞ்ஞான மருத்துவ முறையில், இதைக் கட்டி (ட்யூமர்) புறப்பட்டிருப்பது என்றோ, நீர் (ப்ளுயிட்) சுரந்திருப்பது என்றோ, சொல்லுவார்கள். ஆனால் அக்கால முறையில் இதை 'மூளைக்குள் தேரை புகுந்திருக்கிறது' என்று சொன்னார்கள். சொல்லில்தான் வேறுபாடே ஒழிய, கருத்தில் வேறுபாடு இல்லை, தேரையர் ஆகிய மருத்துவ சித்தர் இதை உணர்ந்து, நோயாளிக்கு சம்மோகினி என்ற மூலிகையைக் கொடுத்து மயக்கம் வரச்செய்து, மற்றொரு மூலிகையைப் பயன்படுத்தி மூளை ஓட்டைத் திறந்து, அங்கிருந்த நீரை ஒரு கிண்ணத்தில் வடித்தார். இதை அக்கால பாஷையில் 'மூளைக்குள் இருந்து ஒரு தேரை கிண்ணத்துள் பாய்ந்தது' என்று சொன்னார்கள்; பிறகு மூளையை முன் இருந்தபடி பொருத்தி, சந்தான கரணி என்ற மூலிகையால் கபால எலும்பு ஒட்டிக்கொள்ளும் படி செய்து நோயைக் குணப்படுத்தினார் என்று வரலாறு சொல்கிறது. தேரையை வெளிப்படுத்திய காரணத்தினால் இவர் பெயர் தேரையர் ஆயிற்று என்பர். அக்காலத்தில் இந்தச் சித்தர் மருத்துவ நிபுணராய் இருந்து செய்தற்கரிய சத்திர சிகிச்சை செய்தார் என்பது உண்மை. இவர் பெயருக்குச் சொல்லப்பட்ட காரணம் மட்டும் தேரையால் தேரையர் என்ற பெயர் வந்தது என்பது பொருந்தாது. இவ்வாறு சிகிச்சை முறை இல்லாவிட்டால் தேரை என்று கதை தோன்றுவதற்கே ஆதாரமிராது. ஆகவே, தேரையர் என்ற பெயருக்குத் தமிழறிந்தவரிடை இருக்கும் மதிப்பை நாம்

பார்க்கும்போது, அவர் இந்த ரணசிகிச்சை செய்தார் என்று சொல்லுவதில் கருத்து வேற்றுமை இருக்க முடியாது.

இதனோடு இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலுமுள்ள ஒரு செய்தியைப் பொருத்திப் பார்த்தால் இதன் உண்மை நன்கு விளங்கும். தேங்காய்களில் சில சிலசமயம் வெளிப்புறம் தேறின நல்ல நெற்றுக் காய்போல இருந்தாலும், உட்புறம் காய்ப்பகுதி கொப்பரை ஒன்றுமில்லாமல் எல்லாம் கரைந்து போய் வெறும் நீராய் இருக்கக் காணலாம். “தேரையாய்ப் போயிற்று” அல்லது “தேரை பாய்ந்துவிட்டது” என்று இதைச் சொல்லும் வழக்கம் இன்றும் இருக்கிறது. “தேரை போயிற்று என்றாற் போல்வ தொருகாய்” என்று நச்சினார்க்கினியர் சிந்தாமணியுரையில் (1024) கூறுவார்; உள்ளீடற்ற வெறுங் காயாயிருப்பதற்குத் தேரை என்று பெயர். “தேரையார் தெங்கிள நீருண்ணார் பழிசுமப்பர்” என்பது பழமொழி; தேரை இளநீர் உண்பதில்லை, ஆனால், உண்ட பழியைத் தான் சுமக்கிறது என்பது இதன் பொருள்; தேரையார் என்பதில் உள்ள ஆர் விகுதி நகைச்சுவையுடன் கூடிய ஏளனத் தைக் காட்டும் மரியாதைப் பன்மை.

இவ்வாறு கூறும் வழக்கம் நெடுநாளைய இலக்கிய மரபாக வும் ஆகியிருக்கிறது. 9 (அல்லது 10) ஆம் நூற்றாண்டின் நூல் என்று கருதத்தக்க முத்தொள்ளாயிரம் இதைக் குறிப்பிடுகிறது:

> **அன்னையும் கோல்கொண் டலைக்கும் அயலாரும்**
> **என்னை அழியும் சொல் சொல்லுவர் – நுண்ணிலைய**
> **தெங்குண்ட தேரை படுவழிப் பட்டேன்யான்**
> **திண்தேர் வளவன் திறத்து.**

இங்கு, சோழன்மீது காதல்கொண்ட ஒரு பெண், தெங்குண்ட தேரை பழி சுமப்பதுபோல, ஒன்றும் அறியாத தன்னை ஊரார் அலர் தூற்றுகின்றனர் என்று கூறுகிறாள்.

இவற்றை நன்குணர்ந்தால், தேரை பாய்ந்தது என்ற தொட ரின் பொருள் விளங்கும். தேரை என்பது ஒரு நோய், அந்நோயைத் தேரையர் போக்கினார் என்பது பொருளே அன்றி, தேரை என்ற பிராணி இருந்தது, அதை எடுத்தார் என்பது பொருளன்று.

இனி, இவர் தேரையர் என்று வழங்கப்பட்ட போதிலும், இவர் பெயரின் உண்மை வடிவம் தேரர் என்பதே. தமிழ்நாட்டில் பௌத்தரில் ஒரு பிரிவினர் தேரர் என்று வழங்கப்பட்டனர்.

*சம்பந்தர் தேரரைப் பல பாடல்களில் குறிப்பிடுகிறார். இந்தச் சித்தர் பெயரும் தேரர், தேரனார் என்றே இவருடைய நூல்களில் சொல்லப்படுகிறது.*

அத்தி முகவ னணிமழவா குங்கருணை
அத்திமுகவ னணி காப்பே – அத்தி
முகவா கடமேனை முன்னாத தேரன்
முகவா கடமறைக்கு முன்.

அவையடக்கம் புன்மை யநீத மகந்தை
அவையடக்கம் பாம்போ யறஞ்செ – யவையடக்க
கத்திகையா மென்னுங் கவிபோல் தேரன்வெண்பாக்
கத்திகையா மோனையும் கம்.

தேனைநிக ராயுண்மறைத் தேரன் அருள்செய்த
மோனையமக வெண்பா முந்நூறும்.

*இப்பாடல்கள் இவர் பாடிய யமக வெண்பா.*

செயுமுறை தெரிகிலாத் தேரன் நாயடியேன்
உயுமுறை வயித்திய உரைதமிழ்க் கரிசல்.

தேரன் உரைத்த வாகடமே
தேர்ந்த தென்று தானுணரே.

வங்க சுத்தியை இங்குரைத்திடு
வாகாடாதிபர் மேதையோர்
தங்களுக்கொரு நண்புளப் பெயர்
சார வோதினர் தேரனார்.

சொன்ன அவிழ்தத்தை யாளும் – துறை
சொல்லுகிறேனது நல்லவனே நீ
கேட்டுக் கடைப்பிடித்து – அந்தக்
கீலகந் தன்னை விசாலமதாகத்
தாட்டிக மாகப் புரிந்திந்நூல் – உ
தாரஞ் செய்யுமொரு தேரன் என்பாரே.

*இவ்வரிகளில் தேரையர் தம்மைத் தேரன் என்றே கூறிக் கொள் கிறார். மேலும், பின்வரு மருத்துப் பாரதச் சிறப்புப் பாயிரங்கள் இவரைத் தேரன் என்றே குறிப்பிடும்:*

மருத்துப் பாரத நாடகமிது தனைமதித்து
விருத்தப் பாவினுந் தருவினு மிராகமேல் விரித்துக்
கருத்துக் கேற்றிடச் செய்தனன் தேர ஆங்கஞ்சன்
அருத்த மோர்ந்திடின் சொல்லெலாம் அவுடதமாமே.

இந்த நூலிலிசைத்த வயித்தியம்
எந்த நூலிலு மில்லை யிஃதொன்றே
செந்தமிழ்த் துறைத்தேர சிகாமணி
புந்தித் தாமரைப் பொன்னிக ரானதே.

ஒழிந்த தேரப் பெருமானும்
உதவியாகப் பண்டிதர்க்கிங்கு
உறுதிமரும நூலுரைத்தான்
ஒன்றும் இனிமேல் உரையானே.

*இவற்றால் இவருடைய பெயர் தேரர் என்பது தெளிவாகின்றது. தேரையர் அகத்தியருடைய மாணாக்கர் என்று சொல்வார்கள்; இது பொதுவாகச் சித்தர் யாரையும் பற்றிச் சொல்லும் கதையை யொத்ததே யொழிய, உண்மையன்று. இவருடைய குரு புலத்தி யரின் மாணாக்கராகிய தரும சௌமியர் என்று தம் நூல்களில் குறிப்பிட்டிருக்கிறார்: "சோதிவரும் புலத்தியன் நம் தரும சவுமி யன் இக்குரவரும்" என்று தயில வருக்கச் சுருக்கத்திலும், நிசதரும சவுமியசற் குருவசமே" என்று மகாமகிமைக் கரிசலிலும் தேரை யரே கூறுகிறார். இவருடைய மாணாக்கர் யூகிமுனி என்பவர்; சிந்தாமணி 800 என்ற வைத்திய நூல் பாடியவர்.*

புகன்றிட்டார் தேரையராம் முனிவர்
பூதலத்தில் யூகியாம் எனக்குச் சொல்ல
உகறிட்ட யூகியென்ற முனிவர் யாமே
உலகத்தோர் பிழைத் திடவென்றுரைக்கலானேன்.

*என்பது அவர் பாடல். தேரையரே மண்டூக மகரிஷி என்று ஒருவர் எழுதினர்; இது தேவையில்லாத மொழிபெயர்ப்புணர்ச்சி; சிறி தும் பொருத்தமற்றது என்பது வெளிப்படை.*

*தேரையர் செய்த நூல்கள் பன்னிரண்டு; பின்வரும் பாடல் இவற்றைக் குறிப்பிடுகிறது.*

சிகாமணி வெண்பா நிகண்டு சேகரப்பா
தேரையர் காப்பியம தருநாடக மந்தாதி
மிகாவண்ண நுண்மாலை யமக வெண்பா
விளங்கெதுகைப் பாவிவை யெல்லாரும் மெச்சும்
மகாமகிமைக் கரிசலென்னு முறையீ ராறும்
வேதாந்த சித்தாந்த வயித்திய வாதம்
உகாதியினு மசையாத விரிவுள் வேதம்
உத்தமமா யிருக்குமிது சத்தியந்தானே.

இப்பாடல் சிந்தாமணி வெண்பா, நிகண்டு, சேகரப்பா, காப்பியம், தரு, நாடகம், அந்தாதி, மிகாவண்ணம், நுண்மாலை, யமக வெண்பா, எதுகைப்பா, மகாமகிமைக்கரிசல் என்னும் பன்னிரண்டு நூல்களைக் குறிப்பிடுகிறது. இவையேயன்றி மேலும், நீர்நிறக்குறி, நீர்நெய்க்குறி, தயிலவருக்கச் சுருக்கம், தினக்கிரமாலங்காரம், சிகிச்சைக்கிரமம், நோய் மருந்தளவை, பிரதான குண மூலத்தரு என்ற ஒன்பது நூல்களையும் சேர்த்து மொத்தம் இருபத்தொரு நூல்களை இவர் செய்தார் என்பது வழக்கு. மற்று இவ்வொன்பதும் முந்திய பன்னிரண்டினுள் அடக்கம் என்றும் சொல்வதுண்டு. இந் நூல்கள் யாவும் கிடைத்து அச்சானதாகத் தெரியவில்லை. யமக வெண்பா, கரிசல், குறிகள் இரண்டு, தைலவர்க்கம் ஆகிய ஐந்துமே அச்சாகியுள்ளன. யமக வெண்பாவுக்குச் சிறப்பான பழைய உரையுண்டு. அதில் பழைய நூல் மேற்கோள்கள் பல காணப்படுகின்றன. இவைகளையன்றி தேரையர் நூறு, ஐந்நூறு, ஆயிரத்தொன்று, ஐந்நூற்று அறுபது என்ற பல நூல்கள் அச்சாகியுள்ளன. எனினும் அவற்றின் சொல், பொருள், நடை முதலியவற்றை ஆராயும்போது அவை தேரையர் வாக்கு அல்ல என்று அறிஞர் கருதுகின்றார். தேரையர் வைத்தியம், தேரையர் குணவாகடம் என்ற நூல்களும் இவர் செய்தாரென்பது பிழை. இவர் செய்த நூல்களில் கடைசியான நூல் மருத்துப் பாரதம். இது நாடக நூல்; பின்வரும் விருத்தம் காண்க:

மொழி மருத்துப் பாரதத்தின்<br>
  முறைநா டகத்தின் உரையருத்தம்<br>
முன்னிச் சிலேடை இருபொருளும்<br>
  முடித்துக் கொளுவார் பண்டிதரே<br>
வழிந்த திருப்பாற் கடலமுதம்<br>
  மருந்தா னதுவும் அருந்தாமே<br>
மனத்தா லினத்தால் இதைப் பிரித்து<br>
  மருத்துப் புலவர் தமிழ்ப் புலவர்<br>
பொழிந்த மேகச் சம்பரத்தின்<br>
  பொருப்பா ருதவ விருப்பாரும்<br>
புளரி சேர்த்துக் கொண்டு மிகப்<br>
  பூவா மூயிர்கட் களிப்பதென<br>
ஒழிந்த தேரப் பெரு மானும்<br>
  உதவியாகப் பண்டிதர்க்கிங்கு<br>
உறுதி மரும நூலுரைத்தான்<br>
  ஒன்று மினிமே லுரையானே.

தேரையர் சிறந்த தமிழ் அறிஞர் என்று அறிகிறோம். சைவ சமய நூல்களிலும் சோதிட நூலிலும் பல்வகைச் சந்தச் செய்யுள் பாடுவதிலும் இவர் வல்லவர். சில எடுத்துக்காட்டுக்களை இவ் விடம் கூறலாம். கரிசல் நூலில் பின்வருமாறு கூறுகிறார்:

ஆனதிக் காளையாம் அமைச்சை மேவிடின்
ஆளைப்பரவச மாக்குதலன்றி
ஆற்றுத் தமிழ்மறை யாற்றுத் தமிழ்மறை.

இங்கு, பரவசம் ஆக்குதல் அன்றி ஆற்றுத் தமிழ் மறை என்று சொல்வது, திருவையாற்றுத் தேவாரமாகிய 'புலனைந்தும் பொறி கலங்கி நெறி மயங்கி அறிவு அழிந்திட்டு ஐம்மேல் உந்தி - அல மந்த போதாக அஞ்சேல் என்று அருள் செய்வான் அமரும் கோயில்' என்ற சம்பந்தர் பதிகத்தின் முதல் பாட்டைக் குறிப் பிடுகிறது. 'ஆற்றுத் தமிழ் மறை' என்றால் திருவையாற்றுத் தேவாரத்தில் சொல்லப்பட்டதாகிய இந்த நிலை என்பது இதனால் விளங்கும்.

இங்கு இரண்டு நிலைகளை நாம் காண்கிறோம். ஒன்று தேரையருக்குத் தேவாரத்திலுள்ள பயிற்சி; மற்றது மருத்துவ அறிஞர்கள் பண்டைக் காலத்தில் தமக்கென ஒரு குழூஉக்குறி படைத்துக் கொண்டு அதிலேயே நூல் செய்தார்கள், அது கார ணமாக மருத்துவ நூல் உண்மைகள் பின் வந்தோர் அறிய இடமில்லாது போயிற்று என்ற நிலை.

இவர் சிறந்த தமிழ்ப் புலமையுடையவரென்பதை எல்லா நூல்களும் தெரிவிக்கும். தேரையர் வைத்தியம் என்ற நூலில் வரும் பின்வரும் சந்தப் பாடல் (15) காண்க:

தும்பைத்துளிர் தூபத்துளிர் லவணத்தொடு மிளகு
நம்பிக்கொடு நவிலக்கொடு நாசிக்கொடு விட்டால்
வெம்பிக்கொடு வித்திக்கொடு விதிபோல் வருவிடமும்
கம்பிக்கொடு கதறிக்கொடு கடலிற்புகும் விடமே.

யமகவெண்பா சிறப்பான சொல் அணிகளைத் தன்னகத்தே கொண்டது:

மாயா மலட்டுவலிக் கமைவே லம்படிநீர்
மாயா மலட்டு மடலட்டு – மாயா
பகரணமண் டாமலோர் பங்கிடாய் நாளும்
பகரணமண் டாமலுண்டு பார்.

இதனால் இவருடைய இலக்கணப் புலமை விளங்கும். மற்றும் இவருடைய பாடல்களில் சந்தமும் சிந்தின் உறுப்புக்களான

தரு முதலியனவும் காணப்படுகின்றன. சிந்து பதின்மூன்றாம் நூற்றாண்டிலேயே பாடப் பெற்றது என்றும் சாசன வாயிலாக நாம் அறிவது இங்கு குறிப்பிடத்தக்கது.

இவர் பெயர் தேரனார் என்பது, இவருடைய கூற்றினாலும் சில சிறப்புப் பாயிரங்களினாலும் தெளிவாகும் என்று குறிப்பிட்டோம். இது இவருடைய இயற்பெயரா என்று சொல்வதற்கில்லை. சம்பந்தர் காலத்தில் தேரர் என்பது பௌத்தரைக் கூறுவது என்பதும் முன்னமே கூறினோம். எப்படியோ இவருக்கு இப்பெயர் பொருந்தியிருக்கிறது. சைவசமயத்தில் மிகுந்த பற்றும் புலமையும் உடைய இவரைப் பௌத்தர் என்று சொல்வதற்கு இல்லை. மேலும், இவர் வாழ்ந்த காலத்தில் தமிழ்நாட்டில் பௌத்த சமயம் வழக்கு ஒழிந்து போயிற்று.

தேரையர் காலம் 15ஆம் நூற்றாண்டு என்று அறிகிறோம். இவர் கரிசல் நூலின் "உத்தமம் சிவாடுசுமிநீ என வேமனர் வடுகில் உரைத்தல் போல" என்ற குறிப்பிடுகிறார். வேமனர் காலம் பலர் பலவாறு கூறினும், 14ஆம் நூற்றாண்டின் இறுதியும் 15ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும் என்று ஆராய்ச்சியாளர் எழுதியிருக்கின்றனர் (1386-1505). ஆதலால் தேரையர் வேமனருக்குச் சமகாலத்தில், சற்றுப் பின்னதாக, 15ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதில் வாழ்ந்தார் என்று கூறுவது பொருந்தும்.

வழக்கம் போல் தேரையர் பெயராலும் போலி நூல்கள் மிகப்பல பிற்காலத்தில் ஏற்பட்டு விட்டன. தேரையர் வைத்தியம் தேரையர் வாகடம் என்பன இத்தகையன.

(மருத்துவ அறிஞர் மாங்காடு வடிவேலு முதலியார், செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 1,2.)

மேலே குறித்த தேரையர் வைத்திய நூல்கள் சித்தவைத்திய உலகில் மிக மிகச் சிலருக்கே தெரியும். எனினும், தேரையர் என்ற பெயர் எல்லோரும் நன்கறிந்த பெயர். அதனினும் பார்க்க, ஆரோக்கிய வாழ்விற்காக அவர்பாடிய பாடல் எல்லோரும் நன்கறிந்தது. அவர் கூறியுள்ள கருத்து, அன்று மட்டும் அல்ல, இன்றும் பொருந்துவது ஆகும்:

**திண்ணம் இரண்டுள்ளே சிக்க அடக்காமல்**
**பெண்ணின் பால் ஒன்றைப் பெருக்காமல் – உண்ணுங்கால்**
**நீர் சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி உண்பவர் தம்**
**பேர்உரைக்கப் போமே பிணி.**

# ஆதார நூல்கள்

**அத்தியாயம்**


1. சித்தாந்தம் பத்திரிகை, 1937. வில்லி புத்தூரார் சரிதம், வேங்கடராம் ஐயங்கார், 1906. கந்தரந்தாதி யுரை, வித்தியா விநோத அச்சுக்கூடம் 1879; வ.சு. செங்கல்வராயப் பிள்ளை உரைப் பதிப்பு 1957.

2. தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி, திருவானைக்கா உலா, எமது பதிப்பு, 1940. சித்திர மடல், அழகிய சிவப்பிரகாசம் பதிப்பு 1905.

3. காதம்பரி பதிப்பு 1912. அரிச்சந்திர வெண்பா, மு. ராகவையங்கார் பதிப்பு, திருவிதாங்கூர் சர்வகலாசாலை 1949. அரிச்சந்திர புராணம், வீரை ஆசுகவிராசர் 1838 முதல் பல பதிப்புக்கள்.

   புறத்திரட்டு, ச.வையாபுரிப்பிள்ளை, சென்னை சர்வகலா சாலைப் பதிப்பு. புறத்திரட்டுச் சுருக்கம் ஏட்டுப் பிரதி. கயாதர நிகண்டு, ச.வையாபுரிப்பிள்ளை, சென்னைச் சர்வகலா சாலை 1939. உவமான சங்கிரகம், செந்தமிழ் தொகுதி 4.

4. திருக்குறள் உரைத்தொகுதி, காசிமடத்துப் பதிப்பு 1959. கல்லாடர் உரைப்பதிப்பு, கு. சுந்தரமூர்த்தி 1964. நேமிநாதம், மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு. தக்கயாகப்பரணி, சாமிநாதையர் பதிப்பு 1930, 1945.

   புறப்பொருள் வெண்பாமாலை மூலம், தாண்டவராய முதலியார் பதிப்பு 1935; உரை, சாமிநாதையர் பதிப்பு 1934 முதல் பல முறை. தெய்வச்சிலையார், சொல்லதிகார உரை, கரந்தைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 1929.

5. திருவாதவூரர் புராணம், குமாரசாமிப் புலவர் உரைப் பதிப்பு 1922; மூலப்பதிப்பு, கழகம் 1924. ஞானவரோதயர் உபதேச காண்டம், வ.சு செங்கல்வராயப்பிள்ளை பதிப்பு

1950; உபதேசகாண்டம், கோனேரியப்ப நாவலர், ஈக்காடு இரத்தின வேல் முதலியார் உரைப்பதிப்பு 1913.

6. சித்தாந்தம் 1959, 1960. சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ், தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீடு 1950. முத்தி நிச்சயம், வெள்ளியம்பலவாணர் பேருரை தருமபுரம் 1946. தச காரியம், சிவானந்தையர் பதிப்பு 1911. அட்டாங்க யோகக் குறள், மதுரைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு 1923. சிவப் பிரகாசம், மதுரை ஞானப்பிரகாசர் உரை, ஏட்டுப் பிரதி. மதுரை சிவப்பிரகாசர் உரை, எமது பதிப்பு சமாஜம், 1940.

7. முத்துத்தாண்டவராய பிள்ளை, கண்ணுடைய வள்ளல், செந்தமிழ்ச் செல்வி. மாயாப்பிரலாபம், ரிப்பன் அச்சகம் 1900. ஒழிவிலொடுக்கம், அனவரத விநாயகம் பிள்ளை பதிப்பு 1906. ஞானசாரம், சித்தாந்தம் 1960. திருவாசகம் காழித்தாண்டவராயர் உரை 1954. வேதாந்த சித்தாந்த சமரச நூல், சுயம்பிரகாசயோகி 1887. திருக்களிற்றுப்படியார் அனுபூதி உரை, எமது பதிப்பு 1962. பேரானந்த சித்தியார், இராமலிங்க சுவாமி பதிப்பு 1908. பிராசாத தீபம்,வள்ளலார் சாத்திரம், பார்த்தசாரதி ஐயங்கார் பதிப்பு 1907. சதாசிவரூபம்.

8. தத்துவராயர் பாடுதுறை, மனோன்மணி விலாசம் 1917. அடங்கன் முறை, பொன்னம்பல சுவாமி மடம் 1924. ஈசுர கீதை, பிரம கீதை. சசிவன்ன போதம் பதிப்பு 1930. பெருந் திரட்டு கோ. வடிவேல் செட்டியார் - சண்முக முதலியார் பதிப்பு 1912. சிவப்பிரகாச வெண்பாவும் தத்துவாமிர்தமும், கொ. அருணாசல முதலியார் பதிப்பு 1841, ஞானாவரண விளக்கம், தருமபுரம் 1960.

9. உபதேச ரத்தினமாலை முதலான நூல்கள் 1904.

10. உதயண குமார காவியம், சாமிநாதையர் பதிப்பு. ஸ்ரீ புரா ணம், சென்னைச் சர்வகலாசாலை வெளியீடு 1943. திருக் கலம்பகம், பாகுபலி நயினார் பதிப்பு 1883; மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு, மு. ராகவையங்கார் 1907, 1954. சம்பத்ராவ் நயினார் பதிப்பு 1935. ஆதிநாதர்பிள்ளைத் தமிழ், ஆதி நாதர் பதிப்பகம் 1956.

11. வருண குலாதித்தன் மடல், திருத்தணிகை சரவணப் பெரு மாளையர், 1838. திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ், பல பதிப்புக்கள்.

12. பதினெண் சித்தர் ஞானக்கோவை, இரத்தின நாயகர் 1929; மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு 1947.

13. கணக்கதிகாரம், சண்முக முதலியார் பதிப்பு 1872. பாய்ச்ச லூர்ப் பதிகம், பல குஜிலிப் பதிப்புக்கள். சொரூபசாரம் மூலம் 1886; ஈசூர் சச்சிதானந்த சுவாமி உரைப் பதிப்பு 1888. தேரையர் - மாங்காடு வடிவேலு முதலியார் கட்டுரை, செந்தமிழ்ச் செல்வி; நூல்கள்.

## பிற நூல்கள்

தமிழ் நாவலர் சரிதை, கனக சுந்தரம் பிள்ளை பதிப்பு 1920. தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுட் சிந்தாமணி. தண்டபாணி சுவாமிகள் புலவர் புராணம் 1910. டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூற்குறிப்புக்கள். மு.ராகவையங்கார் - பெருந்தொகை 1937; ஆராய்ச்சித் தொகுதி 1940; சாசனத் தமிழ்க் கவி சரிதம் 1937. வீராசாமிச் செட்டியார், விநோதரச மஞ்சரி, பதிப்பு 1931.



## ஆசிரியர் பெயர் – கால அட்டவணை

இவ்வகராதியுள், ஆசிரியர் பெயர், செய்த முக்கியமான நூல், காலம் ஆகியவை தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும், இதனுள் அகராதி வரிசையிலே உரிய இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. உடன் காலத்தவராகத் தெரிந்த அரசர், வள்ளல் பிற புலவர் பெயர்களும் தனியே குறிப்பிடப்பட்டுள்ளன.

| எண் | ஆசிரியர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1 | அகப்பேய்ச் சித்தர் | பாடல்கள் | – | 1400 - 1450 | 271 |
| 2 | அத்தியூர்க் கோவை | – | – | 1475 | 249 |
| 3 | அதிமதுர கவிராயர் | பாடல் | காளமேகம் | 1400 - 1450 | 297 |
| 4 | அப்பிள்ளை | வாழித் திருநாமம் | – | 1450 | 227 |
| 5 | அப்புள்ளார் | சம்பிரதாய சந்திரிகை | – | 1450 | 226 |
| 6 | – | அரிச்சிந்திர வெண்பா | – | 1475 | 63 |
| 7 | அருணகிரிநாதர் | திருப்புகழ், திருவகுப்பு, கந்தர் அலங்காரம், அந்தாதி அனுபூதி | பிரபுட தேவராயன் | 1400 - 1450 | 2 |
| 8 | அழுகுணிச்சித்தர் | பாடல்கள் | – | 1400 - 1450 | 272 |
| 9 | அனந்த கவி | திருக்கலம்பகவுரை | – | 1450 - 1500 | 242 |
| 10 | ஆதிநாதர் பிள்ளைத் தமிழ் | – | – | 1500 | 242 |
| 11 | ஆதி வராக கவி | காதம்பரி | – | 1411 | 58 |
| 12 | இடைக்காட்டுச் சித்தர் | பாடல்கள் | – | 1450 | 274 |
| 13 | – | இராமாயண வெண்பா | – | 1450 - 75 | 61 |
| 14 | இராமானுசையங்கார் | திருவேங்கட உலா | சாருவ நரசிம்மன் | 1450 - 1525 | 246 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 15 | உத்தரநல்லூர் நங்கை | பாய்ச்சலூர்ப்பதிகம் | — | 1475 | 308 |
| 16 | உதீசித் தேவர் | திருக்கலம்பகம் | — | 1450 - 1475 | 238 |
| 17 | — | உவமான சங்கிரகம் | — | 1500 | 76 |
| 18 | எறும்பியப்பா | வரவரமுனி சரிதம் | — | 1450 | 225 |
| 19 | ஏனாதிச் சித்தர் | பாடல்கள் | — | 1540 | 283 |
| 20 | கடவுள் மாமுனிவர் | திருவாதவூரர் புராணம் | — | 1425 - 1450 | 104 |
| 21 | கடுவெளிச் சித்தர் | பாடல்கள் | — | 1400 - 1450 | 277 |
| 22 | கண்ணுடைய வள்ளல் | ஒழிவிலொடுக்கம் நியதிப் பயன், மாயாப் பிரலாபம் | — | 1400 - 1425 | 155 |
| 23 | கந்தாடையண்ணன் | கண்ணிநுண் சிறுத்தாம்பு | — | 1450 | 225 |
| 24 | கந்தியார் | உதயண குமார காவியம் | — | 1475 | 231 |
| 25 | கபிலர் | அகவல் | — | 1450 | 261 |
| 26 | கயாதரர் | கயாதர நிகண்டு | — | 1450 | 74 |
| 27 | கல்லாடர் | தொல்காப்பியச் சொல்லதிகாரவுரை | — | 1400 - 1450 | 85 |
| 28 | காரியார் | கணக்கதிகாரம் | — | 1400 | 294 |
| 29 | காளமேகப் புலவர் | திருவானைக்காவுலா சித்திரமடல் | சாளுவத் திருமலைராயன் | 1400 - 1460 | 33 |
| 30 | காளி முத்தம்மை | வருணகுலாதித்தன் மடல் | — | 1425 - 1450 | 250 |
| 31 | காளைச் சித்தர் | சித்தர் பாடல் | — | 1550 | 285 |
| 32 | குதம்பைச் சித்தர் | சித்தர் பாடல் | — | 1400 - 1450 | 279 |

| எண் | ஆசிரியர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 33 | கோனேரியப்ப நாவலர் | உபதேச காண்டம் | - | 1450 | 120 |
| 34 | சட்டைநாத வள்ளல் | சதாசிவ ரூபம் | - | 1450 - 1475 | 182 |
| 35 | சத்திய ஞான பண்டாரம் | - | - | 1425 - 1460 | 130 |
| 36 | சம்பந்தாண்டான் | - | இரட்டையர், காளமேகம் | 1400 - 1450 | 300 |
| 37 | சாமுண்டிதேவ நாயகர் | புறப்பொருள் வெண்பா மாலை உரை | - | 1400 - 1450 | 96 |
| 38 | சார்வபூமன் | தனிப்பாடல் | ஆரியசேகரன் | 1450 | 312 |
| 39 | சிவஞான வள்ளல் | வள்ளலார் சாத்திரம் | - | 1425 - 1450 | 173 |
| 40 | சிவப்பிரகாசர், மதுரை | சிவப்பிரகாச உரை | - | 1488 | 146 |
| 41 | சுயம் பிரகாச வள்ளல் | - | - | 1400 - 1425 | 173 |
| 42 | ஞானப்பிரகாச பண்டாரம் களந்தை | தசகாரியம் | ஒப்பிலாமணி | 1475 - 1500 | 136 |
| 43 | ஞானப்பிரகாசர், மதுரை | சிவப்பிரகாசவுரை | களந்தை | 1450 - 1475 | 144 |
| 44 | ஞானவரோதயர் | உபதேச காண்டம் | - | 1425 | 116 |
| 45 | தக்கயாகப் பரணி உரையாசிரியர் | தக்கயாகப் பரணி உரை | - | 1425 | 93 |
| 46 | தத்துவராய சுவாமிகள் | பாடுதுறை பெருந்திரட்டு | - | 1450 - 1475 | 186 |
| 47 | திருநாராயணபுரத்து ஆயி | - | - | 1400 - 1425 | 228 |
| 48 | திருநெறி விளக்கமுடையர் | திருநெறி விளக்கம் | சிவாலய முனிவர் | 1400 - 1425 | 127 |
| 49 | தெய்வச்சிலையார் | தொல்காப்பியச் சொல்லதிகாரவுரை | - | 1475 | 100 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 50 | தேரையர் | பல வைத்திய நூல்கள் | - | 1450 | 316 |
| 51 | தொல்காப்பியச் சொல்லதிகாரம் பழையவுரைகாரர் | பழைய உரை | | 1450 | 89 |
| 52 | நவலிங்க லீலை ஆசிரியர் | நவலிங்கலீலை | - | 1475 - 1500 | 214 |
| 53 | நேமிநாத உரையாசிரியர் | நேமிநாத உரை | - | 1425 | 90 |
| 54 | பகழிக் கூத்தர் | திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் | - | 1410 | 253 |
| 55 | பரவாதிகேசரியார் | ஸ்ரீசைல வைபவம் | மணவாள மாமுனி | 1450 | 227 |
| 56 | பராக்கிரம பாண்டியன் | சாசனப் பாடல்கள் | - | 1422 - 1462 | 288 |
| 57 | பரிதியார் | திருக்குறள் உரை | - | 1450 | 79 |
| 58 | பாம்பாட்டிச் சித்தர் | பாடல்கள் | - | 1450 | 280 |
| 59 | பிரதிவாதி பயங்கரம் | அமலனாதி பிரான் | - | 1450 | 226 |
| 60 | பிராசாத தீப ஆசிரியர் | - | - | 1400 - 1425 | 171 |
| 61 | பிறவா நெறியார் | - | காளமேகம் | 1450 | 303 |
| 62 | புறத்திரட்டு ஆசிரியர் | - | - | 1425 - 1450 | 67 |
| 63 | மணவாள மாமுனி | உபதேச ரத்தினமாலை ஆர்த்திப் பிரபந்தம் | - | 1370 - 1443 | 217 |
| 64 | மணவைக் கூத்தர் | சாசனம் | - | 1450 - 1498 | 305 |
| 65 | மறைஞான சம்பந்தர் திருவம்பல முடையார் | ஓங்கு கோயிற் புராணம் | - | 1484 | 306 |
| 66 | வஞ்சி மார்த்தாண்டன் | - | - | 1450 - 1498 | 305 |
| 67 | ஸ்ரீ புராண ஆசிரியர் | - | - | 1450 - 1475 | 234 |

## ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

இங்கு ஒவ்வொரு கால் நூற்றாண்டாக எடுத்து அக்காலத்தில் வாழ்ந்திருக்கக் கூடிய இலக்கிய, இலக்கண, உரையாசிரியர்கள், சைவ ஆசிரியர்கள், வைணவ ஆசிரியர்கள் ஏனையோர் என்று பிரித்தும் தொகுத்தும் முறைப்படுத்திக் காட்டியிருக்கிறோம். ஒரு காலப்பகுதியைக் குறிப்பிட்டால் சந்தர்ப்பம் நோக்கி அதற்கு முன்னும் பின்னும் கூட அவ்வாசிரியர் வாழ்ந்தார் எனக் கருதல் வேண்டும்.

| காலம் | இலக்கியம் இலக்கணம் உரை | சைவம் | வைணவம் | பிற |
|---|---|---|---|---|
| 1400 - 25 | கல்லாடர், சாமுண்டி தேவ நாயகர் நேமிநாத உரையாசிரியர் ஆதி வராக கவி பகழிக் கூத்தர் | அகப்பேய்ச் சித்தர், கடுவெளிச் சித்தர், கண்ணுடைய வள்ளல், சுயம்பிரகாச வள்ளல், ஞான வரோதயர், திருநெறி விளக்கம், பிராசாத தீபம் | திருநாராயணபுரத்து ஆயி மணவாள மாமுனி | அதிமதுரகவி சம்பந்தாண்டான் கபிலரகவல் |
| 1425 - 50 | அருணகிரிநாதர், காள மேகம், காளி முத்தம்மை, புறத்திரட்டு சொல்லதிகார உரை பரிதியார் சுயாதரர் | அழுகுணிச் சித்தர் இடைக்காட்டுச் சித்தர் கடவுள் மாமுனிவர் ஏனாதிச் சித்தர், காளைச் சித்தர், குதம்பைச் சித்தர், கோனேரியப்பர், சிவஞான வள்ளல், பாம்பாட்டிச் சித்தர், சத்தியஞானி | அப்பிள்ளை, அப்புள்ளார் பரவாதிகேசரி எறும்பியப்பா கந்தாடையண்ணன் | தேரையர் பிறவா நெறியார் சார்வ பூமன் |
| 1450 - 75 | அத்தியூர்க் கோவை தெய்வச்சிலையார் இராமாயண வெண்பா அரிச்சிந்திர வெண்பா | சட்டைநாத வள்ளல் மதுரை ஞானப்பிரகாசர் களந்தை ஞானப்பிரகாசர் | - | உதிசித் தேவர், ஸ்ரீபுராணம், திருவம்பலமுடையார், பராக்கிரம பாண்டியர், மணவைக் கூத்தர், தத்துவராயர், அனந்தகவி. |
| 1475-1500 | உவமான சங்கிரகம் | நவலிங்க லீலை மதுரைச் சிவப்பிரகாசர் | - | ஆதிநாதர் பிள்ளைத் தமிழ், உத்தர நல்லூர் நங்கை, கந்தியார், காரியார் |

## மேற்கோள் பாடல் முதற்குறிப்பகராதி

ooo

# பொருள் அகராதி

○○○

## சிறப்புப் பெயர் அகராதி

ooo



இந்த நூற்றாண்டில் பேரரசுகள் யாவும்
தென்னிந்தியாவைப் பொறுத்தவரை,
வீழ்ச்சி அடைந்து,
அரசு என்று
பெயர் சொல்லுவதற்குத் தகுதியில்லாத
சிற்சில குறுநாட்டுத் தலைவர்கள்
தோன்றி வாழ இடம் கொடுத்திருந்தது.
விசயநகர ஆட்சி இந்த நூற்றாண்டில்
ஓங்கி இருப்பினும்,
அடுத்த நூற்றாண்டில் வீழ்ச்சியுற்றது.
முகம்மதியருடைய தாக்குதலால்
சீர்குலைந்து வந்த
இந்து சமூகத்தையும்
பண்பாட்டையும்
விசய நகர மன்னரது ஆதரவு,
ஒருவகையில்
தாங்கி நிறுத்தியது உண்மை.
விசயநகர மன்னர் காலத்தில்
தமிழ் நாடெங்கும்
கோயில்களும், சிற்பமும்,
இலக்கியமும் பிற கலைகளும்
செழித்தோங்கி வளர்ந்தன.



The PARKAR